# சுந்தரகாண்டம்

(இரண்டாம் பகுதி)






அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## சுந்தரகாண்டம்

(இரண்டாம் பகுதி)








அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1956

# உள்ளுறை

## கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---

தலைவர் :

பேராசிரியர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் B. A., B. L.

உறுப்பினர்கள் :

" இராவ்சாகிபு திரு. மு. இராகவையங்கார் அவர்கள்

" திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் M. A., B. L.

" திரு. G. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் M.A., B.L.

" திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள்

" திரு. A. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் M. A., Ph. D.

திருவாளர் பி. ஸ்ரீ ஆச்சாரியார் அவர்கள்

" நீ. கந்தசாமிப்பிள்ளை அவர்கள்

" S. இராமசாமி நாயுடு அவர்கள்

" A. C. பால்நாடார் அவர்கள் B. A., B. L.

செயலாளர் :

" T. K. இராமாநுஜ ஐயங்கார் அவர்கள்

# முகவுரை

## திருவாளர் T. M. நாராயணசாமி பிள்ளை அவர்கள் M.A., B.L., M.L.C

(துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

கல்வியிற் பெரியர் கம்பர் என்பது எல்லோரும் அறிந்ததே. கவிச் சக்கரவர்த்தியாகிய அவர் இந் நாட்டிற் பிறந்ததால் இந் நாட்டிற்கே ஒரு தனிப் பெருமை உண்டு. ஒப்புயர்வற்ற அவர் இயற்றிய இராமாயணத்தை ஒரு புதிய பதிப்பாக உலகத்திற்கு அளிக்கவேண்டுமென்பது இப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராயிருந்த R. K. சண்முகம் செட்டியாரது விருப்பம். அவருடைய அறிவுத்திறன், நாட்டுப்பற்று, மொழிப்பற்று எல்லாம் யாவரும் அறிந்தனவே.

அப் பெரியாரால் தொடங்கப்பெற்ற கம்பராமாயணப் பணி அவர்களுக்குப் பின் இப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராய் விளங்கிய உயர்திரு டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் அவர்களால் மேலும் வளர்ச்சியடைந்து, கம்பராமாயண சுந்தர காண்டத்தின் முதற் பகுதி பாட பேதங்களுடன் இப் பல்கலைக் கழகத்தின் வெள்ளி விழா மலராக வெளியிடப் பெற்றது. இப் பதிப்பு பலரும் பாராட்டும் நிலையில் அமைந்திருத்தல் மகிழ்ச்சிக்குரியதாகும்.

இப் பதிப்பின் இன்றியமையாமையினை யுணர்ந்த இந்திய அரசாங்கம் இவ்வாண்டு இதற்கென இருபதினாயிரம் ரூபா நன்கொடையாக வழங்கியிருப்பது இங்கு குறிப்பிடத்தகும்.

பல்கலைக் கழகத்தார் தொடங்கிய கம்பராமாயணப் பதிப்புப்பணியில் இப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறையினருடன் தமிழ்நாட்டிலுள்ள பேரறிஞர் பலரும் கலந்துகொள்வது நன்றெனஎண்ணி அண்மையில் கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு ஒன்று அமைக்கப்பெற்றது. இக் குழுவினர் இந்நூலைப் பாலகாண்டம் முதல் தொடங்கி ஆண்டுதோறும் ஒவ்வொரு காண்டமாக வெளியிடுவதற்குரிய செயல்முறைகளை வகுத்துள்ளார்கள். இறைவனருளால் இத் தமிழ்ப்பணி இனிது நிறைவேறும் என்னும் துணிபுடையேன்.

இக் குழுவினர் ஆதரவுடன் சுந்தர காண்டத்தின் இரண்டாம் பகுதியும் இதுபொழுது வெளிவருகிறது. பல்கலைக் கழகத்தின் வேண்டுகோட்கிணங்கி இப்பதிப்பு விரைந்து வெளிவருதற்கு உதவிய பதிப்பாசிரியர் குழுவினர்க்கும், அக்குழுவின் தலைவர் பேராசிரியர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை B.A., B.L. அவர்களுக்கும் இப்பகுதியில் அமைந்த படலங்களுக்குக் குறிப்புரை வரைந்துதவிய பேராசிரியர் இராவ்சாகிபு திரு. மு. இராகவ ஐயங்காரவர்கள், தமிழாராய்ச்சித்துறைப் பேராசிரியர், வித்துவான் திரு. G. சுப்பிரமணிய பிள்ளை M.A., B.L., அறிஞர் திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை, திரு. T. K. இராமாநுஜ ஐயங்கார் ஆகிய புலவர் பெருமக்களுக்கும் பல்கலைக் கழகத்தின் பாராட்டு உரியதாகும்.

சுருங்கிய கால எல்லையில் இப்பதிப்பு செம்மையாக வெளிவருதற்குரியவற்றை ஊக்கமுடன் செய்துதவிய தமிழாராய்ச்சித் துறையினரது பணி பாராட்டத்தக்க தொன்றும்.

இப்புத்தகத்தை அச்சிடும் பணியை விரைந்து செய்த திரு. சோம. இலக்குமணச் செட்டியார், க. வெள்ளைவாரணர், T. K. இராமாநுஜ ஐயங்கார், S. திருநாவுக்கரசு என்போர்க்கும் எனது வாழ்த்து உரியதாகும்.

பல்கலைக் கழகத்தார் எண்ணியவாறே கம்பராமாயணம் முழுதும் பாடபேதங்களுடன் திருந்திய பதிப்பாக வெளிவருதற்கு மத்திய அரசாங்கமும் சென்னை அரசாங்கமும் அவ்வப்போது வேண்டும் நிதியுதவிபுரிந்து ஆதரித்து வருமென்று நம்புகின்றேன்.

தி. மூ. நாராயணசாமி பிள்ளை.

# பதிப்புரை

**திரு. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள், B.A. B.L.**
(தமிழ்ப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்.)

தமிழ்நாட்டின் கண்ணெனத் திகழும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் கம்பராமாயணமென்னும் அரும் பெருங் காவியத்தைச் செவ்விய முறையில் வெளியிட்டுதவும் சிறந்த பணியை மேற்கொண்டுள்ளது; பல்கலைக் கழகத்தின் வெள்ளிவிழா மலராக, சுந்தரகாண்டத்தின் முதற்பகுதியை வெளியிட்டு மகிழ்ந்தது. அம் முதற் பகுதியின் பதிப்பு முறைகளையே மேற்கொண்டு சுந்தரகாண்டத்தின் இரண்டாம் பகுதியும் இப்பொழுது பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பெறுகின்றது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டுள்ள நல்லறிஞருடன் தமிழ்நாட்டுப் பேரறிஞர் பலருடைய ஒத்துழைப்பும் பெற்று இப்பகுதி வெளிவருகின்றது.

பேராசிரியர் இராவ்சாகிப் திரு. மு. இராகவ ஐயங்காரவர்கள் இப் பகுதியில், பொழிலிறுத்த படலம், சம்புமாலி வதைப் படலம், பிணிவீட்டு படலம் ஆகிய மூன்று படலங்களுக்கும் திருவடிதொழுத படலத்தில் 59 முதல் 93 வரையுள்ள செய்யுட் பகுதிக்கும் குறிப்புரையும் அப்படலங்களுக் குரிய முன்னுரையும் வரைந்து உதவியுள்ளார்கள். தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர், வித்துவான் திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M. A., B. L. கிங்கரர்வதைப்படலத்திற்குக் குறிப்புரையும் முன்னுரையும் எழுதியுதவியுள்ளார்கள். கரந்தைத்தமிழ்ச்சங்கத்தின் முன்னாள் அமைச்சரும் தமிழ்ப் பேரறிஞருமாகிய திரு. நீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள், பஞ்சசேனபதிகள் வதைப் படலம், அட்சகுமாரன் வதைப் படலம், பாசப் படலம், இலங்கையெரியூட்டு படலம் ஆகிய நான்கு படலங்களுக்கும் திருவடி தொழுத படலத்தில் முதல் முப்பது பாடல்களுக்கும் குறிப்புரையும் அப்படலங்களுக்குரிய முன்னுரையும் எழுதியுதவியுள்ளார்கள். பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. T. K. இராமாநுஜ ஐயங்காரவர்கள் திருவடி தொழுத படலத்தில் 31 முதல் 58 முடியவுள்ள செய்யுட் பகுதிக்குக் குறிப்புரை வரைந்துள்ளார்கள். திருவடி

தொழுத படலத்திற்குப் பேராசிரியர் திரு. மு. இராகவ ஐயங்கார் அவர்களும் திரு. நீ. கந்தசாமிப் பிள்ளையவர்களும் முன்னுரை வரைந்துள்ளார்கள். இவ்விரு முன்னுரைகளும் கற்போர்க்குப் பயன்படுமென்று கருதி இப்படலத்தின் முன்னும் பின்னும் சேர்க்கப் பெற்றுள்ளன.

தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர் திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தலைமையில் தமிழாராய்ச்சித்துறை ஆசிரியர்கள் திரு. **T. K.** இராமாநுஜ ஐயங்காரவர்கள், திரு. க. வெள்ளைவாரணனார், வித்துவான், சிரோமணி திரு. **P. S.** இராமாநுஜாசாரியார், திரு. **S.** திருநாவுக்கரசு **M. A.**, வித்துவான் திரு. **V.** சுந்தரேச வாண்டையார் ஆகியோர் சுந்தரகாண்டத்தின் அச்சுப் பிரதிகளோடு நாற்பதுக்கு மேற்பட்ட ஓலைச் சுவடிகளை ஒப்பு நோக்கித் தொகுத்த பிரதி பேதங்கள் இப்புத்தகத்தின் பிற்சேர்க்கையாக இணைக்கப்பெற்றுள்ளன.

பல்கலைக்கழகத்தாரது வேண்டுகோளுக்கிணங்கி மிகச் சுருங்கிய காலத்தில் இப் பகுதிக்குக் குறிப்புரை வரைந்துதவிய பேரறிஞர்கட்குக் கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழுவின் சார்பில் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இப் பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சை, சரசுவதி மகால் நூல் நிலையத்தார்க்கும், சென்னை அடையாறு டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தார்க்கும், சென்னைக் கீழ்த்திசைக் கையெழுத்துப் பிரதி நூல் நிலையத்தார்க்கும், மற்றும் பல அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றி யுரியதாகும்.

கல்வியிற் பெரியராகிய கம்பர் பாடிய இராமாயணமென்னும் செந்தமிழ்க் காப்பியத்தைப் பாட பேதங்களுடன் திருந்திய முறையில் வெளியிட முன்வந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் நன்முயற்சியைப் பாராட்டி ஊக்கமளிக்கும் வகையில் இவ்வாண்டு இந்திய அரசாங்கம் இருபதினாயிரம் ரூபா நன்கொடையாக வழங்கியிருப்பது மகிழ்ந்து பாராட்டுதற்குரிய தொன்றாம். இப் பணி சிறப்பாக நிறைவேறும் வண்ணம் இந்திய நல்லரசின் பேருதவி மேலும் தொடர்ந்து கிடைக்குமென நம்புகின்றோம்.

சிவநெறியும் செந்தமிழும் தழைக்கப் பெரும்பொருளை வாரி வழங்கிவரும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் தலைவர் காசிவாசி

ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளது அருளும் பொருளும் துணைகொண்டு தொடங்கப்பெற்ற கம்பராமாயணப் பணி, எல்லோருடைய ஆதரவும் பெற்று இனிது நிறைவேறுமென்னும் துணிபுடையோம்.

இன்னோரன்ன தமிழ்நூற் பணிகள் சிறப்பாக நிகழ்தற்கு ஊக்கம் அளித்து அன்போடு ஆவன புரிந்துவரும் அண்ணாமலைப் பல்கலைக் கழக இணைவேந்தரும் பெருங்கொடைவள்ளலும் ஆகிய ராஜா சர். டாக்டர் M. A. முத்தைய செட்டியார் B. A., M. L. A. அவர்களுக்கும், பல்கலைக் கழகத் துணைவேந்தரும் செந்தமிழ்ப் பேரன்பரும் ஆகிய திருவாளர் T. M. நாராயணசாமிப் பிள்ளை M. A., B. L. M. L. C. அவர்களுக்கும் தமிழ்மக்களது அன்பு கனிந்த பாராட்டும் வாழ்த்தும் என்றும் உரியனவாம்.

இப் பதிப்பினைக் குறித்த காலத்தில் கண்கவர் வனப்புடன் திருந்திய முறையில் அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தாரது பணி பாராட்டுதற்குரியதாகும்.

24—3—'56
சென்னை.

**ரா. பி. சேதுப்பிள்ளை,**
**தலைவர், கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு.**

# சுந்தர காண்டம்



## 6. பொழிலிறுத்த படலம்

இராவணன் சீதாபிராட்டியைச் சிறைவைத்த அசோக வனிகையை அனுமன் முறித்தழித்த வரலாறுகூறும் பகுதி, இப்படலம். இலங்கை மாநகர்க்குச் சிறந்த உய்யானவனமாதலால், பொழில் என்ற பொதுப் பெயரே அசோகவனத்துக்குச் சிறப்பாகத் தரப்பட்டது.

பிராட்டியிடமிருந்து சூடாமணி பெற்றுக்கொண்டபின், வந்த காரியம் முற்றுப்பெற்றதாயினும், உடனே திரும்பிச் செல்வது தன் பெருமைக்கும் வீரத்துக்கும் தகுதியன்று என்றும் அருஞ்செயல்களைத் தன் ஆற்றலாற் காட்டி மீள்வதே தகுதி என்றும் கருதிய அனுமன், தன்னுள் நினைந்த ஆலோசனைகளைக் கம்பர்பெருமான் முதல் ஏழு கவிகளால் அழகுறக் கூறுகின்றார்.

> "சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
> தாழ்ச்சியுள் தங்குதல் தீது" (திருக்குறள் 671)

என்றபடி, தான் கருதிய எண்ணங்கள் நேர்மையானவை என்று தெளிந்ததும் உடனே செயலாற்றத் தொடங்கி, இரவில் அசோக வனத்தின் பெரும் பாகத்தை அழித்து, அதனால் அரக்கர்களுக்குக் கலக்கமுண்டாக்கிய செய்திகள் அடுத்த முப்பத்தொரு கவிகளால் வருணிக்கப்படுகின்றன. இவ் வருணனைகள் அதிமானுடச் செயல்களாகவே அமைந்துள்ளவை. பேர் உருவும், ஆற்றலும், போர் வன்மையும் உடைய அனுமனுக்கும் அத்தகைய அரக்க வீரர்க்கும் மூண்ட போரில், மானிட வியல்புக்கு மேற்பட்ட செயல்களே நிகழக்கூடியன அன்றோ. ஒரே மூச்சில் பெருங் கடலைத் தாண்டியவன் அல்லனோ அனுமன்! அத்தகையோன் பொழி லிறுத்த காலத்து நிகழ்த்திய அருஞ் செயல்கள் வான்மீகத்தும் உயர்வு நவிற்சியாகவே சிறப்பிக்கப்படுகின்றன. தம் காலத்துப் புலமைச் சூழ்நிலைக் கேற்பக் கம்பர்பெருமானும் அம் முறையையே பின்பற்றலாயினர் என்க.

இனி, அசோகவனம் பெரும்பாலும் அழிவுற்றபோது, சீதாபிராட்டி தங்கியிருந்த *'சிஞ்சுபாமரம்' ஒன்றுமே, அவ்வழிவுக்கு உட்படாதிருந்தது (44). இரவு கழிந்து சூரியோதயமானதும், கருதிய செயல்கள் முற்றுப்

* இதனை நூக்கமரம் என்பர். தோதகத்தி என்ற பொருளும் இதற்கு உண்டு.

பெற்ற தறிந்து உளம் பூரித்தனன் அனுமன். பிராட்டியைக் காவல் புரிந்து வந்த அரக்கியர், அஞ்சி நடுங்கி, சீதையிடம் 'வந்தவனைப்பற்றி நீ அறிதியோ', என்று உசாவ, அதற்கு அப் பிராட்டி கூறிய விடை (48) அருமையும் அழகும் வாய்ந்தது. அதன் பின்பு, தனி நின்ற அனுமன், மிகப் பெரிய சைத்தியமொன்று அப்பொழிலில் அழிவுறுதிருப்பது கண்டு, அதனையும் பெயர்த்து இலங்கைமேல் எறிந்து பாழ்படுத்தினன். இவற்றையெல்லாம் அக் காவற் சோலையைக் காத்துவந்த பருவத் தேவர்கள் கண்டு அஞ்சி, இராவணனிடம் ஓடிச் சென்று அறிவிக்கலாயினர். அவர் வார்த்தைகளைக் கேட்டுப் பரிகசித்தனன் அரக்கர் கோமான். இச் செயலெல்லாம் முடிந்த பின், ஏனை யரக்க வீரர்களையும் போருக்கு அழைக்கும் விருப்பால், அண்டமெலாங் கலங்கும்படி ஆரவாரிக்கலாயினன் அனுமன்.

இப் பொழிலிறுத்த படலத்துள், கம்பர்பெருமான் பாடிய கதைக் கூறுகள் பெரும்பாலும் வான்மீகத்தை அடியொற்றியே அமைந்தவை. கற்பனைகளும் கருத்துக்களுமே பெரிதும் வேறுபட்டுள்ளன எனலாம். அசோக வனத்தில் சீதாதேவி தங்கியுள்ள சிம்சுபா விருக்ஷம் ஒன்று தவிர, ஏனைய மரம் செடி கொடிகளும் விலங்கு பறவையினங்களும் மாளிகைகள் சிலவும் அனுமனால் முழுதும் அழிந்தொழிந்தன என்றும், இச் செய்தியை இராவணனிடம் ஓடிச்சென்று அறிவித்தவர்கள் அவ்வனத்தில் பிராட்டியைக் காவல் புரிந்து வந்த அரக்கியர் சிலர் என்றும் வால்மீகி முனிவர் கூறுகின்றார். கம்பரோ அவ்வாறு அறிவித்தோர் 'பருவத் தேவர்' என்பர். இவர்கள் இராவணனது ஆணைப்படி அவ்வனத்தை வளம்பெறச் செய்து காக்கவும், ஆங்குள்ள மரம் செடி கொடிகள் வேண்டிய பலன்களை எல்லாப் பருவங்களிலும் அளிக்கும்படி செய்விக்கவும் நியமிக்கப்பெற்ற தேவ கணத்தாராவர். இவர்கள் காக்கும் அழகிய பூஞ்சோலை முற்றும் அழிந்தொழியவே, அஞ்சி நடுங்கிய இவர்கள் இராவணனிடம் சென்று கூறுவதைக் கம்பர் வாக்கில் அழகுறக் காணலாம். வான்மீகி முனிவரோ அச் சோலை அழிந்தொழிந்ததை நாற்பத்தோராம் சருக்கத்தில் ஒன்பது சுலோகங்களாற் சுருக்கிக் கூறி, அதனை அழித்த வானரத்தைக் கொன்று வருமாறு தன் கிங்கரர் எண்பதினாயிரவரை இராவணன் அனுப்பினன் என்றும், போரில் அவரெல்லாருமே மாருதியால் மாய்ந்தனர் என்றும், தப்பியோடிய சிலர் இராவணனிடம் நடந்த செய்தியை அறிவித்தனர் என்றும் 42-ஆம் சருக்கத்தில் கூறி முடிக்கின்றார். இதனைக் 'கிங்கரர் வதைப் படலம்' எனத் தனிப் படலமாக்கி, அடுத்து விளக்குவர் கம்பர்.

கிங்கரப் படை முழுதும் ஒழிந்தபின், எதிர்க்கவரும் அரக்கவீரரை எதிர்பார்த்து நின்றனன் அனுமன். இதனிடையே அசோகவனத்தில் பெரியதொரு சைத்தியாலயம் மட்டும் அழிவுபடாமல் எஞ்சியிருந்தது. அது மேருவைப்போல மிகப் பெரிதும் பொன்மயமானதும் ஆகும். அது

கண்டமாருதி அதன் சிகரத்தில் ஏறிநின்றவண்ணம் அரக்கர்களைப் போருக்கு அறைகூவலானான். அதனைக் கேட்ட சைத்தியக் காவலர்கள் திரண்டு ஆயுதங்களுடன் வந்து அனுமனைத் தாக்கினர். உடனே அவ்வாலயத்திலிருந்த பொற்கம்பமொன்றை அனுமன் பிடுங்கிச் சுழற்ற, அது மற்றொரு கம்பத்திலும் கட்டிடத்திலும் தாக்கிப் பெருத்த நெருப்புப் பொறிகளை உண்டாக்கியது. அதனால் அப் பெரிய சைத்தியமே முழுதும் எரிந்து போயிற்று. பின்பு, பிடுங்கிய கம்பத்தைக்கொண்டே, எதிர்த்த காவலரக்கர்களை நாசஞ்செய்தான் அனுமன். இச் செய்தியை உயிர் தப்பிய காவலர் சிலர் சென்று இராவணனிடம் அறிவித்தனர்—என்று, "சைத்யப்ராஸாதம்" அழிவுற்ற வரலாற்றை அடுத்த தனிச் சருக்கமாக்கி, 25 சுலோகங்களாற் கூறுகின்றார் வான்மீகி பகவான். கம்பர்பெருமானோ இக் கதையைப் பொழிலிறுத்த படலத்தின் இறுதியில் 6 கவிகளால் சுருங்கக் கூறிப் பின் கிங்கரரின் போரைத் தனிப் படலமாக்கிப் பாடுவர். அந்தப் போர் அசோகவனத்தில் நிகழ்ந்ததாதலாலும், சைத்யாலயம் அவ் வனத்தில் அமைந்திருந்ததாலும் அவ்வாலயத்தின் அழிவைப் பொழிலிறுத்த படலத்தில் அடக்கிச் சுருக்கமாகப் பாடலாயினர் நம் கவியரசர் என்றே தோன்றுகிறது. "சைத்யப்ராஸாதம்"* என்ற வான்மீகி வாக்கால் அரக்கர்கள் வணங்கித் தொழுதுவந்த தேவாலயமாகவே அதனைக் கொள்ளத் தகும். இதனைச் 'சயித்தம்' என்பர் கம்பர்.

இப் படலம் 11, 16, 18, 22, 23, 26, 28, 34, 36, 37, 44, 45, 47, 48 என்னும் எண்ணிடப்பெற்ற சுவடிகளில் பொழிலிறுத்த படலம் எனவும், 38 என்னும் எண்ணுள்ள சுவடியில் பொழிலழி படலம் எனவும், 1, என்னும் எண்ணுள்ள சுவடியில் வனபங்கப் படலம் எனவும், 12 என்னும் எண்ணுள்ள சுவடியில் வனமழித்த படலம் எனவும், 17 என்னும் எண்ணுள்ள சுவடியில் பூங்காவனப் படலம் எனவும், 10, 32, 40 என்னும் எண்ணுள்ள சுவடிகளில் கிங்கரர் வதை தோரணப் படலம் எனவும், 4, 5, 6, 9, 13, 14, 20, 21, 33 என்னும் எண்ணுள்ள சுவடிகளில் கிங்கரர் வதைப் படலம் எனவும், 25 என்னும் எண்ணுள்ள சுவடியில் நகரழி படலம் எனவும், 35 என்னும் எண்ணுள்ள சுவடியில் கிங்கரர் அரக்கர் வதைப் படலம் எனவும், 30 என்னும் எண்ணுள்ள சுவடியில் பூங்காவனத் தரக்கர்வதை கிங்கரர்வதைப் படலம் எனவும் வரையப் பட்டுளது.

---

* பிராசாதம்—கோயில்; 'சைத்யப்ராசாத பூமி' என, சமவ சரணத்தின் சுற்று வட்டத்துக்குப் பெயராகச் சைனர் வழங்குதலும் காண்க (மேரு மந்தர புராணம்).

# 6. பொழிலிறுத்த படலம்

**பிராட்டியிடம் விடைபெற்றபின் அநுமன் நினைவு பற்றிய கவிக்கூற்று.**

**691.** நெறிக்கொடு வடக்குறு நினைப்பினி னிமிர்ந்தான்
பொறிக்குல மலர்ப்பொழி லிடைக்கடிது போவான்
சிறுத்தொழின் முடித்தகற றீதென றெரிந்தான்
மறித்துமொர் செயற்குரிய காரிய மதித்தான்.

*நெறிக்கொடு வடக்கு உறும் நினைப்பினில் நிமிர்ந்தான்,*
*பொறிக்குலம் மலர்ப் பொழிலிடைக் கடிது போவான்,*
*'சிறுத்தொழில் முடித்து அகல்தல் தீது' எனல் தெரிந்தான்;*
*மறித்தும், ஓர் செயற்கு உரிய காரியம் மதித்தான்.*

வடக்குறும் நினைப்பினில் நிமிர்ந்தான் போவான் (ஆகிய அனுமன்) அகறல் தீது எனல் தெரிந்தான், ஓர் காரியம் மதித்தான் என்க.

நெறி கொடு – இனிச் செல்லவேண்டிய முறையை மனத்துட்கொண்டு. நினைப்பினில் – நினைவோடும். நிமிர்ந்தான்–மேலே எழுந்தவனாய். பொறி– புள்ளி ; இங்கே வண்டுக்கு ஆகுபெயர். இனி, பொறி – திருமகளின், குலம் – வீடு, இருப்பு எனினும் பொருந்தும் ; தேவகுலம், கோகுலம் என்பன போல.

பிராட்டியைத் தேடிக் காணுதலாகிய சிறு காரியத்தை முடித்துக் கொண்டு மறைந்து செல்லுதல் வஞ்சகர் செயலாதலின், 'சிறுத் தொழில் முடித்து அகறல் தீது' என்று தெரிந்தான் மாருதி என்க. ஏவிய காரியத்தை முடித்துக்கொண்டவனாயினும், அது வீரத்துக்குப் புறம்பானது என்பார், 'சிறுத் தொழில்' என்றும், அதனிலும் பெருஞ் செயலை முடிப்பது கருதினான் என்பார், 'மறித்துமொர் செயற்குரிய காரியம் மதித்தான்' என்றும் கூறினார். 'சிறுக்குட்டன்' (பெரியாழ்வார் திருமொழி), சிறுத் தொண்டர் என்பன போலச் 'சிறுத்தொழில்' என இடையே ஒற்று மிக்கது. (1)

## அநுமன் தனக்குள் எண்ணுதல் 692—697

**692.** ஈனமுறு பற்றலரை யெற்றியெயின் மூதூர்
மீனநில யத்தினுற வீசிவிழி மானை
மானவன் மலர்க்கழலின் வைத்துமிலெ னென்றால்
ஆனபொழு தெப்பரிசி னடிய னாவேன்.

*ஈனம் உறு பற்றலரை எற்றி, எயின் மூதூர்*
*மீன நிலயத்தின் உற வீசி, விழி மானை*
*மானவன் மலர்க்கழலின் வைத்தும் இலென்; என்றால்*
*ஆனபொழுது எப்பரிசின் நான் அடியன் ஆவேன்.*

பற்றலர் (பற்று - அல் - அர்) - அன்பிலார், அணுகாதவர் - பகைவர். மீனநிலயம் - மீனினங்கள் வாழுமிடம். மானவன் - மனுவின் மரபினன். பிராட்டியின் கண்ணழகிற் பெரிதும் ஈடுபட்டவன் இராமபிரானாதலால் 'விழிமானை' எனப்பட்டது. ஆனபொழுது - அப்போது. ஆன என்பது அந்த எனச் சுட்டுப் பொருளதாய், 'இச் சிறிய தொண்டினையும் செய்யாத நிலையில்' என்பதனை வலியுறுத்திற்று. (2)

**693.** வஞ்சனை யரக்கனை நெருக்கிநெடு வாலால்
அஞ்சினுட னஞ்சுதலை தோளுற வசைத்தே
வெஞ்சிறையில் வைத்துமிலென் வென்றுமிலெ னென்றால்
தஞ்சமொரு வர்க்கொருவ ரென்றறக வாமே.

*வஞ்சனை அரக்கனை நெருக்கி, நெடு வாலால்*
*அஞ்சின் உடன் அஞ்சுதலை தோள் உற அசைத்தே,*
*வெஞ்சிறையில் வைத்தும் இலென்; வென்றும் இலென்; என்றால்*
*தஞ்சம் ஒருவர்க்கு ஒருவர் என்றல், தகவாமே.*

அரக்கனை நெடுவாலால் நெருக்கி அசைத்து எனக் கூட்டுக. ஒவ்வொரு தலைக்கும் கரங்கள் இவ் விரண்டாதலால், அஞ்சினோடு அஞ்சு தலைக்குத் தோள்கள் இருபது ஆயின. அசைத்து - கட்டி. 'சிறையில் வைத்து மிலன்' என்ற பின், 'வென்றுமிலன்' என்றது, சிறையிலிட்ட பின் மற்ற அரக்க வீரருடன் போரிட வேண்டுதலால். போர் மூட்டும் வகையை அநுமன் ஆராய்தல் பின்னரும் காண்க.

தஞ்சம் என்பதனை அடைக்கலப் பொருள் என்று கொண்டு, இராமனுக்குத் தஞ்சமானவன் அநுமான் என்பது ஏற்றதாகுமோ? (ஆகாது)

என்று பொருள் உரைக்க. உற்றுழி உதவக்கூடாத அடியனாயிருத்தலால் இவ்வாறு கூறினன் மாருதி என்க.

இனி, தஞ்சம் என்பதற்கு எளிமை என்பது பழைய பொருள் (தொல்காப்பியம்). 'அரசே தஞ்சமென்று அருங்கானடைந்த அருந் திறல்' (சிலப்.) என்றார் இளங்கோவடிகளும். தாழ்வு என்ற பொருளும் உண்டு (பிங்கலந்தை). இதற்கு, வீரச் செயல்களைக் காட்டேனாயின் ஆண்டானும் அடிமையும் ஆகிய இருவருமே வலியற்றவர், தாழ்ந்தவர் என்று பகைவர் கூறுதல் தக்கதாகும் என்பது கருத்து. (3)

**694.** கண்டநிரு தக்கடல் கலக்கினென் வலத்தில்
திண்டிற லரக்கனு மிருக்கவொர் திறத்தின்
மண்டவுத ரத்தவண் மலர்க்குழல் பிடித்துக்
கொண்டுசிறை வைத்திடுத லிற்குறையு முண்டோ.

*கண்ட நிருதக்கடல் கலக்கினென், வலத்தில்*
*திண்திறல் அரக்கனும் இருக்க, ஓர்திறத்தில்*
*மண்ட உதரத்தவள் மலர்க்குழல் பிடித்துக்,*
*கொண்டு சிறைவைத்திடுதலில் குறையும் உண்டோ?*

நிருதக் கடல் கலக்கினன் (ஆய்), அரக்கனும் இருக்க, (அவன் தேவியின்) குழல் பிடித்துச் சிறை வைத்திடுதலிற் குறையுமுண்டோ என்றான் என்க.

கண்ட – கட்புலனுக்கு எதிர்ப்பட்ட. வலத்தில் – பலத்தால். இருக்க– பிராட்டியைச் சிறை வைத்த இராவணனும் நேரிற் கண்டிருக்க. ஓர் திறத்தின் – வேறு வகையால்; என்றது, பெண்பாலாரைப் பிடித்துச் சிறைப்படுத்தல் தன் தருமம் அன்றாதலின். மண்ட உதரத்தவள் – மண்டோதரி. மந்த உதரத்தவள் என வர வேண்டியது எதுகை நோக்கி மண்ட உதரத்தவள் எனப்பட்டது.

வீரச் செயலாலன்றி மறைந்து வந்து கையால் தீண்டாது கொணர்ந்து சிறை வைத்தவனது வஞ்சகச் செயல்போலக் குறைவுடைய தாகாமல், இராவணன் பெருந்தேவியை அவன் கண்முகப்பே குழலைப்பற்றிக் கொண்டுவந்து சிறை வைப்பேன் என்று வீர முறையால் பழிக்குப் பழி வாங்க எண்ணினான் மாருதி என்க. (4)

**695.** மீட்டுமினி யெண்ணும்வினை வேறுமுள தன்றால்
ஓட்டியிவ் வரக்கரை யுலைத்துரிமை யெல்லாம்
காட்டுமது வேகரும மன்னவர் கடும்போர்
மூட்டும்வகை யாவதுகொ லென்றுமுயல் கின்றான்.

*மீட்டும் இனி எண்ணும் வினை வேறும் உளதன்று; ஆல்*
*ஓட்டி இவ் அரக்கரை உலைத்து, உரிமையெல்லாம்*
*காட்டும் அதுவே கருமம்; அன்னவர் கடும்போர்*
*மூட்டும் வகை யாவதுகொல்? என்று முயல்கின்றான்.*

இவ்வரக்கரை உலைத்து ஓட்டி என் வலிமையெல்லாம் காட்டுமதுவே கருமம். மீட்டும் (செய்) வினை வேறு உள்ளதன்று; என்க.

துணிவெய்திய தன் சூழ்ச்சியின் முடிவை விரைந்து செய்யமுந்து கின்றான் ஆதலில் 'உரிமை யெல்லாம் காட்டு மதுவே கருமம்' என்றான். 'சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு, தாழ்ச்சியுள் தங்குதல் தீது' என்றார் வள்ளுவனாரும். கடும்போர் மூட்டும் வகை – கொடிய போரை மூட்டும் உபாயம்; அவ்வுபாயங்கள் பிற் கூறப்படுவன. (5)

**696.** இப்பொழி லினைக்கடிதி றுக்குவெனி றுத்தால்
அப்பெரிய பூசல்செவி சார்தலு மரக்கர்
வெப்புறுசி னத்தரெதிர் மேல்வருவர் வந்தால்
துப்பறமு ருக்கியுயி ருண்பலிது சூதால்.

*இப் பொழிலினைக் கடிது இறுக்குவென்; இறுத்தால்,*
*அப் பெரிய பூசல் செவி சார்தலும், அரக்கர்*
*வெப்பு உறு சினத்தர் எதிர் மேல்வருவர்; வந்தால்,*
*துப்பு அற முருக்கி, உயிர் உண்பல்; இது சூதால்.*

இறுக்குதல் (இறுத்தல்) – முறித்தழித்தல்; குச்சாரியை இடையே பெற்றது. பொழில் இறுக்குவென், பூசல் செவிசாரும், அரக்கர் சினத்தர் மேல் வருவர், உயிர் உண்பல் என்க.

வெப்புறு – உளங்கொதித்து. துப்பு – பகை (குறள். 1165). துப்பு அற – பகைவர் எல்லாம் அறும்படி. 'துப்புற' என்பது பாடமாயின், வலிமை கொண்டு என்க. சூது – உபாயம்; 'மாலிருஞ் சோலை தொழக் கருதுவதே துணிவது சூதே' என்றார் பெரியாரும் (திருவாய்மொழி). (6)

697. வந்தவர்கள் வந்தவர்கண் மீள்கிலர் மடிந்தால்
வெந்திற லரக்கனும் வெலற்கரும் வலத்தான்
முந்துமெனி னன்னவன் முடித்தலை முசித்தென்
சிந்தையுறு வெந்துயர் தவிர்த்தினிது செல்வேன்.

*வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால்,*
*வெம் திறல் அரக்கனும் வெலற்குஅரும் வலத்தான்*
*முந்தும்; எனின் அன்னவன் முடித்தலை முசித்து, என்*
*சிந்தை உறு வெம் துயர் தவிர்த்து, இனிது செல்வேன்.*

வந்தவர்கள், வந்தவர்கள் என்பது, மேன்மேலும் வருபவராவர் என்னுங் குறிப்பினது. மீள்கிலர் – திரும்பிச் செல்லாமல். மடிவர்; மடிந்தால் அரக்கனும் முந்தும், (அவ்வாறு முந்தும்) எனில் தலைமுசித்து வெந்துயர் தவிர்ந்து செல்வேன் என்க.

முடித்தலை முசித்து – தலைகளினின்றும் முடிகளைச் சிதறவடித்து. தலை முடி முசித்து என மாறுக. முடி – மகுடம். முடிகள் அரசாங்கத்துக்கு உரியனவாதலால் அவற்றை அழிப்பது தனக்கும், தலைகளை அறுத்தழிப்பது இராமபிரானுக்கும் உரியன என்பது அனுமன் உள்ளமாம் என்க (பிணி வீட்டு. 63). (7)

## அநுமன் அசோகவனத்தை அழித்தல்.

698. என்றுநினை யாவிரவி சந்திரனி யங்கும்
குன்றமிரு தோளனைய தன்னுருவு கொண்டான்
அன்றுலகெ யிற்றிடைகொ ளேனமென லானுன்
துன்றுகடி காவினை யடிக்கொடு துகைத்தான்.

*என்று நினையா, இரவி சந்திரன் இயங்கும்*
*குன்றம் இரு தோள் அனைய தன் உருவு கொண்டான்;*
*அன்று உலகு எயிற்று இடைகொள் ஏனம் எனல் ஆனுன்;*
*துன்று கடி காவினை அடிக்கொடு துகைத்தான்.*

நினையா – நினைந்து. இரவி சந்திரன் இயங்கும் குன்றம் – மேருமலை. குன்றம் அனைய இரு தோள் என மாறுக. ஏனம் – ஆதிவராகமூர்த்தி. அம்மூர்த்தியின் பேருருவுக்கு உலகம் எயிற்றிடை அமைந்ததோர் சிற்றுருவானவாறே, பொழிலிறுக்க எண்ணிய அனுமனது பேருருவுக்கு அசோகவனம் காலினளவே ஆயிற்றென்பார் 'கடிகாவினை அடிக்கொடு துகைத்தான்' என்றார். கடி கா – இராவணனது காவற் சோலை. பிரளயத்தி

விருந்து பூமிப் பிராட்டியை மீட்க வெழுந்த ஆதிவராக மூர்த்தி, துயர்க் கடலினின்று அவள் தனயையான சீதா பிராட்டியை மீட்க முயலும் அனுமனுக்கு ஏற்ற உவமையாதல் காணத்தகும். (8)

### அசோகவன அழிவுபாடுகளின் வருணனை 699—730

**699.** முடிந்தன பிளந்தன முரிந்தன நெரிந்த
மடிந்தன பொடிந்தன மறிந்தன முறிந்த
இடிந்தன தகர்ந்தன வெரிந்தன கரிந்த
ஒடிந்தன வொசிந்தன வுதிர்ந்தன பிதிர்ந்த.

*முடிந்தன ; பிளந்தன ; முரிந்தன ; நெரிந்த ;*
*மடிந்தன ; பொடிந்தன ; மறிந்தன ; முறிந்த ;*
*இடிந்தன ; தகர்ந்தன ; எரிந்தன ; கரிந்த ;*
*ஒடிந்தன ; ஒசிந்தன ; உதிர்ந்தன ; பிதிர்ந்த.*

(பொழிலின் மரங்களிற் பல) முடிந்தன. முடிந்தன – முற்றும் அழிந்தன. முரிந்தன – இடையில் அற்றன. மடிந்தன – தலைசாய்ந்தன. மறிந்தன – குறுக்கே விழுந்தன. பொடிந்தன – தூளாயின. ஒசிந்தன – வளைந்தன. (9)

**700.** வேரொடு மறிந்தசில வெந்தசில விண்ணிற்
காரொடு செறிந்தசில காலினொடு வேலைத்
தூரொடு பறிந்தசில தும்பியொடு வானோர்
ஊரொடு மலைந்தசில வுக்கசில நெக்க.

*வேரொடு மறிந்த சில ; வெந்த சில; விண்ணில்*
*காரொடு செறிந்த சில ; காலினொடு வேலைத்*
*தூரொடு பறிந்த சில; தும்பியொடு வானோர்*
*ஊரொடு மலைந்த சில; உக்கசில; நெக்க.*

சில மரங்கள் ஆகாயத்துள்ள மேகங்களோடு நெருங்கின. காற்றுடனே கூடி அடித்தூரோடு பறிபட்டுக் கடலில் வீழ்ந்தன சில. வண்டுகளுடனே தேவருலகத்திற் சென்று மோதின சில. சில சிதறிப் பிளந்தன என்க. (10)

701. சோனைமுதன் மற்றவை சுழற்றிய திசைப்பேர்
ஆனைநுக ரக்குளகு மானவடி பற்று
மேனிமிர விட்டன விசும்பின்வழி மீப்போய்
வானவர்க ணந்தன வனத்தையு மடித்த.

*சோனை முதல் மற்றவை சுழற்றிய, திசைப் பேர்*
*ஆனை நுகரக் குளகும் ஆன; அடி பற்று*
*மேல் நிமிர விட்டன, விசும்பின்வழி மீப் போய்,*
*வானவர்கள் நந்தன வனத்தையும் மடித்த.*

சோனை – மேகம்; 'சோனைவார் குழலினர்' என்பர் (நீர்விளை. 14). சோனை முதல் சுழற்றிய மற்றவை – மேகம்வரை சுழற்றி எறிந்த மற்ற மரங்கள்; சோனையை அடியிற் கொண்ட மரங்கள் எனினுமாம். திசை யானை, பேர் யானை என்க. அவை உண்ணும்படி இலையுணவுமாயின. அடிபற்று – அடி மரத்தைப் பிடித்துக்கொண்டு. நந்தனவனம் – கற்பகப் பூஞ்சோலை. (11)

702. அலைந்தன கடற்றிரை யரக்கரகன் மாடம்
குலைந்துக விடிந்தன குலக்கிரிக ளோடு
மலைந்துபொடி யுற்றன மயங்கிநெடு வானத்
துலைந்துவிழு மீனினொடு வெண்மல ருதிர்ந்த.

*அலைந்தன கடல் திரை; அரக்கர் அகல் மாடம்*
*குலைந்து உக இடிந்தன; குலக் கிரிகளோடு*
*மலைந்து பொடி உற்றன; மயங்கி நெடு வானத்து*
*உலைந்து விழும் மீனினொடு வெண்மலர் உதிர்ந்த.*

(அனுமன் வீசிய சில மரங்களால்) கடலின் அலைகள் கிளர்ந்து அலையலாயின. குலக்கிரிகள் – சத்த குல பருவதங்கள். மலைந்து – மோதி. வெண்ணிறமான மலர்கள், விண்மீன்களோடு உதிர்ந்தன. உலைந்து – நிலை கலங்கி. (12)

703. முடக்குநெடு வேரொடு முகந்துலக முற்றும்
கடக்கும்வகை வீசின களித்ததிசை யானை
மடப்பிடியி னுக்குதவ மையினிமிர் கைவைத்
திடுக்கியன வொத்தன வெயிற்றினிடை ஞால்வ.

முடக்கும் நெடு வேரொடு முகந்து உலகம் முற்றும்
கடக்கும்வகை வீசின, களித்த திசையானை
மடப் பிடியினுக்கு உதவ மையில் நிமிர் கைவைத்து
இடுக்கியன ஒத்தன; எயிற்றின்இடை ஞால்வ.

முடக்கும் – முடங்கியுள்ள. முகந்து – அடியோடு பிடுங்கி. வீசின – விசப்பட்ட சில மரங்கள். களித்த திசையானை எயிற்றினிடை ஞால்வ, பிடியினுக்கு உதவ, கை வைத்து இடுக்கியன ஒத்தன – மதக்களிப்புற்ற திக்கயங்களின் தந்தங்களிடையே சிக்கித் தொங்கும் மரங்கள், தத்தம் பிடிகளுக்கு உதவவேண்டிக் கையினால் இடுக்கிக்கொண்ட தழையுணவு போன்றன எ – று.

திக்கயங்கள்: ஐராவதம், புண்டரிகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதிகம் என்றும், அவற்றின் பிடிகள் முறையே – அப்பிரமை, கபிலை, பிங்களை, அனுபமை, தாமிரபருணி சுதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி என்றும் கூறுவர். (13)

**704.** விஞ்சையுல கத்தினு மியக்கர்மலை மேலும்
துஞ்சுதலில் வானவர் துறக்கநக ரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கண் மொய்த்தனர் பறித்தார்
நஞ்சமனை யானுடைய சோலையி னறும்பூ.

விஞ்சை உலகத்தினும் இயக்கர்மலை மேலும்
துஞ்சுதல் இல் வானவர் துறக்க நகரத்தும்
பஞ்சி அடி வஞ்சியர்கள், மொய்த்தனர் பறித்தார்;
நஞ்சம் அனையான் உடைய சோலையின் நறும்பூ.

(இராவணனது) சோலையின் நறும் பூக்களை வஞ்சியர்கள் பறித்தார் என்க. விஞ்சை உலகம் – வித்தியாதர லோகம். இயக்கர்கள் வாழுமிடம் பெரும்பாலும் மலைகளாதலின் 'இயக்கர் மலை மேலும்' என்றும், அமுதம் உண்பதனால் இறவாதவராதலின், 'துஞ்சுதல் இல் வானவர்' என்றும், நஞ்சமனையானாயினும் நறுமணத்தின் சிறப்பால் சூடும் விருப்பினராதலின் சோலையின் நறும்பூப் பறித்தார் என்றும் கூறினார். நஞ்சம் அனையான் – இராவணன். (14)

**705.** பொன்றிணி மணிப்பரு மரன்றிசைகள் போவ
மின்றிரிவ வொத்தன வெயிற்கதிரு மொத்த
ஒன்றினொடு மொன்றிடை புடைத்துதிர வூழிற்
றன்றிர ளொழுக்கிவிழு தாரகையு மொத்த.

*பொன் திணி மணிப் பரு மரன், திசைகள் போவ,*
*மின் திரிவ ஒத்தன; வெயில் கதிரும் ஒத்த;*
*ஒன்றினொடும் ஒன்று இடை புடைத்து உதிர, ஊழில்*
*தன் திரள் ஒழுக்கி, விழு தாரகையும் ஒத்த.*

எறியப்பட்டுப் பல திசைகளிலும் சென்ற பொன்மரங்கள் மின்னல் திரிவன போலவும், மணி மரங்கள் சூரிய கிரணங்கள் போலவும், அம் மரங்கள் ஒன்றினோடு ஒன்று மோதி உடைந்து உதிர்பவை, யுகாந்தத்தில் கூட்டமாக விழும் நட்சத்திரங்கள் போலவும் விளங்கின என்றவாறு. முன்னிரண்டடிகளை நிரனிறையாகக் கொள்க. (15)

**706.** புள்ளினொடு வண்டுஞிமி றுங்களிகொள் பூவும்
கள்ளுமுகை யுந்தளிர்க ளோடினிய காயும்
வெள்ளநெடு வேலையிடை மீனினம் விழுங்கித்
துள்ளின மரன்பட நெரிந்தன துடித்த.

*புள்ளினொடு வண்டும் ஞிமிறும் களிகொள் பூவும்*
*கள்ளும் முகையும் தளிர்களோடு இனிய காயும்*
*வெள்ள நெடு வேலைஇடை மீன் இனம் விழுங்கித்*
*துள்ளின; மரன்பட நெரிந்தன துடித்த.*

(அனுமனால் வீசி யெறியப்பட்ட) மரங்களில் வாழும் பறவை முதலியவை கடலிற் சென்று விழ, அவற்றை விழுங்கிக் களித்துத் துள்ளிய மீனினங்கள், பின் அம்மரங்கள் தம்மேல் விழுதலால் உடல் நெரிந்து துடிக்கலாயின என்றவாறு. களி – தேன் (தேவாரம்). ஞிமிறு – தேனீ (புறநா. 12). (16)

**707.** தூவிய மலர்த்தொகை சுமந்துதிசை தோறும்
பூவின்மண நாறுவ புலால்கமழ்கி லாத
தேவியர்க ளோடுமுயர் தேவரினி தாடும்
ஆவியென லாயதிரை யார்கலிக ளம்மா.

தூவிய மலர்த்தொகை சுமந்து திசைதோறும்
பூவின் மணம் நாறுவ, புலால் கமழ்கிலாத,
தேவியர்களோடும் உயர் தேவர் இனிது ஆடும்
ஆவி எனல் ஆய; திரை ஆர்கலிகள், அம்மா!

மரங்கள் தூவிய மலர்த்திரள்களைத் தாங்கிப் புலால் நாற்றமின்றிப் பூவின் நறுமணமே கமழும் கடல்கள், தேவகணங்கள் இழிந்தாடும் பொய்கை என்னும்படி ஆயின என்றவாறு.

ஆர்கலிகள், பூவின் மணம் நாறுவ; புலால் கமழ்கிலாத; தேவர் இனிது ஆடும் ஆவி எனலாய: என இயையும். ஆவி – பொய்கை. நாற்கடல்களாதலின் ஆர்கலிகள் என்றார். (17)

**708.** இடந்தமணி வேதியு மிறுத்தகடி காவும்
தொடர்ந்தன துரந்தன படிந்துநெறி தூரக்
கடந்துசெல வென்பது கடந்ததிரு காலால்
நடந்துசெல லாகுமென லாகியது நன்னீர்.

இடந்த மணி வேதியும் இறுத்த கடி காவும்
தொடர்ந்தன துரந்தன படிந்து நெறி தூரக்
கடந்து செலவு என்பது கடந்தது; இரு காலால்
நடந்து செலல் ஆகும் எனல் ஆகியது; நல்நீர்,

அனுமன் இடித்தும் ஒடித்தும் எறிந்த மேடைகளாலும் மரங்களாலும் கடல் தூர்ந்து நடந்து செல்லும் நிலமாயிற்று என்று வருணிக்கின்றார்.

நன்னீர், தொடர்ந்து துரந்தன, இடிந்த மணிவேதியும் இறுத்த கடிகாவும் படிந்து தூர, நடந்து செலல் ஆகும் எனலாகியது என இயையும்.

இடந்த – பெயர்த்தெறிந்த. வேதி – மேடை. தொடர்ந்தன துரந்தன – தொடர்ச்சியாகச் செலுத்தியவை. தூர – தூரும்படி ஆனதால். கடந்து செலவு – தாண்டிச் செல்லுகை. கடந்தது – காலாவதியாயிற்று. பூக்களின் நறுமணம் கொண்டிருத்தல் பற்றி நன்னீர் என்றார். (18)

**709.** வேனில்விளை யாடுசுட ரோனினொளி விம்மும்
வானினிடை வீசிய வரும்பணை மரத்தால்
தானவர்கண் மாளிகை தகர்ந்துபொடி யாய
வானவிடி யாலொடியு மால்வரைகண் மான.

வேனில் விளையாடு சுடரோனின் ஒளி விம்மும்
வானின் இடை வீசிய அரும் பணை மரத்தால்;
தானவர்கள் மாளிகை தகர்ந்து பொடி ஆய;
வான இடியால் ஒடியும் மால்வரைகள் மான.

இடியால் ஒடியும் மால்வரைகள் மான, மரத்தால் மாளிகை பொடியான என இயையும். தானவர் – அசுரர்; கொடுமைமிகுதிபற்றி அரக்கரினத்தார்க்கும் இச்சொல் வழங்குவதுண்டு. ஏனைய பொருள் வெளிப்படை. (19)

**710.** எண்ணிறரு கோடிக ளெறிந்தன செறிந்தே
தண்ணமழை போலிடை தழைந்தது சலத்தால்
அண்ணலனு மானட லிராவணன தந்நாள்
விண்ணுமொரு சோலையுள தாமென விதித்தான்.

எண்ணில் தரு கோடிகள் எறிந்தன செறிந்தே
தண்ண மழைபோல் இடை தழைந்தது, சலத்தால்
அண்ணல் அனுமான், 'அடல் இராவணனது அந்நாள்
விண்ணும் ஒரு சோலை உளதாம்' என விதித்தான்.

எறிந்தன எண்ணில்தரு கோடிகள் செறிந்து மழைபோலத் தழைந்தது, இராவணனது ஒரு சோலை அந்நாள் விண்ணிலும் உளதாம் என (அனுமன்) விதித்தான் எனக் கூட்டுக. விதித்தல் – உண்டாக்குதல் (திவா).

மழை – மேகம். சலத்தால் – கோபத்தால். அசோகவனத்து மரங்கள் எல்லாம், அனுமன் வீசி எறிந்ததனுல் ஆகாசத்தில் பறந்து செறிந்தன என்றபடி. (20)

**711.** தேனுறை துளிப்பநிறை புட்பல சிலம்பப்
பூநிறை மணித்தரு விசும்பின்மிசை போவ
மீன்முறை நெருக்கவொளி வாளொடுவில் வீச
வானிடை நடாயநெடு மானமென லான.

தேன் உறை துளிப்ப, நிறை புள் பல சிலம்பப்,
பூ நிறை மணித்தரு, விசும்பின்மிசை போவ,
மீன்முறை நெருக்க, ஒளி வாளொடு வில் வீச,
வான்-இடை நடாய நெடு மானம் எனல் ஆன.

மணித்தரு விசும்பின் மிசை போவ, நெருக்க, வில் வீச, நெடுமானம் எனல் ஆன என்க.

தேன் உறை - தேன் துளிகள். மணித்தரு - இரத்தின மயமான மரங்கள். தேன் துளித்தலும் புட்கள் சிலம்புதலும் மணித்தருக்களுக்கு விசேடணம். சிலம்ப - ஒலிக்க. மீன் - நக்ஷத்திரம். முறை - முறையால். வாளொடுவில் ஒளி வீச - வாள் போலவும் வில் போலவும் ஒளி வீசுவதனால். மானம் - ஆகாச விமானம். (21)

**712.** சாகநெடு மாப்பணை தழைத்தன தனிப்போர்
நாகமனை யானெறிய மேனிமிர்வ நாளும்
மாகநெடு வானிடை யிழிந்துபுனல் வாரும்
மேகமென லாயநெடு மாகடலின் வீழ்வ.

சாகம் நெடு மாப் பணை தழைத்தன, தனிப்-போர்
நாகம் அனையான் எறிய, மேல் நிமிர்வ, நாளும்
மாகம் நெடு வான்-இடை இழிந்து, புனல் வாரும்
மேகம் எனல் ஆய; நெடு மா கடலின் வீழ்வ.

நாகம் அனையான் - யானை போற் பருமனும் வலியுமுள்ள அனுமன்; (அவன்) எறிந்ததனால் பணை தழைத்தன மேல் நிமிர்வ, கடலின் வீழ்வ, இழிந்து புனல் வாரும் மேகம் எனல் ஆய என்க.

அனுமன் விசி எறிந்ததனால் வானிடம் சென்று கடலில் வீழ்ந்த தழைத்த மரங்கள், வான் வழியே சென்று கடலிலிறங்கி நீர் பருகும் மேகங்களை ஒத்தன எ-று. சாகம் - கிளைகள். பணை - பருமனுள்ள. பணை தழைத்தனவாய சாகம் என இயைத்து, பருத்துத் தழைத்த தேக்கு எனினும் ஆம். இங்கே சாகம் - தேக்கு என்க. நாகம் - யானை. மாக வானம் - மேலிடத்ததான ஆகாயம்; மிகப் பெரிய வானம் எனினும் பொருந்தும். (அகநா. 259) (22)

**713.** ஊன முற்றிட மண்ணி னுதித்தவர்
★ ஞான முற்றுபு நண்ணினர் வீடெனத்
தான கற்பகத் தண்டலை விண்டலம்
போன புக்கன முன்னுறை பொன்னகர்.

ஊனம் உற்றிட மண்ணின் உதித்தவர்,
ஞானம் முற்றுபு, நண்ணினர் வீடு எனத்,
தான கற்பகத் தண்டலை, விண் தலம்
போன, புக்கன. முன் உறை பொன் நகர்.

ஞானக்குறைவு சாபக்கேடு முதலியவற்ருல் தம் தேவபதவி நீங்கி மண்ணுலகில் தோன்றியவர்கள், அக்குறைபாடுகள் நீங்கி ஞானமுற்றப் பெற்ற பின், வீட்டினை அடைந்தவாறு போல, தம் தவக் குறைவால், இராவணன் மண்ணுலகிற் கொணர்ந்த கற்பக தருக்கள், (அனுமன் வீசி எறிந்ததனுல்) ஆகாயவழியே சென்று முன் தாம் உறைந்த பொன்னகரையே அடையலாயின எ – று.

கவந்தன் விடுமன் முதலியோர், சாபக்கேட்டால் தம் தேவபதம் நீங்கி மண்ணுலகிற் பிறந்து, ஞானம் முற்றியபின் தம் பழைய பதங்களைப் பெற்ற சரிதம் இங்கே நினைக்கத் தகும்.

உவமை அடைகளான ஊனமுறுதலும் மண்ணினுதித்தலும் உவமேயமான கற்பக தருவுக்குக் கொள்ளப்பட்டன. ஊனம் – குறைபாடு. முற்றுபு – முதிர்ந்து. வீடு – மோட்சம், துறக்கம். தான கற்பகம் – கொடைச் சிறப்புள்ள கற்பகதரு ; இத்தரு மற்றத் தேவ தருக்களுக்கும் உபலட்சணம்: தண்டலை – சோலை. (23)

**714.** மணிகொள் குட்டிம மட்டித்து மண்டபம்
துணிப டுத்தயல் வாவிக டூர்த்தொளிர்
திணிசு வர்த்தலஞ் சிந்திச் செயற்கரும்
பணிப டுத்துயர் குன்றம் படுத்தரோ.

மணிகொள் குட்டிமம் மட்டித்து, மண்டபம்
துணிபடுத்து, அயல் வாவிகள் தூர்த்து, ஒளிர்
திணி சுவர்த்தலம் சிந்திச், செயற்கு அரும்
பணி படுத்து, உயர் குன்றம் படுத்து அரோ.

இது முதல் மூன்று கவிகளால் அசோகவனத்துக் கட்டிடங்களும் பொய்கையும் அனுமனுல் அழிபட்ட செய்திகளை ஒரு தொடராகக் கூறுகின்ருர்.

குட்டிமம் – திண்ணையை ; மட்டித்து – தகர்த்து. செயற்கு அரும் பணி படுத்து – செய்தற்கு அருமையான வேலைகளைச் செய்து. அச்செயல்களால் அழிபட்டவை யாவும் திரண்டு உயர்ந்த மலைபோலாயின என்பார், ‘ உயர் குன்றம் படுத்து ’ என்ருர். இனி ‘குன்றம் பறித்தரோ’ என்ற பாடத்துக்கு ஏற்பச் ‘ செய்குன்று ’ என்று கொண்டு முன்னவற்ருேடு கூட்டினுமாம். (24)

2

**715.** வேங்கை செற்றும ராமரம் வேர்பறித்
தோங்கு கற்பகம் பூவொடொ டித்துராய்ப்
பாங்கர் சண்பகப் பத்திப றித்தயல்
மாங்க னிப்பணை மட்டித்து மாற்றியே.

*வேங்கை செற்று, மராமரம் வேர் பறித்து,*
*ஓங்கு கற்பகம் பூவொடு ஒடித்து உராய்ப்,*
*பாங்கர் சண்பகப் பத்தி பறித்து, அயல்*
*மாங்கனிப் பணை மட்டித்து மாற்றியே.*

செற்றுதல் – இடம் விட்டுப் பெயர்ந்து செல்லுதல் (சீவக. 37). பத்தி– வரிசை. மட்டித்தல் – முறித்தல். பணை – கிளை. (25)

**716.** சந்த னங்க டகர்ந்தன தாள்பட
இந்த னங்களின் வெந்தெரி சிந்திட
முந்த னங்க வசந்தன் முகங்கெட
நந்த னங்கள் கலங்கி நடுங்கவே.

*சந்தனங்கள் தகர்ந்தன ; தாள்பட,*
*இந்தனங்களின் வெந்து எரி சிந்திட,*
*முந்து அனங்க வசந்தன் முகம் கெட,*
*நந்தனங்கள் கலங்கி நடுங்கவே.*

(அனுமன்) தாள்பட, வசந்தன் முகம் கெட நந்தனங்கள் நடுங்க, சந்தனங்கள் தகர்ந்தன என்க. இந்தனங்களின் – விறகுகள் போல. காமதேவன் உல்லாசமாக வீற்றிருத்தற்குரியது ஆதலால், நந்தவனங்கள் சந்தனமரங்களோடு அழிந்தது, அவன் முகங்கெடுதற்குக் காரணமாயிற்று. வசந்தன் – வேனிலாளன், காமன். (26)

**717.** காம ரங்கனி வண்டு கலங்கிட
மாம ரங்கண் மடிந்தன மண்ணொடு
தாம ரங்க வரங்கு தகர்ந்துகப்
பூம ரங்க ளெரிந்து பொரிந்தவே.

*காமரம் கனி வண்டு கலங்கிட,*
*மாமரங்கள் மடிந்தன மண்ணொடு ;*
*தாம் அரங்க அரங்கு தகர்ந்து உகப்*
*பூ மரங்கள் எரிந்து பொரிந்தவே.*

காமரம் கனி - பண்கள் கனிந்த. அரங்க அரங்கு - நீரிடைக்குறையில் அமைந்த நாடகசாலைகள். இவை வசந்த காலத்துக்கென்று அமைத்தவை. (27)

**718.** குழையுங் கொம்புங் கொடியும் குயிற்குலம்
விழையுந் தண்டளிர்ச் சூழலு மென்மலர்ப்
புழையும் வாசப் பொதும்பும் பொலன்கொடேன்
மழையும் வண்டு மயிலு மடிந்தவே.

குழையும், கொம்பும், கொடியும், குயில்-குலம்
விழையும் தண் தளிர்ச் சூழலும், மென்மலர்ப்
புழையும், வாசப் பொதும்பும், பொலன்கொள் தேன்
மழையும், வண்டும், மயிலும், மடிந்தவே.

அனுமனால் சிதைக்கப்பட்ட அசோகவனத்தில், குழை கொம்பு முதல் வண்டு மயில் வரை உள்ளவை அழிந்தொழிந்தன எ - று. புழை - நுழைவாயில். பொதும்பு - புதர். பொலன் - அழகு. குயிற்குலம் விழையும் தண்டளிர்ச் சூழல், மாமரங்கள் சூழ்ந்துள்ள இடம். (28)

**719.** பவள மாக்கொடி வீசின பன்மழை
துவளு மின்னெனச் சுற்றிடச் சூழ்வரை
திவளும் பொற்பணை மாமரஞ் சேர்ந்தன
கவள யானையி னோடையிற் காந்தவே.

பவள மாக்கொடி வீசின பல் மழை
துவளும் மின் எனச் சுற்றிடச் சூழ்வரை
திவளும் பொன்பணை மாமரம் சேர்ந்தன
கவள யானையின் ஓடையில் காந்தவே.

(அனுமனால்) விசப்பட்ட பெரிய பவளக்கொடிகள், துவண்டு தோன்றும் மேக மின்னல்போல மலைகளைச் சூழ்ந்து கொள்ளவும், அம்மலைகளில் பொன்மயமான மாமரங்கள் சேர்ந்தவை, யானையின் நெற்றிப்பட்டம் போல விளங்கவும் திகழ்வன.

பவளக்கொடி மின்னெனச் சூழ்வரை சுற்றிட(வும்) பொன்மரம் யானையின் ஓடையிற் காந்த(வும்) திவளும் என இயையும். திவளுதல் - விளங்குதல். பொற்பணை மாமரம் - பொன் கிளைகளுடைய மாமரம். கவளயானை - கவளங்களாக உண்ணும் யானை. ஓடை - நெற்றிப்பட்டம். (29)

**720.** பறவை யார்த்தெழு மோசையும் பன்மரம்
இறவெ டுத்த விடிக்குர லோசையும்
அறவ ஞர்த்தெழு மோசையு மண்டத்தின்
புறநி லத்தையுங் கைம்மிகப் போயதே.

*பறவை ஆர்த்து எழும் ஓசையும், பல் மரம்*
*இற எடுத்த இடிக்குரல் ஓசையும்,*
*அறவன் ஆர்த்து எழும் ஓசையும், அண்டத்தின்*
*புற நிலத்தையும் கை மிகப் போயதே.*

*பல் மரம் இற எடுத்த இடிக்குரலோசையும் – பலவகை மரங்கள் முறிதலால் எழும்பிய இடிக்குரல் போன்ற சத்தமும். அறவன் – தருமமூர்த்தி; 'அறவனை ஆழிப்படை யந்தணனை' என்ருர் பெரியாரும் (திருவாய்). இங்கே அனுமனைக் குறிப்பதாம். அண்டத்தின் புற நிலம் – உலகத்திற்கு அப்பாலதான வெளி நிலம்.* (30)

**721.** பாட லம்படர் கோங்கொடும் பன்னிசைப்
பாட லம்பனி வண்டொடும் பஃறிரை
பாட லம்புயர் வேலையிற் பாய்ந்தன
பாட லம்படப் புள்ளினம் பார்ப்பொடே.

*பாடலம் படர் கோங்கொடும், பன் இசைப்*
*பாடல் அம் பனி வண்டொடும், பல் திரை*
*பாடு அலம்பு உயர் வேலையில் பாய்ந்தன;*
*பாடு அலம்படப் புள் இனம் பார்ப்பொடே.*

*புள்ளினம் பார்ப்பொடும் கோங்கொடும் வண்டொடும் வேலையிற் பாய்ந்தன என்க. பாடலம் படர் கோங்கு – செம்மைநிறம் படர்ந்த கோங்கு; 'கோங்க மலர்ந்த வரையெல்லாம் பொன்னணி யானை போன்றுளிருமே.' (கலித் 42) என்பதனுல் செம்மை நிறம் கோங்குக்கு உரியதாதல் காண்க.*

*பாடலம் – பாதிரி மரம். இசைப்பாடல் பன் அம் பனி வண்டொடு– இசைப்பாட்டுக்களை மிழற்றுகின்ற அழகிய குளிர்ந்த வண்டுகளோடும். பல் திரை பாடு அலம்பு உயர் வேலையில் – பலவான அலைகள் பக்கங்களிற் பரவி யடிக்கின்ற பெருங்கடலில்.* (31)

722. வண்ட லம்புந லாற்றின் மராமரம்
வண்ட லம்புன லாற்றின் மடிந்தன
விண்ட லம்புக நீங்கிய வெண்புனல்
விண்ட லம்புக நீண்மரம் வீழ்ந்தவே.

*வண்டு அலம்பு நல் ஆற்றின் மராமரம்,*
*வண்டல் அம் புனல் ஆற்றின் மடிந்தன ;*
*விண்டு அலம்பு கம் நீங்கிய வெண்புனல்,*
*விண்டு அலம்புக நீள்மரம் வீழ்ந்தவே.*

மராமரங்கள் புனலாற்றின் மடிந்தன ; (ஏனை) நீண் மரம், வெண் புனல் விழ்ந்தன, என்க.

வண்டு அலம்பு நல் ஆறு – வண்டுகள் அலேயப்பெற்ற நல்ல வழிகள். அலம்புதல், 'வண்டலம்புஞ்சோலே' (திருவாய். 2-8-11) என்புழிப் போல அலேதற் பொருளது ; ஒலித்தலுமாம்.

வண்டல் அம் புனலாற்றில் மடிந்தன – வண்டல் தங்கிய நீருள்ள நதியில் சாய்ந்தன. 'வண்டல்பாய் பொன்னி' (கலிங்கத்துப்பரணி) என்பதனுல் இப்புனலாறு காவிரியைக் குறிப்பதெனலாம்.

வெண்புனல் –ஆகாய கங்கை. விண்டு – ஆகாயம். கம் – நீர். (அக் கங்கையின்) அலம்பு கம் – அலேகின்ற நீர்; நீங்கிய – நீங்கும்படி. நீள் மரம் – பெரிய மரங்கள். விண்டு அலம் புக விழ்ந்த – பிளந்து கேடுற விழ்ந்தன. இதற்கு வேறுரை கூறுவாருமுளர். (32)

723. தாம ரைத்தடம் பொய்கைசெஞ் சந்தனம்
தாம ரைத்தன வொத்தது கைத்தலின்
காம ரக்களி வண்டொடுங் கள்ளொடும்
காம ரக்கடல் பூக்கடல் கண்டவே.

*தாமரைத் தடம் பொய்கை, செஞ் சந்தனம்*
*தாம் அரைத்தன ஒத்தது ; உகைத்தலின்*
*காமரக் களி வண்டொடும் கள்ளொடும்*
*கா, மரக்கடல் பூக்கடல் கண்டவே.*

உகைத்தலின், பொய்கை சந்தனம் அரைத்தன ஒத்தது ; கா மரக் கடல் பூக்கடல் கண்ட என்க.

செஞ்சந்தனம் – செஞ்சந்தனக் கட்டைகள். பொய்கை ஒத்தது என்க. உகைத்தலின் – காலால் எற்றி யெறிந்ததனால். (முதல்) காமரம் – ஒரு வகைப் பண். கள் – தேன். கா – சோலை. மரக்கடல் – மரக்கலங்களோடு கூடிய கடல். மரம் – மரக்கலம் ; 'பெருங்கடல் நீந்திய மரம் வலியுறுக்கும்' (76.4.) என்பது பதிற்றுப் பத்து. கண்ட – செய்தன. கா கண்ட : என இயைக்க. (33)

**724.** சிந்து வாரந் திசைதொறுஞ் சென்றன
சிந்து வாரம் புரைதிரை சேர்ந்தன
தந்து வாரம் புதவொடு தாளறத்
தந்து வாரந் துகள்படச் சாய்ந்தவே.

*சிந்துவாரம் திசைதொறும் சென்றன,*
*சிந்து வார் அம் புரை திரை சேர்ந்தன ;*
*தம் துவாரம் புதவொடு தாள் அறத்*
*தந்து வாரம் துகள்படச் சாய்ந்தவே.*

திசை தொறும் சென்றன(வும்,) திரை சேர்ந்தன(வும் ஆகிய) சிந்து வாரம், தாள் அறவும் துவாரம் துகள் படவும் சாய்ந்தன என்க.

சிந்துவாரம் – நொச்சி மரம். வார் அம் புரை திரை – நீண்ட அழகிய உயர்ந்த அலைகள். துவாரம் – வாயில். புதவு – கதவு. தாள் – தாழ்ப்பாள். தந்து – எறியப்பட்டு. வாரம் – தாழ்வாரம்.

விசியெறிந்த நொச்சிமரங்கள், திசைதொறும் சென்ற போதும், கடல் சேர்ந்த போதும், இடையே அரக்கர்மாளிகைகளின் வாயில்களை யும் கதவுகளையும் தாழ்ப்பாள்களையும் உடைத்தும் தாழ்வாரங்களைத் தகர்த் தும் விழ்த்தின என்ற படி. (34)

**725.** நந்த வானத்து நாண்மலர் நாறின
நந்த வானத்து நாண்மலர் நாறின
சிந்த வானந் திரிந்துகச் செம்மணி
சிந்த வானந் திரிந்த திரைக்கடல்.

*நந்தவானத்து நாள் மலர் நாறின*
*நந்த வானத்து நாள் மலர் நாறின ;*
*சிந்து அ வானம் திரிந்து உகச் செம்மணி*
*சிந்த வால் நந்து இரிந்த திரைக் கடல்.*

நாறின நந்தவானத்து நாள் மலர் வானத்து நந்த மலர் நாள் நாறின - நறுமணம் வீசும் அசோக வனத்துள்ள அன்று பூத்த மரங்களின் மலர்கள் ஆகாயத்தில் மிகுதியாக ஒளிரும் நட்சத்திரங்களைப்போல விளங்கின என்றவாறு. நந்தவனம் என்பது நந்தவானம் என இடையில் எழுத்து நீண்டது ; காண்டாவனம், ஆச்சிராமம் என்பன போல. நாறுதல் - (1) மணத்தல், (2) விளங்குதல்.

சிந்து திரிந்து அ வானம் உக - புளிய மரங்கள் சுழன்று அந்தக் கடற் பள்ளத்தே விழுதலால் : வால் நந்து திரைக்கடல் செம்மணி சிந்த இரிந்த- வெண்ணிறமுள்ள சங்குகள் அலைகளுடைய அக்கடலில் கருவுற்ற தம் நன் முத்துக்களைச் சிந்தும்படி நிலைகெட்டன என்றவாறு.

சிந்து - புளிய மரம். வானம் - பறித்த குழி ; சகரர்களால் தோண்டப் பட்டதாதலால் கீழ்கடலைப் பள்ளமுடையதாகக் கூறினர். (35)

**726.** புல்லும் பொற்பணைப் பன்மணிப் பூமரம்
கொல்லு மிப்பொழு தேயெனுங் கொள்கையால்
எல்லி யிட்டு விளக்கிய விந்திரன்
வில்லு மொத்தன விண்ணுற வீசின.

புல்லும் பொன் பணைப் பல் மணிப் பூமரம்,
கொல்லும் இப்பொழுதே எனும் கொள்கையால்
எல்லி இட்டு விளக்கிய இந்திரன்
வில்லும் ஒத்தன: விண் உற வீசின.

விண் உற வீசின மணிப் பூமரங்கள், கொல்லும் எனும் கொள்கை யால் எல்லி விளக்கிய இந்திரன் வில்லும் ஒத்தன என்க.

அனுமான், வீசி விண்ணில் எறிந்த மணிமயமும் பொன்மயமுமான மரங்கள், அவன் எல்லாவற்றையும் இப்போதே அழித்து விடுவன் என்பதனை முன்பே அறிவிக்கும் உற்பாதமாக இரவில் இந்திரவில் தோன்றியது போல விளங்கின என்றவாறு.

பொற்பணை - அழகிய கிளைகள். பன்மணிப் பூமரங்கள் செயற்கை யாக அமைக்கப்பட்டவை. எல்லி இட்டு விளக்கிய - இரவில் உண்டாக்கி விளங்கச் செய்த. பகலில் தோன்றுவதே இந்திரவில்லாதலால், அது இர வில் தோன்றுவது கேடு குறிப்பதாம் என்க. (36)

**727.** ஆனைத் தானமு மாட லரங்கமும்
பானத் தானமும் பாய்பரிப் பந்தியும்
ஏனைத் தாரணி தேரொடு மிற்றன
கானத் தார்தரு வண்ணல் கடாவவே.

*ஆனைத் தானமும், ஆடல் அரங்கமும்,*
*பானத் தானமும், பாய் பரிப் பந்தியும்,*
*ஏனைத் தார் அணி தேரொடும் இற்றன;*
*கானத்து ஆர் தரு அண்ணல் கடாவவே.*

*அண்ணல், கானத்து ஆர் தரு கடாவ, ஆனைத்தான முதலியன இற்றன என்க.*

*ஆனைத்தானம் – ஆனை கட்டும் சாலை. பானத்தானம் – மதுபானம் செய்யும் இடங்கள். பரிப்பந்தி – குதிரைச்சாலை. தார் அணி தேர் – சிறு மணிகள் கட்டிய அலங்காரமான தேர்கள்.* (37)

**728.** மயக்கில் பொற்குல வல்லிகள் வாரிநேர்
இயக்கு றத்திசை தோறு மெறிந்தன
வெயிற்க திர்க்கற்றை யற்றற வீழ்ந்தன
புயற்க டற்றலை புக்கன போல்வன.

*மயக்கு இல் பொன் குல வல்லிகள் வாரிநேர்*
*இயக்கு உறத் திசைதோறும் எறிந்தன,*
*வெயில் கதிர்க் கற்றை அற்று உற வீழ்ந்தன,*
*புயல் கடல்தலை புக்கன போல்வன.*

*வாரிநேர் இயக்குற எறிந்த பொற்குல வல்லிகள், அற்று விழ்ந்த வெயிற் கற்றை கடற்புக்கன போன்றன என்க.*

*மயக்கு இல் பொன்வல்லிக் குலங்கள் – மயங்குதற்கு இடமில்லாத பொன்மயமான கொடிக் கூட்டங்கள்; வாரிநேர் இயக்குற – கடலுக்கு நேராக இயங்கும்படி. வெயில் – சூரியன். புயற் கடல் – மேகங்கள் தங்கும் கடல்; தற்குறிப்பேற்ற வணி.* (38)

**729.** பெரிய மாமர மும்பெருங் குன்றமும்
விரிய வீசலின் மின்னெடும் பொன்மதில்
நெரிய மாட நெருப்பெழ நீறெழ
இரியல் போன திலங்கையு மெங்கணும்.

பெரிய மாமரமும் பெருங்குன்றமும்
விரிய வீசலின் மின் நெடும் பொன் மதில்
நெரிய, மாடம் நெருப்பு எழ, நீறு எழ,
இரியல் போனது, இலங்கையும் எங்கணும்.

மரமும் குன்றமும் விரிய விசலின், நெருப்பெழ நீறெழ இலங்கையும் இரியல் போனது என்க.

பொன்மரங்களையும் குன்றங்களையும் பரவும்படி வீசியதனுல், ஒளி விடும் பொன்மதில்கள் நெரிந்து விழுந்தும், மாடங்கள் நெருப்புப் பற்றிச் சாம்பராகியும் இலங்கை மாநகர் முழுதும் நிலைகுலைந்தது என்றவாறு.

இரியல் போதல் – அச்சத்தால் நிலைகுலைதல். இலங்கை என்றது அந் நகர மக்களை. அஞ்சி அம்மக்கள் நிலைகெட்டோடினர் என்க. (39)

## சந்திராத்தமன வருணனை

**730.** தொண்டையங் கனிவாய்ச் சீதை
✵ துயக்கினு லென்னைச் சுட்டாய்
விண்டவா னவர்கண் முன்னே
விரிபொழி லிறுத்து வீசக்
கண்டனை நின்ரு யென்று
காணுமே லரக்கன் காய்தல்
உண்டென வெருவி னுன்போ
லொளித்தன னுடுவின் கோமான்.

"தொண்டை அம் கனிவாய்ச் சீதை
துயக்கினுல் என்னைச் சுட்டாய்!
விண்ட வானவர் கண் முன்னே
விரிபொழில் இறுத்து வீசக்
கண்டனை நின்ருய்!" என்று
காணுமேல் அரக்கன் காய்தல்
உண்டு என வெருவினுன்போல்
ஒளித்தனன்; உடுவின் கோமான்.

"அரக்கன் காணுமேல், 'என்னைச் சுட்டனை; பொழில் இறுத்து விசக் கண்டனை நின்ருய்' என்று காய்தல் உண்டு" என வெருவினுன் போல உடுவின் கோமான் ஒளித்தனன் என்க.

'என்னைச் சுட்டாய்' என்றது, காம வேதனைப்படும் என்னை நீ தோன்றிச் சுட்டனை என்றவாறு. சந்திரன் காமோத்திபகங்களுள் சிறந்தவன் என்பர். 'விரிபொழில் இறுத்து விசக் கன்டனை' என்றது, உல்லாச வனமான என் மதனச்சோலை அழிவுபடுதலில் மகிழ்ச்சி காட்டினை என்றவாறு. துயக்கு – தொடர்பு; உனக்கும் திருமகள் அமிசமான சீதைக்கும் அமுதத்துடன் தோன்றியதனுல் உள்ள சம்பந்தம் என்க. விண்ட – என் முன் நிலைகுலைந்தோடிய; பகைமை கொண்ட எனினும் ஆம். சாய்தல் – கோபித்தல். உடுவின் கோமான் – நட்சத்திரங்கட்கு அரசனுன சந்திரன். (40)

**அநுமன் வீசிய (மணி) மரங்களால் வைகறையிருள் விலகல்.**

**731.** காசறு மணியும் பொன்னுங்
காந்தமுங் கஞல்வ தாய
மாசறு மரங்க ளாகக்
குயிற்றிய மதனச் சோலை
ஆசைக டோறு மையன்
கைகளா லள்ளி யள்ளி
வீசிய விளக்க லாலே
விளங்கின வுலக மெல்லாம்.

**காசு அறு மணியும் பொன்னும் காந்தமும் கஞல்வது ஆய மாசு அறு மரங்கள் ஆகக் குயிற்றிய மதனச் சோலை, ஆசைகள் தோறும் ஐயன் கைகளால் அள்ளி அள்ளி வீசிய, விளக்கலாலே விளங்கின உலகம் எல்லாம்.**

மணி பொன் காந்தங்களால் மரங்களாக உண்டாக்கிய மதனச் சோலை, அனுமன் தன் கரங்களால் அள்ளி யள்ளித் திசை தொறும் வீசப் பெற்ற மரங்கள் பேரொளியை உண்டாக்குதலாலே, உலகமெல்லாம் விளக்க முறலாயின என்றவாறு.

காசு அறு – குற்றம் அற்ற. கஞல்வது – விளங்குவது. மதனச் சோலை என்றது அதன் மரங்களை. ஆசைகள் – திக்குகள். (41)

## விலங்கு பறவைகளின் நிலை 732, 733

**732.** கதறின வெருவி யுள்ளங்
கலங்கின விலங்கு கண்கள்
குதறின பறவை வேலை
குளித்தன குளித்தி லாத
பதறின பதைத்த வானிற்
பறந்தன பறந்து பார்வீழ்ந்
துதறின சிறையை மீள
வொடுக்கின வுலந்து போன.

கதறின வெருவி, உள்ளம் கலங்கின, விலங்கு; கண்கள்
குதறின பறவை, வேலை குளித்தன, குளித்திலாத
பதறின; பதைத்த; வானில் பறந்தன; பறந்து பார்வீழ்ந்து
உதறின சிறையை; மீள ஒடுக்கின உலந்து போன.

அச்சங்கொண்டு உள்ளம் கலங்கின பறவைகள் கதறின; கண்கள் சிதறின பறவைகள் கடலில் விழ்ந்து குளித்தன; குளியாதவை துடித்து வானிற் பறந்தன. அவ்வாறு பறந்த பறவைகள் மேற் செல்ல முடியாமல் நிலத்தில் வீழ்ந்து சிறகுகளை உதறி மீள ஒடுக்கிக்கொண்டு அழிந்து போயின என்றவாறு. சிறகுகளை உதறியது இறக்குமுன் நிகழ்ந்த சாவுக் குறியாகும். மரங்களின் வீச்சால் புள்ளினங்கள் பட்ட அவத்தைகளைக் கூறியவாறு. (42)

**733.** தோட்டொடுந் துதைந்த தெய்வ
மரந்தொறுந் தொடுத்த புட்டம்
கூட்டொடுந் துறக்கம் புக்க
குன்றெனக் குவவுத் திண்டோள்
சேட்டகன் பரிதி மார்பன்
சீறியுந் தீண்ட றன்றல்
மீட்டவன் கருணை செய்தாற்
பெறும்பதம் விளம்ப லாமோ.

தோட்டொடும் துதைந்த தெய்வ
மரம் தொறும் தொடுத்த புள், தம்
கூட்டொடும் துறக்கம் புக்க;
குன்று எனக் குவவுத் திண் தோள்

சேட்டு அகன் பரிதி மார்பன்
சிறியும் தீண்டல் தன்னால்,
மீட்டு அவன் கருணைசெய்தால்
பெறும் பதம் விளம்பல் ஆமோ.

பரிதிமார்பன் சிறித் திண்டல் தன்னாலும் புட்கள் கூட்டொடும் துறக்கம் புக்க; அவன் கருணை செய்தால் பெறும் பதம் விளம்பலாமோ? என்க.

அனுமான் சினத்தொடு திண்டி எறிந்த தெய்வ மரத்துப் பறவைகள், அம்மரங்களில் தொடுத்த கூட்டொடும் தேவலோகத்தை அடைந்தன என்றவாறு.

தோடு – இதழ்கள் உள்ள மலர். தெய்வ மரம் – ஆல், அரசு, அசோகு என்பன. இவற்றுள் அசோகு தேவதாரு எனவும் வழங்கும். அம்மரங்கள் மிகுதியும் உடைமை பற்றி அசோகவனம் எனப்பட்டதாதலின் ‘தெய்வ மரந்தொறும் தொடுத்த கூடு’ என்றார். தெய்வ மரங்களிற் கூடுகட்டினும் இராவணனது தொடர்புடையனவாய் அழிவுபட நேர்ந்ததென்பதும், எனினும் அனுமன் திருக்கை திண்டப்பெறுதலின் (அந்தமிலின்பத் தழிவில் விடு பெருது அதனில் தாழ்ந்த) துறக்கபதவி பெற்றன என்பதும் கருத்து.

குன்று எனக் குவவு திண்தோள் – மலைபோலத் திரண்ட திண்ணிய தோள்களையுடைய. சேடு அகன் பரிதி மார்பன் – அழகிய அகன்ற சூரிய ஒளி பொருந்திய மார்பினையுடைய அனுமன். சேடு – அழகு. பரிதி – சூரியன். (43)

**பிராட்டி தங்கியிருந்த மரமொன்றுமே அழியாதிருத்தல்.**

**734.** பொய்ம்முறை யரக்கர் காக்கும்
புள்ளுறை புதுமென் சோலை
விம்முறு முள்ளத் தன்ன
மிருக்குமவ் விருக்க மொன்றும்
மும்முறை யுலக மெல்லா
முற்றுற முடிவ தான
அம்முறை யையன் வைகு
மாலென நின்ற தம்மா.

பொய் முறை அரக்கர் காக்கும்
புள் உறை புது மென் சோலை
விம்முறும் உள்ளத்து அன்னம்
இருக்கும் அவ் விருக்கம் ஒன்றும்,
மும்முறை உலகம் எல்லாம்
முற்றுற முடிவது ஆன
அம்முறை ஐயன் வைகும்
ஆல் என நின்றது. அம்மா!

சோலை, அன்னம் இருக்கும் விருக்கம் ஒன்றும், ஐயன்வைகும் ஆல் என நின்றது என்க.

பொய் முறை – வஞ்சவொழுக்கம். அரக்கர் காக்கும் சோலை, புள்ளுறை சோலை எனத் தனித்தனி கூட்டுக. விம்முறும் – உள்ளம் வருந்தும். அன்னம் – சீதாபிராட்டி. விருக்கம் – சிஞ்சுபாமரம்; 'சிஞ்சுபவனத்திடை' (சடாயுவுயிர். 146) என்ருர் முன்னரும். மும்முறை உலகம் – மூன்று அடுக்கான சுவர்க்க மத்திய பாதலங்கள். முற்றுற – முழுமையும். அம்முறை – அந்த ஊழிக்கால முறையில்.

ஏனைப் புறவையினங்கள் போலன்றி, அழிவுருத ஒரு தெய்வப் பறவை அதன்கீழ் இருந்தமையால், அச் சிஞ்சுபாமரம் ஒன்றுமே நிலை பெற்றது என்பார், 'அன்னம் இருக்கும் அவ்விருக்கம் ஒன்றும் நின்றது' என்றும், பிரளய காலத்தில் திருமால் பள்ளிகொண்டருளும் ஆலமரம் ஒன்றுமட்டும் தங்கியதை அதற்கு உவமையாக்கியும் கூறினர். ஐயன்– திருமால். (44)

சூரியோதய வருணனை.

**735.** உறுசுடர்ச் சூடைக் காசுக்
கரசினை யுயிரொப் பானுக்
கறிகுறி யாக விட்டா
ளாதலான் வறிய ளங்தோ
செறிகுழற் சீதைக் கென்ருேர்
சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகட லீவ தென்ன
வெழுந்தன னிரவி யென்பான்.

**உறு சுடர்ச் சூடைக்காசுக்கு அரசினை உயிர் ஒப்பானுக்கு**
**அறிகுறி ஆக விட்டாள், ஆதலான் வறியள் அந்தோ!**
**செறி குழல் சிதைக்கு என்று ஓர் சிகாமணி தெரிந்து வாங்கி**
**எறி கடல் ஈவது என்ன எழுந்தனன் இரவி என்பான்.**

'சூடைக் காசுக்கு அரசினை அறிகுறியாக விட்டாள், வறியள்" என்று எறி கடல், சிதைக்கென்று ஒரு சிகாமணி வாங்கி ஈவதென்ன இரவி எழுந்தனன் என்க.

சீதாதேவி, கையிலிருந்த சூடாமணி ஒன்றையும் அடையாளமாக அனுமன் மூலம் அனுப்பிவிட்டாள். அதனால் வறியவளானாள் என்று தன் திருமகளான பிராட்டிக்குக் கடலரையன் மற்றொரு சிகாமணி தெரிந்தெடுத்து அளிப்பவன் போலச் சூரியன் உதயமானான். எ-று.

உறுசுடர்ச் சூடைக்காசுக்கு அரசினை – மிக்க ஒளியினையுடைய சூடாமணியை. வறியள் – கையிருப்பாக ஒன்றுமில்லாதவள். செறிகுழல்–நெருங்கிய கூந்தலுடையாள்; அக்கூந்தலை அணிபெறச் செய்விக்க வேண்டுமென்பார் 'செறிகுழற் சிதைக்கென்று' என்றார். சடையாகச் செறிந்த குழல் எனினும் ஆம். சிகாமணி – சிகையில் அணிந்து கொள்ளும் இரத்தினம். (45)

**அசோகவனத்தை யழித்து நின்ற அனுமனது தோற்றம்.**

**736.** தாழிரும் பொழில்க ளெல்லாந்
துடைத்தொரு தமிய னின்றான்
ஏழினெ டேழு நாடு
மளந்தவ னெனலு மானான்
ஆழியி னடுவ ணின்ற
வருவரைக் கரசு மொத்தான்
ஊழியி னிறுதிக் காலத்
துருத்திர மூர்த்தி யொத்தான்.

*தாழ் இரும் பொழில்கள் எல்லாம்*
*துடைத்து ஒரு தமியன் நின்றான்,*
*ஏழினெடு ஏழு நாடும்*
*அளந்தவன் எனலும் ஆனான்;*
*ஆழியின் நடுவண் நின்ற*
*அருவரைக்கு அரசும் ஒத்தான்;*
*ஊழியின் இறுதிக் காலத்து*
*உருத்திர மூர்த்தி ஒத்தான்.*

அசோகவன முழுதையும் அழித்து நின்ற அனுமன், உலகளந்த திரு விக்கிரம மூர்த்தி எனவும், கடலிடையே நின்ற மந்தரமலை போலவும், ஊழியிறுதியில் உருத்திரன் போலவும் தமியனாய் நின்றான் எ-று.

பேருருவால் திருவிக்கிரம மூர்த்தியையும், சுழற்றி அலைத்தலால் மந்தர மலையையும், முற்றும் அழித்தலால் உருத்திரமூர்த்தியையும் ஒத்தான் என்க.

தாழ் இரும் பொழில்கள் - தழைத்த பெரிய அசோகவனம். ஏழினோடு ஏழு நாடும்-மேலேழும் கீழேழுமாகிய உலகம் பதினான்கையும். ஆழியின் நடுவண் நின்ற அருவரை - கடல் (கடைகையில்) இடையில் நின்ற மந்தரகிரி. ஊழியிறுதியில் எல்லாவற்றையும் தனியே நின்று அழிப்பவன் காலருத்திரன் என்க. (46)

**அநுமனைக் கண்டு அஞ்சிய அரக்கியர் பிராட்டியை வினவுதல்.**

**737.** இன்னன நிகழும் வேலை
யரக்கிய ரெழுந்து பொங்கிப்
பொன்மலை யென்ன நின்ற
புனிதனைப் புகன்று நோக்கி
அன்னையீ தென்ன மேனி
யார்கொலென் றச்ச முற்றார்
நன்னுத றன்னை நோக்கி
யறிதியோ நங்கை யென்றார்.

இன்னன நிகழும் வேலை, அரக்கியர் எழுந்து பொங்கிப்,
பொன்மலை என்ன நின்ற புனிதனைப் புகன்று நோக்கி,
'அன்னை! ஈது என்ன மேனி? யார்கொல்?' என்று அச்சம் உற்றார்;
நன்னுதல் தன்னை நோக்கி, 'அறிதியோ?' நங்கை! என்றார்.

இன்னன - இவ்வாறான செயல்கள். எழுந்து - (அனுமன் செய்த விஞ்சையால் மயங்கி உறங்கிக்கிடந்த அரக்கியர்) உறக்கந் தெளிந்து எழுந்து. பொங்கி - தாம் கண்ட அனுமனுருவுக்கு அஞ்சி மனங்கொதித்து. பொன்மலை என்ன நின்ற புனிதனை - பொற்குன்றம்போல நின்ற தூயவனான அனுமனை; "காஞ்சனாத்ரி கமநீய விக்ரஹம்" என்பர் வட நூலார்.

முன்பெல்லாம் கடுஞ் சொற்களே வழங்கிய அரக்கியர், இப்போது 'அன்னை' என்ற இன்சொல் இட்டுச் சீதையை அழைத்தது, அச்சம்

வியப்புக்களாலும், பிராட்டி மூலம் உண்மை அறியும் நோக்கினாலும் என்க.
ஈது என்ன மேனி – இது என்ன வடிவமோ ? (47)

## பிராட்டியின் மறுமொழி

**738.** தீயவர் தீய செய்த
 றீயவர் தெரியி னல்லால்
தூயவர் தெரித லுண்டோ
 நும்முடைச் சூழ லெல்லாம்
ஆயமா னெய்த வம்மா
 னிளையவ னரக்கர் செய்த
மாயமென் றுரைக்க வேயு
 மெய்யென மையல் கொண்டேன்.

'தீயவர் தீய செய்தல் தீயவர் தெரியின் அல்லால்
தூயவர் தெரிதல் உண்டோ? நும் உடைச் சூழல் எல்லாம்
ஆய மான் எய்த, அம்மான் இளையவன், "அரக்கர் செய்த
மாயம்" என்று உரைக்கவேயும், மெய் என மையல்கொண்டேன்.

இதுவும் அடுத்த கவியும் ஒரு தொடர்.

கொடியோர் தீய செயல் செய்தலை அக்கொடியோரே அல்லாமல், என்போன்ற தூயோர் உங்கள் மாயச் செய்கையெல்லாம் அறிதல் கூடுமோ ? என்பது முன்னிரண்டடிகளின் பொழிப்பு.

இவ்வாறு தான் முன்னும் அரக்கரது மாயத்தால் ஏமாற்றம் அடைந்து பெருந்துன்பத்துக்கு ஆளானமைக்கு உதாரணங் காட்டுவன பின்னிரண் டடிகள்.

ஆயமான் – சூழலால் எடுத்துக்கொண்ட பொன்மான்; சூழல்– மாயம். 'சூழல் எல்லாம்' என முன்னின்ற சொற்றொடரால் இப்பொருள் பெறப்படும். "மாயமான் ஒன்று என் பக்கத்து எய்தியபோது, இளையவ னான இலக்குமணன், 'இஃது அரக்கன் செய்த மாயம்' என்று உரைக்க வும், அதனை நம்பாமல் உண்மைமான் என்றே நான் மயங்கினன் அன்றோ!" என்று முன்னிகழ்ச்சி ஒன்றைக் கூறலாயினள் பிராட்டி என்க. (48)

## அநுமன் சயித்தியமொன்றைக் கண்டு பறித்தெறியத் தொடங்குதல்

**739.** என்றன ளரக்கி மார்கள்
வயிறலைத் திரியல் போகிக்
குன்றமு முலகும் வானுங்
கடல்களுங் குலைய வோட
நின்றதோர் சயித்தங் கண்டா
னீக்குவ லிதனை யென்னுத்
தன்றடக் கைக ணீட்டிப்
பற்றினன் ருதை யொப்பான்.

*என்றனள். அரக்கிமார்கள் வயிறு அலைத்து இரியல் போகிக்*
*குன்றமும் உலகும் வானும் கடல்களும் குலைய ஓட,*
*நின்றது ஓர் சயித்தம் கண்டான், 'நீக்குவல் இதனை' என்னுத்*
*தன் தடக்கைகள் நீட்டிப் பற்றினன் : தாதை ஒப்பான்.*

அரக்கிமார்கள் வயிறலைத்து இரியல் போகிக் குலையப் போனர் என்க. இரியல் போகி–சிதறுண்டு ஓடி. தாதை ஒப்பான்–தன் தந்தையான வாயு தேவனை ஒத்தவனுன அனுமன்.

சயித்தம் – சைத்தியம்; தெய்வ மரங்கள் செறிந்ததும் சிகரமும் பிராகாரமும் உடையதுமான தேவகோட்டம். பௌத்தப் பள்ளிகட்கு இப் பெயர் பின்பு வழங்கியது ; "வானேங்கு சிமயத்து வாலொளிச் சயித்தம்" (மணிமே 24-13) என்பர். தூண்கள், பிராகாரம், சுவர் முதலியன பின் கவியில் கூறப்படுதலால் சயித்தம் என்ற பாடமே சிறப்பதாகும். (49)

### சயித்தத்தின் பெருமை 740 – 742

**740.** கண்கொள வரிது மீது
கார்கொள வரிது திண்கால்
எண்கொள வரிதி ராவு
மிருள்கொள வரிது மாக
விண்கொள நிவந்த மேரு
வெள்குற வெதும்பி யுள்ளம்
புண்கொள வுயர்ந்த திப்பார்
பொறைகொள வரிது போலாம்.

கண்கொள அரிது, மீது கார் கொள அரிது, திண் கால்
எண்கொள அரிது, இராவும் இருள்கொள அரிது, மாக
விண்கொள நிவந்த மேரு வெள்குற வெதும்பி உள்ளம்
புண்கொள உயர்ந்தது, இப்பார் பொறைகொள அரிது போலாம்.

கண்கொள – கண்களாற் பார்த்து அளவிடவும். கார் – மேகம். திண்கால் எண்கொள – வலியகாற்றுப் பற்றுதற்கு எண்ணங் கொள்ளவும். மாகம் விண் – மிகப்பெரிய ஆகாயம் ; ஒரு பொருட் சொற்கள் மிகுதி குறித்த. நிவந்த – மேலோங்கிய. மேரு வெள்கி புண்கொள – மேரு கிரியும் வெட்க முற்று மனம் நோவவும். பொறைகொள அரிது போலாம் – சுமந்து தாங்கமுடியாது போலும் எ – று. (50)

**741.** பொங்கொளி நெடுநா ளீட்டிப்
புதியபால் பொழிவ தொக்கும்
திங்களை நக்கு கின்ற
விருளெலாம வாரித் தின்ன
அங்கைபத் திரட்டி யான்ற
ணாணையா லழகு மானப்
பங்கயத் தொருவன் றானே
பசும்பொனாற் படைத்த தம்மா.

பொங்கு ஒளி நெடு நாள் ஈட்டிப் புதிய பால் பொழிவது ஒக்கும்
திங்களை நக்குகின்ற இருள் எலாம் வாரித் தின்ன
அங்கை பத்து இரட்டியான் தன் ஆணையால் அழகு மானப்
பங்கயத்து ஒருவன் தானே பசும் பொனால் படைத்தது அம்மா.

(அச் சயித்தம்) திங்களை நக்குகின்ற இருளெலாம் தின்ன (இராவணன்) ஆணையால் பங்கயத்தொருவன் படைத்தது என்க.

பொங்கு ஒளி நெடுநாள் ஈட்டி புதிய பால் பொழிவது ஒக்கும் திங்கள் – விளங்கும் பிரகாசத்தைப் பல நாள்களாகச் சம்பாதித்து, புதிய பாலைச் சொரிவதை ஒத்த சந்திரனை. நெடு நாள் ஒளி யீட்டுதலாவது தன் கலைகள் வளர்தல். திங்களையும் நக்குகின்ற இருள் என்றது, அதன் களங்கத்தை; அதனைப் போக்கவல்ல பேரொளியைக் கொடுக்கும் படி இராவணன் ஆணையால் பிரமன் படைத்தது அச்சயித்தம் எ – று. மான – நெருங்க. (51)

**742.** தூணெலாஞ் சுடருங் காசு
சுற்றெலா முத்தஞ் சொன்னம்
பேணலா மணியின் பித்தி
பிடரெலா மொளிகள் விம்மச்
சேணெலாம் விரியுங் கற்றைச்
சேயொளிச் செல்வற் கேயும்
பூணலா மெம்ம னோராற்
புகழலாம் புதுமைத் தன்றே.

**தூண் எலாம் சுடரும் காசு, சுற்று எலாம் முத்தம் சொன்னம் பேணல் ஆம் மணியின் பித்தி பிடர் எலாம் ஒளிகள் விம்மச் சேண் எலாம் விரியும் கற்றைச் சேய்ஒளிச் செல்வற்கு ஏயும் பூணலாம் எம்மனோரால் புகழல்ஆம் புதுமைத்து அன்றே.**

(அச்சயித்தத்தின்) தூண்கள் யாவும் ஒளிவிடும் மணிகளால்ஆனவை; பிராகாரமெல்லாம் முத்துக்களால் அணிந்தவை. சுவர்த்தலங்கள் பொன்னாலும் மணிகளாலும் இயன்றவை. சிகரத்தின் கிழ்ப்பகுதிகள் ஒளிகள் நிரம்ப என்பது முதலிரண்டடிகளின் கருத்து. சேண் எல்லாம் விரியுங் கற்றைச் சேய் ஒளிச் செல்வற்கேயும் பூணல் ஆம் – ஆகாயம் எங்கும் பரவுகின்ற செங்கதிர்ச் செல்வனாகிய சூரியனுக்கும் அலங்கார மாகப் பூணத்தக்கது எ – று.

சுற்று – பிராகாரம் ; திருச்சுற்று ; "சேனை முதலியார் திருச் சுற்றான ராஜ மகேந்திரன் திரு வீதி" என்பர் (கோயிலொழுகு). பித்தி – சுவர். தூண்கள், சுற்று, பித்திகள் கூறப்படுதலால், சைத்திய மாளிகை என்பது தெளிவாம். (52)

### அநுமன் சயித்தத்தைப் பெயர்த்து இலங்கைமேல் எறிதல் 743 – 744

**743.** வெள்ளியங் கிரியைப் பண்டவ்
வெந்தொழி லரக்கன் வேரோ
டள்ளின னென்னக் கேட்டா
னத்தொழிற் கிழிவு தோன்றப்
புள்ளிமா மேரு வென்னும்
பொன்மலை யெடுப்பான் போல
வள்ளுகிர்த் தடக்கை தன்னான்
மண்ணின்றும் வாங்கி யண்ணல்.

'வெள்ளி அம் கிரியைப் பண்டு அவ்
வெம் தொழில் அரக்கன் வேரோடு
அள்ளினன்' என்னக் கேட்டான்;
அத்தொழிற்கு இழிவு தோன்றப்
புள்ளி மா மேரு என்னும்
பொன் மலை எடுப்பான் போல,
வள் உகிர்த் தடக்கை தன்னால்
மண் நின்றும் வாங்கி, அண்ணல்.

வெள்ளியங்கிரியை அரக்கன் வேரோடு அள்ளினன் என்னக் கேட்டான் (ஆகிய) அண்ணல், அத்தொழிற்கு இழிவுதோன்ற மேருப் பொன்மலையை எடுப்பான்போல (அச் சயித்தத்தை) மண்ணின்றும் வாங்கி, என்க. இப்பாட்டு 'விட்டனன் இலங்கைதன் மேல்' என்ற அடுத்த கவியுடன் இயையும். (53)

**744.** விட்டன னிலங்கை தன்மேல்
விண்ணுற விரிந்த மாடம்
பட்டன பொடிக ளான
பகுத்தன பாங்கு நின்ற
சுட்டன பொறிகள் வீழத்
துளங்கின ரரக்கர் தாமும்
கெட்டனர் வீர ரம்மா
பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்.

விட்டனன் இலங்கை தன்மேல்; விண்உற விரிந்த மாடம்
பட்டன பொடிகள் ஆன; பகுத்தன பாங்கு நின்ற;
சுட்டன பொறிகள் வீழத், துளங்கினர் அரக்கர் தாமும்;
கெட்டனர் வீரர் அம்மா! பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்.

(அவ்வாறு விட்ட சயித்தத்தால்) மாடம் பட்டன, பகுத்தன, பொடிகளான என இயைக்க. பகுத்தன – பிளந்தன. தீப்பொறிகள் வீழ்தலால் பக்கத்திருந்த பொருள்களைச் சுட்டெரித்தன. அரக்கர் – இராட்சத வீரர். இதனால் பெறப்படும் வேற்றுப்பொருள் 'பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்' என்பது ; இது 'வேற்றுப்பொருள் வைப்பணி' எனப்படும். (54)

## அசோகவனம் அழிந்த செய்தியைக் காவலர் இராவணனிடம் தெரிவித்தல் 745 – 747

**745.** நீரிடு துகில ரச்ச
நெருப்பிடு நெஞ்சர் நெக்குப்
பீரிடு முருவர் தெற்றிப்
பிணங்கிடு தாளர் பேழவாய்
ஊரிடு பூச லார
வுளைத்தன ரோடி யுற்றார்
பாரிடு பழுவச் சோலை
பாரிக்கும் பருவத் தேவர்.

*நீர் இடு துகிலர், அச்சம் நெருப்பிடும் நெஞ்சர், நெக்குப் பீரிடும் உருவர், தெற்றிப் பிணங்கிடு தாளர், பேழ்வாய் ஊர் இடு பூசல் ஆர, உளைத்தனர் ஓடி உற்றார்; பார் இடு பழுவச் சோலை பாரிக்கும் பருவத் தேவர்.*

பருவத்தேவர், துகிலர், நெஞ்சர், உருவர், தாளராய் ஓடியுற்றார் என்க.

பருவத்தேவர் – ஆறுபருவங்கட்கும் உரிய தேவர்கள்; இவர்கள் இராவணன் விரும்பும் பருவத்தை உண்டாக்கி அதன் பயன்களை அவன் துய்த்தற்கு ஏற்றபடி செய்விக்கவும் அசோக வனத்தை வளர்த்துக் காத்து வருமாறும் நியமனம் பெற்றவர்கள்.

நீர் இடு துகிலர் – அச்சத்தால் சிறுநீர் விட்டு, ஆடை நனையப் பெற்றவர்; நெக்கு, பீரிடும் உருவர் - உடல் பிளந்து இரத்தம் வழிகின்ற உருவினர்; இது அனுமனால் எறியப்பட்ட மரங்கள் படுதலால் உண்டாயது. தெற்றிப் பிணங்கிடுதாளர் – பின்னிக் கொண்டு ஓடமுடியாதபடி மாறுபட்ட தாள்களையுடையவர். பேழ்வாய் – பிளந்தவாயினராய். பூசல் – ஆரவாரம். உளைத்தனர் – உருத்தெரியாத சத்தமிட்டவர். பழுவச் சோலை, ஒரு பொருட் பன்மொழி.

இராவணன் இருதுக்களைத் தன் விருப்பத்தின்படி ஆட்டுவிக்கும் திறலுடையவன் என்பதை மாரீசன் வதைப் படலத்துள்ளும் காணலாம்.

(55)

**746.** அரிபடு சீற்றத் தான்ற
னருகுசென் றடியின் வீழ்ந்தார்
கரிபடு திசையி னீண்ட
காவலா காவ லாற்றேம்
கிரிபடு குவவுத் திண்டோட்
குரங்கிடை கிழித்து வீச
எரிபடு துகிலி னொய்தி
னிற்றது கடிகா வென்றார்.

*அரிபடு சீற்றத்தான் தன் அருகு சென்று அடியின் வீழ்ந்தார்,*
*'கரிபடு திசையின் நீண்ட காவலா! காவல் ஆற்றேம்;*
*கிரிபடு குவவுத் திண்தோள் குரங்கு இடை கிழித்து வீச*
*எரிபடு துகிலின் நொய்தின் இற்றது கடி கா' என்றார்.*

அரிபடு சீற்றத்தான் – தியசெய்திகள் அறிவிப்பவர்களை அரிந்து விடும் படியான கோபமுடைய இராவணன். அரிதல் – கூறிய நாக்கை அறுத்தல்; மூக்கு உங்கை அரியுண்டாள் என்றுரை, நாக்கரியுந் தயமுகனர் (சூர்ப்பணகைப். 125) என்றார் பிறிதிடத்தும். கரிபடுதிசை–திக்கயங்கள் அமைந்ததிசை. 'காவலா! குரங்கு வீச கடிகா நொய்தின் இற்றது, காவலாற்றேம்' என இயையும். கிரிபடு குரங்கு எனக் கூட்டினும் ஆம். இடை கிழித்து – இடையில் முறித்து. (56)

**747.** சொல்லிட வெளிய தன்றாற்
சோலையைக் காலிற் கையிற்
புல்லொடு துகளு மின்றிப்
பொடிபட நூறிப் பொன்னால்
வில்லிடு வேரந் தன்னை
வேரொடும் வாங்கி வீசச்
சில்லிட மொழியத் தெய்வ
விலங்கையுஞ் சிதைந்த தென்றார்.

*'சொல்லிட எளியது அன்றால் சோலையைக் காலில் கையில்*
*புல்லொடு துகளும் இன்றிப் பொடிபட நூறிப், பொன்னால்*
*வில்இடு வேரம் தன்னை வேரொடும் வாங்கி வீசச்*
*சில்இடம் ஒழியத் தெய்வ இலங்கையும் சிதைந்தது' என்றார்.*

நூறி – அழித்து. வில்லிடு – ஒளி வீசும். வேரம் – சயித்தம். 'சில்லிடம் ஒழிய இலங்கையும் சிதைந்தது' என்றது, இலங்கையில்

*இராவணனும் அவன் சுற்றத்தாரும் அரக்க வீரர்களும் வாழும் இருப்பிடங்கள் நீங்கலாகப் பெரும் பகுதி சிதைவுற்றது எ-று. தெய்வ இலங்கை என்றார், பிரமன் மயன் முதலிய தேவர்கள் நிருமித்த தாதலின்.* (57)

**காவலர் கூறக்கேட்ட இராவணன் இகழ்ந்து நகுதல்**

**748.** ஆடகத் தருவின் சோலை
பொடிபடுத் தரக்கர் காக்கும்
தேடரும் வேரம் வாங்கி
யிலங்கையுஞ் சிதைத்த தம்மா
கோடர மொன்றே நன்றி
திராக்கதர் கொற்றஞ் சொற்றல்
மூடரு மொழியா ரென்ன
மன்னனு முறுவல் செய்தான்.

*ஆடகத் தருவின் சோலை பொடிபடுத்து, அரக்கர் காக்கும் தேடு அரும் வேரம் வாங்கி, இலங்கையும் சிதைத்தது அம்மா! கோடரம் ஒன்றே, நன்று இது. இராக்கதர் கொற்றம் சொற்றல் மூடரும் மொழியார்: என்ன மன்னனும் முறுவல் செய்தான்.*

கோடரம் - குரங்கு. குரங்கொன்றே சோலை பொடிபடுத்து, வேரம் வாங்கி, இலங்கையுஞ் சிதைத்தது அதிசயமே. (இனி) அரக்கர் வெற்றித் திறனை மூடரும் மொழிய இடமில்லை. இத்தகைய செய்தி நன்று! என்று இராவணன் பரிகசித்தான் என்க.

இத்தகைய செய்தியைக் குரங்கொன்றனிடம் ஏற்றிப் புகழ்வதும் அரக்கரை இழிப்பதும் உங்கள்போலும் தேவர்க்கு வழக்கம் என்பது குறிப்பு. (58)

**காவலர் அநுமன் திறத்தைப் பின்னும் வியந்து கூறுதல்**

**749.** தேவர்கள் பின்னு மன்ன
வதனுருச் சுமக்குந் திண்மைப்
பூவல யத்தை யன்றே
புகழ்வது புலவர் போற்றும்
மூவரி னொருவ னென்று
புகல்கினு முடிவி லாத
ஏவமக் குரங்கை யைய
காணுதி யின்னே யென்றார்.

*தேவர்கள், பின்னும் 'மன்ன ! அதன் உருச் சுமக்கும் திண்மைப்*
*பூவலயத்தை அன்ரே புகழ்வது ! புலவர் போற்றும்*
*மூவரின் ஒருவன் என்று புகல்கினும் முடிவு இலாத*
*ஏவம் ; அக்குரங்கை ஐய ! காணுதி இன்னே' என்ருர்.*

இங்ஙனம் கூறிய பரிகாசக்குறிப்பை அறிந்த பருவத்தேவர்கள், பின்னும், "ஐயனே! நாங்கள் கூறியது உண்மையா அன்ரு என்பதனைத் தேவரீரே நேரில் வந்து இப்போதே காணவேண்டும்" என்ருர் என்பது இப்பாடலின் கருத்து.

அக்குரங்கின் உருவைச் சுமக்குந்திண்மையது என்று இப்பூவுலகத்தை யன்ரே நாம் புகழ வேண்டும். தேவர்கள் போற்றும் மூவருள் ஒருவன் என்று அதனைக் கூறுவதும் முடிவிலாத குற்றமாம்; இவ்வுண்மையை இன்னே காணுதி எ – று.

புலவர் – தேவர் ; 'புலவரைப் போற்ருது புத்தேளுலகு' என்ருர் வள்ளுவனுரும். ஏவம் – குற்றம். (59)

இதன் பின் 25, 53 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் ஓர் அதிகப் பாடல் காணப்படுகிறது :-

749 (a) எனப்பதம் வணங்கி யன்ன ரியம்பிய வார்த்தைகேளா
கனக்குர லுருமு வீழக் கனமலை சிதறத் தேவர்
மனத்தறி வழிந்து சோர மாகட லிரைப்புத் திரச்
சினத்துவாய் மடித்துத் தியோ னகைத்திவை செப்ப லுற்ருன்.

### அநுமனது போரார்ப்பு

**750.** மண்டலங் கிழிந்த வாயின்
மறிகடன் மோழை மண்ட
எண்டிசை சுமந்த மாவுந்
தேவரு மிரியல் போகத்
தொண்டைவா யரக்கி மார்கள்
சூல்வயி றுடைந்து சோர
அண்டமும் பிளந்து விண்ட
தாமென வனும ஞர்த்தான்.

*மண்டலம் கிழிந்த வாயில் மறிகடல் மோழை மண்ட,*
*எண்திசை சுமந்த மாவும் தேவரும் இரியல் போக,*
*தொண்டை வாய் அரக்கிமார்கள் சூல் வயிறு உடைந்து சோர ,*
*அண்டமும் பிளந்து விண்டதாம் என அனுமன் ஆர்த்தான்.*

(அனுமனது ஆர்ப்பின் அதிர்ச்சிகாரணமாகப்) பூமியின் பிளவுபட்ட இடத்தின் வழியே, அலையெறியும் கடல் மோழை பாய்ந்தது. திக்கு யானைகளும் தேவர்களும் நிலை கெட்டோடினர். கோவைக் கனிபோன்ற வாயதரத்தையுடைய அரக்கிமார்கள் தம் வயிற்றுக் கருச் சிதைந்து தளர்ந் தனர் எ - று. மோழை - குமிழி ; 'அண்ட மோழை யெழ' என்பது திருவாய்மொழி (7-4-1). அனுமன் இவ்வாறு ஆர்ப்பிட்ட நோக்கம் அரக் கரை யெல்லாம் வலியப் போருக்கு இழுப்பதே என்க. (60)

பொழிலிறுத்த படலம் முற்றிற்று.

# 7. கிங்கரர்வதைப் படலம்

அசோக வனத்தையழித்து ஆர்ப்பரவம் செய்து நின்ற அனுமனைப் பிடித்து வரும்படி இராவணனுல் ஏவப்பட்ட கிங்கரர் என்னும் அரக்க வீரர்களை அனுமன் கொன்றழித்த செய்தியைக் கூறும் படலம் கிங்கரர் வதைப் படலம் எனப்படும். இது கிங்கிலியர் வதைப் படலம் என்றும் சில சுவடிகளில் வரையப் பட்டுள்ளது. கிங்கரர் என்ற சொல்லுக்கு ஏவலாளர் என்று பொருள். கிங்கரர் என்னும் பெயர் கொண்ட எண்பதி ணுயிரம் அரக்கர்களை இராவணன் அனுமன் மேல் ஏவினுன் என்று வான் மீகத்திற் கூறப்படுகிறது. ஆனுல் கம்பரோ எனின், 'எல்லையிலாற்றன் மாக்கள் எண்ணிறந்தாரை யேவி' (752) என்றும், 'எஞ்சலில் கணக் கறிந்திலம்' என்றும் மட்டும் குறித்துள்ளார்.

கிங்கரர்கள் சிறந்த வீரர்கள் என்பதைக் கம்பர் பலபாடல்களில் எடுத்துக் கூறுகிருர். அவர்களின் படையைக் கொண்டு இராவணன், தேவர்கள் அசுரர்கள் என்னும் பகைவர்களின் வலிய அரண்களை அழித்த தாகவும், நாக லோகத்துப் படைவீரர்களை முதுகுகாட்டி ஓடச்செய்த தாகவும், அளகைமாநகரை வென்றதாகவும் நாம் இங்கு அறியலாம். கிங்கரர்கள் வரம்பற்ற வலிமை படைத்தவர்கள். அவர்கள் சிறந்த வரங்கள் பெற்றிருந்தனர். தெய்வப் பூண்களையும் கவசங்களையும் அணிந் திருந்தனர். போர்த்தினவு கொண்ட தோள்களையும் கொண்டிருந்தனர். அனுமனைக் கொன்றுவிடாமல் மெதுவாகப் பிடித்து வரும்படி இராவண னிட்ட கட்டளைக்கு இணங்க, அவர்கள் பலவகையான ஆயுதங்களையும் தாங்கிச் சென்று அனுமனை வளைத்துப் படைகளை வீசத்தொடங்கினர்.

அனுமன் பேருருவம் எடுத்து, ஒரு மரத்தைக் கையிலே ஆயுதமாகக் கொண்டான். அரக்கர்களைக் கையினுலும் காலினுலும் வாலினுலும் கட்டி அறைந்தும், தூக்கி எறிந்தும், ஆர்த்தும், நெரித்தும், பலபடியாகக் கொன்று குறைத்தான். அவன் மண்டலம் திரிந்து, ஓடியும், சாடியும், பாய்ந்தும், அதரிதிரித்தும், அரக்கர் சேனையைத் தூளாகச் சிதறவடித்துப் பெரு முழக்கம் செய்தான். அவர்களுடைய உடல்கள் போய் விழுந்த விசையால் அருகிலுள்ள மண்டபங்களும் மாளிகைகளும் தகர்ந்தன: மாதர்களும் குழந்தைகளும் மாய்ந்தனர். இலங்கைத் தெருவெல்லாம் குருதிவெள்ளம் ஆருகப் பாய்ந்தோடியது. வந்த கிங்கரர்கள் இரண்டு மாத்திரைப் பொழு துக்குள் வீரத்துடன் அஞ்சாமற் போராடி மடிந்துபோயினர். ஒருவராவது தப்பவில்லை. அனுமன் சிறிதும் சலிப்பின்றித் தான் ஒருவனுக அங்கிருந் தான். இதனைக் கண்ணுற்ற சோலைக் காவலாளிகள் அஞ்சியோடி இராவணனிடம் செய்தியை அறிவித்தனர். இவ்விதம் அறிவித்த செய்தி வான்மீகத்திற் கூறப்படவில்லை. இப்பகுதியைக் கம்பர் சுவைபட எழுதி யிருப்பது இங்கே குறிப்பிடத்தகும். இதோடு இப்படலம் முடிகிறது.

# 7. கிங்கரர் வதைப் படலம்

## அநுமன் ஆரவாரம் இராவணன் செவியில் விழுதல்

**751.** அருவரை முழையின் முட்டு
மசனியி னிடிப்பு மாழி
வெருவரு முழக்கு மீசன்
வில்லிறு மொலியு மென்னக்
குருமணி மகுட கோடி
முடித்தலை குலுங்கும் வண்ணம்
இருபது செவியி னூடு
நுழைந்ததவ் வெழுந்த வோசை.

அருவரை முழையில் முட்டும் அசனியின் இடிப்பும், ஆழி
வெருவரு முழக்கும், ஈசன் வில்இறும் ஒலியும் என்னக்,
குருமணி மகுட கோடி முடித்தலை குலுங்கும் வண்ணம்,
இருபது செவியினூடும் நுழைந்தது அவ் எழுந்த ஓசை.

எழுந்த அவ் ஓசை, இடிப்பும் முழக்கும் ஒலியும் என்ன, குலுங்கும் வண்ணம், இருபது செவியினூடும் நுழைந்தது என்க.

அருவரை முழையில் முட்டும் – பெரியமலையின் குகையிலே போய்த் தாக்குகின்ற ; அசனியின் இடிப்பும் – இடியின்முழக்கமும் ; வெருவரு ஆழி முழக்கும் – (பிரளய காலத்தில்) அச்ச முண்டாம்படி தோன்றுகின்ற கடலின் ஒலியும் ; ஈசன் வில் இறும் ஒலியும் – (இராமன்) சிவன் வில்லை ஒடித்தபோதெழுந்த ஓசையும் ; என்ன – போல ; குருமணி மகுடகோடி முடித்தலை–ஒளிபொருந்திய இரத்தினங்களையுடையகிரீடங்களை வரிசையாக அணிந்த மயிர் முடியோடு கூடிய (இராவணனுடைய) பத்துத்தலைகளும் ; குலுங்கும் வண்ணம் – (அச்சத்தினால்) அசையும்படி. எழுந்த அவ் ஓசை (முந்தியபடலத்து இறுதிப்பாடலிற் கூறியபடி, அண்டமும் பிளந்துவிண்டதாமென அநுமன் ஆர்த்ததனால்) உண்டான அந்த ஒலி.

அநுமனது பேரொலிக்கு இடியின் முழக்கமும், ஊழிக் காலத்துப் பொங்கும் கடலின் ஆரவாரமும், சீதையின் திரு மணத்திற்கு முன்னர் இராமன் வளைத்து ஒடித்த சிவனுடைய வில்லின் ஓசையும் உவமை ; அநுமனுடைய பேரொலி இராவணனுடைய இருபது செவியினுள்ளும்

புகுந்ததற்கு, மேலே கூறிய இடிமுழக்கம் முதலாயின பெரியமலையின் குகையிலே புகுந்து தாக்குதல் உவமை. (1)

இப்பாடலின்பின், 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :-

751 (a) ஓசையி னிடிப்புங் கேட்டாங் குருத்தெழு சினத்த னாகி
ஈசன்மா லெனினு மோவ்வா திதொரு குரங்கு போலாங்
கூசிடா திலங்கை புக்கிக் குலமலர்ச் சோலை யோடு
மாசறு நகரை மாய்க்கும் வலிமைநன் றென்ன நக்கான்.

### அநுமனைப் பிடிக்குமாறு இராவணன் கிங்கரரை ஏவுதல்

**752.** புல்லிய முறுவ றோன்றப்
பொருமையுஞ் சிறிது பொங்க
எல்லையி லாற்றன் மாக்க
ளெண்ணிறந் தாரை யேவி
வல்லையி னகலா வண்ணம்
வானையும் வழியை மாற்றிக்
கொல்லலிர் குரங்கை நொய்திற்
பற்றுதி கொணர்தி ரென்றான்.

புல்லிய முறுவல் தோன்றப் பொருமையும் சிறிது பொங்க,
எல்லை இல் ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை ஏவி,
"வல்லையின் அகலா வண்ணம், வானையும் வழியை மாற்றிக்,
கொல்லலிர், குரங்கை நொய்தில் பற்றுதிர், கொணர்திர்!" என்றான்.

இராவணன் என்னும் எழுவாய் வருவிக்க. தோன்ற, பொங்க, ஏவி, "வல்லையின் அகலா வண்ணம் வான்வழியையும் மாற்றிக் குரங்கைக் கொல்லலிர், நொய்தில் பற்றுதிர், கொணர்திர்" என்றான் என்க.

புல்லிய முறுவல் தோன்ற - புன்சிரிப்பு உண்டாகவும். இது, குரங்கு என்பதால் உண்டான ஏளனச் சிரிப்பு ; பொருமை : இது, தன் அந்தப்புரக் கடிகாவை அழித்ததனால் உண்டானது என்க ; எல்லையில் ஆற்றல் மாக்கள் - அளவற்ற வலிமையையுடைய ஏவலாளர்கள் ; இவர்களே கிங்கரர்கள் எனப்படுவார்கள்: இது "வந்த கிங்கரர்" (805) எனவருவதால் விளங்கும் ; வல்லையின் - விரைவில் ; வானையும் வழியை மாற்றி : வான்வழியையும் மாற்றி : மாற்றி - தடுத்து ; நொய்தில் - மெதுவாக. (2)

இப்பாடலின்பின், 17 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வரும் பாடல் காணப்படுகிறது :-

752 (a) என்றலு மிருகை கூப்பி யிருநில நுதலிற் ரேயச்
சென்றடி பணிந்து மண்ணுந் தேவருந் திசையு முட்க
வென்றியன் றேனும் வல்லே விரைவொடு மிறைவ வீர
குன்றன குரங்கைப் பற்றிக் கொணர்துமென் றெளிதிற் போனர்.

## கிங்கரர்கள் புறப்படுதல்

**753.** சூலம்வாண் முசலங் கூர்வே
ரேமரந் தண்டு பிண்டி
பாலமே முதலா யுள்ள
படைக்கலம் பரித்த கையர்
ஆலமே யனைய மெய்ய
ரகலிட மழிவு செய்யும்
காலமே லெழுந்த மூரிக்
கடலெனக் கடிது செல்வார்.

சூலம், வாள், முசலம், கூர்வேல், தோமரம், தண்டு, பிண்டி
பாலமே, முதலாயுள்ள படைக்கலம் பரித்த கையர்;
ஆலமே அனைய மெய்யர்; அகல்இடம் அழிவு செய்யும்
காலம் மேல் எழுந்த மூரிக் கடல் எனக், கடிது செல்வார்,

அவவாறு இராவணன் ஏவினவுடனே, அவ் வெல்லையிலாற்றல் மாக்களாகிய கிங்கரர் படைக்கலம் பரித்த கையராய்க் கடல் எனக் கடிது செல்வார் எனக் கூட்டுக.

முசலம் – உலக்கை; தோமரம் – ஒருவகை எறியாயுதம்; தண்டு, பிண்டிபாலம் என்பனவும் ஆயுத வகைகள். பரித்த கையர் – தாங்கிய கையையுடையவராய்; ஆலமே அனைய மெய்யர் – ஆலகால நஞ்சை யொத்துக் கறுத்த உடம்பையுடையவர்களாய் (அக்கிங்கரர்கள்) ; அகலிடம் – பூமி ; அகலிடம் அழிவு செய்யும் காலம் – பிரளய காலம். மேல் எழுந்த – பொங்கிக்கிளம்பின ; மூரி கடல் என – பெரிய கடல் போல ; கடிது – விரைந்து. (3)

## கிங்கரர் வருணனை 754 – 768

**754.** நானில மதனி னுண்டு
போரென நவிலி னச்சொல்
தேனினுங் களிப்புச் செய்யுஞ்
சிந்தையர்த் தெரித்து மென்னின்
கானினும் பெரிய ரோசை
கடலினும் பெரியர் கீர்த்தி
வானினும் பெரியர் மேனி
மலையினும் பெரியர் மாதோ.

'நானிலம் அதனின் உண்டு போர்' என நவிலின், அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்த் தெரித்தும் என்னின்,
கானினும் பெரியர்: ஓசை கடலினும் பெரியர்: கீர்த்தி
வானினும் பெரியர்: மேனி மலையினும் பெரியர் மாதோ!

அவ்வரக்கர் என எழுவாய் வருவித்துக் கொள்க. நானிலம் அதனின் – இந் நிலவுலகத்தில்; போர் உண்டு என நவிலின் – சண்டை உண்டு என்று சொல்லக் கேட்டால்; சிந்தையர்த் தெரித்தும் என்னின் - மனத்தை யுடையவர்களாகிய அவ்வரக்கர்களைப் பற்றித் தெரியக் கூறுவோமென்றால்; கானினும் பெரியர் – (செறிவினால்) காட்டை விடவும் பெரியவர்; மாது ஓ: ஈற்றசைகள்.

சிந்தையர் (ஆகிய அவ்வரக்கர்களைப் பற்றி)த் தெரித்தும் என்னின், (செறிவினால்) கானினும் பெரியர், ஓசை (யினால்) கடலினும் பெரியர், கீர்த்தி (யினால்) வானினும் பெரியர், மேனி (யினால்) மலையினும் பெரியர் என்க.

இது முதல் நான்கு பாடல்கள் ஒரு தொடர். (4)

**755.** திருகுறுஞ் சினத்துத் தேவர்
தானவ ரென்னுந் தெவ்வர்
இருகுறும் பெறிந்து நின்ற
விசையினார் வசையென் றெண்ணிப்
பொருகுறும் பேன்று வென்று
புணர்வது பூவுண் வாழ்க்கை
ஒருகுறுங் குரங்கென் றெண்ணி
நெடிதுநா ணுழக்கு நெஞ்சர்.

திருகு உறும் சினத்துத், தேவர் தானவர் என்னும் தெவ்வர்
இரு குறும்பு எறிந்து நின்ற இசையினர்: வசை என்று எண்ணிப்,
பொரு குறும்பு ஏன்று, வென்று புணர்வது பூஉண் வாழ்க்கை
ஒருகுறும் குரங்கு என்று எண்ணி, நெடிது நாண் உழக்கும் நெஞ்சர்.

திருகு உறும் - மாறுபாடு கொள்கிற ; சினத்து - கோபத்தை யுடைய. தேவர் தானவர் என்னும் தெவ்வர் - தேவர்களும் அசுரர்களும் என்று சொல்லப்படும் பகைவர்களுடைய ; இரு குறும்பு எறிந்து - பெரிய அரண்களை யழித்து ; நின்ற இசையினர் - நிலைத்த புகழையுடையவர்கள் ; வசை என்று எண்ணி (உம்) (அரசன் பொழிலை அழித்ததனாலே) பழிப்பு உண்டாயிற்று என்று நினைத்தும் ; பொரு குறும்பு - பொருகின்ற போரினை; ஏன்று - மேற்கொண்டு ; வென்று - வெற்றிகொண்டு ; புணர்வது - அடையப் போவது; பூ உண் வாழ்க்கை ஒரு குறும் குரங்கு என்று எண்ணி (உம்) - மலர் (காய் கனி கிழங்கு) முதலியவற்றைத்தின்று பிழைக்கின்ற ஒரு சின்னக் குரங்கு தானே என நினைத்தும் ; நெடிது நாண் உழக்கும் நெஞ்சர் - பெரிய நாணத்தால் வருந்தும் உள்ளத்தையுடையவர்கள்.

என்றெண்ணி, என்றெண்ணி எனவரும் ஈரிடத்தும் எண்ணும்மை தொக்கன. (5)

**756.** கட்டிய வாள ரிட்ட
கவசத்தர் கழலர் திக்கைத்
தட்டிய தோளர் மேகந்
தடவிய கையர் வானை
எட்டிய முடியர் தாளா
லிடறிய பொருப்ப ரீட்டிக்
கொட்டிய பேரி யென்ன
மழையெனக் குமுறுஞ் சொல்லார்.

கட்டிய வாளர்; இட்ட கவசத்தர்; கழலர்; திக்கைத்
தட்டிய தோளர்; மேகம் தடவிய கையர்; வானை
எட்டிய முடியர்; தாளால் இடறிய பொருப்பர்; ஈட்டிக்
கொட்டிய பேரி என்ன, மழை எனக், குமுறும் சொல்லார்.

அவ்வரக்கர் என வருவித்துக்கொள்க.

இட்டகவசத்தர் கழலர் : இட்டகவசத்தர் இட்டகழலர் எனக் கூட்டிப் பொருள் கொள்க. திக்கைத் தட்டிய தோளர் - திசைகளை முட்டிய புயங்களையுடையவர் ; தாளால் இடறிய பொருப்பர் - மலைகளையும் உந்தும்படி

யான கால்களையுடையவர்கள் ; பொருப்பை இடறிய தாளர் என்று சொல்ல வேண்டியதைத் தாளால் இடறிய பொருப்பர் என்றார்; இது வட நூன்முடிபு : இதனைத் துல்யவித்தி வேத்யம் (ஒத்த அறிவினால் உணரத் தக்கது) என்பர். ஈட்டிக் கொட்டிய பேரி என்ன மழை எனக் குமுறும் சொல்லார் – பலவாகச் சேர்த்து முழக்கப்படுகிற பேரி முதலிய வாத்தியங் கள் போலவும் மேகங்களின் இடிப்புப் போலவும் முழங்குகின்ற சொற்களை யுடையவர்கள். (6)

**757.** வானவ ரெறிந்த தெய்வ
வடுபடை வடுக்கண் மற்றைத்
தானவர் துரந்த வேதித்
தழும்பொடு தயங்குந் தோளர்
யானையும் பிடியும் வாரி
யிடுங்கய வாய ரீன்ற
கூனவெண் பிறையிற் றோன்று
மெயிற்றினர் கொதிக்குங் கண்ணர்.

வானவர் எறிந்த தெய்வ அடுபடை வடுக்கள், மற்றைத்
தானவர் துரந்த ஏதித் தழும்பொடு தயங்கும் தோளர்;
யானையும் பிடியும் வாரி இடும் கயவாயர்; ஈன்ற
கூனவெண்பிறையில் தோன்றும் எயிற்றினர்;கொதிக்கும்கண்ணர்.

தெய்வ அடுபடை வடுக்கள் – தெய்வத்தன்மையுள்ள கொல்லவல்ல ஆயுதங்களால் உண்டான தழும்புகள் ; ஏதி – ஆயுதம். தயங்கும் – விளங்குகிற. வாரி இடும் – அள்ளி உண்ணுகின்ற ; கயவாயர் – பெரிய வாய்களையுடையவர்கள். ஈன்ற கூன வெண் பிறையின் – (அப்பொழுதே) பிறந்த வளைவுள்ள வெண்மையான பிறைச் சந்திரன் போன்ற; எயிற்றி னர் - பற்களை (வக்கிரதந்தங்களை) யுடையவர்கள்; கொதிக்கும் கண்ணர் – கோபம் பொங்குகின்ற கண்களையுடையவர்கள். (7)

**758.** சக்கர முலக்கை தண்டு
தாரைவாள் பரிகஞ் சங்கு
முற்கர முசுண்டி பிண்டி
பாலம்வேல் சூல முட்கோல்
பொற்கரங் குலிசம் பாசம்
புகர்மழு வெழுபொற் குந்தம்
விற்கருங் கணைவிட் டேறு
கழுக்கடை யெழுக்கண் மின்ன.

**சக்கரம், உலக்கை, தண்டு, தாரை, வாள், பரிகம், சங்கு, முற்கரம், முசுண்டி, பிண்டிபாலம், வேல், சூலம், முட்கோல், பொன்கரம் குலிசம், பாசம், புகர்மழு, எழு பொன்குந்தம், வில், கரும் கணை, விட்டேறு, கழுக்கடை எழுக்கள் மின்ன.**

தாரை - ஊதுங்குழல். பரிகம் - வளைதடிகள். முற்கரம் - சம்மட்டிகள். முசுண்டி-ஆயுதவகை. பிண்டிபாலம்-எறியீட்டிகள். பொன் கரம் குலிசம் - பொன்னொளி வீசுகின்ற வச்சிராயுதங்கள். புகர் - ஒளியுள்ள ; எழு பொன் குந்தம் - மேலெழுந்து தோன்றுகிற அழகிய ஈட்டிகள். கருங்கணை - பெரிய அம்புகள். விட்டேறு : வீசி யெறிதற்குரிய ஒரு படை. கழு கடை எழுக்கள் - கூர் நுனியையுடைய இருப்புத்தடிகள்.

மின்ன முடுகுகின்றார் என அடுத்த பாடலொடு முடியும். (8)

**759.** பொன்னின்று கனலும் தெய்வப்
பூணினர் பொருப்புத் தோளர்
மின்னின்ற படையுங் கண்ணும்
வெயில்விரிக் கின்ற மெய்யர்
என்னென்றார்க் கென்னென் னென்றா
ரெய்திய தறிந்தி லாதார்
முன்னின்றார் முதுகு தீயப்
பின்னின்றார் முடுகு கின்றார்.

பொன் நின்று கனலும் தெய்வப்
பூணினர்; பொருப்புத் தோளர்;
மின் நின்ற படையும், கண்ணும்,
வெயில் விரிக்கின்ற மெய்யர்;
'என்?' என்றார்க்கு, 'என்? என்?'
என்றார்; எய்தியது அறிந்திலாதார்,
முன் நின்றார் முதுகு தீயப்
பின் நின்றார் முடுகுகின்றார்.

பொன் நின்று கனலும் தெய்வப் பூணினர் - அழகு நிலைபெற்று விளங்கும் தெய்வத்தன்மையுள்ள அணிகலன்களை அணிந்தவர்கள் ; பொருப்புத் தோளர்-மலை போன்ற தோள்களையுடையவர்கள்; மின் நின்ற படையும் கண்ணும் வெயில் விரிக்கின்ற மெய்யர் - ஒளிவிளங்குகிற ஆயுதங்களும் கண்களும் வெயில் போலும் ஒளியும் வெம்மையும் வீசப் பெற்ற உடம்புடையவர்கள் ; என் என்றார்க்கு - (செல்லாது நிற்றல்)

ஏன் என்று கேட்பவர்க்கு ; என் என் என்றார் – (அப்படியே) ஏன் ஏன் என்கிறவர்களாயும் ; எய்தியது அறிந்திலாதார் – நேர்ந்திருக்கும் அதனை (தடையை)த் தெரிந்துகொள்ளாதவர்களாயும் ; முன்னின்றார் முதுகுநியப் பின்னின்றார் முடுகுகின்றார் – முன்னால் நிற்பவர்களின் முதுகுகள் எரிவுகொள்ளும்படியாகப் பின்னால் நிற்பவர்கள் (இடித்துத் தள்ளிக்கொண்டு) விரைந்தனர்.

மேற்பாடலிற் கூறப்பட்ட படைவகைகள் எல்லாம் மின்னும்படியாக அவற்றைத் தாங்கிக்கொண்டு முடுகுகின்றார் என்க. (9)

**760.** வெய்துறு படையின் மின்னர்
வில்லினர் வீசு காலர்
மையுறு விசும்பிற் றோன்று
மேனியர் மடிக்கும் வாயர்
கைபரந் துலகு பொங்கிக்
கடையுக முடியுங் காலைப்
பெய்யவென் றெழுந்த மாரிக்
குவமைசால் பெருமை பெற்றார்.

**வெய்து உறு படையின் மின்னர், வில்லினர், வீசு காலர், மை உறு விசும்பில் தோன்றும் மேனியர், மடிக்கும் வாயர், கைபரந்து உலகு பொங்கிக் கடையுகம் முடியும் காலைப் பெய்ய என்று எழுந்த மாரிக்கு உவமை சால் பெருமை பெற்றார்.**

மடிக்கும் வாயர் மாரிக்கு உவமைசால் பெருமை பெற்றார் என முடிக்க.

மடிக்கும்வாயர் – (கோபத்தால்) மடிக்கின்ற உதட்டை யுடையவர்களாகிய அவ்வரக்கர்; வெய்து உறுபடையின் மின்னர் – வெம்மை மிகுந்த ஆயுதங்களாலான மின்னலையுடையவர்களும் ; வில்லினர் – வில்லையுடையவர்களும் ; விசு காலர் – (நெடுமூச்சு எடுத்தலால்) வீசுகின்ற மூச்சுக் காற்றையுடையவர்களும் ; விசும்பில் தோன்றும் மை உறு மேனியர் – வானத்திற் காணப்படுகின்ற கருநிறம் பொருந்திய மேனியை யுடையவர்களுமாய் ; கைபரந்து – எங்கும் பரவி ; உலகு பொங்கி – உலகம் முழுவதும் பெருக்கெடுத்து ; கடையுகம் முடியும் காலை – யுகமுடிவுவந்து எல்லாம் அழியுங்காலத்து ; பெய்ய என்று எழுந்த – பெருமழை பொழியுமாறு கிளம்பின ; மாரிக்கு – மேகத்திற்கு ; உவமை சால் பெருமை பெற்றார் – ஒப்பாகத்தக்க பெரிய தன்மைகொண்டுள்ளவர்கள்.

மின், வில், காற்று, கரிய நிறம், விசும்புவரை உயர்தல், அம்பு பெய்தல் முதலிய பல திறத்தானும் உலகம் அழியப் பெய்ய எழுந்த மேகக் கூட்டத்தை ஒத்தனர் என்க.

(10)

**761.** பனியுறு சோலை சிந்தி
வேரமும பறித்த தம்மா
தனியொரு குரங்கு போலா
நன்றுநந் தருக்கென் கின்றார்
இனியொரு பழிமற் றுண்டோ
விதனினென் றிரைத்துப் பொங்கி
முனிவுறு மனத்திற் றாவி
முந்துற முடுகு கின்றார்.

‘பனி உறு சோலை சிந்தி,
வேரமும் பறித்தது, அம்மா!
தனி ஒரு குரங்கு போலாம்!
நன்று நம் தருக்கு!’ என்கின்றார்,
‘இனி ஒரு பழி மற்று உண்டோ
இதனின்?’ என்று இரைத்துப் பொங்கி,
முனிவு உறு மனத்தில்
தாவி, முந்துற முடுகுகின்றார்.

“பனி உறு சோலை சிந்தி வேரமும் பறித்தது தனி ஒரு குரங்குபோல் ஆம், அம்மா! நம் தருக்கு நன்று!” என்கின்றார்; “இதனின் மற்று ஒரு பழி இனி உண்டோ?” என்று இரைத்துப் பொங்கி முனிவுறு மனத்தில் தாவி முந்துற முடுகுகின்றார்.

பனி உறு சோலை சிந்தி - குளர்ச்சி பொருந்திய அசோக வனத்தை அழித்து; வேரமும் - சயித்திய மண்டபத்தையும்; பறித்தது - அடியோடு பெயர்த்து அழித்தது; அம்மா- ஆச்சரியம்; நம் தருக்கு நன்று - நம்முடைய வலிமை நன்றாயிருந்தது; தருக்கு - வலிமை: “எதிர் செயுந் தருக்கிலாமையின்” (தாடகை வதை. 40); இரைத்து - முழங்கி; பொங்கி - கொதித்து; முனிவுறு மனத்தின் - சினக்கும் மனத்தொடு; தாவி - குதித்து; முந்துற முடுகுகின்றார் - (ஒருவரை யொருவர்) முற்பட விரைந்து செல்பவரானார்.

(11)

**762.** எற்றுறு முரசும் வின்னு
ணேறவிட் டெடுத்த வார்ப்பும்
சுற்றுறு கழலுஞ் சங்குந்
தெழிதெழித் துரப்புஞ் சொல்லும்
உற்றுடன் றென்று யோங்கி
யொலித்தெழுந் தூழிப் பேர்வில்
நற்றிரைக் கடல்க ளோடு
மழைகளை நாவ டக்க.

**எற்றுறு முரசும், வில் நாண் ஏற விட்டு எடுத்த ஆர்ப்பும், சுற்றுறு கழலும், சங்கும், தெழிதெழித்து உரப்பும் சொல்லும், உற்று உடன்று ஒன்றாய் ஓங்கி ஒலித்து எழுந்து, ஊழிப் பேர்வில் நல் திரைக் கடல்களோடு மழைகளை, நா அடக்க.**

எற்றுறு – கொட்டப்படுகிற ; வில் நாண் ஏறவிட்டு எடுத்த ஆர்ப்பும் – வில்லிலே நாணை யேற்றி (அதனைத் தட்டி) எழுப்பிய ஒலியும் ; சுற்றுறு கழலும் – (காலிற்) சுற்றிக் கட்டிய வீரக்கழலின் ஒலியும் ; சங்கும் – சங்க நாதமும் ; தெழி தெழித்து உரப்பும் சொல்லும் – இரைச்சலிட்டு அதட்டு கின்ற சொல் முழக்கமும் ; உற்று உடன்று ஒன்றாய் ஓங்கி ஒலித்து எழுந்து – ஒரு சேர்க்கையாய் மாறுகொண்டு ஒரே முழக்கமாய்ப் பேரரவம் கிளம்பி ; ஊழிப்பேர்வில் – யுகமுடிவிலே தோன்றுகிற ; நல் திரைக் கடல்களோடு – பெரிய அலைகளையுடைய கடல்களையும்; மழைகளை – மேகங் களையும் ; நா அடக்க – வாயை மூடும்படிசெய்ய.

கிங்கரர்கள் செல்லும்பொழுது எழுந்த பல ஒலிகளும் சேர்ந்து யுக முடிவில் எழும் கடலோசையையும் மேகங்களின் முழக்கங்களையும் விஞ்சும் படியாயிருந்தன என்க. நாவடக்கச் 'செல்கின்றாரும்' என அடுத்த பாடலில்வரும் சொல்லோடு இயைந்து முடியும் என்க. (12)

**763.** தெருவிட மில்லென் றெண்ணி
வானிடைச் செல்கின் றாரும்
புருவமுஞ் சிலையுங் கோட்டிப்
புகையுயிர்த் துயிர்க்கின் றாரும்
ஒருவரி னொருவர் முந்தி
முறைமறுத் துருக்கின் றாரும்
விரிவில திலங்கை யென்று
வழிபெறார் விளிக்கின் றாரும்.

தெரு இடம் இல் என்று எண்ணி வானிடைச் செல்கின்றாரும்,
புருவமும் சிலையும் கோட்டிப் புகை உயிர்த்து உயிர்க்கின்றாரும்,
ஒருவரின் ஒருவர் முந்தி முறை மறுத்து உருக்கின்றாரும்,
'விரிவு இலது இலங்கை' என்று வழி பெறார் விளிக்கின்றாரும்.

புருவமும் சிலையும் கோட்டி - புருவங்களையும் வில்லையும் வளைத்து; புகை உயிர்த்து-(கோபத்தியால்) புகையை வெளிப்படுத்தி; உயிர்க்கின்றாரும் - பெருமூச்சு விடுகிறவர்களும். முறை மறுத்து உருக்கின்றாரும் - (செல்லும் அடைவாகிய) முறையைத் தவறவிட்டுக் கோபிக்கின்றவர்களும்; வழிபெறார், 'இலங்கை விரிவிலது' என்று விளிக்கின்றாரும் - (மேற் செல்லுவதற்கு) வழி கிடையாதவர்கள், 'இலங்கை நகரம் பரப்புடையதாய் இல்லை' என்று கத்துகின்றவர்களும். (13)

**764.** வாளுறை விதிர்க்கின் றாரும்
வாயினை மடிக்கின் றாரும்
தோளுறத் தட்டிக் கல்லைத்
துகள்படத் துகைக்கின் றாரும்
தாள்பெயர்த் திடம்பெ றாது
தருக்கினர் நெருக்கு வாரும்
கோள்வளை யெயிறு தின்று
தீயெனக் கொதிக்கின் றாரும்.

வாள் உறை விதிர்க்கின்றாரும், வாயினை மடிக்கின்றாரும்,
தோள் உறத் தட்டிக் கல்லைத் துகள் படத் துகைக்கின்றாரும்,
தாள் பெயர்த்து இடம் பெறாது தருக்கினர் நெருக்குவாரும்,
கோள் வளை எயிறு தின்று தீ எனக் கொதிக்கின்றாரும்.

வாள் உறை விதிர்க்கின்றாரும் - வாளினை உறையினின்றெடுத்து அசைக்கின்றவர்களும்; வாயினை மடிக்கின்றாரும் - உதடுகளை(க் கோபம் தோன்றி) மடிக்கின்றவர்களும்; தோள் உறத்தட்டி-(தமது வீரத்தைக் காட்டுவதற்குக் கைகளால்) தோள்களை நன்றாகத் தட்டிக்கொண்டு; கல்லைத் துகள்படத் துகைக்கின்றாரும் - (கீழே கிடக்கும்) கற்களைப் பொடியாகும்படியாக மிதித்துழக்குகின்றவர்களும் ; தருக்கினர் - செருக்குக் கொண்டவர்களாய்; கோள்வளை எயிறு தின்று-வலிவுள்ள வளைந்த பற்களைக் கடித்து; கொதிக்கின்றாரும்-கோபிப்பவர்களும். (14)

**765.** அனைவரு மலையென நின்று
★ ரளவறு படைகள் பயின்றார்
அனைவரு மமரி னுயர்ந்தா
ரகலிட னெளிய நடந்தார்
அனைவரும் வரனி னமைந்தா
ரசனியி னணிக ளணிந்தார்
அனைவரு மமரரை வென்று
ரசுரரை யுயிரை யயின்றார்.

*அனைவரும் மலை என நின்றார்,*
*அளவு அறு படைகள் பயின்றார்,*
*அனைவரும் அமரின் உயர்ந்தார்,*
*அகல் இடம் நெளிய நடந்தார்,*
*அனைவரும் வரனின் அமைந்தார்,*
*அசனியின் அணிகள் அணிந்தார்,*
*அனைவரும் அமரரை வென்றார்,*
*அசுரரை உயிரை அயின்றார்.*

அனைவரும் மலையென நின்றார், அனைவரும் அளவு அறு படைகள் பயின்றார் என்க. இவ்வாறே ஏனைய அடிகளின் பிற்பகுதியிலும் அனைவரும் என்ற சொல்லைக் கூட்டிக்கொள்க.

அனைவரும்-(அவ்வரக்கர்கள்) ஒவ்வொருவரும்; பயின்றார்-பயிற்சி பெற்றவர்கள்; அமரின் உயர்ந்தார் - போர்செய்வதில் மேம்பட்டவர்கள்; வரனின் அமைந்தார்-வரபலம் பெற்றவர்கள்; அசனியின் அணிகள் அணிந்தார்-வச்சிராயுதம்போல் ஒளி விசும் ஆபரணங்களை அணிந்தவர்கள்; உயிரை அயின்றார்-உயிரைக் கொன்று தின்றவர்கள்; உயிர் குடித்துப் போக்கியவர்கள் என்க. (15)

**766.** குறுகின கவசரு மின்போல்
குரைகழ லுரகரும வன்போர்
முறுகின பொழுதி னுடைந்தார்
முதுகிட முறுவல் பயின்றார்
இறுகின நிதிகிழ வன்பே
ரிசைகெட வளகை யெறிந்தார்
தெறுகுந ரின்மையின் வன்றே
டினவுற வுலகு திரிந்தார்.

குறுகின கவசரும் மின்போல் குரை கழல் உரகரும், வன்போர்
முறுகின பொழுதின், உடைந்தார் முதுகு இட, முறுவல் பயின்றார்;
இறுகின நிதிகிழவன் பேர் இசை கெட அளகை எறிந்தார்;
தெறுகுநர் இன்மையின் வல்தோள் தினவு உற உலகு திரிந்தார்.

(அவ்வரக்கர்) குறுகின – (தம்மோடு பொருதற்கு) நெருங்கி வந்த ; தலைவரும் – படைத் தலைவர்களும் ; மின்போல் குரைகழல் உரகரும் – மின்னலைப்போல் ஒளி விடுகின்ற ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த நாக வீரர் களும் ; வன்போர் – கொடிய போரானது ; முறுகின பொழுதின் – முற்றியபோது; உடைந்தார் முதுகு இட – தோற்றவர்களாய் முதுகு காட்டி ஓட ; முறுவல் பயின்றார் – (அதனைக் கண்டு) சிரிக் கக் கற்றவர்கள் ; இறுகின நிதிகிழவன் – நிலைபேறுடைய சங்க நிதி பதுமநிதிகளுக்குத் தலைவனான குபேரனுடைய ; பேர் இசை கெட – பெரும்புகழ் கெடும்படி ; அளகை எறிந்தார் – அளகாபுரிப் பட்ட ணத்தை அழித்தவர்கள் ; தெறுகுநர் இன்மையின் – (மேலும் போர் செய்யப்) பகைவர்கள் கிடையாமையின்; வல் தோள் தினவு உற – (தமது) வலிய தோள்கள் போர்த்தினவுகொள்ள ; உலகு திரிந்தார் – (போரை நாடி) உலகமுழுதும் அலைந்தவர்கள். (16)

**767.** வரைகளை யிடறுமி னென்றான்
மறிகடல் பருகுமி னென்றால்
இரவியை விழவிடு மென்றா
லெழுமழை பிழியுமி னென்றால்
அரவின தரசனை யொன்றோ
தரையினொ டரையுமி னென்றால்
தரையினை யெடுமெடு மென்றா
லொருவர தமைதல் சமைந்தார்.

‘வரைகளை இடறுமின் !’ என்றால்,
‘மறிகடல் பருகுமின் !’ என்றால்,
‘இரவியை விழவிடும் !’ என்றால்,
‘எழுமழை பிழியுமின் !’ என்றால்,
‘அரவினது அரசனை, ஒன்றோ,
தரையினொடு அரையுமின் !’ என்றால்,
‘தரையினை எடும், எடும் !’ என்றால்,
ஒருவர் அது அமைதல் சமைந்தார்.

*வரைகளை* – மலைகளை ; *இடறுமின்* – காலால் உந்தித் தள்ளுங்கள் ; *மறிகடல்* – அலை புரளுகிற கடலை. *இரவியை விழவிடும்* – சூரியனைக் கீழே விழும்படி தள்ளிவிடுங்கள். *எழு மழை* – ஏழு மேகங்களையும். *அரவினது அரசனை* – பாம்புகளின் அரசனாகிய ஆதிசேடனை ; *தரையினொடு அரையுமின்* – தரையோடு தரையாய் அரைத்து விடுங்கள் ; *தரையினை எடும் எடும்* – பூமியை (விரைந்து) தூக்குங்கள், தூக்குங்கள். *ஒருவர் அது அமைதல் சமைந்தார்* – (அவ்வரக்கருள்) ஒருவரே அதனைச் செய்து முடிக்கப் போதுமானவராய் இருந்தார் ; *ஒன்றோ* – (இவர்கள் வல்லமை) இவ்வளவுமட்டும் தானோ? (இன்னும் பலவுள என்றவாறு.)

வரைகளை யிடறுமின் என்றால் ஒருவர் அது அமைதல் சமைந்தார், மறிகடல் பருகுமின் என்றால் ஒருவர் அது அமைதல் சமைந்தார்: என இவ்வாறு தனித்தனி முடிதலின், 'அது அமைதல்' என ஒருமையாற் கூறினார். (17)

**768.** தூளியி னிமிர்பட லம்போ
யிமையவர் விழிதுற வெம்போர்
மீளியி னினமென வன்றாள்
விரைபுலி நிரையென விண்டோய்
ஆளியி னணியென வன்றே
லலைகடல் விடமென வஞ்சா
வாளியின் விசைகொடு திண்கார்
வரைவரு வனவென வந்தார்.

*தூளியின் நிமிர் படலம் போய்*
*இமையவர் விழி துற, வெம் போர்*
*மீளியின் இனம் என, வல் தாள்*
*விரை புலி நிரை என, விண் தோய்*
*ஆளியின் அணி என, அன்றேல்,*
*அலை கடல் விடம் என, அஞ்சா,*
*வாளியின் விசை கொடு, திண் கார்*
*வரை வருவன என, வந்தார்.*

*நிமிர் தூளியின் படலம்* – மேலே கிளம்புகிற புழுதியின் தொகுதி, *இமையவர் விழி துற* – (மேலுலகிலுள்ள) தேவர்களின் கண்களைத் தூர்த்துவிட ; *வெம்போர் மீளியின் இனம் என* – கொடிய போர் செய்யவல்ல பேய்களின் கூட்டம் என்னும்படியாகவும்; *வல் தாள் விரை புலி நிரை என* – வலிய கால்களால் விரைந்துசெல்லும் புலிக்கூட்டங்கள்

என்னும்படியாகவும்; விண்தோய் ஆளியின் அணி என - ஆகாயத்திற் பாய்ந்து செல்லும் சிங்கங்களின் கூட்டம் என்னும்படியாகவும்; அன்றேல்– (இவைகள்) அல்லாவிடில்; அலைகடல் விடம் என - கடலினின்று தோன் றிய ஆலகாலவிடம் என்னும்படியாகவும்; அஞ்சா - அஞ்சாமல்; வாளியின் விசை கொடு - கணையின் வேகத்தோடு; திண்கார் வரை வரு வன என வந்தார் - வலிய மேகங்கள் மலையை நோக்கி வருவன போல (அநுமனை நோக்கி அவ்வரக்கர்) வந்தார். (18)

### கிங்கரர் பொழிலை வளைந்துகொள்ளுதல்

769. பொறிதர விழியுயி ரொன்றே
புகையுக வயிலொளி மின்போல்
செறிதர வுருமதிர் கின்றார்
திசைதொறும் விசைகொடு சென்றார்
எறிதரு கடையுக வன்கா
லிடறிட வுடுவி னினம்போய்
மறிதர மழையகல் விண்போல்
வடிவழி பொழிலை வளைந்தார்.

பொறி தர விழி, உயிர் ஒன்றே?
புகை உக, அயில் ஒளி, மின் போல்,
செறிதர, உரும் அதிர்கின்றார்,
திசைதொறும் விசைகொடு சென்றார்,
எறிதரு கடையுக வன்கால்
இடறிட, உடுவின் இனம்போய்
மறிதர, மழை அகல் விண்போல்
வடிவு அழி பொழிலை, வளைந்தார்.

விழி பொறி தர - (தமது) கண்களினின்று தீப்பொறி பறக்கவும்; உயிர் ஒன்றே - நெடுமூச்சு மாத்திரமோ; புகை உக - (மூச்சுடனே) புகையும் வர; அயில் ஒளி மின்போல் செறிதர - (தங்கள் வேலாயுதங் களின் ஒளி மின்னலைப்போல் நெருங்கவும்; உரும் அதிர்கின்றார் - இடிபோல் முழங்குகின்றவர்களாய்; திசை தொறும் விசை கொடு சென் றார் - எட்டுத் திசைகளிலும் விரைந்து சென்றவர்களாய்; கடையுகம் எறி தரு வன்கால் இடறிட - யுக முடிவில் வீசுகிற வலிய காற்று எற்றி வீசுத லால்; உடுவின் இனம் போய் மறிதர - நட்சத்திரக்கூட்டங்கள் நீங்கி விழுந்து விடவும்; மழை அகல் விண்போல் - மேகங்கள் நீங்கிய ஆகாயம்

போல் ; வடிவு அழி பொழிலே வளைந்தார் – உருவழிந்துகிடந்த அசோக வனத்தைச் சூழ்ந்தார்கள் (அவ்வரக்கர் என்க).

உடுவினினம் மலர்களுக்கும், மழை நீங்கிய விண் உருவழிந்து கிடந்த அசோகவனத்திற்கும் உவமை. (19)

## அநுமன் கிங்கரரைக் காணுதல்.

**770.** வயிரொலி வளையொலி வன்கார்
மழையொலி முரசொலி மண்பால்
உயிருலை வுறநிமி ரும்போ
ருறுமொலி செவியி னுணர்ந்தான்
வெயில்விரி கதிரவ னும்போய்
வெருவிட வெளியிடை விண்டோய்
கயிலையின் மலையென நின்ரு
னனையவர் வருதொழில் கண்டான்.

*வயிர் ஒலி, வளை ஒலி, வன்கார்*
*மழை ஒலி, முரசு ஒலி, மண்பால்*
*உயிர் உலைவு உற நிமிரும் போர்*
*உறும் ஒலி, செவியின் உணர்ந்தான் ;*
*வெயில் விரி கதிரவனும் போய்*
*வெருவிட, வெளியிடை விண்தோய்*
*கயிலையின் மலை என நின்ருன்,*
*அனையவர் வருதொழில் கண்டான்.*

வெயில் விரி கதிரவனும் போய் வெருவிட வெளியிடை விண் தோய் கயிலையின் மலை என நின்ருன், உணர்ந்தான், கண்டான் என முடிக்க.

வெயில் விரி கதிரவனும் போய் வெருவிட – கிரணங்களை விரிக்கிற சூரியனும் நீங்கி அஞ்சும்படியாக; வெளியிடை – திறந்த வெளியிலே; விண் தோய் கயிலையின் மலை என – வானளாவ ஓங்கிய கயிலைமலையைப் போல; நின்ருன் – (பேருருவங்கொண்டு) நின்றவனுகிய அநுமன்; வயிர் ஒலி – ஊது கொம்பினேசையும்; வளை ஒலி – சங்கினேசையும்; வன்கார் மழை ஒலி முரசு ஒலி–வலிய கார்காலத்து மேகம்போல் முழங்குகின்ற முரசங்களின் ஒலியுமாகிய; மண்பால் உயிர் உலைவு உற நிமிரும் போர் உறும் ஒலி – பூமியிலுள்ள உயிர்கள் யாவும் நடுங்கும்படி எழுகின்ற போரிடை

உண்டாகும் ஒலிகளை; செவியின் உணர்ந்தான் - காதினுற் கேட்டு (அவ் வரக்கர் வருகையை) அறிந்தவனாய்; அனையவர் வரு தொழில் கண்டான் - அவ்வரக்கர் வருவதைக் (கண்ணுல் நேரிலும்) கண்டான். (20)

### அநுமன் தன் எண்ணம் பலித்ததற்கு மகிழ்தல்.

771. இதவிய லிதுவென முந்தே
யியைவுற வினிது தெரிந்தான்
பதவிய லறிவு பயந்தா
லதினல பயனுள துண்டோ
சிதவியல் கடிபொழி லொன்றே
சிதறிய செயறரு திண்போர்
உதவிய லினிதி னுவந்தா
னெவரினு மதிக முயர்ந்தான்.

இத இயல் இது என முந்தே
இயைவு உற இனிது தெரிந்தான்;
பத இயல் அறிவு பயந்தால்,
அதின் நல பயன் உளது உண்டோ?
சிதவு இயல் கடி பொழில் ஒன்றே
சிதறிய செயல் தரு திண் போர்
உதவு இயல் இனிதின் உவந்தான்,
எவரினும் அதிகம் உயர்ந்தான்.

எவரினும் அதிகம் உயர்ந்தான் - எல்லாரையும் விட மிகச் சிறந்தவனாகிய அநுமன்; இது இதம் இயல் - (அசோகவனத்தை அழிக்கின்ற) இதுதான் நல்ல செயல்; என முந்தே - என்று முன்னமே; இயைவுற இனிது தெரிந்தான் - பொருத்தமாக நன்கு அறிந்தான்; பத இயல் அறிவு பயந்தால் - பக்குவமான இயல்புள்ள அறிவு உண்டானால்; அதின் நல பயன் உளது உண்டோ - அதைவிட நல்ல பயனுள்ளது வேறு உண்டோ? (இல்லை யென்றபடி); கடிபொழில் சிதவு இயல் ஒன்றே - காவலையுடைய அசோகவனத்தை அழித்ததான செயல் ஒன்றுதானே; சிதறிய செயல் தரு திண் போர் உதவு இயல் - (அரக்கர்) தோற்றோடு கின்ற செயலை உண்டாக்கக் கூடிய வலிய போரை உதவி நின்ற தன்மை கண்டு; இனிதின் உவந்தான் - பெரிதும் மகிழ்வெய்தினன்.

முதலிரண்டடிகள் கவியின் கூற்று. (21)

## கிங்கரர்கள் அநுமன்மேல் படைவீசுதல். 772—773

**772.** இவனிவ னிவனென நின்று
ரிதுவென முதலி யெதிர்ந்தார்
பவனனின் முடுகி நடந்தார்
பகலிர வுறமிடை கின்றார்
புவனியு மலையும் விசும்பும்
பொருவரு நகரு முடன்போர்த்
துவனியி லதிர விடம்போற்
சுடர்விடு படைக டுரந்தார்.

*'இவன்! இவன்! இவன்!' என நின்றார்,*
*'இது!' என முதலி எதிர்ந்தார்,*
*பவனனின் முடுகி நடந்தார்,*
*பகல் இரவு உற மிடைகின்றார்,*
*புவனியும், மலையும், விசும்பும்,*
*பொரு அரு நகரும் உடன் போர்த்*
*துவனியில் அதிர, விடம் போல்*
*சுடர்விடு படைகள் துரந்தார்.*

பவனனின் முடுகி நடந்தார் - காற்றைவிட விரைவாக நடந்து வந்தவர்களாகிய அவ்வரக்கர்; பகல் இரவு உற மிடைகின்றார் - பகற்பொழுதும் இராக்காலம் போல இருளாகும்படி நெருங்கினவர்களாய்; இவன் இவன் இவன் என நின்றார் - இவன்தான், இவன்தான், இவன்தான் என்று சொல்லி நின்றுகொண்டு; இது என முதலி எதிர்ந்தார் - இதுவே (அந்தக் குரங்கு) என்று சொல்லித் தாங்களே (அநுமனை) எதிர்ப்பவர்களாய்; புவனியும் மலையும் விசும்பும் பொருவரு நகரும் உடன் போர்த் துவனியில் அதிர - உலகமும் மலைகளும் வானும் ஒப்பில்லையான நகரமாகிய இலங்கையும் ஒரு சேரப் போர் முழக்கத்தினால் நடுங்கும்படியாக; விடம்போல் சுடர்விடு படைகள் துரந்தார் – ஆலகாலம்போற் கொடுமையையுடைய ஒளி விடுகின்ற ஆயுதங்களை (அநுமன்மேல்) எறிந்தார்கள்.

முடுகி நடந்தார் துரந்தார் என முடிக்க. (22)

**773.** மழைகளு மறிகட லும்போய்
மதமற முரச மறைந்தார்
முழைகளி னிதழ்க டிறந்தார்
முதிர்புகை கதுவ முனிந்தார்
பிழையில படவர வின்றோள்
பிடருற வடியிடு கின்றார்
கழைதொடர் வனமெரி யுண்டா
லெனவெறி படைஞர் கலந்தார்.

மழைகளும், மறி கடலும் போய்
மதம் அற முரசம் அறைந்தார்,
முழைகளின் இதழ்கள் திறந்தார்,
முதிர் புகை கதுவ முனிந்தார்,
பிழை இல பட அரவின் தோள்
பிடர் உற அடி இடுகின்றார்,
கழை தொடர் வனம் எரி உண்டால்
என, எறி படைஞர் கலந்தார்.

மழைகளும் - (இடிக்கின்ற) மேகங்களும்; மறிகடலும் - (ஒலிக்கின்ற) அலைகள் மடங்குகிற கடல்களும்; போய் - ஒதுங்கி; மதம் அற - செருக்கு அற்றுவிடும்படியாக; முரசம் அறைந்தார் - முரசுகளை(ப் பேராரவாரம் உண்டாக)க் கொட்டினவர்களாயும்; முழைகளின் இதழ்கள் திறந்தார் - குகைகள் போல வாயிதழ்களைத் திறந்தவர்களாயும்; முதிர் புகை கதுவ முனிந்தார் - நிறைந்த (மண்டிய) புகையானது பற்றும்படியாகச் சினம் கொண்டவர்களாயும்: முதிர்தல் - நிறைதல் : 'உறை முதிரா நீரால்' (திணைமாலை. 103). பிழையில-குற்றமில்லாத; பட அரவின் தோள் பிடர் உற அடி இடுகின்றார் - படங்களையுடைய பாம்பாகிய ஆதிசேடனின் தோளும் பிடரும் அழுந்தும்படியாக நடப்பவர்களுமாய்; எறி படைஞர் - ஆயுதங்களை விசத் தொடங்கிய அவ்வரக்கர்; கழை தொடர்வனம் எரி யுண்டால் என, கலந்தார் - மூங்கில் நிறைந்த காட்டினைத் தீப்பற்றுவது போல் (நாலா பக்கமுமாய் வளைத்துக்கொண்டு) கூடி நெருங்கினார்கள். (23)

## அநுமன் ஒருமரத்தைக் கையிற்கொண்டு நிமிர்தல்

**774.** அறவனு மதனை யறிந்தா
னருகினி லழகி னமைந்தார்
இறவினி னுதவு நெடுந்தா
ருயர்மர மொருகை யியைந்தான்

உறவரு துணையென வொன்றே
வுதவிய வதனை யுவந்தான்
நிறைகடல் கடையு நெடுந்தாண்
மலையென நடுவ ணிமிர்ந்தான்.

அறவனும் அதனை அறிந்தான்,
அருகினில் அழகின் அமைந்தார்
இற இனின் உதவு நெடும் தார்
உயர் மரம் ஒருகை இயைந்தான்,
உற வரு துணை என, ஒன்றே,
உதவிய அதனை உவந்தான்,
நிறை கடல் கடையும் நெடும் தாள்
மலை என, நடுவண் நிமிர்ந்தான்.

அறவனும் – தருமவானான அநுமனும்; அதனை அறிந்தான் – (அரக்கர் நெருங்கி வந்து படை விசுகின்ற) அச்செயலை யறிந்து; அருகினில் அழகின் அமைந்தார் - (தனது) பக்கத்திலே சிறப்பாக வந்து பொருந்திய அரக்கர்கள்; இற - சாவதற்கு; இனின் - இனிதாக; உதவு - உதவக்கூடிய; நெடும் தார் உயர் மரம் ஒருகை இயைந்தான் - (கீழே விழுந்து கிடந்த) நீண்ட ஒழுங்கான மேன்மையுற்ற மரம் ஒன்றைத் தன் கையில் எடுத்தான்; உற வரு துணை என உதவிய அதனை உவந்தான் - பொருத்தமாக வந்து சேர்ந்த துணைவனைப்போல வேளைக்கு வந்து உதவிய அந்த மரத்தை விரும்பிக் கொண்டவனாய்; நிறை கடல் கடையும் நெடும் தாள் மலை என - (பால்) நிறைந்த கடலைக் கடைதற்குரிய நீண்ட அடியையுடைய மந்தர மலையைப்போல; நடுவண் நிமிர்ந்தான் - (அரக்கர்களின்) நடுவில் ஓங்கி எழுந்தான்; ஒன்றும் ஓவும் அசைகள். (24)

இதன்பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியிற் பின்வரும் பாடல்கள் காணப்படுகின்றன :—

774 (a) அதுபொழு தவரது கண்டா ரடுபடை பலவு மெறிந்தார்
கதிகொடு சிலவர் தொடர்ந்தார் கணைபலர் சிலைகள் பொழிந்தார்
குதிகொடு சிலவ ரெழுந்தே குறுகினர் கதைகொ டறைந்தார்
மதியொடு சிலவர் வளைந்தார் மழுவயில் சிலவ ரெறிந்தார்.

774 (b) அனுமனு மவர்விடு படையா லவனுடல் குருதிக ளொழவே
சினவன லெழவொரு திணிமா மரமதி லுடல்சித றிடவும்
தனுவொடு தலைதுகள் படவும் சரமழை பலபொடி படவும்
தினவுறு புயமொடி படவும் திசைதிசை யொருதனி திரிவான்.

## அரக்கர் சிதைந்து அழிதல் 775—785

**775.** பருவரை புரைவன வன்றோள்
பனிமலை யருவி நெடுங்கால்
சொரிவன பலவென மண்டோய்
துறைபொரு குருதி சொரிந்தார்
ஒருவரை யொருவர் தொடர்ந்தா
ருயர்தலை யுடைய வுருண்டார்
அருவரை நெரிய விழும்பே
ரசனியு மசைய வறைந்தான்.

*பருவரை புரைவன வன் தோள்*
*பனி மலை அருவி நெடும் கால்*
*சொரிவன பல என, மண் தோய்*
*துறை பொரு குருதி சொரிந்தார்,*
*ஒருவரை ஒருவர் தொடர்ந்தார்*
*உயர் தலை உடைய உருண்டார்;*
*அரு வரை நெரிய விழும் பேர்*
*அசனியும் அசைய அறைந்தான்.*

(அநுமன்) அருவரை நெரிய விழும் பேர் அசனியும் அசைய அறைந் தான்; பனி மலை அருவி நெடும் கால் பல சொரிவன என, பருவரை புரை வன வன்தோள் மண் தோய் துறைபொரு குருதி சொரிந்தார், ஒருவரை யொருவர் தொடர்ந்தார், உயர்தலை உடைய உருண்டார் எனக் கூட்டுக.

அருவரை நெரிய விழும் பேர் அசனியும் அசைய–பெரிய மலைகளும் நொறுங்கும்படியாக விழுகின்ற பெரிய இடியும் குறையும்படி யாக; (அவ்வளவு விசைகொண்டு) அறைந்தான் - (அநுமன் அம்மரத்தைக் கொண்டு அவ்வரக்கர்களை) அடித்தான்; பனிமலை அருவி நெடும் கால் பல சொரிவன என - குளிர்ந்த மலைகள் அருவியாக நீண்ட வாய்க்கால்கள் பலவற்றைச் சொரிவனபோல; பருவரை புரை வன வன் தோள் - பெரிய மலைபோல்வனவான வலிய தோள்களினால்; மண்தோய் - மண்ணிலே விழும்படியாக; துறைபொரு - ஆறுபோல; குருதி சொரிந்தார் - இரத்தததைக் கொட்டியவர்களாய்; ஒருவரை யொருவர் தொடர்ந்தார் - ஒருவர் பின் ஒருவராக; உயர்தலை உடைய - பெரிய தலைகள் உடைந்தவர்களாய்; உருண்டார் - (விழுந்து கீழே) உருள் வதானார்கள். (25)

776. பறைபுரை விழிகள் பறிந்தார்
படியிடை நெடிது படிந்தார்
பிறைபுரை யெயிறு மிழந்தார்
பிடரொடு தலைகள் பிளந்தார்
குறையுயிர் சிதற நெரிந்தார்
குடரொடு குருதி குழைந்தார்
முறைமுறை படைக ளெறிந்தார்
முடையுடன் மறிய முறிந்தார்.

*பறை புரை விழிகள் பறிந்தார்,*
*படியிடை நெடிது படிந்தார்,*
*பிறை புரை எயிறும் இழந்தார்,*
*பிடரொடு தலைகள் பிளந்தார்,*
*குறை உயிர் சிதற நெரிந்தார்,*
*குடரொடு குருதி குழைந்தார்,*
*முறை முறை படைகள் எறிந்தார்,*
*முடை உடல் மறிய முறிந்தார்.*

*முறை முறை* – வரிசை வரிசையாக (நின்று); *படைகள் எறிந்தார்* — ஆயுதங்களை விசிய (சில) அரக்கர்கள் ; (அநுமன் கைத்தடியால் புடையுண்டு) *பறைபுரை விழிகள் பறிந்தார்* - தோற்பறை போன்று (அகன்ற) கண்கள் பறியுண்டு; *படியிடை நெடிது படிந்தார்* - தரையின் மீது நீள விழுந்து; *குறை உயிர்* - குற்றுயிர் ; *குடரொடு குருதி குழைந்தார்* - குடலும் இரத்தமும் சேர்ந்து குழைவுபட்டவர்களாய்; *முடை உடல் மறிய முறிந்தார்* - முடைநாற்றமுள்ள (தமது) உடம்புகள் அழியும்படி முறிவுபட்டார்கள். (26),

777. புடையொடு விடுகன லின்காய்
பொறியிடை மயிர்கள் புகைந்தார்
தொடையொடு முதுகு துணிந்தார்
சுழிபடு குருதி சொரிந்தார்
படையிடை யொடிய நெடுந்தோள்
பறிதர வயிறு திறந்தார்
இடையிடை மலையின் விழுந்தா
ரிகல்பொர முடுகி யெழுந்தார்.

புடையொடு விடு கனலின் காய்
பொறி இடை மயிர்கள் புகைந்தார்,
தொடையொடு முதுகு துணிந்தார்,
சுழிபடு குருதி சொரிந்தார்,
படை இடை ஒடிய, நெடும் தோள்
பறிதர, வயிறு திறந்தார்,
இடையிடை, மலையின், விழுந்தார்,
இகல் பொர முடுகி எழுந்தார்.

இகல்பொர முடுகி எழுந்தார் - போர் செய்வதற்கு விரைந்து எழுந்த சில அரக்கர்கள்; புடையொடு - (அநுமன் அடிக்கிற) அடியுடனே; விடு கனலின் காய் பொறியிடை - எழுகின்ற நெருப்பிலிருந்து (தெறிக்கும்) கொதிக்கின்ற பொறிகளிடையே; நெடும் தோள் பறிதர - நீண்ட தோள்கள் வேருகவும். எழுந்தார் விழுந்தார் என்க. (27)

**778.** புதைபட விருளின் மிடைந்தார்
பொடியிடை நெடிது புரண்டார்
விதைபடு முயிரர் விழுந்தார்
விளியொடு விழியு மிழந்தார்
கதையொடு முதிர மலைந்தார்
கணைபொழி சிலையர் கலந்தார்
உதைபட வுரனு நெரிந்தா
ருதநெடு குருதி யுமிழ்ந்தார்.

புதைபட இருளின் மிடைந்தார்,
பொடியிடை நெடிது புரண்டார்,
விதைபடும் உயிரர் விழுந்தார்,
விளியொடு விழியும் இழந்தார்,
கதையொடு முதிர மலைந்தார்,
கணைபொழி சிலையர் கலந்தார்,
உதைபட உரனும் நெரிந்தார்,
உதநெடு குருதி உமிழ்ந்தார்.

புதைபட இருளின் மிடைந்தார் - எங்கும் மறைவாக இருட் கூட்டத்தைப்போல நெருங்கிவந்த அரக்கர்கள் (சிலர்); பொடியிடை நெடிது புரண்டார் - (அநுமனுல் அடிபட்டுப்) புழுதியில் நீள விழுந்து புரண்டார்கள்; கதையொடு முதிரமலைந்தார் - தண்டாயுதம் கொண்டு நன்ருகப்

பொருதவர்களும்; கணைபொழி சிலையர் - அம்புகளைக் கொட்டுகின்ற வில்லையுடைய வீரர்களுமாகிய அரக்கர் சிலர்; கலந்தார் - சேர்ந்தவர்களாய்; விதை படும் உயிரர் விழுந்தார் - தூவி விதைக்கப்பட்ட உயிர்கள் போலச் சிதறி விழுந்தவர்களாய்; விளியொடு விழியும் இழந்தார் - (தங்கள்) கூப்பீடுகளும் கண்களும் இழந்தவர்களாய்; உதைபட - (அநுமன் காலால்) மிதிபட்டு; உரனும் நெரிந்தார் - மார்புகளும் நொறுங்கிப் போய்; உதறொடு குருதி உமிழ்ந்தார் - துடித்துக்கொண்டே வாயால் இரத்தத்தைக் கக்கினார்கள்.

விதை என்பதை வடமொழிச் சொல்லாகக் கொண்டு துன்பம் என்னும் பொருள் கொள்ளலாம். (28)

**779.** அயலயன் மலையொ டறைந்தா
னடுபகை யளகை யடைந்தார்
வியலிட மறைய விரிந்தார்
மிசையுல கடைய மிடைந்தார்
புயறொடு கடலின் விழுந்தார்
புடைபுடை சிதைவொடு சென்றார்
உயர்வுற விசையி னெறிந்தா
னுடலொடு முலகு துறந்தார்.

அயல் அயல் மலையொடு அறைந்தான்,
அடு பகை அளகை அடைந்தார்,
வியல் இடம் மறைய விரிந்தார்,
மிசை உலகு அடைய மிடைந்தார்,
புயல் தொடு கடலின் விழுந்தார்,
புடை புடை சிதைவொடு சென்றார்,
உயர்வு உற விசையின் எறிந்தான்,
உடலொடும் உலகு துறந்தார்.

அயல் அயல் மலையொடு அறைந்தான் - (அநுமன் அவ்வரக்கர்களைப்) பக்கங்களிலுள்ள மலைகளின்மேல் மோதி யடிக்கவும்; அடு பகை அளகை அடைந்தார் - கொல்லும் பகைமையை யுடைய குபேரன் பட்டணமாகிய அளகாபுரியிற் போய்ச் சில அரக்கர் விழுந்தனர்; வியல் இடம் மறைய விரிந்தார் - (சிலர்) அகன்ற இடமெங்கும் மூடும்படியாகப் பரந்து விழுந்தார்கள்; மிசை உலகு அடைய மிடைந்தார் - (சிலர்) மேலுலகம் முழுதும் செறிந்து காணப்பட்டனர்; புயல்தொடு கடலின் விழுந்தார் - (சிலர்) மேகங்கள் படிகின்ற கடலிற் போய் விழுந்தார்கள்;

புடை புடை சிதைவொடு சென்ருர் - (சிலர்) நான்கு பக்கமுமாகச் சிதைந்த உடலோடு ஓடினுர்கள்; உயர்வுற விசையின் எறிந்தான் - (அநுமன் சிலரை வாரி) மேலே செல்லும்படி விரைந்து வீசி விடவும்; உடலொடும் உலகு துறந்தார் - (அவர்கள்) உடல்களுடனேயே இவ்வுலகை நீத்து விண்ணுலகெய்தினுர்கள். (29)

780. பற்றித் தாளொடு தோள்பறித் தெறிந்தனன் பாரின்
☆ இற்ற வெஞ்சிறை வெற்பின மாமெனக் கிடந்தார்
கொற்ற வாலிடைக் கொடுந்தொழி லரக்கரை யடங்கச்
சுற்றி வீசலிற் பம்பர மாமெனச் சுழன்ருர்.

பற்றித் தாளொடு தோள்பறித்து எறிந்தனன், பாரின்
இற்ற வெம் சிறை வெற்பு இனம் ஆம் எனக், கிடந்தார்;
கொற்ற வாலிடைக் கொடும் தொழில் அரக்கரை அடங்கச்
சுற்றி வீசலில், பம்பரம் ஆம் எனச் சுழன்ருர்.

(அநுமன்) பற்றி - (சில அரக்கர்களைப்) பிடித்து ; தாளொடு தோள் பறித்து - கால்களையும் கைகளையும் பிடுங்கிவிட்டு ; எறிந்தனன் - வீசியெறியவும் ; பாரின் வெம் சிறை இற்ற வெற்பினம் ஆம் எனக் கிடந்தார்- மண்ணில் வலிய சிறகுகள் அறுபட்ட மலைக்கூட்டங்கள் என்னும்படியாக விழுந்துகிடந்தார்கள் ; கொற்ற வாலிடை அடங்க - (அநுமன் தன்னுடைய) வெற்றி பொருந்திய வாலிலே அடங்கும்படியாக; சுற்றி - சுற்றிக்கொண்டு ; கொடுந்தொழில் அரக்கரை விசலின் - கொடிய தொழிலையுடைய அரக்கர்கள் சிலரை வீசி விடவும் ; பம்பரம் ஆம் எனச் சுழன்ருர்- அவர்கள்) பம்பரம் என்று சொல்லும்படியாகச் சுற்றிக்கொண்டே கீழே விழுந்தார்கள். (30)

781. வாள்க ளிற்றன விற்றன வரிசிலை வயிரத்
தோள்க ளிற்றன விற்றன சுடர்மழுச் சூலம்
நாள்க ளிற்றன விற்றன நகையெயிற் றீட்டம்
தாள்க ளிற்றன விற்றன படையுடைத் தடக்கை.

வாள்கள் இற்றன, இற்றன வரிசிலை, வயிரத்
தோள்கள் இற்றன, இற்றன சுடர் மழுச் சூலம்,
நாள்கள் இற்றன, இற்றன நகை எயிற்று ஈட்டம்,
தாள்கள் இற்றன, இற்றன படையுடைத் தடக்கை.

வயிரத் தோள்கள் - வயிர மலைபோன்ற திண்ணிய தோள்கள். நகை எயிற்று ஈட்டம் இற்றன - ஒளியுடைய பற்களின் கூட்டம் உடைந்தன. (31)

**782.** தெறித்த வன்றலை தெறித்தன செறிசுடர்க் கவசம்
தெறித்த பைங்கழல் தெறித்தன சிலம்பொடு பொலந்தார்
தெறித்த பன்மணி தெறித்தன பெரும்பொறித் திறங்கள்
தெறித்த குண்டலந் தெறித்தன கண்மணி சிதறி.

*தெறித்த வன் தலை, தெறித்தன செறி சுடர்க் கவசம்,*
*தெறித்த பைங்கழல், தெறித்தன சிலம்பொடு பொலம் தார்,*
*தெறித்த பல் மணி, தெறித்தன பெரும் பொறித் திறங்கள்,*
*தெறித்த குண்டலம், தெறித்தன கண்மணி சிதறி.*

பொலம் தார் சிலம்பொடு தெறித்தன - பொன்னரிமாலைகள் ஓசையோடு சிதறி விழுந்தன; பலமணி தெறித்த (ஆபரணங்களில் அழுத்திய) பலவகை இரத்தினங்களும் உதிர்ந்தன; கண்மணி சிதறித் தெறித்தன - கண்ணின் கருவிழிகள் சிதைந்து விழுந்தன. (32)

**783.** உக்க பற்குவை யுக்கன துவக்கெலும் புதிர்வுற்
றுக்க முற்கர முக்கன முசுண்டிக ளுடைவுற்
றுக்க சக்கர முக்கன வுடறிறந் துயிர்கள்
உக்க கப்பண முக்கன வுயர்மணி மகுடம்.

*உக்க பல் குவை, உக்கன துவக்கு எலும்பு உதிர்வுற்று,*
*உக்க முற்கரம், உக்கன முசுண்டிகள் உடைவுற்று,*
*உக்க சக்கரம், உக்கன உடல் திறந்து உயிர்கள்,*
*உக்க கப்பணம், உக்கன உயர்மணி மகுடம்.*

பற்குவை - பல்லின் கூட்டம்; உக்க - கீழே விழுந்தன; எலும்பு உதிர்வுற்று - எலும்புகள் உதிர்ந்துபோய்; துவக்கு உக்கன - உடம்புகள் விழுந்தன. (33)

**784.** தாள்க ளாற்பலர் தடக்கைக ளாற்பலர் தாக்கும்
தோள்க ளாற்பலர் சுடர்விழி யாற்பலர் தொடரும்
கோள்க ளாற்பலர் குத்துக ளாற்பலர் தத்தம்
வாள்க ளாற்பலர் மரங்களி னாற்பலர் மடிந்தார்.

தாள்களால் பலர், தடக்கைகளால் பலர், தாக்கும்
தோள்களால் பலர், சுடர்-விழியால் பலர், தொடரும்
கோள்களால் பலர், குத்துகளால் பலர், தத்தம்
வாள்களால் பலர், மரங்களினுல் பலர் மடிந்தார்.

(அநுமனுடைய) தாள்களால் பலர் மடிந்தார், கைகளால் பலர் மடிந்தார் எனக் கூட்டுக.

தாக்கும் தோள்களால் – (அநுமனுடைய) மோதுகின்ற தோள்களினுல் ; தொடரும் கோள்களால் – (அநுமன்) தொடர்ந்து பற்றிக்கொள்ளுதலினுல் ; தத்தம் வாள்களால் – தம் தமது (கைகளிலுள்ள) வாள்களை (அநுமன் பிடுங்கித் தம்மீது) வீசுதலினுல் ; மரங்களினுல் - (அநுமன்) மரங்களை யெடுத்து மோதுவதால். (34)

**785.** ஈர்க்கப் பட்டனர் சிலர்சில ரிடிப்புண்டு பட்டார்
பேர்க்கப் பட்டனர் சிலர்சிலர் பிடியுண்டு பட்டார்
ஆர்க்கப் பட்டனர் சிலர்சில ரடியுண்டு பட்டார்
பார்க்கப் பட்டனர் சிலர்சிலர் பயமுண்டு பட்டார்.

ஈர்க்கப்பட்டனர் சிலர், சிலர் இடிப்புண்டு பட்டார்,
பேர்க்கப்பட்டனர் சிலர், சிலர் பிடியுண்டு பட்டார்,
ஆர்க்கப்பட்டனர் சிலர், சிலர் அடியுண்டு பட்டார்,
பார்க்கப்பட்டனர் சிலர், சிலர் பயமுண்டு பட்டார்.

ஈர்க்க – (அநுமன்) பிடித்திழுத்தலினுல்; பட்டனர் – இறந்தனர் ; பேர்க்க – புரட்டுதலாலே ; ஆர்க்க – ஆரவாரித்தலினுலே ; பார்க்க – உறுக்கிப்பார்த்தலினுல் ; சிலர் – சில அரக்கர். (35)

### அநுமன் செய்த போர்முறை 786 - 788

**786.** ஓடிக் கொன்றனன் சிலவரை யுடலுட ரேறும்
கூடிக் கொன்றனன் சிலவரைக் கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரைப் பிணங்தொறுந் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக் கறங்கெனத் திரிவான்.

ஓடிக் கொன்றனன் சிலவரை, உடல் உடல் தோறும்
கூடிக் கொன்றனன் சிலவரைக், கொடி நெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரைப், பிணம் தொறும் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக், கறங்கு எனத் திரிவான்.

கறங்கு எனத் திரிவான் - காற்றாடிபோலத் திரிபவனான அநுமன்; கோடி நெடு மரத்தால் - ஒழுங்கான நீண்ட மரத்தடியால். (36)

**787.** முட்டி னார்பட முட்டினான் முறைமுறை முடுகிக்
கிட்டி னார்படக் கிட்டினான் கிரியென நெருங்கிக்
கட்டி னார்படக் கட்டினான் கைகளால் மெய்யில்
தட்டி னார்படத் தட்டினான் மலையெனத் தகுவான்.

முட்டினார் பட முட்டினான், முறை முறை முடுகிக்
கிட்டினார் படக் கிட்டினான், கிரி என நெருங்கிக்
கட்டினார் படக் கட்டினான், கைகளால் மெய்யில்
தட்டினார் படத் தட்டினான், மலை எனத் தகுவான்.

மலை எனத் தகுவான் - மலையென்று சொல்லத்தக்கவனாகிய (பேருருவம்படைத்த) அநுமன், 'முட்டினார் பட முட்டினான் - (தன்னை) முட்டின அரக்கர் இறக்கும்படி (தான் அவரை) முட்டினான்; முறை முறை முடுகிக் கிட்டினார் படக் கிட்டினான் - வரிசை வரிசையாக விரைந்து (தன்னை) நெருங்கி வருபவர்கள் இறக்கும்படி (தானும் அவர்களை) நெருங்கினான்; கிரி என நெருங்கிக் கட்டினார் படக் கட்டினான் - மலை போன்றவராய் நெருங்கிவந்து (தமது கைகளால் தன்னைக்) கட்டினவர்கள் இறக்கும்படி (தானும் அவரைக்) கட்டினான்; கைகளால் மெய்யில் தட்டினார் படத் தட்டினான் - (தம்) கைகளினால் (தனது) உடம்பில் தட்டினவர்கள் இறக்கும்படி (தான் அவர்களைத்) தட்டிவிட்டான்.

தன்னைக் கொல்ல வந்த அரக்கர்களை அவர்கள் செய்தவாறே தானும் செய்து கொன்றான் என்றவாறு. (37)

**788.** உறக்கி னுங்கொல்லு முணரினுங்
கொல்லுமால் விசும்பிற்
பறக்கி னுங்கொல்லும் படரினுங்
கொல்லுமின் படைக்கை
நிறக்க ருங்கழ லரக்கர்க
ணெறிதொறும் பொறிகள்
பிறக்க நின்றெறி படைகளைத்
தடக்கையாற் பியையும்.

உறக்கினும் கொல்லும், உணரினும் கொல்லும், மால் விசும்பில்
பறக்கினும் கொல்லும், படரினும் கொல்லும், மின் படைக்கை
நிறக் கரும் கழல் அரக்கர் கண் நெறிதொறும் பொறிகள்
பிறக்க நின்று, எறி படைகளைத் தடக்கையால் பிசையும்.

உறக்கினும் கொல்லும் - (அநுமன் அரக்கர்கள்) சோர்ந்திருந்தாலும் கொல்லுவான்; உணரினும் கொல்லும் - (அவர்கள்) அயர்வு நீங்கினாலும் கொல்லுவான்; மால் விசும்பில் பறக்கினும் - பெரிய ஆகாயத்திடத்தே பறந்தாலும்; படரினும் - (நிலத்தின்மீது) நடந்து சென்றாலும்; மின் படைக்கை - ஒளிபொருந்திய ஆயுதங்களையுடைய கைகளையும்; நிறம் கரும் கழல் அரக்கர் - விளங்குகின்ற பெரிய வீரக்கழலையும் அணிந்த அவ்வரக்கர்கள்; கண் நெறி தொறும் பொறிகள் பறக்க நின்று – (தங்கள்) கண்கள் வழிகள்தோறும் தீப்பொறி உண்டாகும்படி எதிர்த்துநின்று; எறி படைகளை - வீசுகின்ற ஆயுதங்களை; தடக்கையால் பிசையும் - (தனது) பெரிய கைகளாற் பிசைந்து பொடியாக்கிவிடுவான். (38)

## அநுமன் செய்த போரினால் சுற்றிலும் நேர்ந்த நிகழ்ச்சிகள் 789 – 795

**789.** சேறும் வண்டலு மூளையு நிணமுமாய்த் திணிய
நீறு சேர்நெடுந் தெருவெலா நீத்தமாய் நிரம்ப
ஆறு போல்வருங் குருதியவ் வநுமனா லலைப்புண்
டீறில் வாய்தொறு முமிழ்வதே யொத்ததவ் விலங்கை.

சேறும் வண்டலும் மூளையும் நிணமுமாய்த் திணிய,
நீறு சேர் நெடும் தெரு எலாம் நீத்தமாய் நிரம்ப,
ஆறு போல் வரும் குருதி, அவ் அநுமனால் அலைப்புண்டு
ஈறு இல் வாய்தொறும் உமிழ்வதே ஒத்தது; அவ் இலங்கை.

அரக்க வீரருடைய மூளையும் கொழுப்பும் சேறும் வண்டலும் போன்று செறியவும், புழுதியாய்க் கிடந்த நீண்ட தெருக்களெல்லாம் வெள்ளமாய்ப் பெருகி ஆற்றைப்போல் இரத்தம் ஓடியது, இலங்கைமா நகரமானது அநுமனால் வருத்தப்பட்டுத் தன் வாய்கள் தோறும் குருதி கக்கியதைப் போன்றிருந்தது என்பது இப்பாடலின் பொருள்.

இலங்கையிலுள்ள தெருக்கள் நீளமாய் இருந்ததால், ஈறில் வாய் தொறும் என்னப்பட்டது. ஈறில் - முடிவில்லாத. (39)

இப்பாடலின்பின் 25 என்னும் குறியீடுள்ள ஏட்டில் பின்வரும் பாடல்கள் காணப்படுகின்றன :—

789 (a) உரைத்த வெண்பதி னுயிர கோடி கிங்கிரரோ
டிரைத்து வந்தமாப் பெரும்படை யரக்கரெண் ணிலரைத்
தரைத்த லத்தினிட் டரைத்தொரு தமியனின் றதுகண்
டுருத்தவ் வெண்பதி னுயிர கோடிய ருடன்றுர்.

789 (b) சினந்து மற்றவர் தியெழப் படைக்கலஞ் சிதறிக்
கனந்து வன்றிய தெனக்கரு மலையெனக் கடல்போ
லனந்த னுந்தலை துளக்குற வமரர்க ளிடியுறு மரவின்
மனந்து ளக்குற வளைத்தன ரெண்டிசை மருங்கும்.

789 (c) எடுத்தெ றிந்தன ரெழுமழுச் சிலர்சிலர் நெருக்கித்
தொடுத்தெ றிந்தனர் சூலங்கள் சுடுகதைப் படையால்
அடித்து நின்றனர் சிலர்சில ரருஞ்சிலைப் பகழி
விடுத்து நின்றனர் வெய்யவர் விளைந்தவெஞ் செருவே.

789 (d) ஒளிந்தி டுங்கடை யுகத்தினி லுற்றகா ரினங்கள்
வளைந்து பொன்கிரி மேல்விழு மிடியென மறவோர்
பொழிந்த பல்படை யாவையும் புயத்திடைப் பொடிபட்
டழுந்த மற்றவ ரோடும்வந் தடுத்தன னநுமன்.

789 (e) கட்டு மென்றனர் குரங்கிது கடியகைப் படையால்
வெட்டு மென்றனர் விழிவழி நெருப்புக விறலோர்
கிட்டி நின்றமர் விளைத்தனர் மாருதி கிளர்வான்
முட்டு மாமர மொன்றுகொண் டவருடன் முனைந்தான்.

**790.** கருது காலினுங் கையினும் வாயினுங் கட்டிச்
சுருதி யேயன்ன மாருதி மரத்திடை துரப்பான்
நிருத ரெந்திரத் திடுகரும் பாமென நெரிவார்
குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூனில்.

கருது காலினும் கையினும் வாலினும் கட்டிச்,
சுருதியே அன்ன மாருதி மரத்திடை துரப்பான்,
நிருதர் எந்திரத்து இடு கரும்பு ஆம் என நெரிவார்,
குருதி சாறு எனப் பாய்வது குரைகடல் கூனில்

சுருதியே அன்ன மாருதி - வேதத்தையே ஒப்பான அநுமன்; கருது காலினும் - எண்ணத்தக்க காலினலும்; மரத்திடை துரப்பான் - மரத்துடனே மோதுதலால்; சாறு என - கருப்பஞ்சாறு போல; கூன்- [illegible]திரம்.

அநுமன் தனது கால்களாலும், கைகளாலும், வாலாலும் அரக்கர்கள் சிலரைக் கட்டி மரத்துடனே மோதவும், அவர்களுடம்புகள் ஆலேயிலிட்ட கரும்பு போல நொறுங்கி, அந்தக் கரும்பிலிருந்து சாறு பெருகுவது போல், அவ்வுடம்புகளிலிருந்து பெருகுகின்ற இரத்தம் கடலாகிய கூனிற் போய் விழுந்தது என்க. (40)

இப் பாடலின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :-

790 (a) தலையொ டிந்திட வடித்தனன் சிலர்தமைத் தாளி
னிலையொ டிந்திட வடித்தனன் சிலர்தமை நெருக்கிச்
சிலையொ டிந்திட வடித்தனன் சிலர்தமை வயப்போர்க்
கலையொ டிந்திட வடித்தன னரக்கர்கள் கலங்க.

**791.** எடுத்த ரக்கரை யெறிதொறு மவருட லெற்றக்
கொடித்திண் மாளிகை யிடிந்தன மண்டபங் குலைந்த
தடக்கை யானைகள் மறிந்தன கோபுரந் தகர்ந்த
பிடிக்கு லங்களும் புரவியு மவிந்தன பெரிய.

எடுத்து அரக்கரை எறிதொறும், அவர் உடல் எற்றக்,
கொடித் திண் மாளிகை இடிந்தன, மண்டபம் குலைந்த,
தடக்கை யானைகள் மறிந்தன, கோபுரம் தகர்ந்த,
பிடிக் குலங்களும் புரவியும் அவிந்தன பெரிய.

எற்ற - மோத ; கொடித்திண்மாளிகை - கொடிகள் கட்டின உறுதியான வீடுகள் ; மறிந்தன - மடங்கி விழ்ந்தன ; பெரிய அவிந்தன - அதிகமாய் இறந்துபோயின. (41)

**792.** தத்த மாடங்க டம்முட லாற்சிலர் தகர்த்தார்
தத்த மாதரைத் தங்கழ லாற்சிலர் சமைத்தார்
தத்த மாக்களைத் தம்படை யாற்சிலர் தடிந்தார்
எற்றி மாருதி தடக்கைக ளான்விசைத் தெறிய.

தம்தம் மாடங்கள் தம் உடலால் சிலர் தகர்த்தார் ;
தம்தம் மாதரைத் தம் கழலால் சிலர் சமைத்தார் ;
தம்தம் மாக்களைத் தம்படையால் சிலர் தடிந்தார்,
எற்றி மாருதி தடக்கைகளான் விசைத்து எறிய.

மாருதி தடக்கைகளான் எற்றி விசைத்து எறிய - அநுமன் தனது பெரிய கைகளினால் (அரக்கர்களை) அடித்து வேகமாய்த் தூக்கி எறிய; சிலர் தம் உடலால் தத்தம் மாடங்கள் தகர்த்தார் - (தூக்கி யெறியப்பட்ட அரக்கர்களிற் சிலர்) தம்முடைய உடல்களாலேயே (அவை விழும் வேகத்தாலும் கனத்தாலும்) தங்கள் தங்களுடைய உபரிகை வீடுகளை இடித்துவிட்டார்கள்; சிலர் தம் கழலால் தத்தம் மாதரைச் சமைத்தார் - (எறியப்பட்ட) சில அரக்கர்கள் தங்கள் கால்களாலே தங்கள் தங்கள் பெண்டிரைக் கொன்றார்கள்; சிலர் தம்படையால் தத்தம் மாக்களைத் தடிந்தார் - (எறியப்பட்ட) சில அரக்கர்கள் தங்கள் கையிலுள்ள ஆயுதங்களால் தங்கள் தங்கள் குழந்தைகளையே வெட்டினார்கள்.

இவ்வித அரக்கர்களின் செயல்கள் அவர்களை அறியாமலே நேரிட்டன என்க. (42)

**793.** ஆடல் மாக்களி றனையவ னரக்கியர்க கருளி
வீடு நோக்கியே செல்கென்று சிலவரை விட்டான்
கூடி னார்க்கவ ருயிரெனச் சிலவரைக் கொடுத்தான்
ஊடி னார்க்கவர் மனைதொறுஞ் சிலவரை யுய்த்தான்.

*ஆடல் மாக் களிறு அனையவன், அரக்கியர்க்கு அருளி*
*வீடு நோக்கியே செல்க என்று சிலவரை விட்டான்,*
*கூடினார்க்கு அவர் உயிர் எனச் சிலவரைக் கொடுத்தான்,*
*ஊடினார்க்கு அவர் மனைதொறும் சிலவரை உய்த்தான்.*

ஆடல் மாக் களிறு அனையவன் - வெற்றியையுடைய பெரிய ஆண் யானை போன்றவனான அநுமன்; விட்டான், கொடுத்தான், உய்த்தான் என்ற மூன்றும் எறிந்தான் என்ற பொருளிலேயே வந்தனவாகக் கொள்க. தூக்கியெறியப்பட்ட அரக்கர்களிற் சிலர் தத்தம் வீடுகளிலே போய் விழுந்ததனை, அநுமன் அரக்கியர் மேல் அருள்கொண்டு அவ்வாறு வீசியதாகக் கவிஞர் புனைந்துரைத்தார் என்க. (43)

**794.** தருவெ லாமுட றெற்றியெ லாமுடல் சதுக்கத்
துருவெ லாமுட லுவரியெ லாமுட லுள்ளூர்க்
கருவெ லாமுடல் காயமெ லாமுட லரக்கர்
தெருவெ லாமுட றேயமெ லாமுடல் சிதறி.

தரு எலாம் உடல், தெற்றி எலாம் உடல், சதுக்கத்து
உரு எலாம் உடல், உவரி எலாம் உடல், உள்ளூர்க்
கரு எலாம் உடல், காயம் எலாம் உடல், அரக்கர்
தெரு எலாம் உடல், தேயம் எலாம் உடல் சிதறி.

அநுமன் இவ்வாறு அரக்கர்களை அடித்து எறிந்ததால் அவர்களுடைய உயிரற்ற உடல்கள் எங்கும் சிதறுண்டு நிறைந்து கிடந்தன என்க.

தரு - மரங்கள். தெற்றி - திண்ணைகள். சதுக்கத்து உரு எலாம் — நாற்சந்தி கூடும் இடங்களிலெல்லாம். உவரி – க்டல், உள்ளூர்க் கரு எலாம் : ஊர் உள் கரு எலாம் - ஊரின் உள்ளேயுள்ள நடுப்புறங்களெல்லாம் ; காயம் எலாம் - ஆகாயம் முழுவதும் ; தேயம் எலாம் - வெளி நகரெல்லாம் ; நிறைந்துகிடந்தன என வருவித்து முடிக்க. (44)

**795.** ஊனெ லாமுயிர் கவருறுங் காலனேய்ந் துலந்தான்
தானெ லாரையு மாருதி சாடுகை தவிரான்
மீனெ லாமுயிர் மேகமெ லாமுயிர் மேன்மேல்
வானெ லாமுயிர் மற்றுமெ லாமுயிர் சுற்றி.

ஊன் எலாம் உயிர் கவர் உறும் காலன் ஓய்ந்து உலந்தான்,
தான் எலாரையும் மாருதி சாடுகை தவிரான்,
மீன் எலாம் உயிர், மேகம் எலாம் உயிர், மேல் மேல்
வான் எலாம் உயிர், மற்றும் எலாம் உயிர் சுற்றி.

மாருதி - அநுமன் ; தான் எலாரையும் சாடுகை தவிரான் - தான் ஒருத்தனுகவே எல்லா அரக்கர்களையும் மோதியடிக்கும் தொழிலிலிருந்து நீங்காதவனுகவும் ; ஊன் எலாம் உயிர் கவருறும் காலன் ஓய்ந்து உலந்தான் - (விழுந்த) எல்லா உடம்புகளிலிருந்தும் உயிர்களை எடுத்துச் செல்லவேண்டியவனை கூற்றுவனும் களைத்து வருந்தலானுன்; (ஆகவே) மீன் எலாம் உயிர் - நட்சத்திரமண்டல முழுதும் உயிராகவும் ; மேகமெலாம் உயிர் – மேகமண்டல முழுதும் உயிராகவும், மேல் வான் எலாம் உயிர் - மிக வுயர்ந்துள்ள ஆகாயமெல்லாம் உயிராகவும் ; சுற்றி - சூழ்ந்துள்ள ; மற்றும் எலாம் உயிர் - மற்ற இடங்களிலெல்லாமும் உயிராகவும் (நிரம்பியிருந்தன). (45)

## அரக்கர் நடுவில் அநுமன் விளங்கிய காட்சி 796–799

**796.** ஆக விச்செரு விளைவுறு மமைதியி னரக்கர்
மோக முற்றன ராமென முறைமுறை முனிந்தார்
மாக முற்றவு மாதிர முற்றவும் வளைந்தார்
மேக மொத்தனர் மாருதி வெய்யவ னொத்தான்.

*ஆக இச் செரு விளைவுறும் அமைதியின், அரக்கர்*
*மோகம் உற்றனர் ஆம் என முறை முறை முனிந்தார்,*
*மாகம் முற்றவும் மாதிரம் முற்றவும் வளைந்தார்,*
*மேகம் ஒத்தனர்; மாருதி வெய்யவன் ஒத்தான்.*

ஆக இச் செரு விளைவுறும் அமைதியின் - இப்படியாக இந்தச் சண்டை நடந்துகொண்டிருந்தபொழுது; அரக்கர் மோகம் உற்றனராம் என முறை முறை முனிந்தார் - (சில) அரக்கர்கள் அறிவு மயங்கியவர்கள்போல மேன்மேலும் கோபம் கொண்டவர்களாய்; மாகம் முற்றவும் - ஆகாயம் முழுவதும்; மாதிரம் முற்றவும் – திசைகள் முழுவதும்; வளைந்தார் - வந்து சூழ்ந்து கொண்டு; மேகம் ஒத்தனர் – கரு மேகக்கூட்டத்தை ஒத்திருந்தார்கள்; மாருதி வெய்யவன் ஒத்தான் – அநுமன் (அந்த மேகக் குழாங்களைக் குலையச் செய்யும்) கதிரவனை ஒத்து விளங்கினன். *(46)*

**797.** அடல ரக்கரு மார்த்தலி னலைத்தலி னயரப்
புடை பெருத்துயர் பெருமையிற் கருமையிற் பொலிவின்
மிடல யிற்படை மீனென விலங்கலிற் கலங்கும்
கடனி கர்த்தனர் மாருதி மந்தரங் கடுத்தான்.

*அடல் அரக்கரும், ஆர்த்தலின், அலைத்தலின், அயரப்*
*புடை பெருத்து உயர் பெருமையின், கருமையின், பொலிவின்,*
*மிடல் அயில் படை மின் என விலங்கலின், கலங்கும்*
*கடல் நிகர்த்தனர், மாருதி மந்தரம் கடுத்தான்.*

ஆர்த்தலின் - இரைதலாலும்; அலைத்தலின் – (அநுமனால் அங்கு மிங்கும்) அசைக்கப்படுவதாலும்; அயரப் புடை பெருத்து உயர் பெருமையின் - (கண்டவர்) சோரும்படி பக்கங்கள் பருத்து உயர்ந்து தோன்றுகின்ற பெருந்தோற்ற முடைமையாலும்; கருமையின் - கருநிறத்தாலும்; பொலிவின் – மிகுதியாய் (நிறைந்து) காணப்படுதலாலும்; மிடல் அயில் படை மீன் என விலங்கலின் – வலிமையுள்ள வேல்போன்ற ஆயுதங்கள் மீன்கள் போற் புரள்வதாலும்; அடல் அரக்கரும் – வலிய (அவ்) அரக்கர்

களும் ; கலங்கும் கடல் நிகர்த்தனர் - (கடையும் போது) கலங்குகிற கருங் கடலை யொத்திருந்தனர் ; மாருதி மந்தரம் கடுத்தான் - அநுமன் (கடலைக் கலக்குகின்ற) மந்தரமலையை யொத்தான்.

ஆர்த்தல், அலைத்தல், பெருந்தோற்ற முடைமை, கருமை, மீன் விலங்குதல் என்பவை அரக்கருக்கும் கடலுக்கும் பொருந்தும் பொதுத் தன்மைகள். (47)

**798.** கரத லத்தினுங் காலினும் வாலினுங் கதுவ
நிரைம ணித்தலை நெரிந்துகச் சாய்ந்துயிர் நீப்பார்
சுரர்ந டுக்குற வமுதுகொண் டெழுந்தநா டொடரும்
உரக ரொத்தன ரநுமனுங் கலுழனை யொத்தான்.

*கரதலத்தினும் காலினும் வாலினும் கதுவ,*
*நிரை மணித் தலை நெரிந்து உகச் சாய்ந்து உயிர் நீப்பார்,*
*சுரர் நடுக்குற அமுதுகொண்டு எழுந்த நாள் தொடரும்*
*உரகர் ஒத்தனர், அநுமனும் கலுழனை ஒத்தான்.*

கரதலத்தினும் – (அநுமன் தன்னுடைய) கைகளினாலும் ; கதுவ – பிடித்தலாலே ; நிரை மணித் தலை நெரிந்துகச் சாய்ந்து உயிர் நீப்பார் – வரிசையாகக் கரியநிறமுள்ள தமது தலைகள் நசுங்கிச் சிதறவும் கீழே விழுந்து உயிர்விடுகின்ற அவ்வரக்கர்கள் ; சுரர் நடுக்குற அமுது கொண்டு எழுந்த நாள்–தேவர்கள் அஞ்சும்படி அமுதகலசத்தை எடுத்துக்கொண்டு மேலே கிளம்பியபொழுது ; தொடரும் உரகர் ஒத்தனர் – (காவலிருந்து கவரவொட்டாது தடுக்கத்) தொடர்ந்த பாம்புகளை ஒத்தனர். கலுழனை – (அமுதகலசத்தொடு எழுந்த) அந்தக் கருடனை. (48)

**799.** மான முற்றதம் பகையினுன் முனிவுற்று வளைந்த
மீனு டைக்கட லிடையினு முலகெலா மிடைந்த
ஊன றக்கொன்று துகைக்கவு மொழிவிலா நிருதர்
ஆனை யொத்தன ராளரி யொத்தன னநுமன்.

*மானம் உற்ற தம் பகையினால், முனிவு உற்று வளைந்த,*
*மீன் உடைக் கடல் இடையினும் உலகு எலாம் மிடைந்த,*
*ஊன் அறக் கொன்று துகைக்கவும், ஒழிவு இலா நிருதர்*
*ஆனை ஒத்தனர், ஆள் அரி ஒத்தனன் அநுமன்.*

மானம் உற்ற தம் பகையினால் – செருக்குக்கொண்ட தமது பகைமைக் குணத்தினாலே ; முனிவுற்று வளைந்த – கோபம் கொண்டு தன்னைச்

சூழ்ந்த. மீனுடைக் கடல் இடையினும் - மீன்களையுடைய கடலினிடத்திலும்; உலகோலம் - அவ் விலங்கைநகர முழுதிலும்; மிடைந்த - நெருங்கி உள்ள; ஊன் அறக் கொன்று துகைக்கவும் - தசைகள் நீங்கும்படி வதைத்து வருத்தினுலும்; ஒழிவு இலா நிருதர் - தொலைந்துபோகாது (மேன்மேலும் வந்த) அரக்கர்கள்; ஆனை ஒத்தனர் - யானைக்கூட்டங்களை ஒத்திருந்தார்கள்; அநுமன் ஆள் அரி ஒத்தனன் - அநுமன் நரசிங்க மூர்த்தியை ஒத்து விளங்கினன்: ஆள் அரி என்பதற்கு (விலங்குகளை) ஆளும் தன்மையுள்ள சிங்கம் என்றும் பொருள்கொள்ளலாம்.

வளைந்த, ஒழிவிலா நிருதர் எனக் கூட்டுக. ஊன் அறக்கொன்று துகைத்தவன் அநுமன் என்க. (49)

## அநுமனின் விழுப்புண்

800. எய்த வெற்றின வெறிந்தன வீர்த்தன விகலிப்
பொய்த குத்தின பொதுத்தன தொளைத்தன போழ்ந்த
கொய்த சுற்றின பற்றின குடைந்தன பொலிந்த
அய்யன் மற்பெரும் புயத்தன புண்ணளப் பரிதால்.

எய்த. எற்றின, எறிந்தன, ஈர்த்தன, இகலிப்
பொய்த, குத்தின, பொதுத்தன, தொளைத்தன, போழ்ந்த
கொய்த, சுற்றின, பற்றின, குடைந்தன, பொலிந்த
அய்யன் மல் பெரும் புயத்தன புண் அளப்பு அரிது, ஆல்.

(படைக்கலங் கொண்ட அரக்கர்) எய்தவற்றினுலும், அடித்த (எற்றின)வைகளினுலும், விசி யெறிந்தவற்ருலும், அறுத்த(ஈர்த்த) வற்றினுலும், மாறுபாட்டோடு சொரிந்த (பொய்த) வற்றினுலும், குத்தின வற்ருலும், பொத்தினவற்ருலும், தொளைத்தவற்ருலும், பிளந்தவற்ருலும், கத்தரித்தவைகளாலும், வளைத்து இறுக்கியவற்ருலும், பிடித்துக்கொண்ட வற்ருலும், குடைதலைச்செய்தவற்ருலும், அநுமன் தோள்களிற் புண்கள் நேர்ந்தன என்க.

பொலிந்த-விளங்கித் தோன்றுகின்ற; ஐயன் மல் பெரும் புயத்தன - பெரியோனுகிய அநுமனது வலிமை பொருந்திய பெரிய தோள்களிலுள்ளனவான; புண்-புண்களை; அளப்பு அரிது - (இவ்வளவென்று) கணக்கிடுதல் முடியாததாம்; ஆல்: ஈற்றசை. (50)

## தேவர்கள் அநுமனைப் புகழ்தல்

801. கார்க்க ருந்தடங் கடல்களு
மழைமுகிற் கணனும்
வேர்க்க வெஞ்செரு விளைத்தெழும்
வெள்ளெயிற் றரக்கர்
போர்க் குழாம்படி பூசலி
னையனைப் புகழ்வுற்
றார்க்கும் விண்ணவ ரமலையே
யுயாந்ததன் றமரில்.

கார்க் கரும் தடம் கடல்களும் மழை முகில் கணனும்
வேர்க்க, வெம் செரு விளைத்து எழும் வெள் எயிற்று அரக்கர்
போர்க் குழாம் படி பூசலின், ஐயனைப் புகழ்வுற்று
ஆர்க்கும் விண்ணவர் அமலையே உயர்ந்தது அன்று அமரில்.

கார்க் கரும் – மிகக்கரிய ; தடம் கடல்களும் - பெரிய கடல்களும் ; மழை முகிற் கணனும் – மழையைக் கொண்ட (கரிய) மேகங்களின் கூட்டங்களும் ; வேர்க்க – அஞ்சும்படியாக ; வெம் செரு விளைத்து எழும் வெள் எயிற்று அரக்கர் - கொடிய போரை உண்டாக்கிக் கிளம்புகின்ற வெள்ளை நிறப் பற்களையுடைய அரக்கர்களின் ; போர்க்குழாம் – போர்க் கூட்டங்களில் ; படி – தோன்றுகிற ; பூசலின் – ஆரவாரத்தைக் காட்டிலும்; ஐயனைப் புகழ்வுற்று ஆர்க்கும் விண்ணவர் அமலையே-அநுமனைப் புகழ்ந்து ஆரவாரித்த தேவர்களின் பேரொலியே ; அன்று அமரில் உயர்ந்தது – அந்தப் போரில் அதிகமாயிருந்தது.

அரக்கர் மோதுதலால் கடல்களும், அம்புமழை தூவுதலால் மேகங்களும் அஞ்சின என்க ; அரக்கர்களின் மிக்க கரிய நிறத்திற்குக் கருங் கடல்களும் கருமேகங்களும் பின்வாங்கின என்றும் கூறலாம்; அநுமனின் போர்த்திறனையும் வீரத்தையும் தேவர் போற்றினர் என்க. (51)

## அநுமன்மேல் பூச்சொரிதல்

802. மேவும் வெஞ்சினத் தரக்கர்கண்
முறைமுறை விசையால்
ஏவும் பல்படை யெத்தனை
கோடிக ளெனினும்

தூவுந் தேவரு மகளிரு
முனிவருஞ் சொரிந்த
பூவும் புண்களுந் தெரிந்தில
மாருதி புயத்தில்.

மேவும் வெம் சினத்து அரக்கர்கள் முறை முறை விசையால்
ஏவும் பல் படை எத்தனை கோடிகள் எனினும்
தூவும்; தேவரும் மகளிரும் முனிவரும் சொரிந்த
பூவும், புண்களும், தெரிந்தில மாருதி புயத்தில்.

முறை முறை – மாறிமாறி. எத்தனை கோடிகள் எனினும் - எவ்வளவோ கோடிகளாயிருந்துங்கூட; தூவும் - (அப்படைகள்) அருச்சிப்பனவாயிருந்தன; மாருதிபுயத்தில் பூவும் புண்களும் தெரிந்தில - அநுமன் தோள்களில் (தேவரும் மகளிரும் முனிவரும் சொரிந்த) மலர்களும் (போரில் வந்த கொடிய கோபத்தையுடைய அரக்கர்கள் எவ்வளவோ கோடிக்கணக்காக விசைத்து எறிந்த பலவகைப் படைகளால் உண்டாகிய) புண்களும் வேற்றுமை தெரியாதிருந்தன.

பார்ப்பவர்களுக்குப் புண்களின் வடுக்களும் பூக்களும் வேற்றுமை தெரிந்தில என்றும் அநுமனுக்குப் படைகளால் ஏற்பட்ட ஊறும் மலர்களாலாய ஊறும் வேற்றுமையில்லாது ஒன்றுபோல் இருந்தன என்றும் கொள்க. (52)

### அநுமனின் தளராத நிலை

**803.** பெயர்க்குஞ் சாரிகை கறங்கெனத்
திசைதொறும் பெயர்வின்
உயர்க்கும் விண்மிசை யோங்கலின்
மண்ணின்வந் துறலின்
அயர்த்து வீழ்ந்தன ரழிந்தன
ரரக்கரா யுள்ளார்
வெயர்த்தி லன்மிசை யுயிர்த்தில
னல்லற வீரன்.

பெயர்க்கும் சாரிகை கறங்கு எனத் திசைதொறும் பெயர்வின்,
உயர்க்கும் விண்மிசை ஓங்கலின், மண்ணின் வந்து உறலின்,
அயர்த்து வீழ்ந்தனர் அழிந்தனர் அரக்கராய் உள்ளார்;
வெயர்த்திலன் மிசை, உயிர்த்திலன் நல் அற வீரன்.

நல்லற வீரன் – நல்ல தருமத்தையுடைய வீரஞன அநுமன் ; பெயர்க்கும் சாரிகை கறங்கு எனத் திசை தொறும் பெயர்வின் – மாறி மாறிச் செல்லுகிற இடசாரியும் வலசாரியுமாகக் காற்ருடி போல் நான்குதிக்கிலும் செல்லுதலாலும் ; உயர்க்கும் விண்மிசை ஓங்கலின் - உயர்ந்த ஆகாயத்தின்மீது ஓங்கிச் செல்வதனுலும் ; மண்ணின் வந்து உறலின் - தரையில் வந்து பொருந்துவதனுலும் ; மிசை வெயர்த்திலன் – தன்னுடம்பில் சற்றேனும் வெயர்வு கொண்டிலன் ; உயிர்த்திலன் – ஒரு பெருமூச்சுக் கூட விட்டானில்லே ; (ஆனுல்) அரக்கராயுள்ளார் அயர்த்து வீழ்ந்தனர் அழிந்தனர் - இராக்கதர்கள் சோர்ந்து வீழ்ந்து அழிந்தார்கள். (53)

## கிங்கரர் அனைவரும் மடிதல்

**804.** எஞ்ச லில்கணக் கறிந்தில மிராவண னேவ
நஞ்ச முண்டவ ராமெ‌ன வநுமன்மே னடந்தார்
துஞ்சி னுரல்ல தியாவரு மறத்தொடுந் தொலைவுற்
றஞ்சி னுரில்லை யரக்கரில் வீரர்மற் றியாரே.

*எஞ்சல் இல் கணக்கு அறிந்திலம், இராவணன் ஏவ,*
*நஞ்சம் உண்டவர் ஆம் என அநுமன் மேல் நடந்தார்,*
*துஞ்சினுர் அல்லது யாவரும் மறத்தொடும் தொலைவுற்று*
*அஞ்சினுர் இல்லை ; அரக்கரில் வீரர் மற்று யாரே.*

இராவணன் ஏவ - இராவணன் கட்டளையிட்டு அனுப்ப ; நஞ்சம் உண்டவர் ஆம் என அநுமன் மேல் நடந்தார் - விடத்தை அருந்தியவர்கள் போலே அநுமனை எதிர்த்துச் சென்றவர்களின் ; எஞ்சல் இல் கணக்கு அறிந்திலம் – குறைதலில்லாத (திட்டவட்டமான) எண்ணிக்கை நமக்குத் தெரியாது ; (ஆனுல்) யாவரும் – அவர்களனைவரும் ; துஞ்சினுர் அல்லது – (பொருது) உயிரை விட்டார்களேயல்லாமல் ; மறத்தொடும் தொலைவுற்று அஞ்சினுர் இல்லை – வீரத்திற் குறைந்து பயந்து பின்வாங்கினவர்கள் கிடையாது ; அரக்கரில் வீரர் மற்று யாரே – அரக்கர்களைக் காட்டிலும் சிறந்த வீரர் வேறு யாவர்தாம் ?

இது கவிக்கூற்று (54)

## பொழிற்காவலர் இராவணனிடம் ஓடுதல் 805, 806

**805.** வந்த கிங்கர ரேயெனு மாத்திரை மடிந்தார்
நந்த வானத்து நாயக ரோடினர் நடுங்கிப்
பிந்து காலினர் கையினர் பெரும்பயம் பிடரின்
உந்த வாயிரம் பிணக்குவை மேல்விழுந் துளைவார்.

**வந்த கிங்கரர் ஏ எனும் மாத்திரை மடிந்தார் ;**
**நந்த வானத்து நாயகர் ஓடினர், நடுங்கிப்,**
**பிந்து காலினர், கையினர், பெரும்பயம் பிடரின்**
**உந்த, ஆயிரம் பிணக்குவை மேல் விழுந்து உளைவார்.**

எண்ணிறந்த ஆற்றல் மாக்களாய் அநுமன்மேல் ஏவப்பட்ட அரக்கர்கள் கிங்கரர் என்னப்படுவார் என்பது இப்பாடலால் குறிக்கப்படுகிறது.

கிங்கரர் - ஏவலாளர்கள் : இங்குப் பெயர்மாத்திரையாய் நின்றது என்க. ஏ எனும் மாத்திரை - இரண்டுமாத்திரைப் பொழுதில் ; நந்த வானத்து நாயகர் – அசோகவனத்துக் காவலர்களாகிய பருவத் தேவர் ; பிந்து காலினர் கையினர் - பின்வாங்குகின்ற கால் கைகளை யுடையராய் ; பிடரின் உந்த - பிடரியைப் பிடித்துத்தள்ள ; ஆயிரம் பிணக்குவை – ஆயிரக்கணக்கான பிணக்குவியலின்மேல் ; உளைவார் – வருந்துபவராய்.

வருந்துபவராய் விரைவினுற்றனர் என மேல் வரும் பாடலோடு இயைக்க. இராவணனிடத்துச் சென்று கிங்கரர் இறந்ததைக் கூறவேண்டியிருத்தலால் உண்டான அச்சம் இங்குப் பெரும்பயம் என்னப்பட்டது.
*(55)*

**806.** விரைவி னுற்றனர் விம்மலுற் றியாதொன்றும் விளம்பார்
கரத லத்தினுற் பட்டதுங் கட்டுரைக் கின்றார்
தரையி னிற்கிலர் திசைதொறு நோக்கினர் சலிப்பார்
அரசன் மற்றவ ரலக்கணே யுரைத்திட வறிந்தான்.

***விரைவின் உற்றனர், விம்மல் உற்று, யாதொன்றும் விளம்பார்,***
***கரதலத்தினால் பட்டதும் கட்டுரைக்கின்றார் :***
***தரையின் நிற்கிலர், திசைதொறும் நோக்கினர், சலிப்பார் ;***
***அரசன், மற்றவர் அலக்கணே உரைத்திட, அறிந்தான்.***

*விரைவின் உற்றனர் - (இராவணனெதிரில்) விரைவில் வந்தடைந்தவர்களாய் ; விம்மல் உற்று – ஏங்கிய வண்ணமாய் ; யாது ஒன்றும் விளம்பார் - (வாயினால்) யாதொன்றையும் சொல்லமாட்டாமல் ; பட்டதும் – கிங்கரர் பட்டதும் தாங்கள் பட்டதுமான எல்லாவற்றையும்; கரதலத்தினால் கட்டுரைக்கின்றார் – கைகளின் சைகைகளினாலே குறிப்பித்துக் காட்டி ; தரையின் நிற்கிலர் – நிலத்திலே கால் பாவி நிலைகொள்ளாதவர்களாய் ; திசைதொறும் நோக்கினர் – நான்குதிக்குகளையும் (அநுமன் அங்கும் வந்துவிடுவானோ என்ற அச்சத்தால்) பார்த்த வண்ணமாய் ; சலிப்பார்– நடுங்கிவருந்துபவர்களானார்கள் ; மற்று : அசை. அவர் அலக்கணே*

உரைத்திட - அவர்கள் (காவலாளிகள்) படுகின்ற வருத்தமே (நிகழ்ந்தவற்றைத்) தெரிவிக்க ; அரசன் அறிந்தான் - மன்னன் (இராவணன்) உணர்ந்துகொண்டான். (56)

### காவலாளிகளை இராவணன் வினவுதல்

**807.** இறந்து நீங்கின ரோவின்றெ
 ன்ணையை யிகழ்ந்து
துறந்து நீங்கின ரோவன்றி
 வெஞ்சமர் தொலைந்தார்
மறந்து நீங்கின ரோவென்கொல்
 வந்ததென் றுரைத்தான்
நிறஞ்செ ருக்குற வாய்தொறு
 நெருப்புமிழ் கின்றான்.

"இறந்து நீங்கினரோ? இன்று என் ஆணையை இகழ்ந்து,
துறந்து நீங்கினரோ? அன்றி, வெம் சமர் தொலைந்தார்,
மறந்து நீங்கினரோ? என்கொல்வந்தது?" என்று உரைத்தான்,
நிறம் செருக்குற, வாய்தொறும் நெருப்பு உமிழ்கின்றான்.

நிறம் செருக்கு உற - மார்பை அகந்தையால் நிமிர்த்தவண்ணம்; வாய்தொறும் நெருப்பு உமிழ்கின்றான் - பத்துவாய்களிலிருந்தும் தீயைக் கக்குபவனான இராவணன்; இறந்து நீங்கினரோ - இறந்துபோய்விட்டார்களோ? (அல்லது) இன்று என் ஆணையை இகழ்ந்து துறந்து நீங்கினரோ - இப்பொழுது என்கட்டளையை அலட்சியம்செய்து, செய்யாது விட்டார்களோ? அன்றி - அல்லது; வெஞ்சமர் தொலைந்தார் மறந்து நீங்கினரோ - கொடிய போரில் தோல்வியுற்று (மான வீரத்தையும்) மறந்தவர்களாய்ப் போய்விட்டார்களோ? என்கொல் வந்தது? என்று உரைத்தான் - (நீங்கள்) வந்த காரணம் என்ன? என்று கேட்டான். (57)

### கிங்கரர் பட்டமை கூறல்

**808.** சலந்தலைக் கொண்டன ராய தன்மையார்
★ அலந்திலர் செருக்களத் தஞ்சி னுரலர்
புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணார்
குலங்களி னவிந்தனர் குரங்கினு லென்றார்.

"சலம் தலைக் கொண்டனர் ஆய தன்மையார்,
அலந்திலர், செருக்களத்து அஞ்சினர் அலர்:
புலம் தெரி பொய்க் கரி புகலும் புன்கணர்
குலங்களின், அவிந்தனர் குரங்கினல்"! என்றார்.

சலம் தலைக்கொண்டனர் ஆய தன்மையார் – சினம் மிக்குக் கொண்டவர்களாகிய அந்தக் கிங்கரர்கள்; அலந்திலர் – வருந்தினர்களுமில்லை; செருக்களத்து அஞ்சினரலர் – போர்க்களத்தில் அஞ்சி ஓடவுமில்லை; புலம் தெரி பொய்க்கரி புகலும் புன்கணர் குலங்களின் – தம் நெஞ்சறியப் பொய்ச்சாட்சி சொன்ன அற்பர்களின் குடும்பங்கள் (அழிவது)போல; குரங்கினல் அவிந்தனர் என்றார் – (அக்) குரங்கினலேயே (யாவரும்) அழிந்தொழிந்தார்கள் என்று (பதில்) கூறினர்: பருவத்தேவர்கள் என்க. (58)

## இராவணன் நாணுதல்

809\. ஏவலி னெய்தின ரிருந்த வெண்டிசைத்
தேவரை நோக்கின னாணுஞ் சிந்தையான்
யாவதென் றறிந்திலிர் போலு மாலென்றான்
மூவகை யுலகையும விழுங்க மூள்கின்றான்.

ஏவலின் எய்தினர் இருந்த எண்திசைத்
தேவரை நோக்கினன், நாணும் சிந்தையான்;
"யாவது? என்று அறிந்திலிர் போலும் ஆல்!" என்றான்,
மூவகை உலகையும் விழுங்க மூள்கின்றான்.

மூவகை உலகையும் விழுங்க மூள்கின்றான் – மூன்று வகைப்பட்ட உலகங்களையும் விழுங்கத் தொடங்குபவன் போன்ற (சினங்கொண்ட) இராவணன்; ஏவலின் எய்தினர் இருந்த எண்திசைத் தேவரை நோக்கினன் – தன் கட்டளையினல் வந்தவர்களாய் அருகே நின்றுகொண்டிருந்த எட்டுத் திக்குப் பாலகர்களையும் பார்த்து; நாணும் சிந்தையான் –(மிகவும்) வெட்கங்கொண்ட மனமுடையவனகி; யாவது என்று அறிந்திலிர் போலும் என்றான் – (பருவத்தேவர்களைப் பார்த்து) என்ன நடந்தது என்றே தெரிந்துகொள்ளவில்லைபோலும் என்று (அதட்டிக்) கூறினன். (59)

### இராவணன் மீட்டும் வினவுதல்

**810.** மீட்டவ ருரைத்திலர் பயத்தின் விம்முவார்
தோட்டல ரினமலர்த் தொங்கல் மோலியான்
வீட்டிய தரக்கரை யென்னும் வெவ்வுரை
கேட்டதோ கண்டதோ கிளத்து வீரென்றான்.

*மீட்டு அவர் உரைத்திலர், பயத்தின் விம்முவார்;*
*தோட்டு அலர் இன மலர்த் தொங்கல் மோலியான்,*
*"வீட்டியது அரக்கரை என்னும் வெவ்வுரை*
*கேட்டதோ? கண்டதோ? கிளத்துவீர்!" என்றான்.*

*அவர் பயத்தின் விம்முவார் மீட்டு உரைத்திலர்* - அந்தச் சோலையின் காவலர் அச்சத்தால் நடுங்குபவர்களாய் மறுபடியும் (மறுமொழி) கொடாதிருக்கவும்; (அவர்களை நோக்கித்) *தோட்டு அலர் இனமலர்த் தொங்கல் மோலியான்* - இதழ்களோடு விரிகின்ற பலவகை மலரால் தொடுத்த மாலையணிந்த கிரீடங்களையுடைய இராவணன்; *அரக்கரை விட்டியது என்னும் வெவ்வுரை* - (அந்தக் குரங்கு) அரக்க வீரரைக் கொன்று விட்டது என்ற கொடிய வார்த்தை; *கேட்டதோ கண்டதோ கிளத்துவீர்* - (பிறர் சொல்லக்) கேட்டு வந்திர்களோ? (அல்லது நேரில்) கண்டு வந்திர்களோ? சொல்லுங்கள்; *என்றான்* - என்று (திரும்பவும்) கேட்டான். (60)

### அரக்கர் அழிந்ததை அறிவித்தல்

**811.** கண்டன மொருபுடை நின்று கண்களால்
தெண்டிரைக் கடலென வளைந்த சேனையை
மண்டலந் திரிந்தொரு மரத்தி னுலுயி
ருண்டதக் குரங்கின மொழிவதன் றென்றார்.

*"கண்டனம் ஒரு புடை நின்று கண்களால்,*
*தெண் திரைக் கடல் என வளைந்த சேனையை,*
*மண்டலம் திரிந்து, ஒரு மரத்தினால் உயிர்*
*உண்டது; அக் குரங்கு இனம் ஒழிவது அன்று!" என்றார்.*

*ஒரு புடை நின்று* - ஒரு பக்கமாக (ஒதுங்கி) யிருந்து; *கண்களால் கண்டனம்*-; *அக்குரங்கு*-(அசோகவனத்தை யழித்த) அந்தக்குரங்கு; *தெண் திரைக் கடல் என வளைந்த சேனையை* - தெளிவான அலைகளையுடைய

கடல்போல(த் தன்னை)ச் சூழ்ந்துகொண்ட (அரக்கர்) படையை ; மண்டலம் திரிந்து - வட்டமாகச் சுழன்று வந்து ; ஒரு மரத்தினால் - (தன் கையிற் கொண்ட) ஒரு மரத்தினால் ; உயிர் உண்டது - (அடித்துக்) கொன்றுவிட்டது ; இனம் ஒழிவது அன்று - (அது அவ்விடத்தை விட்டு) இன்னும் நீங்கிப்போகாதிருக்கிறது ; என்றார் – என்று (சோலையைக் காக்கும் தேவர்கள்) கூறினார்கள். *(61)*

இதன்பின் 17 என்னும் குறியீடுள்ள சுவடியிற் கீழ்க்கண்ட பாடல் காணப்படுகிறது:—

811. (a) என்றலு மரக்கர் வேந்த னெரிகதி ரென்ன நோக்கிக்
கன்றிய பவழச் செவ்வா யெயிறுபுக் கழுந்தக் கவ்வி
ஒன்றுரை யாடா தில்லா னுடலமும் விழியுஞ் செப்ப
நின்றவா ளரக்கர் தம்மை நெடிதுற நோக்குங் காலை.

**கிங்கரர்வதைப் படலம் முற்றிற்று.**

# 8. சம்புமாலி வதைப் படலம்

இராவணனால் ஏவப்பட்ட சம்புமாலி, தன்னை அரக்கர் கோமான் மதித்து ஏவியதற்கு மகிழ்ந்தவனாய் நாற்பெரும் படைகளுடன் போர்க்கு ஆயத்தமாயினன். அப்படைகளின் வருணனைகளிற் பெரும்பாலவும் அதி மானிடத் தன்மைவாய்ந்தவையே. அவ்வாறு ஆயத்தமான சம்புமாலி நேரே போர்க்குப் புறப்படலாயினன். தோரண வாயிலின் மேனின்ற அனுமனும் அதுகண்டு தோள்கொட்டி ஆரவாரித்தான். ஆனால் கிங்கரச் சேனை முழுதும் அழிபட்டதனால் வழியெல்லாம் பிணக்காடும் இரத்தவெள்ளமுமாய் இருந்தன. அதனால், அவன் சேனை அனும னிருந்த இடத்தை அணுக முடியவில்லை. ஆயினும் ஒருவகையாகச் சம்புமாலி தன் படைகளை அணிவகுத்துக்கொண்டு அவனை நெருங் கினன். அனுமனும் தனி நின்றவனாயினும் அவ்வரக்கனைப் போலத் தன்னையே அணிவகுத்துக்கொண்டு தோன்றினன் என்று கம்பர் பெரு மான் கூறும் அழகு குறிப்பிடத்தக்கது (21). இவ்வாறு அரக்கர் படைக்கும் அனுமனுக்கும் பெரும் போர் மூண்டது. சம்புமாலியின் தேர் யானை பரி காலாள்களாகிய நாற்பெரும் படைகளும் முழுதும் அழி வுற்றன. தனிப்பட்ட நிலையில் சம்புமாலி போர்க்கு விரைந்தான். 'யாவு மிழந்து தனிநின்ற உன்னுடன் போர் புரிதல் முறையன்று; போர்க் களத்தை விட்டு ஓடிப்பிழை' என்று அவனை நோக்கி இரங்கிக் கூறினன் அனுமன்.

'பேராண்மை யென்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு'

என்பது முதுமொழியன்றோ? இரங்கிக் கூறிய அவ்வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல் சீற்றமிக்கவனாய்ச் சம்புமாலி, அம்புமாரிகளைப் பொழிய அவற்றையெல்லாம் விலக்கி முடிவில் அவ்வரக்கன் வந்த தேரின் மேற் பாய்ந்தான் அனுமன். பாய்ந்து அவன் கைவில்லைப் பறித்து அதனை அவன் கழுத்திலிட்டு வலிய இழுத்தான். அதனால் அரக்கன் தலை மண் ணில் அறுபட்டு வீழ்ந்தது. இச்செய்தியையும் இராவணனிடம் ஓடிச் சென்று அறிவித்தனர் பருவத்தேவர்கள். அவ்வரக்கர்கோமான் சீறித் தானே அனுமனிடம் செல்லவேண்டி முயல, அதனை அறிந்த பஞ்ச சேனாபதிகள் பின்வருமாறு கூறிப் போர்க்குத் தாமே செல்ல முற்பட லாயினர் என்க.

இனி, கிங்கரப் படையின் அழிவு கேட்ட இராவணன் கடுஞ்சினங் கொண்டு பிருகத்தன் என்ற அரக்கர்தலைவனுடைய மகனான சம்புமாலி

என்பானைப் பெரும் படைகளுடன் அனுப்பினன். அவனுக்கும் அனுமனுக்கும் பெரும்போர் மூண்டது. முடிவில் இருப்புத்தடி ஒன்றைச் சுழற்றிச் சம்புமாலியின் மார்பு முதலிய இடங்களில் ஓங்கி அறைந்தான் அனுமன். அதனால் அவ்வரக்கன் தலை நொறுங்கி மாண்டான் : என்று வான்மீகம் 44-ஆம் சருக்க முழுதும் கூறுகின்றது. கம்பரோ, சம்புமாலியுடன் புரிந்த பெரும் போரின் முடிவில், அனுமன் அவனது தேர்மேற் பாய்ந்து, அவன் கைவில்லினைப் பறித்துத் தலையில் மாட்டி இழுக்க, அதனால் அரக்கன் தலை அறுபட்டுத் தரையில் உருண்டு மாய்ந்தான் என்று பாடுகின்றார். சம்புமாலி இறந்தபின் அனுமன் முன்கூறிய தோரண வாயிற்குச் சென்று அங்கிருந்தாரென்றும், அவ்வரக்கன் மாண்டதைக் கேட்டு இராவணன் தன் மந்திரி புத்திரர்களை அனுப்ப, அவர்களும் போரில் மடிந்து ஒழிந்தனர் என்றும் வான்மீகி முனிவர் கூறுவர். இம் மந்திரி புதல்வரின் போரும் பின்பு பஞ்சசேனாபதிகள் போரும் தனித்தனி சர்க்கமாக அவரால் கூறப்படுகின்றன.

# 8. சம்புமாலி வதைப் படலம்

### அனுமனைப் பிணித்துக் கொணருமாறு இராவணன் சம்புமாலியை ஏவுதல்

**812.** கூம்பின கைய னின்ற
★ குன்றெனக் குவவுத் திண்டோட்
பாம்பிவர் தறுகட் சம்பு
மாலியென் பவனைப் பாரா
வாம்பரித் தானை யோடு
வளைத்ததன் மறனை மாற்றித்
தாம்பினிற் பற்றித் தந்தென்
மனச்சினம் தணித்தி யென்றான்.

*கூம்பின கையன் நின்ற குன்று எனக் குவவுத் திண் தோள்*
*பாம்பு இவர் தறுகண் சம்புமாலி என்பவனைப் பாரா,*
*'வாம் பரித் தானையோடு வளைத்து அதன் மறனை மாற்றித்*
*தாம்பினில் பற்றித் தந்து என் மனச் சினம் தணித்தி' என்றான்.*

(இராவணன்) கூம்பின கையன் நின்ற சம்புமாலி என்பவனைப் பாரா, 'அதன் (குரங்கின்) மறனை மாற்றி, பிணித்துத்தந்து சினம் தணித்தி' என்றான் என்க.

கூம்பின கையன் – கூப்பிய கைகளையுடையவனாய். குவவு - திரண்ட. திண் தோள் தறுகண் சம்புமாலி என இயையும். பாம்பு இவர் - சர்ப்பம் போல மேலெழுந்து சிறுகின்ற. பாரா - பார்த்து. வாம் பரி - தாவிச் செல்லும் குதிரை ; வாம் - வாவும். அதன் மறனை – அக் குரங்கின் வலிமையை. தாம்பு - கயிறு. (1)

### சம்புமாலி மகிழ்ந்து போருக்குப் புறப்படல்

**813.** ஆயவன் வணங்கி யைய
வளப்பரு மரக்கர் முன்னர்
நீயிது முடித்தி யென்று
நேர்ந்தனை நினைவி னெண்ணி

ஏயினே யென்னப் பெற்ரு
லென்னின்யா ருயர்ந்தா ரென்னுப்
போயின னிலங்கை வேந்தன்
போர்ச்சினம் போவ தொப்பான்.

ஆயவன் வணங்கி, " ஐய !
அளப்பரும் அரக்கர் முன்னர்,
'நீ இது முடித்தி' என்று நேர்ந்தனே
நினேவின் எண்ணி
ஏயினே ! என்னப் பெற்ருல்,
என்னின் யார் உயர்ந்தார் ?" என்னுப்
போயினன் ; இலங்கை வேந்தன்
போர்ச்சினம் போவது ஒப்பான்.

ஆயவன் வணங்கி, "நினேவின் எண்ணி, 'நீ இது முடித்தி' என்று நேர்ந்தனே ஏவினே, என்னின் யார் உயர்ந்தார்" என்னுப் போயினன்: என்க.

ஆயவன் - அத்தகையவன் (சம்புமாலி). அளப்பரும் அரக்கர் - அளத்தற்கரிய (வீரத்தையுடைய) அரக்கர். நேர்ந்தனே ஏயினே – முடிவு செய்து ஏவினே. போர்ச்சினம் – போரிடுதற்கு உரிய செற்றம் ; (அச்செற்றமே) போவது ஒப்பான் – உருவெடுத்துப் போவது போன்றவன். ஒப்பான் வணங்கிப் போயினன் என முடிக்க. (2)

சம்புமாலியுடன் சென்ற சேனேகள்

**814.** தன்னுடைத் தானே யோடுந்
தயமுகன் றருகென் றேய
மன்னுடைச் சேனே யோடுந்
தாதைவந் தீந்த வாளின்
மின்னுடைப் பரவை யோடும்
வேறுளோர் சிறப்பின் விட்ட
பின்னுடை யனிகத் தோடும்
பெயர்ந்தனன் பெரும்போர் பெற்ருன்.

தன்னுடைத் தானேயோடும், தயமுகன் 'தருக' என்று ஏய
மன் உடைச் சேனேயோடும், தாதை வந்து ஈந்த வாளின்
மின் உடைப் பரவையோடும், வேறு உளோர் சிறப்பின் விட்ட
பின் உடை அனிகத்தோடும், பெயர்ந்தனன், பெரும்போர்பெற்ருன்.

பெரும்போர் – இதுவரை கிடையாத பெரிய போரை; பெற்ருன் – (தன்) பேருசப் பெற்ற சம்புமாலி. அவன், தன் தானே, தயமுகன் ஏவிய சேனை, தாதை தந்த படைக்கடல், மற்றுளோர் விட்ட அனிகம் இவற்ருெடு போர்க்களம் போனுன் என்றவாறு.

தயமுகன் தருக என்று ஏய – இராவணன் 'அழைத்து வருக' என்று கட்டளையிட்ட. தருதல் - அழைத்துவரற் பொருளது ; 'மற்றவட்டருக' (சிலப்) என்புழிப்போல. மன்னுடைச் சேனை – அரசன் படை; இதனைச் 'சேனுமுகம்' என்பர். தாதை – பிரகத்தன். வந்து ஈந்த – நேரில் வந்து கொடுத்த. வேறுளோர் – சுற்றத்தார் நண்பர் ஆதியர். அனிகம் – சேனை. (3)

## யானையும் தேரும்

**815.** உருமொத்த முழக்கிற் செங்கண்
வெள்ளெயிற் ருேடை நெற்றிப்
பருமித்த கிரியிற் ருேன்றும்
வேழமும் பதுமத் தண்ணல்
நிருமித்த வெழிலி முற்றிற்
றென்னலா நிலைய நேமிச்
சொரிமுத்த மாலை சூழுந்
துகிற்கொடித் தடந்தேர் சுற்ற.

உரும் ஒத்த முழக்கின் செங்கண் வெள் எயிற்று ஓடை நெற்றிப்
பருமித்த கிரியில் தோன்றும் வேழமும், பதுமத்து அண்ணல்
நிருமித்த எழிலி முற்றிற்று என்னல் ஆம் நிலைய நேமிச்
சொரி முத்த மாலை சூழும் துகில் கொடித் தடம் தேர் சுற்ற.

வேழமும், தடந்தேரும் சுற்ற என இயையும். முழக்கினையும் செங்கண்ணையும் வெள்ளெயிற்றினையும் நெற்றியினையும் உடைய வேழம் என்க. உருமு – இடி. செங்கண் என்பதிற் செம்மை கோபக்குறி தோன்ற நின்றது. ஓடை-முகத்தில் அணியும் பட்டம்.

நிலைய தேர், நேமித்தேர், மாலை சூழும் தேர், துகிற்கொடித் தேர், தடந்தேர் எனத் தனித்தனி கூட்டுக. பிரமன் படைத்த மேகங்கள் முழுதும் இங்குள என்னும்படியான நிலைமையுடைய தடந்தேர்கள் : என்பது, மூன்ரும் அடிக்குப் பொருள். 'தடந்தேரும்' என உம்மை விரிக்க. இதனல் யானைப்படையும் தேர்ப்படையும் சிறப்பிக்கப்பட்டபடி. (4)

## குதிரையும் காலாளும்

**816.** காற்றினை மருங்கிற் கட்டிக்
கால்வகுத் துயிருங் கூட்டிக்
கூற்றினை யேற்றி யன்ன
குலப்பரி குழுவக் குன்றின்
தூற்றினி னெழுப்பி யாண்டுத்
தொகுத்தெனச் சுழல்பைங் கண்ண
வேற்றினப் புலியே றென்ன
வியந்தெழும் பதாதி யீட்டம்.

*காற்றினை மருங்கில் கட்டிக்*
*கால்வகுத்து உயிரும் கூட்டிக்*
*கூற்றினை ஏற்றி அன்ன*
*குலப்பரி குழுவக், குன்றின்*
*தூற்றினின் எழுப்பி ஆண்டுத்*
*தொகுத்து எனச் சுழல் பைங்கண்ண*
*வேற்று இனப் புலியேறு என்ன,*
*வியந்து எழும் பதாதி ஈட்டம்.*

குலப்பரியிட்டமும் பதாதியிட்டமும் குழுவ என இயைக்க. காற்றினையே பக்கங்களிற் கட்டி, அதற்கு நான்கு கால்களையும் அமைத்து, உயிரையும் சேர்த்து, யமனை மேலே ஏற்றிவைத்தாற் போன்ற உயர்ந்த சாதிக் குதிரை (ஈட்டமும்) என முன் இரண்டடிகட்கும்.

மலைத்தூறுகளினின்றும் எழுப்பிக்கொண்டுவந்து போர்க்களத்தில் ஒருங்கு தொகுத்தனவும் சுழலும் பசிய கண்களையுடையனவும் வேறு வேறு இனத்தவுமான ஆண்புலிகள் போலப் பதாதியீட்டம் குழுமித் தோன்றவும் எனப் பின்னிரண்டடிகட்கும் பொருள் கொள்க.

இனி, குலப்பரிகுழுவ, பதாதியீட்டம் வியந்து எழும் என இயைத்து, குலப்பரிகள் குழுமிச் செல்லப் பதாதியீட்டம் வியந்து எழும் : என எழுதலை முற்றுக்கியுரைப்பினும் அமையும். பதாதி – காலாட் படை. வியந்து – செருக்குற்று ; ‘வியந்தனை பதவி கொன்றாய்’ (கிட்கிந். 81) என்றது காண்க. (5)

### பலவகைப் படைக்கலமும் விளங்குதல்

**817.** தோமர முலக்கை கூர்வாள்
சுடர்மழுக் குலிசந் தோட்டி
தாமரந் தின்ற கூர்வே
றழலொளி வட்டஞ் சாபம்
காமர்தண் டெழுக்கள் காந்துங்
கப்பணங் கால பாசம்
மாமர வலயம் வெங்கோல்
முதலிய வயங்க மாதோ.

*தோமரம், உலக்கை, கூர்வாள், சுடர்மழு, குலிசம், தோட்டி*
*தாம் அரம் தின்ற கூர்வேல், தழல் ஒளிவட்டம், சாபம்,*
*காமர் தண்டு, எழுக்கள், காந்தும் கப்பணம், காலபாசம்,*
*மாமர வலயம், வெம் கோல் முதலிய வயங்க மாதோ.*

தோமரம் வெங்கோல் முதலியன (அப்படைகளின் இடையில்) விளங்கவும் என்க.

தோமரம் - பெரிய தண்டாயுதம். 'தோமர வலத்தர்' என்பர் (பதிற்றுப்பத்து: 54-14). குலிசம்-வச்சிராயுதம். அரம் தின்ற - அரத்தால் அரா வப்பட்ட. தழல் ஒளி வட்டம் - ஒளி விடும் சக்கராயுதம் (பிங்). சாபம் - வில். காமர் எழுத் தண்டு - அழகிய இருப்புத்தண்டு. கப்பணம் என்பது ஆனெருஞ்சி முட்போல இரும்பாற் செய்த கருவி என்பர் நச்சினார்க்கினியர் (சீவக. 285). காலபாசம் - யமபாசம் போன்ற கயிற்றுருவமான படை. மாமரவலயம் - மரத்தாலான வளையங்கள்; வளைதடி என்பர் இக்காலத்தார். வெம் கோல் - கொடிய அம்பு. (6)

### பதாகைகள் செறிதல்

**818.** எத்திய வயில்வேல் குந்த மெழுமுத லிணைய வேந்திக்
குத்திய திளைப்ப மீதிற் குழுவின மழைமாக் கொண்டல்
பொத்துகு பொருவி னன்னீர் சொரிவன போவ போலச்
சித்திரப் பதாகை யீட்டந் திசைதொறுஞ் செறிவ செல்ல.

*எத்திய அயில், வேல், குந்தம், எழுமுதல் இணைய ஏந்திக்*
*குத்திய திளைப்ப, மீதில் குழுவின மழை மாக் கொண்டல்*
*பொத்து உகு பொருவு இல் நல் நீர் சொரிவன போவ போலச்,*
*சித்திரப் பதாகை ஈட்டம் திசை தொறும் செறிவ செல்ல.*

எத்திய – எறியப்பட்ட. அயில் – கூர்மை. வேல் குந்தம் முதலியன குத்துபவை போலச் செறிய; நெருங்கிச் செல்வதால் குத்துவ போன்றன என்றபடி. சித்திரப்பதாகை ஈட்டம்–அழகான கொடிக்கூட்டம். இக்கொடிக் கூட்டம், ஆகாயத்திற் கூடிப் பெய்யு நிலையிலுள்ள மேகங்கள், ஆயுதங்கள் பொத்தின வாயிலிருந்து வெளியேறும் நன்னீரைச் சொரிந்து கொண்டு போவன போலத் திசையெங்கும் செறிந்து செல்லவும் என்பது பின்னிரண்டடிகளின் பொருள். (7)

## பலவகை ஒலியெழல்

**819.** பல்லியந் துவைப்ப நன்மாப்
பணிலங்கண் முரலப் பொற்றேர்ச்
சில்லிக ளிடிப்ப வாசி
சிரித்திடச் செறிபொற் ருரும்
வில்லுநின் றிசைப்ப யானை
முழக்கம்விட் டார்ப்ப விண்டோய்
ஒல்லொலி வானிற் றேவ
ருரைதெரி வொழிக்கு மன்னே.

பல் இயம் துவைப்ப, நல் மாப்
பணிலங்கள் முரலப், பொன் தேர்ச்
சில்லிகள் இடிப்ப, வாசி சிரித்திடச்
செறி பொன் தாரும்,
வில்லும் நின்று இசைப்ப, யானை
முழக்கம் விட்டு ஆர்ப்ப, விண் தோய்
ஒல் ஒலி வானில் தேவர்
உரை தெரிவு ஒழிக்கும் மன்னே.

துவைப்ப, முரல, இடிப்ப, சிரித்திட, இசைப்ப, ஆர்ப்ப வானில் தேவர் உரை தெரிவொழிக்கும் என்க.

பல் இயம் – பலவகை வாச்சியங்கள். பணிலம் – பெருஞ் சங்குகள். சில்லிகள் - தேர்ச் சக்கரங்கள். வாசி – குதிரைகள். தார் – கிண்கிணி மாலைகள் : இவை தேர் யானை குதிரைகட்கு அணியாவன. முழக்கம் விட்டு ஆர்ப்ப – முழக்கொலியை வெளிப்படுத்திப் பிளிறவும்; விட்டு – வாய்விட்டு என்றபடி. விண் தோய் ஒல்லொலி – இவ்வாருக ஆகாயத்துச் சென்ற ஒல்லென்னும் ஒலிகள். இவ்வாரவாரங்கள் வானவரான தேவர்கள் தம்முட் பேசும் வார்த்தைகள் தெரியவொட்டாமல் செய்தன எ–று. (8)

### தூளி பரவுதல்

820. மின்னகு கிரிகள் யாவு
மேருவின் விளங்கித் தோன்றத்
தொன்னகர் பிறவு மெல்லாம்
பொலிந்தன துறக்க மென்ன
அன்னவன் சேனை செல்ல
வார்கலி யிலங்கை யாய
பொன்னகர் தகர்ந்து பொங்கி
யார்த்தெழு தூளி போர்ப்ப.

*மின் நகு கிரிகள் யாவும் மேருவின் விளங்கித் தோன்ற*
*தொல் நகர் பிறவும் எல்லாம் பொலிந்தன துறக்கம் என்ன ;*
*அன்னவன் சேனை செல்ல ஆர்கலி இலங்கை ஆய*
*பொன் நகர் தகர்ந்து, பொங்கி, ஆர்த்து, எழு, தூளி போர்ப்ப.*

சேனை செல்ல, இலங்கை யாய் பொன்னகர் தகர்ந்து தூளிபோர்ப்ப, கிரிகள் யாவும் மேருவின் தோன்ற, தொல் நகர் துறக்க மென்னப் பொலிந்தன என இயையும்.

சம்புமாலியின் படைகள் செல்லுதலால் பொன்மயமான இலங்கை தகர்ந்து பொற்றூளிகள் எங்கும் சென்று பரந்து போர்த்தமையின் ஏனை மலைகள் எல்லாம் மேருவாயின. அப்புழுதி படியப் பெற்ற நகரங்கள் சுவர்க்கலோகம் போலப் பொலிந்து விளங்கின எ-று.

மின் நகு - ஒளி விளங்குகின்ற. ஆர்கலி - கடல் சூழ்ந்த. இலங்கை மேருவின் சிகரமானதால் பொன்மயமான தென்பர். அப் பொன்னகரம் சேனையின் செலவால் தகர்தலும், அவ்வாறு தகர்ந்தமையால் ஆர்த்தலும், தூளி எழுதலும் கூறப்பட்டன.

'உருமொத்த' என்ற நான்காம் பாடல் முதல் இப்பாட்டு வரை வரும் வினையெச்சங்கள் 'பிறவும் எல்லாம் பொலிந்தன' என்ற முற்றோடு முடிவதனுல் ஒரு தொடராம் என்க. (9)

### சம்புமாலியொடு சென்ற சேனையின் அளவு

821. ஆயிர மைந்தொ டைந்தா மாழியந் தடந்தே ரத்தேர்க்
கேயின விரட்டி யானை யானையி னிரட்டி பாய்மா
போயின பதாதி சொன்ன புரவியி னிரட்டி போலாம்
தீயவன் றடந்தேர் சுற்றித் தெற்றெனச் சென்ற சேனை.

ஆயிரம் ஐந்தொடு ஐந்து ஆம் ஆழி அம் தடம் தேர், அத்தேர்க்கு
ஏயின இரட்டி யானை, யானையின் இரட்டி பாய்மா,
போயின பதாதி சொன்ன புரவியின் இரட்டி போல் ஆம்,
தியவன் தடம் தேர் சுற்றித் தெற்று எனச் சென்ற சேனை.

நியவன் தடம் தேர் சுற்றிச் சென்ற சேனை – சம்புமாலியின் பெரிய தேரைச் சூழ்ந்து சென்ற சேனை. ஐந்தொடு ஐந்து ஆயிரம் – பதினாயிரம். யானை அத் தேரளவுக்கு இரட்டி (இருபதினாயிரம்), குதிரைகள் யானையின் இரட்டி (நாற்பதினாயிரம்), பதாதி குதிரைகளின் இரட்டி (எண்பதினாயிரம்) ஆகும். சேனை – படையின் அளவு. தெற்றென – விரைவாக; 'தெற்றெனச் செலவு' (பொரு ந. 174) என்ப. போல், அசை. இதனால் தேர் சிற்றளவினது, பதாதி பேரளவினது என்பது பெறப்படும். இளங்கோவடிகளும் தேரளவினைச் சுருக்கிக் கூறுவர் (சிலப். 26, 132 – 134). (10)

### தேர் வீரர்

**822.** வின்மறைக் கிழவர் நாஞ
விஞ்சையர் வரத்தின் மிக்கார்
வன்மறக் கண்ண ராற்றல்
வரம்பிலா வயிரத் தோளார்
தொன்மறக் குலத்தர் தூணி
தூக்கிய புறத்தர் மார்பின்
கன்மறைத் தொளிருஞ் செம்பொற்
கவசத்தர் கடுந்தே ராட்கள்.

வில் மறைக் கிழவர், நாஞ விஞ்சையர், வரத்தின் மிக்கார்,
வல் மறக் கண்ணர், ஆற்றல் வரம்பு இலா வயிரத் தோளார்,
தொல் மறக் குலத்தர், தூணி தூக்கிய புறத்தர், மார்பின்
கல் மறைத்து ஒளிரும் செம்பொன் கவசத்தர், கடும் தேர் ஆட்கள்.

வில் மறைக் கிழவர் – தனுர்வேதத்துக்கு உரியவர்கள். நாஞ விஞ்சையர் – பலவகை மாய வித்தைகள் வல்லவர். மறக்கண் – வன்கண்மை. வரம்பு இலா ஆற்றல் என மாறுக. மறக்குலத்தர் – வீர மரபினர். மார்பின் கல் – இன் அல்வழிச்சாரியை; மார்பாகிய குன்று என்க. அதனை மறைத்து விளங்கும் பொற்கவசமுடையர் எ–று. (11)

### யானைவீரர்

**823.** பொருதிசை யானை யூரும்
புனிதனைப் பொருவும் பொற்பர்
சுரிபடைத் தொழிலு மற்றை
யங்குசத் தொழிலுந் தொக்கார்
நிருதியிற் பிறந்த வீரர்
நெருப்பிடைப் பரப்புங் கண்ணர்
பரிதியிற் பொலியு மெய்யர்
படுமதக் களிற்றின் பாகர்.

*பொரு திசை யானை ஊரும் புனிதனைப் பொருவும் பொற்பர்,*
*சுரி படைத் தொழிலும் மற்றை அங்குசத் தொழிலும் தொக்கார்*
*நிருதியில் பிறந்த வீரர், நெருப்பிடைப் பரப்பும் கண்ணர்,*
*பரிதியில் பொலியும் மெய்யர், படு மதக் களிற்றின் பாகர்.*

திசை யானை – கிழக்குத்திசைக்குரிய ஐராவதம். பூர்வ திசையாதலின், திசை எனப் பொதுச்சொல்லாற் கிழக்கு சிறப்பிக்கப்பட்டது. புனிதன் – இந்திரன்; நூறு மகம் புரிந்தவனாதலால் புனிதன் எனப் பட்டான். சுரிதல் – சுழலுதல். அங்குசத் தொழில் – அங்குசத்தைக் கையிற் கொண்டு யானை செலுத்தும் வித்தை. நிருதி – தென்மேற்குத் திசை. பாகர் – செலுத்தும் வீரர். *(12)*

### குதிரைவீரர்

**824,** ஏர்கெழு திசையுஞ் சாரி
பதினெட்டு மியல்பி னெண்ணிப்
போர்கெழு படையுங் கற்ற
வித்தகப் புலவர் போரில்
தேர்கெழு மறவர் யானைச்
சேவகர் சிரத்திற் செல்லும்
தார்கெழு புரவி யென்னுந்
தம்மனம் தாவப் போனார்.

***ஏர் கெழு திசையும், சாரி பதினெட்டும், இயல்பின் எண்ணிப்***
***போர் கெழு படையும் கற்ற வித்தகப் புலவர்; போரில்***
***தேர் கெழு மறவர், யானைச் சேவகர், சிரத்தில் செல்லும்***
***தார் கெழு புரவி என்னும் தம் மனம் தாவப் போனார்.***

திசை – செல்ல வேண்டிய திசையிடம் ; சாரி – வட்டமாக ஓடுகை ; இதன் வகை பதினெட்டு என்பர்.'கதி ஐந்தும் சாரி பதினெட்டும்' என்பது பரிமேலழகர் உரை (திருக்குறள் 814). “ ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியும் கந்து மறமும் கறங்குளோமா ” என்பது புறப்பொருள்வெண்பா மாலை (வென்றிப் பெருந்திணை. 13). வித்தகம் – சதுரப்பாடு. போர் நேருமிடத்து, தேர்வீரர் யானைவீரர்களின் சிரங்களையும் விரைந்து தாவிச் செல்வன ஆதலின் தேர் யானை வீரர்களின் ‘ சிரத்திற் செல்லும்' என்றார். தார்கெழு – குதிரைப் பிடரின் மயிர் சிறந்த ; போரில் ஊக்கமுள்ள என்றும் ஆம். தங்கள் மனோவேகம்போல விரைந்து செல்லவல்லன என்பார், ‘ புரவியென்னும் தம்மனம் தாவப் போனார்' என்றார். (13)

## சம்புமாலி நால்வகைத்தானையோடும் போர்க்குச் செல்லுதல்

**825.** அந்நெடுந் தானை சுற்ற
வமரரை யச்சஞ் சுற்றப்
பொன்னெடுந் தேரிற் போனான்
பொருப்பிடை நெருப்பிற் பொங்கித்
தன்னெடுங் கண்கள் காந்தத்
தாழ்பெருங் கவச மார்பின்
மின்னிட வெயிலும் வீச
வில்லிடு மெயிற்று வீரன்.

அம் நெடும் தானை சுற்ற,
அமரரை அச்சம் சுற்ற,
பொன் நெடும் தேரில் போனான்;
பொருப்பு இடை நெருப்பில் பொங்கி,
தன் நெடும் கண்கள் காந்த,
தாழ்பெரும் கவசம் மார்பில்
மின் இட, வெயிலும் வீச,
வில் இடும் எயிற்று வீரன்.

வீரன் தானை சுற்ற, தேரில் போனான் என இயையும். பொருப்பிடை நெருப்பிற் பொங்கிக் கண்கள் காந்த – மலையினிடையில் பொங்கி எழும் தீயைப் போலக் கண்கள் கனலும்படி; வீரன் தானை சுற்ற இடையில் சென்றதற்கு மலைகளினிடையே பொங்கி எழும் நெருப்பை உவமையாகக் கூறினர் எனினும் பொருந்தும்.

வில்லிட – ஒளி வீச. இது, சம்புமாலி சேனை நடுவே சென்றவாறு கூறியது. (14)

**அரக்கர் வரவு நோக்கி நின்ற அனுமன் தோற்றம் 826, 827**

**826.** நந்தன வனத்து ணின்ற நாயகன் றூதன் றானும்
வந்தில ரரக்க ரென்னு மனத்தினன் வழியை நோக்கிச்
சந்திரன் முதல வான மீனெலாம் தழுவ நின்ற
இந்திர தனுவிற் றோன்றுந் தோரண மிவர்ந்து நின்றான்.

*நந்தன வனத்துள் நின்ற,*
*நாயகன் தூதன் தானும்,*
*"வந்திலர் அரக்கர்," என்னும்*
*மனத்தினன், வழியை நோக்கி,*
*சந்திரன் முதல வான*
*மீன் எலாம் தழுவ நின்ற,*
*இந்திர தனுவின் தோன்றும்*
*தோரணம் இவர்ந்து நின்றான்.*

*நாயகன் தூதன் மனத்தினன் வழியை நோக்கி, தோரணம் இவர்ந்து நின்றான் என்க.*

*நந்தன வனம் – அசோக வனம். வானமீன் எல்லாம் தழுவ நின்ற தோரணம், இந்திரதனுவின் தோன்றும் தோரணம், எனத் தனித்தனி இயைக்க. தோரணம், வெளிவாயிலில் அமைத்த அலங்காரவளைவுக் கட்டிட மாதலின் இந்திரதனு அதற்கு உவமை கூறப்பட்டது. (15)*

**827.** கேழிரு மணியும் பொன்னும் விசும்பிருள் கிழித்து வீங்க
ஊழிருங் கதிர்க ளோடுந் தோரணத் தும்பர் மேலான்
சூழிருங் கதிர்க ளெல்லாந் தோற்றிடச் சுடருஞ் சோதி
ஆழியி னடுவட் டோன்று மருக்கனே யனைய னானான்.

*கேழ் இரும் மணியும், பொன்னும், விசும்பு இருள் கிழித்து வீங்க,*
*ஊழ் இரும் கதிர்களோடும் தோரணத்து உம்பர் மேலான்,*
*சூழ் இரும் கதிர்கள் எல்லாம் தோற்றிடச் சுடரும் சோதி,*
*ஆழியின் நடுவண் தோன்றும் அருக்கனே அனையன் ஆனான்.*

*தோரணத்து உம்பர் மேலான் (ஆன அனுமான்) அருக்கன் அனைய னானான் என்க.*

*ஒளி வீசும் மணி பொன்களின் கதிர்களோடும் தோரணத்தின் உச்சியில் விற்றிருந்த அனுமன், தன்னைச் சூழ்ந்த கிரணங்கள் எல்லாம் ஒளிரக்*

கடலிடையில் சோதிமயமான சூரியன் தோன்றுவதுபோல விளங்கினன் எ-று. தோரணத்திற்குக் கடலும் அதன் மேலிடத்திருந்த அநுமனுக்குச் சூரியனும் உவமையாயின என்க. தோரணம் - தோரணவாயில்; "அகல் விசும் புகக்கும் தோரணவாயில்" என்றார் பெருங்கதையிலும் (3 - 12-2, 3). கேழ் இரு மணி - ஒளிவிடும் பெரிய இரத்தினங்கள். ஊழ் - முறைமை, தன்மை. உம்பர் மேலான் - உச்சியில் உள்ளவன். நடுவண் - இடையில். (16)

## அனுமன் ஆர்த்தல்

**828.** செல்லொடு மேகஞ் சிந்தத் திரைக்கடல் சிலைப்புத் தீரக்
கல்லளை கிடந்த நாக முயிரொடு விடமுங் காலக்
கொல்லிய லரக்கர் நெஞ்சிற் குடிபுக வச்சம் வீரன்
வில்லென விடிக்க விண்ணோர் நடுக்குற வீர னார்த்தான்.

செல்லொடு மேகம் சிந்தத், திரைக்கடல் சிலைப்புத் தீர,
கல் அளை கிடந்த நாகம் உயிரொடு விடமும் கால,
கொல் இயல் அரக்கர் நெஞ்சில் குடிபுக அச்சம், வீரன்
வில் என இடிக்க, விண்ணோர் நடுக்கு உற வீரன் ஆர்த்தான்.

வீரனது ஆர்ப்பொலியால் மேகங்கள் மழையைச் சிந்தின; கடல் தன் அலையின் பேரொலி அடங்கிற்று; கற்பொந்துகளில் உள்ள சர்ப்பங்கள் உயிரோடு விடத்தைக் கக்கலாயின; அரக்கர் நெஞ்சுகளில் அச்சம் குடிபுக்கது; வீரனான இராமபிரானது வில்லின் நாணோசை போல இடித்தது; தேவர்கள் நடுங்கலானார்கள் எ-று. செல் - இடி; 'வான் முழக்குச் செல்' என்ப (பரிபாடல் 13, 44). சிலைப்பு - பேரொலி. தீர்தல் - கீழ்ப்பட்டு அடங்குதல். கல் அளை - மலைப் பொந்து. வில் - வில்லின் நாணோசை; ஆகுபெயர். (17)

## அனுமன் தோள்கொட்டுதல்

**829.** நின்றன திசைக்கண் வேழ
நெடுங்களிச் செருக்கு நீங்கத்
தென்றிசை நமனு முள்ளந்
துணுக்கெனச் சிந்தி வானில்
பொன்றலின் மீன்க ளெல்லாம்
பூவென வுதிரப் பூவும்
குன்றமும் பிளக்க வேலை
துளக்குறக் கொட்டி னான்றோள்.

நின்றன திசைக்கண் வேழம், நெடும் களிச் செருக்கு நீங்க,
தென் திசை நமனும் உள்ளம் துணுக்கு என, சிந்தி வானில்
பொன்றல் இல் மீன்கள் எல்லாம் பூ என உதிர, பூவும்
குன்றமும் பிளக்க, வேலை துளக்குற, கொட்டினன் தோள்.

(அனுமன் தோள் கொட்டிய ஆர்ப்பால்) திசை யானைகள் தங்கள் நீண்டகால மதச் செருக்கு நீங்கவும், தென்றிசைக் குரிய யமனும் உள்ளந் திடுக்கிடவும், விண்மீன்களெல்லாம் சிந்திப் பூக்கள் போல உதிரவும், பூவுலகும் குன்றுகளும் பிளக்கவும், கடல் நிலை கலங்கவும் ஆயின எ-று.

திசைக் கண் நின்றன – திக்குகளில் நிலைபெற்றனவாகிய. பொன்றல் இல் – அழிதல் இல்லாத. மின் – நட்சத்திரங்கள். (18)

அரக்கரும் ஆர்த்து அனுமனை அணுகமுடியாது நிற்றல்

830. அவ்வழி யரக்க ரெல்லா மலைநெடுங் கடலி னார்த்தார்
செவ்வழிச் சேற லாற்றார் பிணப்பெருங் குன்றந் தெற்றி
வெவ்வழி குருதி வெள்ளம் புடைமிடைந் துயர்ந்து வீங்க
எவ்வழிச் சேறு மென்றார் தமருடம் பிடறி வீழ்வார்.

அவ்வழி அரக்கர் எல்லாம் அலை நெடும் கடலின் ஆர்த்தார்,
செவ்வழி சேறல் ஆற்றார், பிணப் பெரும் குன்றம் தெற்றி
வெவ் வழி குருதி வெள்ளம் புடை மிடைந்து உயர்ந்து வீங்க
"எவ்வழி சேறும்," என்றார் தமர் உடம்பு இடறி வீழ்வார்.

அவ்வழி அரக்க ரெல்லாம் ஆர்த்தார்; உடம்பு இடறி விழ்வார், தெற்றி வெள்ளம் விங்கச் செவ்வழிச் சேறலாற்றார்; எவ்வழிச் சேறும் என்றார் என்க.

அரக்கரும் கடலைப் போல ஆரவாரித்து, தம் உறவினரின் பிணங்களின் மேல் இடறி விழ்பவராய் அப் பிணக்குன்றம் (இடையில்) மேற் போக ஒட்டாமல் தடுத்தலாலும் கடுமையாக வழிந்தோடும் இரத்தப் பெருக்கு பக்கங்களில் நிமிர்ந்து பெருகுதலாலும், (அனுமான் உள்ள இடத்துக்கு) நேர்வழியிற் செல்லமுடியாதவர்களாய், எவ்வழியே செல் வோம் என்று திகைத்தார்கள். எ-று.

செவ்வழி – நேர்வழி. தெற்றுதல் – தடுத்தல்; 'சகடஞ் செல்லாது தெற்றிற்று' (அறநெறிச்) எனக் காண்க. வெவ்வழி குருதி – வெம்மையாக வழிகின்ற இரத்தம். (19)

## அணிவகுத் தெதிர்ந்த சம்புமாலியைக் கண்டு அனுமன் மகிழ்தல்

**831.** ஆண்டுநின் றரக்கன் வெவ்வே
றணிவகுத் தனிகந் தன்னை
மூண்டிரு புடையு முன்னு
முறைமுறை முடுக வேவித்
தூண்டினன் றானுந் திண்டேர்
தோரணத் திருந்த தோன்றல்
வேண்டிய தெதிர்ந்தா னென்ன
வீங்கினன் விசயத் திண்டோள்.

*ஆண்டு நின்று அரக்கன் வெவ்வேறு*
*அணி வகுத்து, அனிகம் தன்னை*
*மூண்டு இரு புடையும் முன்னும்*
*முறை முறை முடுக ஏவித்*
*தூண்டினன், தானும் திண் தேர்;*
*தோரணத்து இருந்த தோன்றல்*
*வேண்டியது எதிர்ந்தான் என்ன*
*வீங்கினன் விசயத் திண் தோள்.*

*அரக்கன் அணிவகுத்து அனிகந்தன்னை ஏவி, தானும் திண்டேர் தூண்டினன், தோன்றல் திண்டோள் வீங்கினன் என்க.*

*அனிகம் –சேனை. மூண்டு முடுக ஏவி என இயைக்க. வேண்டியது எதிர்தல் – விரும்பியது எதிர்ப்படுதல்.* (20)

## அனுமனும் போர்க்கு அமைந்து நிற்றல்

**832.** ஐயனு மமைந்து நின்று
ஞூழியா னளவி னமம்
நெய்சுடர் விளக்கிற் றேன்று
நெற்றியே நெற்றி யாக
மொய்ம்மயிர்ச் சேனை பொங்க
முரணயி லுகிர்வாண் மொய்த்த
கைகளே கைக ளாகக்
கடைக்குழை திருவா லாக.

**ஐயனும் அமைந்து நின்றான், ஆழியான் அளவின் நாமம்**
**நெய்சுடர் விளக்கில் தோன்றும் நெற்றியே நெற்றி ஆக,**
**மொய் மயிர்ச் சேனை பொங்க, முரண் அயில் உகிர் வாள் மொய்த்த**
**கைகளே கைகள் ஆக, கடைக்குழை திருவால் ஆக.**

மேலே சம்புமாலியின் அணிவகுப்பைப் பெரிதாக வருணித்து வந்தவர், இங்கே தனியனாய் நின்ற அனுமானும் தன்னை அணிவகுத்துக் கொண்டு நின்ற நிலையைச் சிறப்பிக்கின்றார்.

நெய்யிடுதலால் சுடர்விட்டெரியும் தீப்பிழம்பு போல, திருநாமம் தரித்து விளங்கும் தம் நெற்றியே நெற்றிப்படையாகவும், தம் மேனி முழுதும் சிலிர்த்து நின்ற மயிர்த்தொகுதிகளே நடுப்படையாகவும், கூரிய நகங்கள் மிக்க கைகளே பக்கப்படைகளான கைகளாகவும், திருவாலே பின்னணிப் படையான கடைக் கூழையாகவும் கொண்டு அனுமனும் போருக்குச் சன்னத்தனாயிருந்தான் எ – று.

ஐயன் – அனுமன். அமைந்து நின்றான் – சன்னத்தனாயிருந்தான். அளவின் நாமம் – அளவுடன் இட்ட நாமம். அளவு கடந்து நாமமிடுதல் மரபன்று என்பது இதனால் அறியத்தகும். திருமாலின் துவாதச நாமங்களைக் கூறியபடியே பன்னிரண்டு உறுப்புக்களில் இட்டுக் கொள்வது மரபாதலின் திருமண்காப்புக்கு நாமம் என்பது பெயராயிற்று ; ‘ தன் திருநாமத்தைத் தானுஞ் சாத்தியே’ என்றார் முன்னும் (கடிமணப் 49). ‘ஈராறு நாமம் உரைசெய்து மண்கொடிடுவார்கள் காணும் இமையோர்’ என்றார் வில்லிபுத்தூரரும். நெய்யிட்டுப் பிரகாசிக்கும் தீபம்போன்றிருந்தது அனுமனது நெற்றி நாமம் என்றும், அது, நெற்றிப்படையாகத் தோற்றமளித்தது என்றும் கூறியபடி. நெற்றி – முன்னணிப்படை. அரக்கரதுபோர் இரவிடைப் பெரும்பாலும் நிகழ்தலால், அவரது நெற்றிப் படை தீப்பிழம்புகளால் ஒளிர்வதுபோல், அனுமன் அமைத்துக் கொண்ட படையும் ஒளிர்வதாயிற்று எ–று. அனுமன் திருமாலின் அடியான் என்பதற்கேற்ப ‘அரும்பியல் துளவப்பைந்தார் அனுமன்’ என்பர் பின்னும் (மாயாசனக.58).

இனி, பெரும்படையில் இரு பக்கங்களினும் அமைந்தது கைப்படை எனப்படும். அனுமனது இரு கைகளே அப்படையாயின என்றும், அவை வாள்பிடித்துப் போர் புரிதலால் அவனது கூரிய கையுகிர்களே வாளாயின என்றும் உருவகிக்கப்பட்டன.

கைப் படைக்கு இடையிற் செல்லுஞ் சேனை பேரணி எனப்படும். மாருதியின் சிலிர்த்து நின்ற உடல் மயிர்களே இச்சேனையாக உருவகிக்கப்பட்டன.

பின்னணிப்படை ‘கடைக் கூழை’ எனப்படும். திருவால் அத்தகைய படையாகக் கூறப்பட்டது : இவ்வாறு ஐயனும் அமைந்து நின்றான்

என்க. கடைக்குழை – கடைக் கூழை என்பதன் குறுக்கம். ‘ தூசியொடு நெற்றியிரு கையினெடு பேரணி கடைக்குழை தொகுத்து ’ என்ருர் பின்னரும். ‘ கடைக்குழையிலே விழ வடர்த்து ’ என்பது கலிங்கத்துப்பரணி. (21)

### அரக்கர் அனுமன்மேற் படைவழங்கல்

**833.** வயிர்கள்வால் வளைகள் விம்ம
வரிசிலை சிலைப்ப மாயப்
பயிர்களார்ப் பெடுப்ப மூரிப்
பல்லியங் குமுறப் பற்றிச்
செயிர்கொள்வா ளரக்கர் சீற்றஞ்
செருக்கினர் படைகள் சிந்தி
வெயில்கள்போ லொளிகள் வீச
வீரன்மேற் கடிது விட்டார்.

வயிர்கள் வால் வளைகள் விம்ம, வரி சிலை சிலைப்ப, மாயப் பயிர்கள் ஆர்ப்பு எடுப்ப, மூரிப் பல் இயம் குமுற, பற்றிச் செயிர்கொள் வாள் அரக்கர், சீற்றம் செருக்கினர், படைகள் சிந்தி, வெயில்கள்போல் ஒளிகள் வீச, வீரன்மேல் கடிதுவிட்டார்.

அரக்கர் செருக்கினர், விம்ம, சிலைப்ப, ஆர்ப்பெடுப்ப, குமுற, படைகள் ஒளிகள் வீச வீரன்மேல் கடிது விட்டார் என்க.

வயிர்கள் – ஊதுகொம்புகள். வளைகள் – சங்கங்கள். சிலைப்ப – நாணெலி உண்டாக்க. மூரி பல் இயம் – பெரிய பலவகையான வாச்சியங்கள். மாயப்பயிர்கள் – மாயவினைகளை விளைக்கும் பயிர்கள் போன்ற அரக்கர் ; அன்மொழித்தொகை. (22)

### அனுமன் போர்த்திறம் 834–851

**834.** கருங்கட லரக்கர்தம் படைக்கலங் கரத்தால்
★ பெருங்கட லுறப்புடைத் திறுத்துகப் பிசைந்தான்
விரிந்தன பொறிக்குல நெருப்பென வெகுண்டாண்
டிருந்தவன் கிடந்ததொ ரெழுத்தெரிந் தெடுத்தான்.

கருங்கடல் அரக்கர்தம் படைக்கலம், கரத்தால்
பெருங்கடல் உறப், புடைத்து, இறுத்து உகப் பிசைந்தான்;
விரிந்தன பொறிக்குலம்; நெருப்பு என வெகுண்டு ஆண்டு
இருந்தவன், கிடந்தது ஓர் எழு தெரிந்து எடுத்தான்.

ஆண்டு இருந்தவன் - தோரணத்தின் மீது இருந்தவனான அனுமன்; அரக்கர் தம் படைக்கலங்களைக் கடல் போய்ச் சேரப் புடைத்தும் ஒடித்தும் சிதறியும் நொறுங்கச் செய்தான். அவற்றால் தீப்பொறிக் கூட்டம் விரிந்தன; நெருப்புப் போலச் சினந்தவனாய்த் தோரணப் பக்கங்கிடந்த இருப்புத் தண்டமொன்றைக் கண்டெடுத்தான் எ-று. எழு - இருப்புத்தடி. (23)

**835.** இருந்தன னெழுந்தன னிழிந்தன னுயர்ந்தான்
திரிந்தனன் புரிந்தன னெனநனி தெரியார்
விரிந்தவர் குவிந்தவர் விலங்கினர் கலந்தார்
பொருந்தினர் நெருங்கினர் களப்படப் புடைத்தான்.

இருந்தனன், எழுந்தனன், இழிந்தனன், உயர்ந்தான்
திரிந்தனன், புரிந்தனன் என நனி தெரியார்;
விரிந்தவர், குவிந்தவர், விலங்கினர், கலந்தார்,
பொருந்தினர், நெருங்கினர் களம் படப் புடைத்தான்.

(அனுமன்) இருந்தும் எழுந்தும் இழிந்தும் உயர்ந்தும் திரிந்தும் (இவ்வாறு செயல்களில் ஈடுபடுதலால்) இன்ன காரியம் புரிந்தான் என்பது நன்றாகத் தெரியாதவர்களாய், பரவி நின்றவர்களும் ஒருங்கு திரண்டவர்களும் ஒதுங்கிச் சென்றவர்களும் போரிற் கலந்து நின்றவர்களும் சிதறியும், பொருந்தி நெருங்கியும் நின்றவர்களுமான அரக்கர்களையெல்லாம் போர்க்களத்திலே மடிய அந்த இருப்புத் தடியால் நையப்புடைத்தான் எ-று. (24)

**836.** எறிந்தன வெய்தன விடியுரு மெனமேற்
செறிந்தன படைக்கல மிடக்கையிற் சிதைத்தான்
முறிந்தன தெறுங்கரி முடிந்தன தடந்தேர்
மறிந்தன பரிநிரை வலக்கையின் மலைந்தான்.

எறிந்தன, எய்தன, இடி உருமு என மேல்
செறிந்தன படைக்கலம் இடக்கையின் சிதைத்தான்,
முறிந்தன தெறும் கரி, முடிந்தன தடம் தேர்,
மறிந்தன பரி நிரை, வலக்கையின் மலைந்தான்.

எறிந்தனவும் எய்தனவும் உடன்மேற் செறிந்தனவுமான ஆயுதங்களை யெல்லாம் இடக்கையால் அழித்து, வலக்கையால் போர் செய்யலானான். அதனால் யானைகள் முறிந்தன; தேர்கள் முற்றுமழிந்தன; குதிரைக் கூட்டங்கள் கிழே விழ்ந்தன என்க.

இடி உருமு - பேரிடி. தெறும் கரி - அழிக்குந் தன்மையுள்ள யானைகள். இரு கரங்களாலும் போர் புரிந்த அனுமன்திறம் கூறப்பட்டது. (25)

## அனுமனால் யானைப்படை அழிதல்

**837.** இழந்தன நெடுங்கொடி யிழந்தன விருங்கோ
டிழந்தன நெடுங்கர மிழந்தன வியன்றாள்
இழந்தன முழங்கொலி யிழந்தன மதம்பா
டிழந்தன பெருங்கத மிருங்கவு ளியானை.

இழந்தன நெடும் கொடி, இழந்தன இரும் கோடு,
இழந்தன நெடும் கரம், இழந்தன வியன் தாள்,
இழந்தன முழங்கு ஒலி, இழந்தன மதம் பாடு,
இழந்தன பெரும் கதம், இரும் கவுள் யானை.

போரில் யானைகள் பட்டபாடு கூறுகின்றார். கவுள் - கன்னம். கோடு – கொம்புகள். வியன்தாள் – பெரிய கால்கள். மதம் பாடு - மதநீர் ஒழுக்குதல். 26))

## தேர்ப்படை அழிதல்

**838.** நெரிந்தன தடஞ்சுவர் நெரிந்தன பெரும்பார்
நெரிந்தன நுகம்புடை நெரிந்தன வதன்கால்
நெரிந்தன கொடிஞ்சிக ணெரிந்தன வியன்றார்
நெரிந்தன கடும்பரி நெரிந்தன நெடுந்தேர்.

நெரிந்தன தடம் சுவர், நெரிந்தன பெரும் பார்,
நெரிந்தன நுகம், புடை நெரிந்தன அதன்கால்,
நெரிந்தன கொடிஞ்சிகள், நெரிந்தன வியன்தார்,
நெரிந்தன கடும்பரி, நெரிந்தன நெடும் தேர்.

சுவர் – தேரின் சுற்றுப் பக்கங்களில் மரத்தால் அமைந்த மறைவுச் சுவர். பார் – தேரின் அடிப்பாகத்துள்ள நெடுஞ்சட்டம் (புறநா. 185); முன்புறத்துக் குறுக்கே அமைக்கும் மரம் என்றும் அடிப்பரப்பு என்றும்

கூறுவர். கால் – சக்கரம். கொடிஞ்சி - கைக்குதவியாகத் தாமரை வடிவில் அமைத்த உறுப்பு; 'மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றி' (மணிமே. 4-48). தார் - சிறு மணிகள். (27)

## குதிரைப்படை அழிதல்

**839.** ஒடிந்தன வுருண்டன வுலந்தன புலந்த
இடிந்தன வெரிந்தன நெரிந்தன வெழுந்த
மடிந்தன மறிந்தன முறிந்தன மலைபோல்
படிந்தன முடிந்தன கிடந்தன பரிமா.

*ஒடிந்தன, உருண்டன, உலந்தன புலந்த ;*
*இடிந்தன, எரிந்தன, நெரிந்தன எழுந்த ;*
*மடிந்தன, மறிந்தன, முறிந்தன, மலைபோல்*
*படிந்தன, முடிந்தன, கிடந்தன பரிமா.*

புலத்தல் – துன்புறுதல்; 'போகும் புழையுட் புலந்து' (ஏலாதி-11).
(28)

## காலாட்படை அழிதல்

**840.** வெருண்டனர் வியந்தனர் விழுந்தன ரெழுந்தார்
மருண்டனர் மயங்கினர் மறிந்தன ரிறந்தார்
உருண்டன ருலைந்தன ருழைத்தனர் பிழைத்தார்
சுருண்டனர் புரண்டனர் தொலைந்தனர் மலைந்தார்.

*வெருண்டனர், வியந்தனர், விழுந்தனர், எழுந்தார்,*
*மருண்டனர், மயங்கினர், மறிந்தனர், இறந்தார் ;*
*உருண்டனர், உலைந்தனர், உழைத்தனர் பிழைத்தார்,*
*சுருண்டனர், புரண்டனர், தொலைந்தனர், மலைந்தார்.*

மலைந்தார், எழுவாய் ; போர் மலைந்த அரக்கர்கள், வெருண்டு வியந்து விழுந்து எழுந்தும், மருண்டு மயங்கி மறிந்தும் இறந்தார்கள். பிழைத்தவர் (சிலர்) உழைத்து, சுருண்டு புரண்டு தொலைந்தார்கள் எ – று.

வெருண்டனர் - அச்சங்கொண்டவர்கள். மருண்டனர் – மருட்சி கொண்டவர்கள். உழைத்தனர் - போர்ச்செயலாற்றியவர்கள். (29)

841. கரிகொடு கரிகளைக் களப்படப் புடைத்தான்
பரிகொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான்
வரிசிலை வயவரை வயவரின் மடித்தான்
நிரைமணித் தேர்களைத் தேர்களி னெரித்தான்.

கரிகொடு கரிகளைக் களம் படப் புடைத்தான்,
பரிகொடு பரிகளைத் தலத்து இடைப் படுத்தான்,
வரி சிலை வயவரை வயவரின் மடித்தான்,
நிரைமணித் தேர்களைத் தேர்களின் நெரித்தான்.

இதன் பொருள் வெளிப்படை. (30)

842. மூளையு முதிரமு முழங்கிருங் குழம்பாய்
மீளிருங் குழைபடக் கரிவிழுந் தழுந்தத்
தாளொடுந் தலையுகத் தடநெடுங் கிரிபோல்
தோளொடு நிருதரை வாளொடுந் துகைத்தான்.

மூளையும் உதிரமும் முழங்கு இரும் குழம்பாய்,
மீள் இரும் குழைபடக் கரி விழுந்து அழுந்த,
தாளொடும் தலை உக, தடம் நெடும் கிரிபோல்
தோளொடும் நிருதரை வாளொடும் துகைத்தான்.

தாளொடு தலை உக, தோளொடும் , வாளொடும் குழம்பாய், குழைபட, கரி விழுந்து அழுந்த, நிருதரைத் துகைத்தான் (அனுமன்) என்க.

முழங்குதல் - கொதிப்பால் ஒலித்தல். மீள் இரும் குழைபட - மிகுதியால் மீள்கின்ற மிக்க சேறு உண்டாக. குழைசேறுனதால் யானைகள் அதனில் விழ்ந்து அழுந்தலாயின எ-று. (31)

843. மல்லொடு மலைமலைத் தோளரை வளைவாய்ப்
பல்லொடு நெடுங்கரப் பகட்டொடும் பருந்தாள்
வில்லொடு மயிலொடும் விறலொடும் விளிக்கும்
சொல்லொடு முயிரொடு நிலத்தொடுந் துகைத்தான்.

மல்லொடு மலை மலைத்தோளரை, வளைவாய்ப்
பல்லொடும் நெடும் கரப் பகட்டொடும் பரும் தாள்
வில்லொடும் அயிலொடும் விறலொடும் விளிக்கும்
சொல்லொடும் உயிரொடும் நிலத்தொடும் துகைத்தான்.

மலை மலைத்தோளர் - பொருகின்ற மலைபோலும் தோளினையுடைய வீரரை. வளைவாய்ப் பல்-வக்கிரதந்தம். பகடு-ஆண்யானை. அயில்-வேல். நிலத்தொடு - பூமியொடு பூமியாய். (32)

**844.** புகைநெடும் பொறிபுகுந் திசைதொறும் பொலந்தார்ச்
சிகைநெடுஞ் சுடர்விடுந் தேர்தொறுஞ் சென்றான்
தகைநெடுங் கரிதொறும் பரிதொறுஞ் சரித்தான்
நகைநெடும் படைதொறுந் தலைதொறு நடந்தான்.

புகை நெடும் பொறி புகும் திசைதொறும் பொலந்தார்ச்
சிகை நெடும் சுடர் விடும் தேர் தொறும் சென்றான் ;
தகை நெடும் கரிதொறும் பரிதொறும் சரித்தான் ;
நகை நெடும் படைதொறும் தலைதொறும் நடந்தான்.

புகை நெடும் பொறி - புகையோடு கூடிய நீண்ட தீப்பொறி. சிகை - சிகரம். தகை நெடும் - நெடுந்தகை ; பெருந்தகைமை. சரித்தல் - சஞ்சரித்தல். படையின் தலைதொறும் என்க. ஏனைய வெளிப்படை. (33)

**845.** வென்றிவெம் புரவியின் வெரிநினும் விரவார்
மன்றலந் தாரணி மார்பினு மணித்தேர்
ஒன்றினின் றொன்றினு முயர்மத மழைதாழ்
குன்றினுங் கடையுகத் துருமெனக் குதித்தான்.

வென்றி வெம் புரவியின் வெரிநினும், விரவார்
மன்றல் அம் தார் அணி மார்பினும், மணித் தேர்
ஒன்றின் நின்று ஒன்றினும், உயர் மத மழை தாழ்
குன்றினும், கடை உகத்து உரும் எனக் குதித்தான்.

வெரிந் - முதுகு. விரவார் - பகைவர். மன்றல் அம் தார் - நறுமணமுள்ள அழகிய மாலை. மத மழை தாழ் குன்று - மதநீராகிய மழை பொழிகின்ற மலைபோலும் யானை. கடையுகத்து உருமு - யுகாந்தகாலத்து இடியேறு. (34)

**846.** பிரிவரு மொருபெருங் கோலெனப் பெயரா
இருவினை துடைத்தவ ரறிவென வெவாக்கும்
வருமுலை விலைக்கென மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனமெனக் கறங்கெனத் திரிந்தான்.

பிரிவு அரும் ஒரு பெரும் கோல் என, பெயரா
இரு வினை துடைத்தவர் அறிவு என, எவர்க்கும்
வரு முலை விலைக்கு என மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனம் என, சுறங்கு என, திரிந்தான்.

அனுமன், செங்கோல் போலவும், ஞானியர் அறிவு போலவும், பரத்தையர் மனம் போலவும், காற்றுடி போலவும் திரிந்தான் என்க.

பிரிவரும் ஒரு பெருங்கோல் - எவ்விடத்தும் நீங்காத ஒப்பற்ற செங்கோல்; அரசாணை எங்குஞ் செல்ல வல்லதென்றபடி. இருவினை - நல்வினை தீவினைகள்; நல்வினையும் பொன் விலங்கு போலும் என்பர். அறிவு- பரஞானம். பெண்பாலார்க்குச் சிறப்பாக உண்டாகும் தனங்களைக் கணவனுக்கு உரிய வாக்காமல் விலைக்குரியன என்று கருதி எவர்க்கும் வழங்கும் வேசையர் எ-று. (35)

**847.** அண்ணலவ் வரியினுக் கடியவ ரவன்சீர்
நண்ணுவ ரெனும்பொரு ணவையறத் தெரிப்பான்
மண்ணினும் விசும்பினு மருங்கினும் மலைந்தார்
கண்ணினு மனத்தினுந் தனித்தனி கலந்தான்,

"அண்ணல் அவ் அரியினுக்கு அடியவர், அவன்சீர்
நண்ணுவர்," எனும் பொருள் நவை அறத் தெரிப்பான்,
மண்ணினும், விசும்பினும், மருங்கினும், மலைந்தார்
கண்ணினும், மனத்தினும், தனித்தனி கலந்தான்.

திருமாலுக்கு அடியரானவர் அப்பெருமானது சிறப்பை எய்துவர் என்ற வேதப்பொருளை ஐயமறத் தெரிவிப்பவன்போல, மண்ணுலகிலும் விண்ணுலகிலும் பக்கங்களிலும் பகைவரின் கண்களிலும் மனத்திலும் வெவ்வேறாகவே கலந்து தோன்றுவானாயினன்.

அவன் சீர் நண்ணுவர் எனும் பொருள் - அத் திருமாலின் சாரூப்பியத்தை அடைவர் என்ற வேதப்பொருள் ; "குற்றமற்றவனான ஆன்மா அவனோடு பரம ஸாமியத்தை அடைவான்" என்பது வேத வாக்கியம். சாரூப்பியத்தை அடைதலால் அந்தர்யாமித்வம் (எங்கு நிறைதல்) முதல இறைமைக் குணங்களையும் பெறுதல் பெறப்படும். (36)

848. கொடித்தடங் தேரொடுங் குரகதக் குழுவை
அடித்தொரு தடக்கையி னிலத்திடை யரைத்தான்
இடித்துநின் றதிர்கதத் தெயிற்றுவன் பொருப்பைப்
பிடித்தொரு தடக்கையி னுயிருகப் பிழிந்தான்.

*கொடி தடம் தேரொடும் குரகதக் குழுவை*
*அடித்து, ஒரு தடக் கையின் நிலத்திடை அரைத்தான்;*
*இடித்து நின்று அதிர் கதத்து எயிற்று வன் பொருப்பைப்*
*பிடித்து, ஒரு தடக் கையின் உயிர் உகப் பிழிந்தான்.*

பெரிதான தேரோடு குதிரைக் கூட்டத்தைத் தன் பெரியதொரு கையால் அடித்து நிலத்திடை அரைத்தும், யானைகளை மற்றொரு தடக்கையால் பிடித்து அவற்றின் உயிர் போகும்படி பிழிந்தும் செயலாற்றினன் எ-று.

குரகதம் - குதிரை. கதத்து இடித்து நின்று அதிர் எயிற்று வன் பொருப்பை எனக் கூட்டிச் சினத்தால் இடிபோலப் பேரொலி யிடுவனவும், தந்தங்களால் வலிமை பெற்றுள்ளனவுமான மலைபோன்ற யானைகளை எனப் பொருளுரைக்க. *(37)*

849. கறுத்தெழு நிறத்தின ரெயிற்றினர் கயிற்றார்
செறுத்தெரி விழிப்பவர் சிகைக்கழு வலத்தார்
மறுத்தெழு மறலிக ளிவரென வதிர்ந்தார்
ஒறுத்துருத் திரனெனத் தனித்தனி யுதைத்தான்.

*கறுத்து எழு நிறத்தினர், எயிற்றினர், கயிற்றார்,*
*செறுத்து எரி விழிப்பவர், சிகைக் கழு வலத்தார்,*
*மறுத்து எழு மறலிகள் இவர் என அதிர்ந்தார்;*
*ஒறுத்து உருத்திரன் என, தனித்தனி உதைத்தான்.*

கறுத்துத் தோன்றும் நிறமும், கோரப் பற்களும் பாசாயுதமும் சினத்தீ எழும் விழிகளும் கழுப்படையும் உடையவர்களாய், வேறுபட்ட யமன்கள் இவர்களென்னும்படி முழங்கி வந்த அரக்க வீரர்களை, உருத்திரமூர்த்தி போலத் தண்டித்துத் தனித்தனியே காலால் உதைத்தொழித்தான் எ – று.

மார்க்கண்டேயர்பொருட்டுச் சிவபிரான் யமனைத் தம் திருவடிகளால் உதைத்து அழித்ததைக் குறிக்கொண்டு 'உருத்திரனென' என்றார்.

கயிறு – பாசப்படை. செறுத்து – கோபித்து. சிகைக் கழு - நுனிகூரிய கழுப்படை. *(38)*

**850.** சக்கரந் தோமர முலக்கைதண் டயில்வாள்
மிக்கன தேர்பரி குடைகொடி விரவி
உக்கன குருதியம் பெருந்திரை யுருட்டிப்
புக்கன கடலிடை நெடுங்கரப் பூட்கை.

சக்கரம், தோமரம், உலக்கை, தண்டு, அயில், வாள்
மிக்கன தேர், பரி, குடை, கொடி விரவி,
உக்கன குருதி அம் பெரும் திரை, உருட்டி,
புக்கன கடல் இடை நெடும் கரம் பூட்கை.

தோமரம் - பெரிய தண்டாயுதம். மிக்கன தேர் - எஞ்சி மிகுந்த தேர்கள். பலவகை ஆயுதங்களும் தேர் பரி குடை கொடிகளும் கலப்புற்றனவாய், படிந்தோடிய குருதிவெள்ளம் உருட்டுதலால், யானைகள் கடலிடையே புக்கன எ - று.

நெடும் கரப் பூட்கை - நீண்ட துதிக்கை யுடைய யானைகள் ; பூட்கை - அணிகள் புனைந்த கை. (39)

**851.** எட்டின விசும்பினை யெழுட் பட வெழுந்த
முட்டின மலைகளை முயங்கின திசையை
ஒட்டின வொன்றையொன் றூடடித் துதைந்து
தட்டுமுட் டாடின தலையொடு தலைகள்.

எட்டின விசும்பினை, எழு பட எழுந்த,
முட்டின மலைகளை, முயங்கின திசையை,
ஒட்டின ஒன்றை ஒன்று, ஊடடித்து உதைந்து
தட்டு முட்டு ஆடின, தலையொடு தலைகள்.

எழு பட எழுந்த தலைகள், எட்டின, முட்டின, முயங்கின, ஒட்டின (ஆகி முன் கிடந்த) தலையொடு தட்டு முட்டாடின: என இயைக்க.

எழு - அனுமன் வீசி எறிந்த எழு ஆயுதம் ; ‘ கிடந்ததோர் எழுத் தெரிந்தெடுத்தான் ’ என முற்கூறியது காண்க. தட்டுமுட்டாடுதல் - முன் கிடந்த தலைகளோடு தட்டுமுட்டுப் பண்டங்கள்போலக் கலத்தல். (40)

### சம்புமாலி தனிப்பட்டுச் சீற்றங்கொள்ளுதல்

852. கானே காவல் வேழக் கணங்கள்
★ கதவா ளரிகொன்ற
வானே யெய்தத் தனியே நின்ற
மதமால் வரையொப்பான்
தேனே புரைகண் கனலே சொரியச்
சீற்றஞ் செருக்கினன்
தானே யானன் சம்பு மாலி
காலன் றன்மையான்.

கானே காவல் வேழம் கணங்கள், கதம் வாள் அரி கொன்ற
வானே எய்தத் தனியே நின்ற, மதம் மால் வரை ஒப்பான்,
தேனே புரை கண், கனலே சொரிய, சீற்றம் செருக்கினன்;
தானே ஆனன் சம்புமாலி, காலன் தன்மையான்.

சம்புமாலி அரிகொன்ற வேழக் கணங்கள் வான் எய்த, தனியே நின்ற மதவரை ஒப்பான், சீற்றம் செருக்கினன், தானே ஆனன் என்க.

அரிகொன்ற வேழக்கணங்கள் என மாறிக் கூட்டுக. அரிகொன்ற - சிங்கத்தால் கொல்லப்பட்ட. வான் எய்த - விண்ணுலகடைய, இறக்க. தேன்புரை கண் - தேன் போலச் சிவந்த கண். (41)

### சம்புமாலி போர்க்கு விரைதல்

853. காற்றிற் கடிய கலினப் புரவி
நிருதர் களத்துக்கார்
ஆற்றுக் குருதி நிணத்தோ டடுத்த
வள்ளற் பெருங்கொள்ளேச்
சேற்றிற் செல்லா தேரி னாழி
யாழு நிலேதேரா
வீற்றுச் செல்லும் வெளியோ வில்லே
யளியன் விரைகின்றான்.

காற்றின் கடிய கலினம் புரவி நிருதர் களத்து உக்கார்;
ஆற்றுக் குருதி நிணத்தோடு அடுத்த அள்ளல் பெரும் கொள்ளேச்
சேற்றில் செல்லாத் தேரின் ஆழி, ஆழும்; நிலே தேரா
வீற்றுச் செல்லும் வெளியோ இல்லே, அளியன் விரைகின்றான்.

காற்றிற் கடிய புரவி, கலினப் புரவி என்க. புரவி நிருதர் - குதிரைப் படையுடைய அரக்கர். களத்து உக்கார் – போர்க்களத்தே உயிரிழந்தார்.

ஆற்றுக்குருதி – இரத்த வெள்ளம் ; குருதி ஆறு என மாறுக. பெருங் கொள்ளை அள்ளற் சேற்றில் என இயைத்து, மிக அதிகமான குழை சேற்றில் எனவும், தேரின் ஆழி (– சக்கரம்) செல்லா, ஆழும், வேறு செல்லும் வழியோ இல்லை ; இந்த நிலைகளைத் தேர்ந்தும் (மனம்) விரை வானுயினன் எனவும் பின் பகுதிக்குப் பொருள் கொள்க.

அனுமானுள்ள இடத்துக்கு அரக்கர் செல்ல முடியாமல் தவித்த நிலையைப் ‘பிணப் பெருங்குன்றந் தெற்றி, வெவ்வழி குருதி வெள்ளம் புடைமிடைந்து உயர்ந்து விங்க, எவ்வழிச் சேறும்’ என்று மேலே கூறியதனல், போர்க்களம் அள்ளற் சேருய் வழியைத் தடைப்படுத்தி யுள்ளமை பெறப்படும். (42)

### அனுமன், தனிநின்ற சம்புமாலியிடம் இரங்கிக் கூறுதல்

**854.** ஏதி யொன்ருற் றேரு மஃதா
லெளியோ ருயிர்கோடல்
நீதி யன்ரு லுடன்வந் தாரைக்
காக்கு நிலையில்லாய்
சாதி யன்றேற் பிறிதென் செய்தி
யவர்பின் றனிநின்ருய்
போதி யென்ருன் பூத்த மரம்போற்
புண்ணுற் பொலிகின்ருன்.

“ஏதி ஒன்ருல், தேரும் அஃதால், எளியோர் உயிர் கோடல்
நீதி அன்ருல், உடன்வந்தாரைக் காக்கும் நிலை இல்லாய்!
சாதி, அன்றேல் பிறிது என் செய்தி? அவர்பின் தனி நின்ருய்!
போதி,” என்ருன் ; பூத்த மரம்போல் புண்ணுல் பொலிகின்ருன்.

பூத்த மரம்போல் புண்ணுற் பொலிகின்ருன் – அனுமன் ; அரக்கர் போரில் அவராயுதங்கள்பட்டு மேனி முழுதும் புண்கள் உளவாயினும், அவை அலங்காரமாகவும் விரச் சிறப்பைக் காட்டுவனவாகவும் உள்ளன என்பதனை இவ்வுவமை காட்டுதல் குறிப்பிடத்தகும்.

புண்ணுற் பொலிகின்ற அனுமன், சம்புமாலியை நோக்கி, ‘உனக்குக் கைப்படையும் ஒன்றே, தேரும் ஒன்றே, உடன்வந்த அரக்கரெல்லாம் அழியவும், அவரைக் காக்கும் வலியில்லாய். இனி நீயும் சாகப் போகிருய் ; வேறு செய்யக்கூடியதோ இல்லை. வலியற்றவரது உயிரைப்

போக்குதல் நீதியன்று; அதனால் போர்க்களத்தைவிட்டு வெளியேறுக' என்றான் என்க.

தனியனாய் வலியற்றுநின்ற நிலையில் அவனிடம் இரக்கங்காட்டு வதை மறக்கருணை என்பர்; "பேராண்மை யென்ப தறுகண் ஒன்றுற் றக்கால், ஊராண்மை மற்றதன் எஃகு" என்றார் வள்ளுவனாரும். ஏதி - படைக்கலம். சாதி - இறப்பாய். (43)

## சம்புமாலி சினந்து அனுமன்மீது அம்பு தொடுத்தல்

855. நன்று நன்றுன் கருணை யென்னா நெருப்பு நகநக்கான்
பொன்று வாரி னொருவ னென்றாய் போலு மெனையென்னா
வன்றிண் சிலையின் வயிரக் காலால் வடித்திண் சுடர்வாளி
ஒன்று பத்து நூறு நூறா யிரமு முதைப்பித்தான்.

"நன்று, நன்று உன்கருணை," என்னா, நெருப்பு நக நக்கான்,
"பொன்று வாரின் ஒருவன் என்றாய் போலும் எனை" என்னா,
வன் திண் சிலையின் வயிரக் காலால் வடித் திண் சுடர்வாளி
ஒன்று பத்து நூறு நூறாயிரமும் உதைப்பித்தான்.

நெருப்பு நக - தீ வெளிப்பட. பொன்றுவாரின் - போரில் சாகக் கூடியவருள். வன் திண் சிலையின் வயிரக் காலால் - மிக வலிய வில்லின் உறுதி பொருந்திய அடிப் பகுதியால். உதைப்பித்தான் - நாணை இழுத்துச் செலுத்தினான். ஏனைப்பொருள் வெளிப்படை. (44)

## சம்புமாலியின் அம்புகளை அனுமன் விலக்குதல்

856. செய்தி செய்தி சிலைகைக் கொண்டால்
வெறுங்கை திரிவோரை
நொய்தின் வெல்வ தரிதோ வென்னா
முறுவ லுகநக்கான்
அய்ய னங்கு மிங்குங் காலா
லழியு மழையென்ன
எய்த வெய்த பகழி யெல்லா
மெழுவா லகல்வித்தான்.

"செய்தி செய்தி! சிலை கைக்கொண்டால்
வெறும் கை திரிவோரை
நொய்தின் வெல்வது அரிதோ?" என்று,
முறுவல் உக நக்கான்;
அய்யன், அங்கும் இங்கும் காலால்
அழியும் மழை என்ன
எய்த எய்த பகழி எல்லாம்
எழுவால் அகல்வித்தான்.

செய்தி செய்தி - அடுக்கு, இடைவிடாது நன்றாகப் போர் செய்க என்பது குறித்தது (குறள். 297). வில்லைக் கொண்டால், வெறுங்கை யுடன் திரிபவரை எளிதில் வெல்வது அரிதோ என்று பற்கள் தோன்றச் சிரித்தான் சம்புமாலி. (பின் அனுமன்) காற்றால் நாற்புறமும் சிதறிப் போகும் மேகங்கள் போல மேன்மேலும் சம்புமாலி எய்த அம்புகளை யெல்லாம் தன் கை எழுவால் அகலச் செய்தான் எ-று. *(45)*

இதன்பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஓர் அதிகப் பாடல் காணப்படுகிறது.

856. (அ) அதுகண் டரக்கன் சினந்திருகி
யாடற் பகழி யறுநூறு
முதிரும் வயப்போர் மாருதிதன்
புயத்தின் மூழ்க விடுவித்தான்
புதையுண் டுருவிப் புறம்போகப்
புழுங்கி யனுமன் பொடியெழும்பக்
குதிகொண் டவன்றேர் விடும்பாகன்
றலையிற் சிதறக் குதித்தனனால்.

### அனுமன்கை யெழுவைச் சம்புமாலி அறுத்து வீழ்த்துதல்

**857.** முற்ற முனிந்தா னிருதன் முனியா
முன்னும் பின்னுஞ்சென்
றுற்ற பகழி யுருது முறியா
வுதிர்கின் றதையுன்னாச்
சுற்று நெடுந்தே ரோட்டித் தொடர்ந்தான்
றொடரும் துறைகாணான்
வெற்றி யெழுவை மழுவா யம்பா
லறுத்து வீழ்த்தினான்.

முற்ற முனிந்தான் நிருதன், முனியா,
முன்னும் பின்னும் சென்று
உற்ற பகழி உருது முறியா
உதிர்கின்றதை உன்னு,
சுற்றும் நெடுந்தேர் ஓட்டித் தொடர்ந்தான்,
தொடரும் துறை காணான்,
வெற்றி எழுவை மழுவாய் அம்பால்
அறுத்து வீழ்த்தினன்.

முழுக் கோபங்கொண்டான் அரக்கன், கோபித்து, முன்னும் பின்னுஞ் சென்றடைந்த அம்புகள் (அனுமனைத்)தாக்கமாட்டாமல் முறிந்து உதிர்கின்றதை நினைந்து, சுற்றிலும் தன் பெருந் தேரைச் செலுத்தி அவனைத் தொடர்ந்தான். நெருங்க வழி காணாதவனாய், வெற்றி தந்து நின்ற அனுமன் எழுவை, மழுப்போன்ற தன் அம்பினால் அறுத்து வீழ்த்தினன் எ – று. (46)

### சம்புமாலியை அனுமன் கொல்லுதல்

858. சலித்தா னையன் கையா லெய்யுஞ்
சரத்தை யுகச்சாடி
ஒலித்தா ரமரர் கண்டா ரார்ப்பத்
தேரி னுட்புக்குக்
கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக்
கழுத்தி னிடையிட்டு
வலித்தான் பகுவாய் மடித்து மலைபோற்
றலைமண் ணிடைவீழ.

சலித்தான் ஐயன், கையால்
எய்யும் சரத்தை உகச் சாடி,
ஒலித்தார் அமரர் கண்டார்
ஆர்ப்ப, தேரின் உள் புக்கு,
கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக்
கழுத்தினிடை இட்டு
வலித்தான்; பகுவாய் மடித்து
மலைபோல் தலை மண்ணிடை வீழ.

ஐயன் சலித்தான் – (கையிலிருந்த எழுப்படை அற்றதனால்) அனுமன் மனஞ்சலிப்பானாயினன். (பின் சம்புமாலி) எய்த சரங்கள் எல்லாம்

உதிரும்படி சிதைத்து, பார்த்திருந்த தேவர்கள் ஆரவாரிப்ப (அவ்வரக்கனது) தேரினுள்ளே புகுந்து அவனது சிலையைக் கையாற் பற்றி வாங்கி, அவன் கழுத்திடையே மாட்டி, பிளந்த வாயை மடித்துக்கொண்டு, மலை போலத் தலை மண்ணில் விழ இழுத்தான் எ – று.

இழுத்ததனால் தலை அறுபட்டு மண்ணில் வீழ்ந்து இறந்தான் என்பது குறிப்பு. கலித்தான் – வீர வொலி செய்த சம்புமாலி. வலித்தான் – இழுத்தான். (47)

## பருவத்தேவர் சம்புமாலி இறந்தமை சொல்லச் செல்லுதல்

**859.** குதித்துத் தேருங் கோல்கொ ளாளும்
பரியுங் குழம்பாக
மிதித்துப் பெயர்த்து நெடுந்தோ ரணத்தை
வீரன் மேற்கொண்டான்
கதித்துப் பழிந்து கழிந்தார் பெருமை
கண்டு களத்தஞ்சி
உதித்துப் புலர்ந்த தோல்போ லுருவத்
தமர ரோடினர்.

குதித்து, தேரும், கோல் கொள் ஆளும்,
பரியும் குழம்பு ஆக
மிதித்து, பெயர்த்தும் நெடும் தோரணத்தை
வீரன் மேற்கொண்டான்;
கதி துப்பு அழிந்து கழிந்தார்
பெருமை கண்டு களத்து அஞ்சி,
உதித்துப் புலர்ந்த தோல்போல் உருவத்து
அமரர் ஓடினர்.

வீரன் குதித்து, தேர் ஆள் பரிகள் குழம்பாக மிதித்து, பெயர்த்தும் நெடுந் தோரணத்தை மேற்கொண்டான். கழிந்தார் பெருமை கண்டு அஞ்சி, (காவல்) அமரர் ஓடினர் என்க.

கோல் கொள் ஆள் – குதிரை வீரர். கோல் – குதிரை செலுத்தும் உளவு கோல். பெயர்த்தும் – மீண்டும். கதி துப்பு அழிந்து கழிந்தார் – விரைந்து செல்லும் வலிமை அற்று இறந்த தேர் பரி வீரர்கள்.

(காற்றை உட்கொண்டு) பருத்தும் பின் சிறுத்தும் மாறும் துருத்தித் தோல் போன்ற தேவர். காவலில் குறையற்றபொழுது பருத்தவர்கள், குறையுற்றபோது தளர்வர் என்க. (48)

## அனுமனுல் இலங்கையில் அறமும் தளிர்த்தமை

**860.** பரிந்து புலம்பு மகளிர் காணக்
கணவர் பிணம்பற்றி
விரிந்த குருதிப் பேரா றீர்த்து
மனைக டொறும்வீச
இரிந்த திலங்கை யெழுந்த தழுகை
யின்றிங் கிவனுலே
சரிந்த தரக்கர் வலியென் றெண்ணி
யறமுந் தளிர்த்ததால்.

*பரிந்து புலம்பும் மகளிர் காண,*
*கணவர் பிணம் பற்றி*
*விரிந்த குருதிப் பேராறு ஈர்த்து*
*மனைகள் தொறும் வீச,*
*இரிந்தது இலங்கை; எழுந்தது*
*அழுகை; “இன்று, இங்கு இவனுலே,*
*சரிந்தது அரக்கர்வலி” என்று எண்ணி*
*அறமும் தளிர்த்ததால்.*

*புலம்பும் மகளிர் காணும்படி அவர் கணவரின் பிணங்களைக் குருதிப் பேராறு பற்றி யிழுத்துக்கொண்டுபோய், அவர்தம் மனைதொறும் தள்ள என்பது முன்னிரண்டடிகளின் பொருள். (பிணங்களை வீச) இலங்கை இரிந்தது; (இரிதல் – கேடுறுதல்). அறமும் தளிர்த்தது – தரும தேவதையும் மனந் தழைத்தது.* (49)

## பருவத்தேவர் இராவணனிடம் சம்புமாலி இறந்த செய்தி சொல்லுதல்

**861.** புக்கா ரமரர் பொலந்தா ரரக்கன்
பொருவில் பெருங்கோயில்
விக்கா நின்ருர் விளம்ப லாற்ருர்
வெருவி விம்முவார்
நக்கா னரக்க னடுங்க லென்ரு
னைய நமரெல்லாம்
உக்கார் சம்பு மாலி யுலந்தா
னென்றே யுரங்கென்ருர்.

புக்கார் அமரர் பொலம் தார் அரக்கன்
பொரு இல் பெரும் கோயில்,
விக்கா நின்றார், விளம்பல் ஆற்றார்,
வெருவி விம்முவார்,
நக்கான் அரக்கன், 'நடுங்கல்' என்றான்;
'ஐய! நமர் எல்லாம்,
உக்கார், சம்புமாலி உலந்தான்,
ஒன்றே குரங்கு' என்றார்.

அமரர் அரக்கன் பெருங்கோயில் புக்கார் என்க.

(செய்தி) சொல்ல முடியாதவராய் (அவர்கள்) விக்கி அஞ்சி விம்மினர். (அதுகண்டு) அரக்கன் சிரித்து 'அஞ்சாதிர்' நடந்தவாறு கூறுங்கள்! என்றான். நம்மனோரெல்லாம் அழிந்தனர். சம்புமாலி(யும்) இறந்தான். குரங்கு ஒன்றே (இவ்வாறெல்லாஞ் செய்தது) என்றார் என்க.

பொலந்தார் – பொன்னாலான மாலை. நடுங்கல் – நடுங்காதிர். உலந்தான் – இறந்தான். (50)

## இராவணன் சினந்து அனுமனைப் பிடிக்க எழக்கண்ட பஞ்சசேனாபதிகள் கூறுதல்

**862.** என்னு மளவி னெரிந்து வீங்கி
யெழுந்த வெகுளியான்
உன்ன வுன்ன வுதிரக் குமிழி
விழியூ டுமிழ்கின்றான்
சொன்ன குரங்கை யானே பிடிப்பன்
கடிது தொடாங்தென்றான்
அன்ன துணர்ந்த சேனைத் தலைவ
ரைவ ரறிவித்தார்.

என்னும் அளவின் எரிந்து வீங்கி
எழுந்த வெகுளியான்,
உன்ன உன்ன உதிரக் குமிழி
விழி ஊடு உமிழ்கின்றான்,

"சொன்ன குரங்கை, யானே
பிடிப்பன் கடிது தொடர்ந்து", என்றான்.
அன்னது உணர்ந்த சேனைத் தலைவர்
ஐவர் அறிவித்தார்.

எரிந்து வீங்கி எழுந்த வெகுளியான் - தீயுண்டாகி மிக்கெழுந்த சினம் கொண்ட இராவணன். உன்ன உன்ன உதிரக் குமிழி விழியூடு உமிழ்கின்றான் – நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் இரத்தக் குமிழியைத் தன் கண்களினின்று உமிழ்பவனாய். சேனைத் தலைவர் ஐவராவார் – விருபாட்சன், யூபாட்சன், துர்த்தரன், பிரகசன், பாசகர்ணன் என்போர். (51)

சம்புமாலி வதைப் படலம் முற்றிற்று.

# 9. பஞ்சசேனுபதிகள் வதைப் படலம்

இந்தப் படலம் 63 செய்யுட்களுடையது. இதில் இராவணனது படைத் தலைவர் ஐவர் அநுமனுல் அழிந்த செய்தி கூறப்படுகிறது. அநுமனைப் பிடிப்பதற்குத் தானே நேரில் செல்லப் புறப்பட்டுக்கொண்டிருக்கும் இராவணனைப் பணிந்து, சேனுபதிகள் ஐவரும் விண்ணப்பம் செய்து கொள்ளுவதில் தொடங்கி, ஐவரும் படையொடு மடிந்தார்கள் என்று காவலாளர்கள் இராவணனுக்குத் தெரிவிப்பதோடு இப்படலம் முடிகிறது.

இதன் சுருக்கம் :—“ ஆற்றல் மிக்கோய் ! எளிய குரங்கின்மேல் நீ சினந்து நேரில் செல்லின் உன் ஆற்றல் நினைந்து அஞ்சும் திசையானை களும், வெள்ளியங்குன்றமும், மும்மூர்த்திகளும் அச்சம் நீங்குவதுடன் உனக்கு ஆளில்லை என்றும் தோன்றும்; ஆகலின், அக்குரங்கினைப் பற்ற எம்மை ஏவுக” எனச் சேனுபதிகள் ஐவரும் வேண்ட, இராவணன் இசைந்தான். ஐவரும் பல்லாயிரம் படைகளைத் திரட்டிக்கொண்டு பெரு முழக்கத்துடன் தன்னை நோக்கி வருவதைக் கண்ட அநுமனும் தன் தோளை நோக்கி ‘இன்றே அரக்கர் எல்லாம் அழிந்தனர்’ என்று மகிழ்ந் திருந்தான் ; அரக்கர் விடுத்த படைக்கலங்களைத் தன் தினவு தீரச் சொறிந் தார்கள் எனக் கருதி அவற்றைப் பொருட்படுத்தாமலும் இருந்தான். சீற்றம் கொண்டு அரக்கர்கள் நெருங்கியவுடன், அநுமன் கையில் ஒரு மழுவுடன் விரைந்து எழுந்து நால்வகைப் படைகளையும் பொடி செய் தான். கைகளால் பிசைந்தும், காலால் உதைத்தும், மிதித்தும் தேய்த்தும் பலரைப் பிணமாக்கினன் ; பிணக்குவியல் மகரதோரணத்தையும் மறைத்து உயர்ந்தது; அவன் கடலில் வீசி எறிந்த யானைகளும், குதிரை களும், தேர்களும், அரக்கர்களும், அமிழும் கப்பல் போலவும், முகத்தில் எரியுள்ள வடவை போலவும், கதிரவனுடைய தேர் போலவும், சுழலும் மந்தர மலை போலவும் முறையே கடலில் தோன்றின. படையெல்லாம் மடியவே படைத்தலைவர் ஐவரும் அநுமனேடு போர் செய்தார்கள் ; ஒருவனை எழுவினல் அடித்துக் கொன்ருன்; ஒருவனைத் தேரோடு வானத் தில் எறிந்து மாளச் செய்தான் ; இருவரை வாலினல் இறுக வரிந்து கொன்ருன் ; ஒருவனைத் தலைமேற் குதித்துக் கொன்ருன். இவ்வாறு தீயவர் ஐவரும் மாள, ஐம்புலன்களையும் வென்ற நல்லறிவுபோல் அநுமன் விளங்கினன். காவலாளர்கள் இராவணனிடம் விரைந்தோடி நடந்த வற்றைக் கூறியதோடு, போருக்கு ஆளில்லாமல் குரங்கு சோம்பி உட் கார்ந்திருக்கிறதென்றும் தெரிவித்தார்கள்.

இப்படலத்துள் 863-866 செய்யுட்கள், இராவணன் நேரில் குரங் குடன் போர் செய்யச் செல்லலாகாது என்பதை அழகாக விரிக்கும்

படைத்தலைவர்கூற்று. "அன்றியும் உனக் காளின்மை தோன்றுமால்" என்பது தலைவனிடத்துச் சார்ந்தாருக்குள்ள நன்றியையும், கடமையையும் கனிவாகக் குறிப்பிடுகின்றது. 868-875 பாடல்கள், படையின் பெருக்கமும் அளவும் மக்கள் எண்ணத்திற்கு மேற்பட்ட நிலையில் கூறுகின்றன. 876-ம் செய்யுள், சுற்றத்தார், அதிலும், மனைவி, மக்கள், தாய் முதலியோர் போருக்குச் செல்வோரைத் தடுத்து 'இறத்தலே உறுதியாகலின் அனைவரும் ஒருங்கே செல்வோம்' எனக் கூறுவது, இயற்கையான கனிவுடன் இருக்கிறது. ஐவர் படைத் தலைவரது விரம் மக்கள் கருத்துக்கு மேற்பட்டுத் தெய்வங்களும் அஞ்சத்தக்கதாகஇருக்கிறது (878-886). இத்தகைய அணியெல்லாம் நூலெழுந்த காலத்தில் பாராட்டப்பெற்றவை போலும். தேரின் நடுவில் துளைத்து வைத்திருந்த விரைந்து செல்லற்குதவியான ஒரு பொறியை அநுமன் அழித்தான் என்பது (911) பொறிகளைப் பற்றிக் கம்பர் கொண்ட கருத்தாகலாம். ஐவர் படைத்தலைவர் பெயர்களைக் கம்பர் குறிப்பிடவில்லை.

வான்மீகத்துள், பஞ்சசேனாபதிகள் பொருது மாண்ட செய்தி 39 சுலோகங்களாற் பேசப்படுகிறது. அதில், விரூபாக்ஷன், யூபாக்ஷன், துர்த்தரன், பிரகஸன், பாஸகர்ணன் எனச் சேனாபதிகளின் பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இராவணன், தானே நேரில் செல்ல எண்ணியதாக வான்மீகத்துள் கூறவில்லை. அரசன் நேரில் செல்லுவது தக்கதல்ல என்னும் கருத்துடையவன் என்றே தெரிகிறது. இராவணனே படைத்தலைவர்களைச் செலுத்தியதாகக் கூறப்பட்டிருக்கிறது. போரில் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்று நெறிமுறைகளும் கூறுகிறான். காலத்துக்கும் இடத்துக்கும் ஒவ்வாத செயல்களுக்குத் தக்க மாற்றுச் செயல்களைச் சூழ்ந்து அறிந்துகொள்ளவேண்டும் என்பதும், செயலைக் கொண்டு எதையும் தெரிந்துகொள்ளவேண்டும் என்பதும், குரங்கை ஏளனமாக எண்ணிவிடக் கூடாதென்பதும் இராவணனுடைய நெறிமுறைகள். படைத்தலைவர்களையும் அவர்களுடைய முன்னைய விரச் செயல்களைக் கூறிப் பாராட்டி ஊக்கமூட்டுகிறான். அநுமனால் ஏற்பட்ட அழிவையும் ஒருவாறு உள்ளத்தில் அமைதிப்படுத்திக்கொண்டு, முன்பு தானும் தன் படைகளும் தேவர் அசுரர் முதலிய பலருக்குப் பல இன்னல் விளைத்திருப்பதன் விளைவாக அவர்களுள் சிலர் இத்தகைய வஞ்சக் குறும்பு செய்ய வருவது இயற்கையே என்றும் எண்ணுகிறான். போரில் வெற்றியும் தோல்வியும் ஒருவர் பங்கல்ல; ஆகையால் வெற்றியை விரும்புகிறவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்றும் கூறுகிறான். சேனாபதிகளை முதலில் அழித்துப் பின்னர் சேனையை அழித்ததாக வான்மீகம் கூறுகிறது. சேனை முதலில் அழிந்து, பின்னர் சேனைத் தலைவர் அழிந்ததாகக் கம்பர், கூறுகின்றார்; வான்மீகத்தில் காணப்பெறாத பலவற்றைக் கம்பர் கூறுகிறார்; மேற்குறித்தவைகள்போல் சில, மாறுபாடாகவும் கூறுகின்றார்.

## 9. பஞ்சசேனபதிகள் வதைப் படலம்

### படைத்தலைவர் ஐவர் இராவணனிடம் கூறல் 863–866

**863.** சிலந்தி யுண்பதோர் குரங்கின்மேற் சேறியேற் றிறலோய்
★ கலந்த போரினின் கட்புலக் கடுங்கனல் கதுவ
உலந்த மால்வரை யருவியா றொழுக்கற்ற வொழுக்கப்
புலர்ந்த மாமதம் பூக்குமன் றேதிசைப் பூட்கை.

*சிலந்தி உண்பது ஓர் குரங்கின்மேல் சேறியேல், திறலோய்!*
*கலந்த போரில் நின் கட்புலக் கடுங்கனல் கதுவ,*
*உலந்த, மால்வரை அருவியாறு ஒழுக்கு அற்ற ஒழுக்க,*
*புலர்ந்த மாமதம் பூக்கும் அன்றே! திசைப் பூட்கை.*

இதுமுதல் நான்கு செய்யுட்கள், அநுமனைப் பிடித்துக்கொண்டு வர, மிகுந்த சினத்துடன் புறப்படும் இராவணனிடம், படைத்தலைவர் ஐவர் விண்ணப்பித்துக்கொள்வனவாகும். இராவணனது பண்டைய வீரச் செயல்களையும், அச்செயல்களால் நிலைபெற்றுள்ள பெரும் பெருமை யையும் நினைவுபடுத்தி, அத்தகைய வீரன், ஒரு எளிய குரங்கொடு போர் செய்யப் புறப்படல் மிக்க இழிவுடைத்தாய், முன்பு அஞ்சி ஒடுங்கி நின்ருருக்கு அச்சத்தை நீக்கி ஆண்மையை விளைவிக்கக் கூடியதாய் முடியு மெனக் கூறி, அந்தக் குரங்கினைப் பிடித்துவரத் தம்மையே ஏவுமாறு பணி வுடன் கேட்டுக் கொள்ளுகிருர்கள். இச் செய்யுளை, ‘திறலோய், குரங்கின் மேல் சேறியேல், திசைப் பூட்கை மாமதம் பூக்கும்’ என இயைக்க. குரங்கின் இழிவு தோன்றச் சிலந்தி உண்பதோர் குரங்கு எனக் கூறினர். அருவியாறு ஒழுக்கறப் புலர்ந்த மால்வரை (மீண்டும் அருவி) ஒழுகல், மதம் உலர்ந்த திசையானைகள் (மீண்டும்) மதம் பூத்தலுக்கு உவமை. கதிர வனின் கடுங்கனல்வெப்பத்தால் அருவி ஒழுகுதல் அற்ற மால்வரைகள், அந்த வெம்மை நீங்கியபோது, அருவி ஒழுகுவதுபோல இராவணனது கட்புலக் கடுங்கனலின் அச்சத்தால் மதம் புலர்ந்த திசை யானைகள், அந்த அச்சம் நீங்கியவழி மதம் பூக்கும் என்பது உவமையின் விளக்கம். அச்சம் நீங்குவதற்கு ஏது, இழிந்த குரங்கொடு போர் செய்யப் புறப்படல். சிலந்தி – சிறு பூச்சிவகையுள் ஒன்று ; எட்டுக்கால் பூச்சி. கட்புலம் – கண் என்னும் பொறி ; பொறியைப் புலன் என ஒற்றுமைநயத்தால் கூறினர். சேறியேல் – சினந்து செல்லுவாயேல். கதுவ – சென்று பற்றிக் கலங்கச் செய்ய. உலந்த புலர்ந்த என்பன, வறண்ட என்னும் பொருளன. பூக்கும் – தோன்றும். பூட்கை – யானை ; புழைக்கை என்பதின் திரிபு.

எட்டுத் திசைகளிலும், எட்டு யானைகள் பூமியைத் தாங்கி நிற்கின்றன என்பதும், அந்த யானைகளை முன்பு இராவணன் வென்றான் என்பதும் பழங்கதை. 'போரிடைக் கட்புலன் கடுங்கனல் கதுவ', 'ஒழுக்கற்ற ஒக்க' எனப் பெரு வழக்கில் காணப்பெறும் பாடங்களினும், போரில் நின்கட் புலக் கடுங்கனல் கதுவ', 'ஒழுக்கற்ற ஒழுக்க' எனப் பழஞ்சுவடிகளில் காணும் பாடங்களே பொருத்தமுடையனவாகக் கொள்ளப்பெற்றன. (1)

**864.** இலங்கு வெஞ்சினத் தஞ்சிறை யெறுழ்வலிக் கலுழன்
உலங்கின் மேலெழுந் தன்னநீ குரங்கின்மே லுருக்கின்
அலங்கன் மாலைநின் புயநினைந் தல்லுநன் பகலும்
குலுங்கும் வன்றுயர் நீங்குமால் வெள்ளியங் குன்றம்.

இலங்கு வெம் சினத்து அம் சிறை எறுழ் வலிக் கலுழன்
உலங்கின மேல எழுந்தன்ன, நீ, குரங்கின்மேல் உருக்கின்,
அலங்கல் மாலை நின் புயம் நினைந்து, அல்லும் நன் பகலும்
குலுங்கும் வன் துயர் நீங்கும், ஆல் வெள்ளிஅம் குன்றம்.

(பறப்பனவற்றுள் சிறந்து விளங்கும்) கருடன் (பறப்பவைகளுள் இழிந்த) கொசுகினிடம் சினந்து போருக்குச் செல்லுவதுபோல், நீ குரங்கினிடம் சினந்து சென்றால், (அதனால் உனக்கு உண்டாகும் இழிவால்) உன் தோள்வலிமையை நினைந்து இரவும் பகலும் நடுங்கும் வெள்ளிமலை, உன்னிடம் கொண்ட அச்சத்தை நீக்கும். ஆகையால் செல்லற்க என்பது இச் செய்யுளால் பெறும் பொருள். நீ உருக்கின் வெள்ளியங்குன்றம் துயர் நீங்கும் என முடிக்க. எறுழ் வலி – மிகுதியான வலிமை. உலங்கு – கொசுகு. உருக்கின் – சினந்து அரற்றிப் போர்க்குச் செல்லின் ; உறுக்கின் என்பது உருக்கின் என வந்துள்ளது. அலங்கல் மாலை – அசைந்து விளங்கும் மாலை. புயம் – தோள்வலி. குலுங்கும் – அச்சத்தால் நடுங்கும். இராவணனது மாலை அசைய, மலை அசையும் என்பது அவன் வீரத்தை விளக்கியவாறும். (2)

**865.** உறுவ தென்கொலோ வரனழி
வென்பதொன் றுடையார்
பெறுவ தியாதொன்றுங் காண்கிலர்
கேட்கிலர் பெயர்ந்தார்
சிறுமை யீதொப்ப தியாதுநீ
குரங்கின்மேற் செல்லின்
முறுவல் பூக்குமன் றேநின்ற
மூவர்க்கு முகங்கள்.

உறுவது என்கொலோ? உரன் அழிவு
என்பது ஒன்று உடையார்
பெறுவது யாது ஒன்றும் காண்கிலர்,
கேட்கிலர், பெயர்ந்தார்,
சிறுமை ஈது ஒப்பது யாது? நீ
குரங்கின்மேல் செல்லின்,
முறுவல் பூக்கும் அன்றே! நின்ற
மூவர்க்கும் முகங்கள்.

(படைத்து அளித்து அழிக்கும் தெய்வங்களாகிய) மூவரும், (உன்னோடு மாறுபட்டுத்) தம் வலியை இழந்தவர்களாய், (உன்னோடு மாறு பட்டதால்,) தாம் அடையக் கூடிய பேறு ஒன்றும் காணாதவர்களாய், (உன் பெயரைக் கேட்பதற்கும் அஞ்சிக்) கேளாதவர்களாய் விலகி விட்டார்கள். இப்பொழுது நீ இந்தக் குரங்கை எதிர்த்துப் புறப்படுவாயேல் (முன்பு அச்சத்தால்) விலகி நின்ற மூவர்க்கும் (அவர்கள் முகங்களில் நீ இப்போது மேற்கொள்ள எண்ணும் இழிந்த நிலையைக் கருதி) ஏளனநகை தோன்றுமல்லவா? இதைப் போன்ற சிறுமை யாதுளது? இதனால் அடையக் கூடியதுதான் எதுவோ? உரன் - வலிமை. அஞ்சி நின்றார் எள்ளி நகைப்பர்; செல்லற்க; என்பது கருத்து. (3)

866. அன்றி யும்முனக் காளின்மை தோன்றுமா லரச
வென்றி யில்லவர் மெல்லியோர் தமைச்செல விட்டாய்
நன்றுநீ யின்று காண்டியே லெமைச்செல நயத்தி
என்று கைதொழு திறைஞ்சின ரரக்கனு மிசைந்தான்.

அன்றியும், உனக்கு ஆள் இன்மை தோன்றும், ஆல் 'அரச!
வென்றி இல்லவர் மெல்லியோர் தமைச் செல விட்டாய்,
நன்று நீ இன்று காண்டியேல், எமைச் செல நயத்தி'
என்று கைதொழுது இறைஞ்சினர்; அரக்கனும் இசைந்தான்.

அரசனே, (மேற் சொன்னவைகளோடு) அல்லாமல், உனக்கு (தக்க ஏவல்) ஆட்கள் இல்லை என்று (வெளியாருக்குத்) தெளிவாகத் தோன்றும்; (இது வரை இந்தக் குரங்கைப் பிடித்துக் கொண்டு வருவதற்கு) வெற்றி (இன்னதென்பது) அறியாத மெலியவர்களைச் செல்லுமாறு பணித்தாய்: (அதனாலேயே இந்த இழிவு; இந்த இழிவாகிய தீமையை விலக்கி) நன்மையை இன்று நீ காண விரும்பினால், (அக் குரங்கினைக் கொணர) எம்மைச் செலுத்தத் திருவுளங்கொள்ளவேண்டும் என்று கைதொழுது வணங்கினார்கள். அரக்கனும் (இராவணனும்)

அதற்கு ஒப்பினுன். கைதொழல் – கையைத் தலைக்குமேல் உயர்த்திக் குவித்து வணங்கல். ஆல், தேற்றப்பொருள் உணர்த்திற்று. ஏல்-என்றுல். (4)

## படைத்தலைவர் கட்டளை

867. உலக மூன்றிற்கு முதன்மைபெற் ரேரென வுயர்ந்தார்
திலக மண்ணுற வணங்கினர் கோயிலிற் றீர்ந்தார்
அலகி றேர்பரி கரியொடாண் மிடைந்தபோ ரரக்கர்
தொலைவி லாதது கதுமென வருகெனச் சொன்னுர்.

*உலகம் மூன்றிற்கும் முதன்மை பெற்ருேர் என உயர்ந்தார்,*
*திலகம் மண் உற வணங்கினர்; கோயிலில் தீர்ந்தார்;*
*அலகில் தேர் பரி கரியொடு ஆள் மிடைந்த போர் அரக்கர்,*
*'தொலைவு இலாதது கதும் என வருக' எனச் சொன்னுர்.*

உயர்ந்தார், வணங்கினர், தீர்ந்தார், வருக எனச் சொன்னுர் என முடிக்க. தம் விண்ணப்பத்தை ஏற்றுப் பணிகொண்டமையால், மூன்றுலகையும் ஒருங்கே பெற்றவர்போல் உவகை எய்தி உயர்ந்தார் அந்தப் படைத்தலைவர். திலகம் மண்ணுற வணங்கல் – எட்டுறுப்பும் நிலத்தில் பட அடியற்ற மரம் போல் விழுந்து வணங்கல். கோயிலில் தீர்ந்தார் – அரச மாளிகையிலிருந்து புறப்பட்டார். (போருக்குப் புறப்பட) அழிவில்லாத நால்வகைப் படையும் ஒரு சேர விரைவில் வருக எனக் கட்டளை யிட்டார். கதும் என – விரைவாக. (5)

## படை திரளுதல்

868. ஆனை மேன்முர சறைந்தனர் வள்ளுவ ரழைத்தார்
பேன வேலையிற் புடைபரந் ததுபெருஞ் சேனை
சோனை மாமழை முகிலெனப் போர்ப்பணை துவைத்த
மீன வானிடு வில்லெனப் படைக்கல மிடைந்த.

*ஆனை மேல் முரசு அறைந்தனர், வள்ளுவர் அழைத்தார்,*
*பேன வேலையில் புடை பரந்தது பெரும் சேனை;*
*சோனை மா மழை முகில் எனப் போர்ப் பணை துவைத்த;*
*மீன வான் இடு வில் எனப் படைக்கலம் மிடைந்த.*

(படைத்தலைவர் கட்டளை யிட்ட வண்ணம் நால் வகைப் படையும் ஒரு சேர வருக என) வள்ளுவர் யானை மேல் முரசொலி முழங்க அழைத்தனர்; நுரைமிக்க கடல்போலப் பெரியதொரு படை எல்லாப் பக்கங்களிலும் பரவி நின்றது ; கார் நிற மேகக்கூட்டங்களின் பேரிடிபோல் போர் முரசம் ஒலித்தன ; வானத்திலே இட்ட வானவில்போல் படைக்கலங்கள் ஒன்றோடொன்று நெருங்கித் தோன்றின. வள்ளுவர்- அரசர் கட்டளையை முரசறைந்து அறிவிக்கும் தொழிலுடையவர். 'வள்ளுவார் முரச மூதூரறைகென வருளினனே ; சிந்தாமணி 2149. பேனம் - நுரை. போர்ப்பணை - போர் முரசு. துவைத்த - ஒலித்த. மிடைந்த - நெருங்கிய. பேன வேலையைப் படையின் பெருக்கத்திற்கும், வான வில்லைப் படைக்கலங்களின் நெருக்கத்திற்கும் உவமை கூறியது, நுரைபோல் சிதறி வானவில் போன்று வருவதும் மறைவதும் தெரியாது, சிறு பொழுதே தோற்றத்தளவில் படைக்கலனுகைத் தோன்றி அழிவன எனப் படையையும் படைக்கலங்களையும் உள்ளிடாகக் குறிப்பிட்ட தெனினுமாம். (6)

### வெண்கொடிகளின் தோற்றம்

869. தானை மாக்கொடி மழைபொதுத் துயர்நெடுந் தாள
மான மாற்றரு மாருதி முனியநா ளுலந்து
போன மாற்றலர் புகழெனக் கால்பொரப் புரண்ட
வான யாற்றுவெண் டிரையென வரம்பில பரந்த.

*தானை மா கொடி மழை பொதுத்து உயர் நெடும் தாள,*
*மான மாற்று அரு மாருதி முனிய நாள் உலந்து*
*போன மாற்றலர் புகழ் எனக் கால் பொரப் புரண்ட ;*
*வான யாற்று வெண் திரை என வரம்பு இல பரந்த.*

*நீண்ட கால்களை யுடையனவும், வானத்தைக் குத்துவது போல் உயர்ந்தனவுமான போர்க் கொடிகள், காற்றால் மோதப் பெற்று அசைவது வான நதியின் வெள்ளிய அலைகள் அசைவன போலவும், முன்னர் அநுமனது சிற்றத்தால் தம் வாழ்நாள் கெட்டு வீரசுவர்க்கம் எய்திய அரக்கரது புகழ்போலவும் வானத்தில் பரந்து விளங்கின. நெடுந்தாள - நீண்ட கால்களை யுடையன. மாற்றலர் - அநுமனுக்கு மாற்றாராக வந்த அரக்கர். கால் பொர - காற்று மோத. வானயாறு - வான நதியாகிய ஆகாய கங்கை. புகழை வெண்ணிறமாகக் கூறுவது மரபு. கொடி, புகழ் என, திரை என, பரந்த என்க.* (7)

### படைகளின் போர்க்கோலம்

**870.** விரவு பொற்கழல் விசித்தனர் வெரிநுற்று விளங்கச்
சரமொ டுக்கின புட்டிலுஞ் சாத்தினர் சமையக்
கருவி புக்கன ரரக்கர்மாப் பல்லணங் கலினப்
புரவி யிட்டதேர் பூட்டின பருமித்த பூட்கை.

*விரவு பொன் கழல் விசித்தனர்; வெரிந் உற்று விளங்கச்*
*சரம் ஒடுக்கின புட்டிலும் சாத்தினர்; சமையக்*
*கருவி புக்கனர் அரக்கர்; மா பல்லணம் கலினப்*
*புரவி இட்ட; தேர் பூட்டின; பருமித்த பூட்கை.*

*அரக்கர் கழல் விசித்தனர்; புட்டிலும் வெரிந் சாத்தினர்; கருவி புக்கனர்; புரவி பல்லணம் இட்ட; தேர் பூட்டின; பூட்கை பருமித்த: என முடிக்க. விசித்தனர் - கட்டினர். சரம் ஒடுக்கின புட்டில் - அம்பு நிறைந்த கூடை; அம்பறுத்தூணி. வெரிந் - முதுகு. கருவி - மெய்ப்பை; கவசம். மா பல்லணம் - சிறந்த சேணம். கலினப் புரவி - கடிவாளம் பூட்டிய குதிரை. பருமித்த - பருமம் பூட்ட அழகுபெற்றன; பருமம் - யானைக் கழுத்து மெத்தை. பூட்கை - யானை. இட்ட, பூட்டின, பருமித்த என்பன செயப்பாட்டுப் பொருளன.* *(8)*

### படைகளால் நிகழ்ந்தவை

**871.** ஆறு செய்தன வானையின் மதங்களவ் வாற்றைச்
சேறு செய்தன தேர்களின் சில்லியச் சேற்றை
நீறு செய்தன புரவியின் குரமற்றை நீற்றை
ஈறு செய்தன வப்பரிக் கலினமா விலாழி.

*ஆறு செய்தன ஆனையின் மதங்கள்; அவ் ஆற்றைச்*
*சேறு செய்தன தேர்களின் சில்லி; அச் சேற்றை*
*நீறு செய்தன புரவியின் குரம்; மற்றை நீற்றை*
*ஈறு செய்தன அப் பரிக் கலின மா விலாழி.*

*மதங்கள், ஆறு செய்தன; ஆற்றை, சில்லி சேறு செய்தன; சேற்றை, குரம் நீறு செய்தன; நீற்றை விலாழி ஈறுசெய்தன. சில்லி - தேருருளை. நீறு - பொடி; துகள். குரம்-குதிரைக் குளம்பு. ஈறு செய்தன-இறுகச் செய்தன; இறுக என்பது ஈறு என நின்றது. விலாழி-குதிரையின் வாய் நுரை.* *(9)*

## படைகளின் பேரொலி

**872.** வழங்கு தேர்களி னிடிப்பொடு வாசியி னுர்ப்பும்
முழங்கு வெங்களிற் றதிர்ச்சியு மொய்கழ லொலியும்
தழங்கு பல்லியத் தமலையுங் கடையுகத் தாழி
முழங்கு மோதையின் மும்மடங் கெழுந்தது முடுகி.

*வழங்கு தேர்களின் இடிப்பொடு வாசியின் ஆர்ப்பும்,*
*முழங்கு வெம் களிற்று அதிர்ச்சியும், மொய் கழல் ஒலியும்,*
*தழங்கு பல் இயத்து அமலையும், கடையுகத்து ஆழி*
*முழங்கும் ஓதையின் மும்மடங்கு எழுந்தது முடுகி.*

தேர், புரவி, களிறு, வீரக்கழல்களின் ஒலியும் பல இசைக் கருவிகளின் ஒலியும் (ஒன்று கூடி) யுக முடிவில் (உலகை அழிக்க எழுகின்ற) பெருங்கடலின் பேரோலியிலும் மூன்று மடங்கு உயர்ந்து எழுந்தன. இடிப்பு, ஆர்ப்பு, அதிர்ச்சி, ஒலி, அமலை, ஓதை என்பன (ஒன்றற்கொன்று சிறிது வேறுபாடுடைய) ஒலி என்னும் பொருளை உணர்த்தும் பல சொற்கள். அரக்கர் படையில் நால்வகைப் படையும் மிக்கிருந்தன என்பதை அப்படைகள் வழங்குவதால் உண்டாகும் ஒலி மிகுதியால் கூறினார். வாசி – குதிரை. களிறு–யானை. மொய்கழல் – வீரர்கள் காலில் அணியும் வெற்றியால் நிறைந்த கழல் என்னும் அணி. பல்லியம்–பலவகையான வாத்தியங்கள். ஆழி – பெருங்கடல். முடுகி – விரைந்து; இங்கு ஓர் ஒலியுடன் மற்றொன்று விரைவில் சேர்தலால் உளதாகும் ஒலி முழக்கத்தின் உயர்வு. (10)

## படைகளின் அளவு

**873.** ஆழித் தேர்த்தொகை யைம்பதி னுயிர மஃதே
சூழிப் பூட்கைக்குத் தொகையவற் றிரட்டியின் றொகைய
ஊழிக் காற்றன்ன புரவிமற் றவற்றினுக் கிரட்டி
பாழித் தோணெடும் படைக்கலப் பதாதியின் பகுதி.

*ஆழித் தேர்த் தொகை ஐம்பதினுயிரம்; அஃதே*
*சூழிப் பூட்கைக்குத் தொகை; அவற்று இரட்டியின் தொகைய*
*ஊழிக் காற்று அன்ன புரவி; மற்று அவற்றினுக்கு இரட்டி*
*பாழித் தோள் நெடும் படைக்கலப் பதாதியின் பகுதி.*

(அப்படைத்திரளின் எண்ணிக்கை) தேரும் யானையும் வகைக்கு ஐம்பதினுயிரமும், குதிரை நூறுயிரமும், காலாள் இருநூறுயிரமுமாம்.

ஆழித்தேர் - உருளையையுடைய தேர். சூழிப்பூட்கை - நெற்றிப்பட்டம் அணிந்த யானை. பாழித் தோள் - வீரம் மிகுந்த தோள். பதாதி - காலாட் படை. (11)

## படைகளின் நெருக்கம்

874. கூய்த்த ருந்தொறுந் தருந்தொறுந் தானைவெங் குழுவின்
நீத்தம் வந்துவந் தியங்கிடு மிடனின்றி நெருங்கக்
காய்த்த மைந்தவெங் கதிர்ப்படை யொன்ரென்று கதுவித்
தேய்த்தெ ழுந்தன பொறிக்குல மழைக்குலந் தீய.

கூய்த் தரும் தொறும், தரும் தொறும், தானை வெம் குழுவின்
நீத்தம் வந்து வந்து இயங்கிடும் இடன் இன்றி நெருங்க,
காய்த்து அமைந்த வெம் கதிர்ப் படை ஒன்று ஒன்று கதுவித்
தேய்த்து எழுந்தன; பொறிக் குலம் மழைக் குலம் தீய.

(படைத் தலைவர்) கூப்பிடக் கூப்பிடக் கொடிய காலாட் படையின் கடல் (போன்ற கூட்டம்) இயங்குவதற்கும் இடமில்லாத வண்ணம் வந்து வந்து நெருங்குவதாயிற்று. (அப் படையிலுள்ளோர் பிடித்திருந்த) பழுக்கக் காய்ச்சித் திட்டியமைந்த ஒளி வீசும் வேல் (படை நெருக்கத்தால்) ஒன்ரேடொன்று உராய்வதால், நீர் மிகுந்த மேகங்களின் கூட்டம் தீய்ந்து போம் வண்ணம், நெருப்புப் பொறிகள் எழுந்தன. தொறும் என்பது, அடுத்தடுத்து, ஆங்காங்கு எனப் பொருள்பட நிற்கும் ஓர் இடைச்சொல். நீத்தம்-கடல். வெம் கதிர்ப் படை-கொடிய வேற்படை. கதுவி-ஒன்றை யொன்று பற்றி. பொறிக்குலம்-தீப்பொறிகளின் கூட்டம். தானை வெம் குழுவின் நீத்தம் நெருங்க, கதிர்ப்படை கதுவித் தேய்த்து மழைக்குலம் தீய, பொறிக்குலம் எழுந்தன என முடிக்க. (12)

## யானைப் படை

875. பண்ம ணிக்குலம் யானையின் புடைதொறும் பரந்த
ஒண்ம ணிக்குல மழையிடை யுருமென வொலிப்பக்
கண்ம ணிக்குலங் கனலெனக் காந்துவ கதுப்பின்
தண்ம ணிக்குல மழையெழு கதிரெனத் தழைப்ப.

பண் மணிக் குலம் யானையின் புடைதொறும் பரந்த,
ஒண் மணிக் குலம் மழை இடை உரும் என ஒலிப்ப;
கண் மணிக் குலம் கனல் எனக் காந்துவ; கதுப்பின்
தண் மணிக் குலம் மழை எழு கதிர் எனத் தழைப்ப.

மேகத்திடையே தோன்றும் இடிபோன்றும், கதிரவன்போன்றும், யானையின் பக்கங்களிலே பரவியுள்ள ஒலி மிகுந்த மணிகளும், கன்னங்களில் அணியப்பட்டுள்ள அரதனத் தொகுதிகளும் விளங்க, அவற்றின் கண்களின் கருவிழிகள் நெருப்புப்போல ஒளிவிசின. பண்-போர்க் கோலம் பூண்ட. மணி-அழகிய. குலம்-உயர்ந்த இலக்கணங்கள் அமைந்த; சிறந்த. புடை-பக்கம். இரண்டாவது மணி ஒலிக்கும் மணியையும், மூன்றாவது மணி கண்மணியையும், நான்காவது மணி மாணிக்கம் அரதனம் முதலிய மணிகளையும் குறிப்பனவாகும். குலம் மூன்றிடத்தும் கூட்டம் என்னும் பொருளது. உரும்-இடி. காந்துவ-ஒளி விசுவ. கதுப்பு-கன்னம். தழைப்ப-மிக்க ஒளி விசுவ. இச்செய்யுள் 25 என்னும் குறியிடுள்ள சுவடியில் காணப்பெறவில்லை. (13)

## அரக்க வீரருக்கு இரங்கிச் சுற்றத்தார் தடுத்தல்

**876.** தொக்க தம்புடை சுரிகுழன் மடந்தையர் தொடிக்கை
மக்க டாயர்மற் றியாவரும் தடுத்தனர் மறுகி
ஒக்க வேகுதுங் குரங்கினுக் குயிர்தர வொருவர்
புக்கு மீண்டில ரென்றழு திரங்கினர் புலம்பி.

தொக்க தம்புடை சுரிகுழல் மடந்தையர், தொடிக்கை
மக்கள், தாயர், மற்று யாவரும் தடுத்தனர் மறுகி;
'ஒக்க ஏகுதும் குரங்கினுக்கு உயிர் தர; ஒருவர்
புக்கு மீண்டிலர்' என்று அழுது இரங்கினர் புலம்பி.

(போருக்குப் புறப்படும் அரக்க விரர்களைச்) சூழ்ந்துள்ள மனைவியர், மக்கள், தாயர் (முதலிய சுற்றத்தார்) யாவரும் ('குரங்கிடம் போர் செய்யப்) புகுந்து ஒருவரேனும் மீண்டிலர், குரங்கினுக்கு உயிரைத் தர (வேண்டுமானால்) நாம் அனைவரும் ஒருங்கு செல்வோம்' என்று அழுது புலம்பி, இரங்கிப் (போருக்குச் செல்லும் விரர்களை) மனம் கலங்கித் தடுத்தார்கள். ஒத்த நிலையிற் பழகும் மனைவி, தாம் காப்பாற்ற வேண்டிய குழந்தைகள், தம்மைக் காப்பாற்றிய முதிர்ந்த தாயர் முதலிய சுற்றத்தார் இரங்கித் தடுக்கும் நிலையும், 'நாம் அனைவரும் ஒருமிக்க மடிவோம்' என்னும் ஒற்றுமை மிகுந்த பற்றுதலும் உருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. போர் எனும் பெயரில் செல்வோரெல்லாம் குரங்கினுக்கு உயிர் தருவதற்கே செல்கின்றார் என்ற நயம் கருதத்தக்கது. சுரிகுழல் - சுருண்ட கூந்தல். தொடிக்கை - வளையணிந்த கை. மறுகி-மனங்கலங்கி. (14)

## ஐவரும் படையொடு செல்லல்

877. கைப ரந்தெழு சேனையங் கடலிடைக் கலந்தார்
செய்கை தாம்வருந் தேரிடைக் கதிரெனச் செல்வார்
மெய்க லந்தமா நிகர்வரு முவமையை வென்ருர்
ஐவ ரும்பெரும் பூதமோ ரைந்துமொத் தமைந்தார்.

கை பரந்து எழு சேனை அம் கடல் இடைக் கலந்தார்;
செய்கை தாம் வரும் தேர் இடைக் கதிர் எனச் செல்வார்;
மெய்கலந்த மா நிகர்வரும் உவமையை வென்ருர்;
ஐவரும் பெரும் பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார்.

ஐம்பெரும் பூதங்கள் போன்ற ஆற்றல் மிக்க ஐந்து படைத் தலைவரும் மானுட மடங்கல் எனக் கூறும் உவமையையும் (தம் வலிமையினுல்) வென்றவர்களாக, தம் பக்கத்திலே பரந்து நின்ற படை என்னுங் கடலிடை வேலைப்பாடமைந்த தம் தேரில் கதிரவன்போல் சென்ருர். கைபரந்து-பக்கங்களில் பரவி. செய்கை தாம் வரு தேர்-வேலைப்பாடமைந்த தம்முடைய தேர். மெய்கலந்த மா-மானுட மடங்கல்; நரசிங்கம். ஐம்பெரும் பூதம்-நிலம், நீர், தீ, கால், வான் என்னும் ஐம்பருப் பொருள். வென்ருர், ஒத்தமைந்தார், கலந்தார், செல்வார் என முடிக்க. (15)

## ஐவரின் வீரம் 878-886

878. முந்தி யம்பல கறங்கிட முறைமுறை பொறிகள்
சிந்தி யம்புறு கொடுஞ்சிலை யுருமெனத் தெறிப்பார்
வந்தி யம்புறு முனிவர்க்கு மமரர்க்கும் வலியார்
இந்தி யம்பகை யாயவை யைந்துமொத் தியைந்தார்.

முந்து இயம் பல கறங்கிட, முறை முறை பொறிகள்
சிந்தி, அம்பு உறு கொடும் சிலை உருமு எனத் தெறிப்பார்;
வந்து இயம்புறு முனிவர்க்கும் அமரர்க்கும் வலி ஆர்,
இந்தியம் பகை ஆயவை ஐந்தும் ஒத்து இயைந்தார்.

முனிவர்க்கும் அமரர்க்கும் வலி ஆர் பகை ஆயவை இந்தியம் ஐந்தும் ஒத்து இயைந்தார், முந்து......கறங்கிட,......சிந்தி......தெறிப்பார் என முடிக்க. முந்து இயம்பல கறங்கிட-முன்புறம் பலவகையான இசைக் கருவிகள் ஒலிக்க. பொறிகள் சிந்தி-(கடும் சினக்கனலால் எழுந்த) தீப்பொறிகளைச் சிந்தி. அம்பு உறும் கொடும் சிலை-அம்பு பூட்டப் பெற்ற வளைந்த வில். உருமு எனத் தெறிப்பார்-இடிபோல ஒலி எழும்

வண்ணம் நாணைத் தெறிப்பார். வந்து......இயைந்தார்-(அருளினால் தங்களிடம்) வந்து (நல்லறிவு) கூறும் முனிவர்களுக்கும் அமரர்களுக்கும் வலிய பகையான ஐந்து இந்திரியங்களும் போலப் பொருந்தியவர்கள். தொகையாலும் இடர்செய்யும் தொழிலாலும் இந்திரியங்கள் உவமை. இந்தியம் - இந்திரியம், பொறி; மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐந்து. *(16)*

**879.** வாச வன்வயக் குலிசமும் வருணன்வன் கயிறும்
ஏசி றென்றிசைக் கிழவன்ற னெரிமுனை யெழுவும்
ஈசன் வன்றனிச் சூலமு மென்றிவை யொன்றும்
ஊசி போழ்வதோர் வடுச்செயா நெடும்புய முடையார்.

*வாசவன் வயக் குலிசமும். வருணன் வன் கயிறும்,*
*ஏசில் தென் திசைக் கிழவன் தன் எரி முனை எழுவும்,*
*ஈசன் வன் தனிச் சூலமும் என்று இவை ஒன்றும்*
*ஊசி போழ்வது ஓர் வடுச் செயா நெடும் புயம் உடையார்.*

குலிசமும், கயிறும், எழுவும், சூலமும் ஒன்றும் வடுச் செயாப் புயம் உடையார் (ஐவர் படைத் தலைவர்) என்க. வாசவன்-இந்திரன். வருணன்-மழைக்கு இறைவன். தென்திசைக் கிழவன்-இயமன். ஈசன்-சிவபெருமான். இந்த நான்கு தெய்வங்களுக்கும் உரியன மேல் குறித்த நான்கு படைகளும். இந்நான்கு படைகளின் வன்மையை விளக்கற்கு வய, வன், எரிமுனை, வன்தனி என்னும் அடைமொழிகள் முறையே சேர்ந்துள்ளன. ஊசி போழ்வது-ஊசி ஊடுருவிச் செல்லக்கூடிய (மிகச் சிறிய). மேற்குறித்த தெய்வப் படைகளும், ஊசி குத்துவதோர் வடு அளவு கூட இவர்களைத் துன்புறுத்தா என இவர்களுடைய தோள் வலி கூறியவாறும். *(17)*

**880.** சூர்த டிந்தவன் மயிலிடைப் பறித்தவன் றோகை
பார்ப யந்தவ னன்னத்தி னிறகிடைப் பறித்த
மூரி வெஞ்சிற கிடையிட்டுத் தொடுத்தன முறுக்கி
வீர சூடிகை நெற்றியி னயலிட்டு விசித்தார்.

*சூர் தடிந்தவன் மயில் இடைப் பறித்த வன் தோகை,*
*பார் பயந்தவன் அன்னத்தின் இறகிடைப் பறித்த*
*மூரி வெம் சிறகு, இடை இட்டுத் தொடுத்தன முறுக்கி*
*வீர சூடிகை நெற்றியின் அயல் இட்டு விசித்தார்.*

சூரபன்மாவைக் கொன்றவனுடைய மயிலின் தோகையிலிருந்து பறித்த பீலியையும், உலகத்தைப் படைத்தவனுடைய அன்னத்தின் இறகிலிருந்து பறித்த சிறகுகளையும் இடையிடையே இட்டுத் தொடுத்த வீர சுட்டியை நெற்றியில் கட்டிக் கொண்டிருப்பவர்கள். சூர் தடிந்தவன்–முருகன். அவன் ஊர்தி மயில். பார் பயந்தவன்–நான்முகன்; அவன் ஊர்தி அன்னம். விர சூடிகை-விரத்துக்கு அறிகுறியாக அணிந்துள்ள சுட்டி. நெற்றியின் அயல்-நெற்றியினிடம்; அயல்-இடம். இட்டு-வைத்து. விசித்தார்-கட்டியவர். (18)

881. பொன்றி ணிந்ததோ ளிராவணன் மார்பொடும் பொருத
அன்றி ழுந்தகோ டரிந்திடு மழகுறு குழையர்
நின்ற வன்றிசை நெடுங்களி யானையி னெற்றி
மின்றி ணிந்தன வோடையின் வீரபட் டத்தர்.

பொன் திணிந்த தோள் இராவணன் மார்பொடும் பொருத
அன்று இழந்த கோடு அரிந்து இடும் அழகு உறு குழையர்;
நின்ற வன் திசை நெடும் களி யானையின் நெற்றி
மின் திணிந்த அன ஓடையின் வீரபட்டத்தர்.

பொன்னாலாகிய அணிகள் நெருங்கி விளங்கும் தோள்களையுடைய இராவணன் மார்புடன் முன்பு பொருது (திசையானைகள்) இழந்த கொம்புகளில் (எஞ்சி நின்ற பகுதியைத் தாம்) அரிந்து அழகு பெற்ற குழையாகக் கொண்டவர்கள். அந்த யானைகளின் மின்னல் திணிந்து ஒளிர்வன போன்று திகழும் நெற்றிப்பட்டத்தைத் தங்களுக்கு வீர பட்டமாக அணிந்தவர்கள். குழை-காதணி. மின் திணிந்த அன ஓடை. ஓடை-நெற்றிப்பட்டம். யானையின் கோட்டால் காதணி செய்வது "நாக மருப்பின் இயன்ற தோடும்" என்னும் சிந்தாமணி யுள்ளும் (2440) காண்க. இச்செய்யுள் 33 என்னும் குறியிடுள்ள சுவடியில் காணப்பெறவில்லை. (19)

882. நிதிநெடுங் கிழவனை நெருக்கி நீணகர்ப்
★ பதியொடும் பெருந்திருப் பறித்த பண்டைநாள்
விதியென வன்னவன் வெங்கிட் டோடவே
பொதியொடும் வாரிய பொலன்கொள் பூணினர்.

நிதி நெடும் கிழவனை நெருக்கி, நீள் நகர்ப்
பதியொடும் பெரும் திருப் பறித்த பண்டைநாள்,
விதி என அன்னவன் வெங்கிட்டு ஓடவே
பொதியொடும் வாரிய பொலன் கொள் பூணினர்.

பண்டை நாள் (இராவணன்) குபேரனை வலியழித்து அவன் நிதிக் குவையைப் பறித்தபோது, விதி என (நைந்து) புறங்கொடுத் தோடிய அவனுடைய அழகு மிக்க அணிகளைப் பொதியாக அள்ளி அணிந்துள்ள வர்கள். நிதி நெடும் கிழவன் (நெடுநிதிக்கிழவன்) - நிதிகளுக்கு உரியவனாகிய குபேரன். விதி என – பண்டைய வினைஎன. வெங்கிட்டு – முதுகு காட்டி. பொதி - மூட்டை. பொலன் - அழகு. (20)

**883.** இந்திர னிசையிழந் தேகு வானிகற்
றந்திமுன் கடவினன் முடுகத் தாமதன்
மந்தர வாலடி பிடித்து வல்லையேல்
உந்துதி யினியென வலிந்த வூற்றத்தார்.

இந்திரன் இசை இழந்து ஏகுவான், இகல்
தந்திமுன் கடவினன் முடுக, தாம் அதன்
மந்தர வால் அடி பிடித்து, 'வல்லையேல்
உந்துதி இனி' என வலிந்த ஊற்றத்தார்.

இசை இழந்து ஏகுவான் இந்திரன், இகல் தந்தி முடுக முன் கடவினன்; மந்தரம் அதன் வால் அடி பிடித்து, 'வல்லையேல் இனி உந்துதி' என வலிந்த ஊற்றத்தார். இசை - புகழ். இகல்-வலிமை. தந்தி-யானை. முடுக-விரைவாக. கடவினன்-செலுத்தினன். மந்தரம் அதன்-மந்தர மலை போன்ற அந்த யானையின். வல்லையேல் - வல்லமையுள்ளவனாக இருந் தால். உந்துதி - செலுத்துவாயாக. ஊற்றத்தார் - மிக்க வலிமை படைத் தவர். (21)

**884.** பானிறத் தந்தணன் பணி.ய னாகினின்
கோனினைத் திலனென வுலகங் கூறலும்
நீனிறத் திராவணன் முனிவு நீக்குவான்
காலனைக் காலினிற் கையிற் கட்டினர்.

'பால்நிறுத்து அந்தணன் பணியன் ஆகி நின்
கோல் நினைத்திலன்' என உலகம் கூறலும்
நில் நிறத்து இராவணன் முனிவு நீக்குவான்
காலனைக் காலினில் கையில் கட்டினுர்.

உலகம் ''(காலன்) அந்தணன் பணியனுகி, பால் நிறுத்து நின்கோல் நினைத்திலன்'' எனக் கூறலும், இராவணன் (முனிவு கொள்ள) அவனது முனிவுநீக்குவான் காலனைக் கட்டினுர் என்க. உலகம் - இலங் கையிலுள்ளோர். அந்தணன்-நான்முகன். பால் நிறுத்து-விதியைச் சீர் தூக்கிப் பார்த்து. கோல்-ஆட்சி. நீல் நிறம்-கருநிறம். காலன்-இயமன். (22)

885. மலைகளை நகுந்தட மார்பர் மால்கடல்
அலைகளை நகுநெடுந் தோள ரந்தகன்
கொலைகளை நகுநெடுங் கொலையர் கொல்லனூ
துலைகளை நகுமன லுமிழுங் கண்ணினுர்.

மலைகளை நகும் தட மார்பர், மால் கடல்
அலைகளை நகும் நெடும் தோளர், அந்தகன்
கொலைகளை நகும் நெடும் கொலையர், கொல்லன் ஊது
உலைகளை நகும் அனல் உமிழும் கண்ணினுர்.

மலைக்களையும் அலைகளையும் அந்தகன் கொலைகளையும் ஊது உலைகளை யும் எள்ளி நகைக்கும் மார்பும் கையும் கொலையும் கண்ணும் உடையவர் என்க. அந்தகன் - எமன். இயமன் கொலையினும் இவர்கள் கொலை விஞ்சியதென்க. அனல் உமிழும் கண்கள் கொல்லன் ஊது உலைகளிலும் மிக்கு, கனல் உமிழ்வன. (23)

886. தோல்கிளர் திசைதொறு முலகைச் சுற்றிய
சால்கிளர் முழங்கெரி தழங்கி யேறினும்
கால்கிளர்ந் தோங்கினுங் காலங் கையுற
மால்கடல் கிளரினுஞ் சரிக்கும் வன்மையார்.

தோல் கிளர் திசை தொறும் உலகைச் சுற்றிய
சால் கிளர் முழங்கு எரி தழங்கி ஏறினும்,
கால் கிளர்ந்து ஓங்கினும், காலம் கையுற
மால் கடல் கிளரினும், சரிக்கும் வன்மையார்.

காலம் கையுற, சால் கிளர் முழங்கு எரி, தோல் கிளர் திசை தோறும் உலகைச் சுற்றிய தழங்கி ஏறினும், கால் கிளர்ந்து ஓங்கினும் மால் கடல் கிளரினும் சரிக்கும் வன்மையார் : என இயைக்க. உலகைச் சுற்றிய என்பதை சால் முன்னும் மால் முன்னும் கூட்டிப் பொருள் காண்க. காலம் கையுற – கடையூழிக் காலம் பொருந்த. சால் – மிக. தோல் கிளர் திசை - திசை யானைகள் விளங்கும் திசைகள் ; தோல் – யானை. உலகைச் சுற்றிய – உலகத்தை வளைத்து அழிக்கும் பொருட்டு. முழங்கலும் தழங்கலும் ஏறலும் எரியின் தொழில். எரி – தீ. சரிக்கும் - (1) வலியழித்து விழச்செய்யும் (2) சஞ்சரிக்கும். (24)

### அணிவகுத்து நிற்கும் ஐவரை அனுமன் பார்த்தல்

**887.** இவ்வகை யனைவரு மெழுந்த தானையர்
மொய்கிளர் தோரண மதனை முற்றினர்
கையொடு கையுற வணியுங் கட்டினர்
ஐயனு மவர்நிலை யறிய நோக்கினன்.

இவ் வகை அனைவரும் எழுந்த தானையர்,
மொய் கிளர் தோரணம் அதனை முற்றினர் ;
கையொடு கையுற அணியும் கட்டினர்.
ஐயனும் அவர் நிலை அறிய நோக்கினன்.

இவ்வகையான (வன்மை பொருந்திய) ஐவரும் படையொடும் புறப்பட்டவர்களாய் வலிமை விளங்கும் தோரண வாயிலைச் சூழ்ந்து கொண்டார்கள். பக்கத்துக்குப் பக்கம் பொருந்தியிருக்கும்படி (படையை) அணியும் வகுத்தார்கள். அனுமனும் அரக்கர்களது நிலைமையை அறிந்துகொள்ளுவதற்காக (நன்றாக)ப் பார்த்தான். ஐயன் - அநுமன். அநுமனும் அணிவகுத்துநின்ற அரக்கர், தன் (வன்மையான) நிலைமையை அறிந்து அஞ்சுமாறு கூர்த்த நோக்கில் நோக்கினன் என்று ஈற்றடிக்குப் பொருள் கூறுதலும் உண்டு. (25)

### வானவர் மனநிலை

**888.** அரக்கர தாற்றலு மளவில் சேனையின்
தருக்குமம் மாருதி தனிமைத் தன்மையும்
பொருக்கென நோக்கிய புரந்த ராதியர்
இரக்கமு மவலமுந் துளக்கு மெய்தினர்.

அரக்கரது ஆற்றலும், அளவு இல் சேனையின்
தருக்கும், அம் மாருதி தனிமைத் தன்மையும்,
பொருக்கு என நோக்கிய புரந்தரர் ஆதியர்,
இரக்கமும், அவலமும், துளக்கும் எய்தினர்.

ஆற்றலும் தருக்கும் தனிமைத் தன்மையும் நோக்கிய புரந்தரராதியோர், இரக்கமும் அவலமும் துளக்கும் எய்தினர். அரக்கரது படைப் பெருக்கும் செருக்கும் அநுமனது தனிமையும் கண்ட விண்ணவர் அநுமன்பால் இரக்கமும் மனக்கலக்கமுங் கொண்டனர் என்பது கருத்து; தருக்கு – செருக்கு. புரந்தரர் ஆதியோர் – இந்திரன் முதலாய தேவர். துளக்கு – வருத்தம். (26)

### அரக்கர்படையை அனுமன் நோக்குதல்

889. இற்றன ரரக்கரிப் பகலு ளேயெனுக்
கற்றுணர் மாருதி களிக்குஞ் சிந்தையான்
முற்றுறச் சுலாவிய முடிவி றானையைச்
சுற்றுற நோக்கித்தன் றோளை நோக்கினுன்.

'இற்றனர் அரக்கர் இப் பகல் உளே' எனுக்
கற்று உணர் மாருதி களிக்கும் சிந்தையான்,
முற்று உறச் சுலாவிய முடிவு இல் தானையைச்
சுற்று உற நோக்கி, தன் தோளை நோக்கினுன்.

மேற் செய்யுளில் கூறியவாறு, விண்ணவர் அநுமனது தனிநிலைக்கு வருந்தும்போது, அநுமன், தன் தோள்வலிக்கு அரக்கர் பெரும்படை ஒரு பொருளல்ல என்னும் கருத்துடையவனுய்ச் சுற்றியுள்ள படையையும் பார்த்துத் தன் தோளையும் பார்த்து,அரக்கர் இன்றே அழிந்தனர் என்னும் திண்ணிய எண்ணத்தால், களிப்புற்றிருந்தான் என்பது போந்த பொருள். சுலாவிய - சூழ்ந்துள்ள. முடிவு இல் - எல்லையில்லாத. (27)

### அரக்கர் அனுமனைப்பற்றிக் கருதல்

890. புன்றலைக் குரங்கிது போலு மாலமர்
வென்றது விண்ணவர் புகழை வேரொடும்
தின்றவல் லரக்கரைத் திருகித் தின்றதால்
என்றன ரயிர்த்தனர் நிருத ரெண்ணிலார்.

'புன்தலைக் குரங்கு இது போலும் ஆல் அமர்
வென்றது ; விண்ணவர் புகழை வேரொடும்
தின்ற வல் அரக்கரைத் திருகித் தின்றது' ஆல்
என்றனர், அயிர்த்தனர் நிருதர் எண் இலார்.

எண் இலார் நிருதர், 'இது அமர்வென்றது ; விண்ணவர் புகழை வேரொடும் தின்ற வல் அரக்கரைத் திருகித் தின்றது ; குரங்கு போலும்?' என்றனர். அயிர்த்தனர் - தோற்றத்தில் குரங்குபோலத் தோன்றும் இது, உண்மையில் குரங்குதானே என அரக்கர் ஐயுற்றனர். (28)

## அனுமன் பேருருவம் கொள்ளல்

**891.** ஆயிடை யனுமனு மமரர் கோனகர்
வாயினின் றவ்வழிக் கொணர்ந்து வைத்தமாச்
சேயொளித் தோரணத் தும்பர்ச் சேணெடு
மீயுயர் விசும்பையுங் கடக்க வீங்கினன்.

ஆயிடை அனுமனும் அமரர்கோன் நகர்
வாயில் நின்று அவ்வழிக் கொணர்ந்து வைத்த மாச்
சேயொளித் தோரணத்து உம்பர்ச் சேண் நெடு
மீ உயர் விசும்பையும் கடக்க வீங்கினன்.

அப்பொழுது அநுமனும், அந்த இடத்தில் அமரர் கோன் நகரிலிருந்து கொண்டு வந்து வைத்திருக்கும் மிக்க செந்நிற வொளியுடைய தோரண வாயிலின்மேலிருந்தபடியே மிகமிக மேலே உயர்ந்த வானத்தையும் கடந்து செல்லும்படி பேருருவம் கொண்டான். உம்பர் - மேல். சேண் நெடு மீ உயர் என்பது, நெடுமையின் பெருமை தோன்ற நின்றது. விங்கல் – பேருருவம் கொள்ளல். (29)

## அரக்கர் சினந்து படைவழங்கல்

**892.** வீங்கிய வீரனை வியந்து நோக்கிய
தீங்கிய லரக்கருந் திருகி னார்சினம்
வாங்கிய சிலையினர் வழங்கி னார்படை
ஏங்கிய சங்கின மிடித்த பேரியே.

வீங்கிய வீரனை வியந்து நோக்கிய
தீங்கு இயல் அரக்கரும் திருகினர் சினம்,
வாங்கிய சிலையினர், வழங்கினர் படை ;
ஏங்கிய சங்கு இனம் ; இடித்த பேரியே.

பேருருவம் கொண்ட (அநுமனுகிய) வீரனை மருண்டு பார்த்த, தீமையே இயற்கையாகக் கொண்ட அரக்கர்களும் சினம் மிக்கவர்களாய், வில்லை வளைத்து அம்புகளை எய்தார்கள் ; அப்போது சங்குகள் ஒலித்தன ; முரசுகள் இடிபோல் பேரொலி செய்தன. திருகல் - பெருஞ்சினம் பொங்கல், சினம் திருகல் என்பது ஒரு வழக்கு. வாங்கிய - வளைத்த. (30)

## அரக்கர் எறிந்த படைக்கலங்களை அனுமன் பொருட்படுத்தாமை

**893.** எறிந்தன ரெய்தன ரெண்ணி றந்தன
பொறிந்தெழு படைக்கல மரக்கர் பொங்கினர்
செறிந்தன மயிர்ப்புறந் தினவு தீர்வுறச்
சொறிந்தன ரெனவிருந் தையன் றூங்கினன்.

எறிந்தனர், எய்தனர், எண் இறந்தன
பொறிந்து எழு படைக்கலம், அரக்கர்; பொங்கினர்;
செறிந்தன மயிர்ப் புறம்; 'தினவு தீர்வுறச்
சொறிந்தனர்' என இருந்து ஐயன் தூங்கினன்.

அரக்கர், பொறிந்து எழு படைக்கலம் எண் இறந்தன, எறிந்தனர், எய்தனர்; ஐயன் மயிர்ப்புறம் செறிந்தன; 'தினவு தீர்வுறச் சொறிந்தனர்' என இருந்து தூங்கினன் (ஐயன்); பொங்கினர் (அரக்கர்). எறிந்தனவும் எய்தனவுமான எண் இறந்த படைக்கலம் அநுமன் மயிர்ப் புறம் செறிந்து தினவு தீரச் சொறிந்த தொப்ப நின்றனவே யன்றி எவ்வகை இடையூறும் செய்தனவல்ல ; அநுமனும் பொருட்படுத்தாது உறங்கினன் ; இது கண்ட அரக்கர் (சினத்தால்) பொங்கினர். (31)

## அனுமன் இருப்புத்தூணை எடுத்தல்

**894.** உற்றுடன் றரக்கரு மூருத்து டற்றினர்
செற்றுற நெருக்கினர் செருக்குஞ் சிந்தையர்
மற்றையர் வரும்பரி சிவரை வல்விரைந்
தெற்றுவ னெனவெழு வனும னேந்தினன்.

உற்று, உடன்று, அரக்கரும், உருத்து, உடற்றினர்;
செற்று உற நெருக்கினர்; செருக்கும் சிந்தையர்;
'மற்றையர் வரும் பரிசு இவரை வல் விரைந்து
எற்றுவன்' என, எழு, அனுமன் ஏந்தினன்.

செருக்கும் சிந்தையர் அரக்கரும், உற்று, உடன்று, உருத்து, உடற்றினர்; செற்று உற நெருக்கினர்; அநுமன், 'மற்றையர் வரும் பரிசு இவரை வல் விரைந்து எற்றுவன்' என எழு ஏந்தினன். செருக்கும்...... அரக்கர் - இயற்கையாகவே படைச்செருக்குடைய அரக்கர். உற்று - (அனுமன் இவர்கள் போக்கிய படைக்கலங்களைப் பொருட்படுத்தாமையால்) நாணம் உற்று; உடன்று - சினத்தால் மாறுபட்டு; உருத்து - கடுஞ் சினம் மூண்டு; உடற்றினர் - விரைந்து பரபரப்புடன் படைக்கலங்களை விட்டனர். செற்று உற - இறந்து பட. நெருக்கினர் - (அநுமனைப்) பல வழியாலும் தாக்கினர். 'மற்றையர்.....எற்றுவன்' - மற்ற அரக்கரும் இங்கு ஓடிவரும்வண்ணம் இவர்களை அழிப்பேன். எழு - இருப்புத் தூண். (32)

## அநுமன் செய்த போர் 895 - 900

**895.** ஊக்கிய படைகளு முருத்த வீரரும்
தாக்கிய பரிகளுந் தடுத்த தேர்களும்
மேக்குயர் கொடியுடை மேக மாலைபோல்
நூக்கிய கரிகளும் புரள நூக்கினன்.

ஊக்கிய படைகளும், உருத்த வீரரும்,
தாக்கிய பரிகளும், தடுத்த தேர்களும்,
மேக்கு உயர் கொடி உடை மேக மாலை போல்
நூக்கிய கரிகளும் புரள நூக்கினன்.

படைகளும், வீரரும், பரிகளும், தேர்களும், கரிகளும் புரள நூக்கினன். அனுமன் என மேற் செய்யுளில் வந்துள்ளதையே இது முதல் ஆறு செய்யுள்களுக்கும் எழுவாயாகக் கொள்க. தடுத்த-அநுமனைத் தடுத்த. மேக்கு உயர் - மேலிடமாக உயர்ந்த. யானைகளின் கூட்டம் மேகங்களின் வரிசைபோல் தோன்றியது. யானையின் மீது கொடிவைத்தல் மரபு. மேகமாலை - மேகங்களின் வரிசை. மாலை - ஒழுங்கு; வரிசை. (33)

**896.** வார்மதக் கரிகளின் கோடு வாங்கிமாத்
தேர்படப் புடைக்குமத் தேரின் சில்லியால்
வீரரை யுருட்டுமவ் வீரர் வாளினல்
தாருடைப் புரவியைத் துணியத் தாக்குமால்.

*வார் மதக்கரிகளின் கோடு வாங்கி, மா*
*தேர் படப் புடைக்கும்; அத் தேரின் சில்லியால்*
*வீரரை உருட்டும்; அவ் வீரர் வாளினல்*
*தார் உடைப் புரவியைத் துணியத் தாக்கும் ஆல்.*

மதம் வழியும் யானைகளின் கோட்டைப் பறித்துத் தேர்கள் சிதையும் படி அடிப்பான்; சிதைந்த தேர்களின் உருளைகளால் வீரர்கள் உருளும் படி உருட்டுவான்; உருண்ட வீரர்களது வாளைக் கொண்டு கிண்கிணி மாலை அணிந்த புரவிகள் துணிபட்டு விழும்படி தாக்குவான் (அந்த அநுமன்). சில்லி – உருளை. தார் – கிண்கிணிமாலை. (34)

**897.** இரண்டுதே ரிரண்டுகைத் தலத்து மேந்திவே
றிரண்டுமால் யானைபட் டுருள வெற்றுமால்
இரண்டுமால் யானைகை யிரண்டி னேந்திவே
றிரண்டுபா லினும்வரும் பரியை யெற்றுமால்.

*இரண்டு தேர் இரண்டு கைத்தலத்தும் ஏந்தி, வேறு*
*இரண்டு மால் யானை பட்டு உருள எற்றும் ஆல்;*
*இரண்டு மால் யானை கை இரண்டின் ஏந்தி வேறு*
*இரண்டு பாலினும் வரும் பரியை எற்றும் ஆல்.*

இரண்டு தேர்களை இரண்டு கைகளிலும் ஏந்தி, வேருன இரண்டு பெரிய யானைகள் இறந்துபட்டு உருளும்வண்ணம் உருட்டுவான். இரண்டு பெரிய யானைகளை இரண்டு கைகளிலும் ஏந்தி வேறு இரண்டு பக்கங்களிலும் வரும் குதிரைகளை மோதுவான் (அநுமன்). (35)

**898.** மாயிரு நெடுவரை வாங்கி மண்ணிலிட்
டாயிரந் தேர்பட வரைக்கு மாலழித்
தாயிரங் களிற்றையோர் மரத்தி னலடித்
தேயெனு மாத்திரத் தெற்றி முற்றுமால்.

மா இரு நெடு வரை வாங்கி, மண்ணில் இட்டு,
ஆயிரம் தேர் பட அரைக்கும் ஆல்; அழித்து
ஆயிரம் களிற்றை ஓர் மரத்தினல் அடித்து,
ஏ எனும் மாத்திரத்து எற்றி முற்றும் ஆல்.

மிகப் பெரிய மலையைப் பேர்த்தெடுத்து ஆயிரம் தேர்கள் அழியும்படி மண்ணின்மேல் வைத்து அரைப்பான்; ஒரு மரத்தைக்கொண்டு ஆயிரம் யானைகளை அடித்து மாத்திரைப் பொழுதில் உயிர் ஒழியச் செய்வான் (அநுமன்). (36)

**899.** உதைக்கும்வெங் கரிகளை யுழக்குந் தேர்களை
மிதிக்கும்வன் புரவியைத் தேய்க்கும் வீரரை
வதிக்கும்வல் லெழுவினு லரைக்கு மண்ணிடைக்
குதிக்கும்வன் றலையிடைக் கடிக்குங் குத்துமால்.

உதைக்கும் வெம் கரிகளை; உழக்கும் தேர்களை;
மிதிக்கும் வன் புரவியை; தேய்க்கும் வீரரை;
வதிக்கும் வல் எழுவினுல், அரைக்கும் மண் இடை;
குதிக்கும் வன் தலையிடை; கடிக்கும் குத்தும் ஆல்.

கொடிய யானைகளை உதைப்பான்; தேர்களைச் சிதைப்பான்; வலிய குதிரைகளை மிதிப்பான்; வீரரைத் தேய்ப்பான்; இவைகளை வதை செய்யும் வலிய இருப்புத்தாணுல் மண்மேலிட்டு அரைப்பான்; வலிய (படைகளின்) தலைகள்மேல் குதிப்பான்; கடிப்பான்; குத்துவான் (அநுமான்). (37)

**900.** விசையின்மான் றேர்களுங் களிறும் விட்டகன்
றிசையுமா காயமுஞ் செறியச் சிந்துமால்
குசைகொள்பாய் பரியொடுங் கொற்ற வேலொடும்
பிசையுமா லரக்கரைப் பெருங்க ரங்களால்.

விசையின் மான் தேர்களும் களிறும் விட்டு அகன்
திசையும் ஆகாயமும் செறியச் சிந்தும் ஆல்;
குசை கொள் பாய் பரியொடும், கொற்ற வேலொடும்
பிசையும் ஆல் அரக்கரைப் பெரும் கரங்களால்.

மான் தேர்களும் களிறும் விசையின் விட்டு, அகன் திசையும் ஆகாயமும் செறியச் சிந்தும்; அரக்கரைக் குசைகொள் பாய் பரியொடும், கொற்ற

வேலொடும், பெருங்கரங்களால் பிசையும். மான்-குதிரை. விசையின் – விரைவாக. சிந்தும் – வீசும். குசை – கடிவாளம். பரி-குதிரை. (38)

### அநுமன் கடலில் வீழ்த்திய படைகள் 901-904

**901.** தீயுறு பொறியுடைச் செங்கண் வெங்கைமா
மீயுறத் தடக்கையால் வீரன் வீசுதோ
ருய்பெருங் கொடியன கடலி னாழ்வன
பாயுடை நெடுங்கலம் படுவ போன்றவே.

*தீ உறு பொறி உடைச் செம் கண் வெம் கை மா*
*மீ உறத் தடக் கையால் வீரன் வீசுதோறு*
*ஆய் பெரும் கொடியன, கடலின் ஆழ்வன*
*பாய் உடை நெடும் கலம் படுவ போன்றவே.*

வீரன் தடக்கையால் மீ உற வீசுதோறு உறு தீ பொறியுடைச் செங் கண் வெம் கை மா, ஆய் பெரும் கொடியன கடலில் ஆழ்வன பாய் உடை நெடும் கலம் படுவ போன்றவே என்க. கொடியொடு யானை கடலில் ஆழ்வது, பாய்மரத்தோடு மரக்கலம் கடலில் ஆழ்வதை ஒத்திருந்தது. 'பண்ணார்களிறே போல் பாயோங் குயர் நாவாய்' என்பது சிந்தாமணி (2793) (39)

**902.** தாரொடு முருளொடுந் தடக்கை யாற்றனி
வீரன்விட் டெறிந்தன கடலின் வீழ்வன
வாரியி னெழுசுடர்க் கடவுள் வானவன்
தேரினை நிகர்த்தன புரவித் தேர்களே.

*தாரொடும் உருளொடும் தடக் கையால் தனி*
*வீரன் விட்டு எறிந்தன கடலின் வீழ்வன,*
*வாரியின் எழுசுடர்க் கடவுள் வானவன்*
*தேரினை நிகர்த்தன புரவித் தேர்களே.*

தனி வீரன், தடக்கையால் விட்டு எறிந்தன புரவித் தேர்கள் தாரொடும் உருளொடும் கடலில் விழ்வன, வாரியின் எழுசுடர்க் கடவுள் வானவன் தேரினை நிகர்த்தன. தனி வீரன் – அநுமான். தார் – தேரை அணி செய்யும் தொங்கல். வாரி – கடல். எழு சுடர்க் கடவுள் வானவன் – எழுகின்ற ஒளி வீசும் கடவுளாகிய வானத்தில் திகழும் கதிரவன். கடலில் விழுந்த தேர்கள் கடலினின்று தோன்றும் கதிரவன் தேரை ஒத்தன. (40)

**903.** வீயுற விண்ணிடை முட்டி வீழ்வன
ஆய்பெருந் திரைக்கட லழுவத் தாழ்வன
ஓய்வில புரவிவா யுதிரங் கால்வன
வாயிடை யெரியுடை வடவை போன்றவே.

*வீ உற விண் இடை முட்டி வீழ்வன,*
*ஆய் பெரும் திரைக் கடல் அழுவத்து ஆழ்வன,*
*ஓய்வு இல புரவி, வாய் உதிரம் கால்வன,*
*வாய் இடை எரி உடை வடவை போன்றவே.*

மேல் செய்யுளிலுள்ள 'தனிவீரன் விட்டெறிந்தன' என்பதைக் கூட்டுக. புரவி விண் இடை வீ உற முட்டி வீழ்வன ஆய் பெரும் திரைக் கடல் அழுவத்து வாய் உதிரம் கால்வன ஆழ்வன ஓய்வு இல, எரி வாய் இடை உடை வடவை போன்றன. வீ உற – இறந்துபட; வடவை – முகத்தில் கனலோடு விளங்கும் கடலிடையுள்ள பெண்குதிரை; கடலின் நீர் மிகுந்து உலகை அழிக்காத வண்ணம் தன் வாயிலுள்ள நெருப்பால் மிகும் நீரை உறிஞ்சுவது என்பர். இதை 'வடவை', 'வடவைக்கனல்', 'வடவனல்', 'வடவைத்தீ', 'வடவாமுகாக்கினி' என்று பல பெயர்களால் கூறுவர். இது, பெண்குதிரை முகத்தின் வடிவோடு கடற்குள் தங்கியிருந்து யுகாந்தத்தில் மேலே கிளம்பி, உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படும் தீ என்பர், தக்கயாகப் பரணி உரையாசிரியர். வாயில் செம்புனல் கக்கிக் கடலில் ஆழும் குதிரைகளுக்கு, வாயில் செந்தீ காலும் வடவை உவமை. *(41)*

**904.** வரிந்துற வல்லிதிற் சுற்றி வாலினால்
விரிந்துற வீசலிற் கடலின் வீழ்ந்தவர்
திரிந்தனர் செறிகயிற் றரவி னூற்றிரி
அருந்திறன் மந்தர மனைய ராயினர்.

*வரிந்து உற வல்லிதில் சுற்றி வாலினால்*
*விரிந்து உற வீசலின் கடலின் வீழ்ந்தவர்*
*திரிந்தனர்; செறி கயிற்று அரவினால் திரி*
*அரும் திறல் மந்தரம் அனையர் ஆயினர்.*

(அநுமன்) வாலினால் உற வரிந்து வல்லிதில் சுற்றி விரிந்து உற கடலில் வீசலின் வீழ்ந்தவர் திரிந்தனர்; கயிறு செறி அரவினால் திரி அரும் திறல் மந்தரம் அனையர் ஆயினர் என்க. அநுமனது வாலினால் வரிந்து சுற்றி வீசி எறியப்பெற்ற அரக்கர் கடலில் விழுந்து சுழன்றது,

மந்தரமலை வாசுகி என்னும் அரவாகிய கயிற்ருல் கடலில் திரிக்கப் பெற்ற போது சுழன்றதை ஒத்திருந்தது. சிறுவர் கயிறு சுற்றி வீசும் பம்பரத்தின் சுழற்சியை நினைக்க. (42)

### போரில் இரத்தப் பெருக்கு

**905.** வீரன்வன் றடக்கையா லெடுத்து வீசிய
வார்மத கரியினிற் றேரின் வாசியின்
மூரிவெங் கடல்புகக் கடிதின் முந்தின
ஊரின்வெங் குருதியா றீர்ப்ப வோடின.

*விரன் வன் தட கையால் எடுத்து வீசிய*
*வார் மத கரியினில் தேரின் வாசியின்*
*மூரி வெம் கடல் புகக் கடிதின் முந்தின ;*
*ஊரின் வெம் குருதியாறு ஈர்ப்ப ஓடின.*

எடுத்து வீசியவைகளினும் ஈர்ப்ப ஓடின கடிதின் முந்தின எனப் பொருள் காண்க. அநுமனது வலிமிக்க பெரிய கைகளால் வீசியெறிந்த யானை, தேர், புரவி முதலியன கடலில் போய் விழ்வதிலும் விரைவாகக் குருதியாறு ஈர்த்துச் சென்றவை கடலில் புக்கன எனக் கூறிப் போரில் சிந்திய இரத்தப் பெருக்கைக் காட்டினர். ஊரின் என்பது விரைவின் என்ற பொருளில் இங்கு வந்துள்ளது அருகிய வழக்கு. (43)

### பிணக் குவியல்

**906.** பிறைக்கடை யெயிற்றின பிலத்தின் வாயின
கறைப்புனல் பொறிகளோ டுமிழுங் கண்ணன
உறுப்புறு படையின வுதிர்ந்த யாக்கைகள்
மறைத்தன மகரதோ ரணத்தை வானுற.

*பிறைக் கடை எயிற்றின, பிலத்தின் வாயின,*
*கறைப் புனல் பொறிகளோடு உமிழும் கண்ணன,*
*உறுப்பு உறு படையின, உதிர்ந்த யாக்கைகள்*
*மறைத்தன மகர தோரணத்தை வான் உற.*

பிறை......யாக்கைகள் வான் உற மகர தோரணத்தை மறைத்தன என்க. பிணக்குவியல்கள், உயர்ந்த தோரணவாயிலையும் மறைத்தன என அவற்றின் மிகுதி கூறியவாறும். பிறைக்கடை என்பதைக் கடைப்பிறை என மாற்றுக. பிலம் – குகை. கறை – இரத்தம். உறுப்பு உறு படையின

என்பது, படை தோன்றிய வண்ணமே தொகுதியாக ஒரு சேர அழிந்தமை குறித்தபடி. உதிர்ந்த யாக்கைகள் - உயிர் ஒழிந்து சிதறிய பிணக் குவியல்கள். (44)

### கவிக் கூற்று

907. குன்றுள மரமுள குலங்கொள் பேரெழு
ஒன்றல பலவுள வுயிருண் டானுள
அன்றினர் பலருள ரையன் கையுள
பொன்றுவ தல்லது புறத்துப் போவரோ.

குன்று உள, மரம் உள, குலம் கொள் பேர் எழு
ஒன்று அல பல உள, உயிர் உண்பான் உள;
அன்றினர் பலர் உளர்; ஐயன் கை உள;
பொன்றுவது அல்லது புறத்துப் போவரோ.

அன்றினர் பலர் உளர், (அவர்) உயிர் உண்பான் உள; குலம் கொள் பேர் எழு ஒன்று அல; குன்று உள, மரம் உள, ஐயன் கை உள; (அன்றினர்) பொன்றுவது அல்லது புறத்துப் போவரோ என முடிக்க. (45)

### அனுமன் அரக்கர் படையை ஒழித்தல்

908. முழுமுதற் கண்ணுதன் முருகன் றாதைகைம்
மழுவெனப் பொலிந்தொளிர் வயிர வான்றனி
எழுவினிற் பொலங்கழ லரக்க ரீண்டிய
குழுவினைக் கரியெனக் கொன்று நீக்கினான்.

முழுமுதல் கண்ணுதல் முருகன் தாதை கை
மழு எனப் பொலிந்து ஒளிர் வயிர வான் தனி
எழுவினில், பொலம் கழல் அரக்கர் ஈண்டிய
குழுவினைக் கரி எனக் கொன்று நீக்கினான்.

(அநுமன்) எழுவினில் குழுவினை நீக்கினான் என முடிக்க. எழு முழுமுதற்கடவுளாம் முருகன் தாதை நெற்றிக் கண்ணனது மழுவைப் போன்றது. எவ்வாறு நீக்கினான் என்னில், கொன்று நீக்கினான் என்க. குழுவோ பொலம் கழல் அரக்கர் ஈண்டிய குழு. வயிர - உறுதியான; வான் - உயர்ந்த. தனி - ஒப்பற்ற. சிவபெருமான் மழுப்படைக்கு ஒப்புக் கூறவே, வயிர வான் தனி முதலாம் சிறப்புக்களும் எழு பெற்றது. (46)

## அனுமனைப் படைத் தலைவர் அணுகல்

**909.** உலந்தது தானையு வந்தன ரும்பர்
★ அலந்தலை யுற்றதவ் வாழியி லங்கை
கலந்த தழுங்குர லின்கட லோதை
வலந்தரு தோளவ ரைவரும் வந்தார்.

*உலந்தது தானை; உவந்தனர் உம்பர்;*
*அலந்தலை உற்றது அவ் ஆழி இலங்கை;*
*கலந்தது அழும் குரலின் கடல் ஓதை;*
*வலம் தரு தோளவர் ஐவரும் வந்தார்;*

படை அழிந்தது; (அநுமனுக்கு வெற்றியோ தோல்வியோ என ஐயுற்று முன்னர் வருந்திய) வானவர் மகிழ்ந்தார். அழுகுரலின் ஓசை கடல் ஒலி போல் கலந்து அந்தக் கடல் சூழ்ந்த இலங்கை கலக்கமுற்றது. (இதுகாறும்) வெற்றியே விளைத்த தோள்வலியுடைய (படைந்தலைவர்) ஐவரும் போர்முனைக்கு வந்தார். (47)

## ஐவரும் பல்லாயிரம் அம்புகளை விடுதல்

**910.** ஈர்த்தெழு செம்புன லெக்க ரிழுக்கத்
தேர்த்துணை யாழி யழுந்தினர் சென்ருர்
ஆர்த்தன ராயிர மாயிர மம்பால்
தூர்த்தன ரஞ்சனை தோன்றலு நின்ருன்.

*ஈர்த்து எழு செம் புனல் எக்கர் இழுக்க,*
*தேர்த்துணை ஆழி அழுந்தினர், சென்ருர்;*
*ஆர்த்தனர்; ஆயிரம் ஆயிரம் அம்பால்*
*தூர்த்தனர்; அஞ்சனை தோன்றலும் நின்ருன்.*

துணைத்தேர் எழு செம்புனல் ஈர்த்து இழுக்க ஆழி எக்கர் அழுந்தினர் சென்ருர்; ஆர்த்தனர்......நின்ருன் என முடிக்க. துணைத்தேர் - போருக்குத் துணையாக வந்த தேர். ஆழி - உருளை. எக்கர் - மணல் மேடு. தூர்த்தனர் - மறைத்தனர். அஞ்சனை தோன்றல் - அநுமன். அம்புமாரியுள் அஞ்சனை தோன்றல் அஞ்சாது நின்ருன். (48)

### அநுமன் தேர்ப்பொறியைச் சிதைத்தல்

**911.** எய்த கடுங்கணை யாவையு மெய்தா
நொய்தக லும்படி கைகளி னூறுப்
பொய்தக டொன்று பொருந்தி நெடுந்தேர்
செய்த கடும்பொறி யொன்று சிதைத்தான்.

*எய்த கடும்கணை யாவையும் எய்தா
நொய்து அகலும்படி கைகளின் நூறு,
பொய் தகடு ஒன்று பொருந்தி நெடும் தேர்
செய்த கடும்பொறி ஒன்று சிதைத்தான்.*

*எய்த......நூறு, நெடும் தேர் அகடு பொய்து ஒன்று பொருந்தி செய்த கடும் பொறி ஒன்று சிதைத்தான் என இயைக்க. கடும் கணை – விரைவாகச் செல்லும் அம்பு. எய்தா – தன்மேல் படாமல். நொய்து – எளிதில். நூறு – பொடியாக்கி. பொய்து - தொளை செய்து. அகடு – நடு கடும் பொறி – விரைவாகச் செலுத்தும் பொறி.* (49)

### அநுமன் ஐவருள் ஒருவனைப் பொருது அழித்தல் 912, 913

**912.** உற்றுறு தேர்சிதை யாமு னுயர்ந்தான்
முற்றின வீரனை வானின் முனிந்தான்
பொற்றிர ணீளெழு வொன்று பொறுத்தான்
எற்றின னஃதவன் வில்லினி லேற்றான்.

*உற்று உறு தேர் சிதையாமுன் உயர்ந்தான்,
முற்றின வீரனை, வானின் முனிந்தான்,
பொன் திரள் நீள் எழு ஒன்று பொறுத்தான்,
எற்றினன்; அஃது, அவன் வில்லினில் ஏற்றான்.*

*தன் தேர் சிதையாமுன் வானில் உயர்ந்த வீரனை (அநுமன்) இரும்புத்தூண் ஒன்றால் அடித்தான், அதை அந்த அரக்கன் வில்லினால் தாங்கினான். முற்றின வீரன் – சூழ்ந்துகொள்ளப்பட்ட வீரன் ; முற்றுகையுட்பட்ட வீரன் என்க.* (50)

**913.** முறிந்தது மூரிவி லம்முறி யேகொண்
டெறிந்த வரக்கனோர் வெற்பை யெடுத்தான்
அறிந்த மனத்தவ னவ்வெழு வேகொண்
டெறிந்த வரக்கனை யின்னுயி ருண்டான்.

*முறிந்தது மூரிவில்; அ முறியே கொண்டு*
*எறிந்த அரக்கன், ஓர் வெற்பை எடுத்தான்;*
*அறிந்த மனத்தவன், அவ் எழுவே கொண்டு,*
*எறிந்த அரக்கனை இன்னுயிர் உண்டான்.*

*மூரிவில் முறிந்தது. முறிந்த துண்டைக் கொண்டு தாக்கிய அரக்கன் ஒரு மலையை எடுத்தான். (போர்த் தொழிலை நன்கு) அறிந்த மனத்தவன் (அநுமன்) தான் முன் கொண்டிருந்த எழுவைக்கொண்டு, தாக்கிய அரக்கனது உயிரைப் போக்கினுன். மூரி – வன்மை; பெருமை. (51)*

### மற்றை நால்வரும் அநுமனும் பொருதல் 914, 915

**914.** ஒழிந்தவர் நால்வரு மூழி யுருத்த
கொழுந்துறு தீயென வெய்த்துறு கொட்பர்
பொழிந்தனர் வாளி புகைந்தன கண்கள்
விழுந்தன சோரியவ் வீரன் மணித்தோள்.

*ஒழிந்தவர் நால்வரும், ஊழி உருத்த*
*கொழுந்து உறு தீ என வெய்த்துறு கொட்பர்,*
*பொழிந்தனர் வாளி; புகைந்தன கண்கள்;*
*விழுந்தன சோரி அ வீரன் மணித் தோள்.*

*ஐவருள் எஞ்சிய நால்வரும் ஊழிக் காலத்துச் சுடர்விட்டுச் சுழலும் தீப்போன்று சினம் மிகுந்து கண்களில் புகையெழச் சுழன்று சுழன்று அம்புகளைப் பொழிந்தனர்; அந்த வீரனுடைய (அநுமானுடைய) வயிரத் தோள்களிலிருந்து குருதி ஒழுகிற்று. கொட்பர் – சுழலுதலுடையவர்கள்; உடற் சுழற்சி, உள்ளச் சுழற்சி இரண்டனையும் குறிக்கும். (52)*

**915.** ஆயிடை வீரனு முள்ள மழன்ருன்
மாய வரக்கர் வலத்தை யுணர்ந்தான்
மீயெரி யுய்ப்பதொர் கற்செல விட்டான்
தீயவ ரச்சிலை யைப்பொடி செய்தார்.

*ஆயிடை வீரனும் உள்ளம் அழன்ருன்;*
*மாய அரக்கர் வலத்தை உணர்ந்தான்;*
*மீ எரி உய்ப்பது ஓர் கல் செல விட்டான்;*
*தீயவர் அச் சிலையைப் பொடி செய்தார்,*

அப்பொழுது வீரனும் (அநுமன்) உள்ளம் கொதிப்படைந்து மாயம் வல்ல அரக்கருடைய வலத்தை உணர்ந்தான். மேலே தி விசும் ஒரு கல்லை அவர்கள்மேல் செல்ல விட்டான். அந்தத் தியவர் அந்தக் கல்லைப் பொடி செய்தார். மீ – மேல். (53)

## நால்வருள் ஒருவனை அநுமன் அழித்தல் 916–918

**916.** தொடுத்த தொடுத்த சரங்க டுரந்த
அடுத்தகன் மார்பி லழுந்தி யகன்ற
மிடற்றொழி லான்விடு தேரொடு நொய்தின்
எடுத்தொரு வன்றனை விண்ணி னெறிந்தான்.

தொடுத்த, தொடுத்த, சரங்கள் துரந்த;
அடுத்து, அகன் மார்பில் அழுந்தி, அகன்ற;
மிடல் தொழிலான், விடு தேரொடு நொய்தின்
எடுத்து, ஒருவன்தனை விண்ணின் எறிந்தான்.

அரக்கர்கள் தொடுத்த அம்புகள் புறப்பட்டு (அநுமனது) அகன்ற மார்பில் தைத்து அகன்றன. போர்த்தொழில் வல்ல அநுமன் (எஞ்சிய நால்வருள்) ஒருவனை எளிதாகத் தேரோடும் எடுத்து விண்ணில் எறிந்தான். (54)

**917.** ஏய்ந்தெழு தேரிமிழ் விண்ணினை யெல்லாம்
நீந்திய தோடி நிமிர்ந்தது வேகம்
ஓய்ந்தது வீழ்வதன் முன்னுயர் பாரில்
பாய்ந்தவன் மேலுடன் மாருதி பாய்ந்தான்.

ஏய்ந்து எழு தேர், இமிழ் விண்ணினை எல்லாம்
நீந்தியது ; ஓடி நிமிர்ந்தது ; வேகம்
ஓய்ந்தது ; வீழ்வதன் முன், உயர் பாரில்
பாய்ந்தவன்மேல், உடன் மாருதி பாய்ந்தான்.

எடுத்து எறியப்பெற்றதால் மேல் எழுந்த தேர் ஒலிக்குணமுடைய வானமெல்லாம் ஓடிக் கடந்து தன் வேகம் ஓய்ந்தது ; விழுவதற்கு முன் நிலத்தில் அரக்கன் குதித்தான் ; குதித்தவன்மேல் அநுமன் பாய்ந்தான். (55)

**918.** மதத்த களிற்றினில் வாளரி யேறு
கதத்தது பாய்வது போற்கதி கொண்டு
குதித்தவன் மால்வரை மேனி குழம்ப
மிதித்தனன் வெஞ்சின வீரருள் வீரன்.

*மதத்த களிற்றினில், வாள் அரி ஏறு*
*கதத்தது பாய்வது போல், கதிகொண்டு*
*குதித்து, அவன் மால்வரை மேனி குழம்ப*
*மிதித்தனன், வெம் சின வீரருள் வீரன்.*

வெம் சின வீரருள் வீரன் (அநுமன்) கதத்தது வாளரி ஏறு கதி கொண்டு மதத்த களிற்றினில் பாய்வதுபோல் (அரக்கன் மேல்) குதித்து அவன் மால்வரை மேனி குழம்ப மிதித்தனன். கதத்தது – சினம் கொண்டதாய். கதி – வேகம். மதத்த – மதம் கொண்ட. (56)

## அநுமன் பின்னும் இருவரை அழித்தல் 919–924

**919.** மூண்ட சினத்தவர் மூவர் முனிந்தார்
தூண்டிய தேரர் சரங்க டுரந்தார்
வேண்டின வெஞ்சமம் வேறு விளைப்பார்
ஈண்டினி யேகுதி ரென்றெதிர் சென்றார்.

*மூண்ட சினத்தவர் மூவர், முனிந்தார்,*
*தூண்டிய தேரர், சரங்கள் துரந்தார்,*
*வேண்டின வெம் சமம் வேறு விளைப்பார்,*
*'ஈண்டு, இனி ஏகுதிர்' என்று எதிர் சென்றார்.*

மூவர், மூண்ட சினத்தவர், வேண்டின வேறு வெம் சமம் விளைப்பார் சரங்கள் துரந்தார், (அநுமன் முன்) 'இனி, ஈண்டு ஏகுதிர்' என்று தூண்டிய தேரர் எதிர் சென்றார் முனிந்தார். வெம் சமம் – கொடியபோர். சரங்கள் – அம்புகள். (57)

இப்பாடலின் பின் 25-என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் பாடல்கள் காணப்படுகின்றன :—

919 (a) என்றவ ரேவு சரங்க ளிறுத்தே
பொன்றுவிர் நீரிது போதென வங்கோர்
குன்றிரு கைக்கொ டெறிந்தவர் கொற்றம்
இன்றுமு டிந்ததெ னத்தனி யார்த்தான்.

919 (b) அப்பொழு தங்கவ ராயிர கோடி
வெப்படை வெஞ்சரம் விசினர் விசித்
துப்புறு வெற்பத னேத்துகள் செய்தே
மெய்ப்படு மாருதி மேற்சரம் விட்டார்.

919 (c) விட்ட சரத்தை விலக்கியவ் வீரன்
வட்ட விசும்புறு மாமரம் வாங்கித்
தொட்டெறி தற்குமுன னேதுக ளாகப்
பட்டிட வெய்யவர் பாணம் விடுத்தார்.

**920.** திரண்டுயர் தோளிணை யஞ்சனை சிங்கம்
மருண்டு விசும்புறை வோர்களு மஞ்ச
முரண்டரு தேரவை யாண்டொரு மூன்றின்
இரண்டை யிரண்டுகை யுங்கொ டெழுந்தான்.

*திரண்டு உயர் தோள் இணை அஞ்சனை சிங்கம்,*
*மருண்டு விசும்பு உறைவோர்களும் அஞ்ச,*
*முரண்தரு தேர் அவை ஆண்டு ஒரு மூன்றின்*
*இரண்டை, இரண்டு கையும் கொடு எழுந்தான்.*

திரண்டு உயர்ந்த தோள்களையுடைய அஞ்சனை சிங்கம் விசும்பில் உறைபவர்களும் மருண்டு அஞ்சும்படி அங்கிருந்த முரண்பாடுடைய மூன்று தேர்களில் இரண்டை இரண்டு கைகளினாலும் எடுத்து எழுந்தான். அஞ்சனை சிங்கம் - அஞ்சனையின் மகனாகிய சிங்கம் போன்ற அநுமான். (58)

**921.** தூங்கின பாய்பரி சூத ருலைந்தார்
வீங்கின தோளவர் விண்ணில் விசைத்தார்
ஆங்கது கண்டவர் போயக லாமுன்
ஓங்கிய மாருதி யொல்லையி லுற்றான.

*தூங்கின பாய் பரி; சூதர் உலைந்தார்,*
*வீங்கின தோளவர், விண்ணில் விசைத்தார்;*
*ஆங்கு, அது கண்டு, அவர் போய் அகலாமுன்,*
*ஓங்கிய மாருதி, ஒல்லையில் உற்றான்.*

(அநுமன் தேர்களைப்பற்றி மேலெழும்போது பூட்டியிருந்த) பாய்ந் தோடும் குதிரைகள் தொங்கின ; தேரோட்டுவோர் அழிந்தார் ; பருத்த

தோள்களையுடைய அவ்வரக்கர் வான்வழியே விரைந்தார்; அதைக் கண்ட அநுமன், அவர் விண்ணில் மறையுமுன், அவர் சென்ற அளவுக்குத் தானும் விரைவில் உயர்ந்து அவர்களை அடைந்தான். தூங்கின – தொங்கின என்பது உலக வழக்கு. சூதர் – தேர்ப்பாகர். (59)

**922.** கானிமிர் வெஞ்சிலை கையி னிறுத்தான்
ஆனவர் தூணியும் வாளு மறுத்தான்
ஏனையொர் வெம்படை யில்லவ ரெஞ்சார்
வானிடை நின்றுயர் மல்லின் மலைந்தார்.

*கால் நிமிர் வெம் சிலை, கையின் இறுத்தான்;*
*ஆனவர் தூணியும், வாளும், அறுத்தான்;*
*ஏனை ஒர் வெம் படை இல்லவர், எஞ்சார்*
*வான் இடை நின்று உயர் மல்லின் மலைந்தார்.*

அவருடைய சிலை, தூணி, வாள் முதலியவற்றை அநுமன் அழித்தான். போர் செய்வதற்கு வேறு படைக்கலமில்லாத அவ்வரக்கர் பின்னிடாமல் வானில் நின்று மற்போர் செய்தார். கால் நிமிர் வெஞ்சிலை – கால்கள் ஓங்கிய கொடிய வில். மல் – படையின்றி உடல் வலி கொண்டு செய்யும் போர். (60)

**923.** வெள்ளை யெயிற்றர் கறுத்துயர் மெய்யர்
பிள்ள விரித்த பிலப்பெரு வாயர்
கொள்ள வுருத்துடர் கோளர வொத்தார்
ஒள்ளிகல் வீர னருக்கனை யொத்தான்.

*வெள்ளை எயிற்றர், கறுத்து உயா மெய்யர்,*
*பிள்ள விரித்த பிலப் பெரு வாயர்,*
*கொள்ள உருத் துடர் கோள் அரவு ஒத்தார்;*
*ஒள் இகல் வீரன் அருக்கனை ஒத்தான்.*

*(மற்போர் செய்யும்போது)* ஒளியும் வலிமையும் கொண்ட வீரன் *(அநுமன்)* கதிரவனை ஒத்திருந்தான்; *(அரக்கர்)* வெள்ளிய பற்களாலும் கறுத்து உயர்ந்த உடலாலும் குகைபோல விரித்த வாயாலும் *(கதிரவனைப்)* பற்றிக்கொள்ளச் சினத்தோடு அணுகும் பாம்பு போன்றிருந்தார். (61)

**924.** தாம்பென வாலின் வரிந்துயர் தாளோ
டேம்பலி லாரிரு தோள்க ளிறுத்தான்
பாம்பென நீங்கினர் பட்டனர் வீழ்வார்
ஆம்ப னெடும்பகை போலவ னின்றான்.

*தாம்பு என வாலின் வரிந்து, உயர் தாளோடு*
*ஏம்பல் இலார் இரு தோள்கள் இறுத்தான்;*
*பாம்பு என நீங்கினர், பட்டனர் வீழ்வார்;*
*ஆம்பல் நெடும்பகை போல், அவன் நின்றான்.*

சலியாது போர் செய்யும் இருவருடைய நீண்ட கால்களையும் கைகளையும் கயிறுபோல வாலால் வரிந்து முறித்தான். பாம்புபோல் நீங்கி இறந்து விழ்ந்தார். ஆம்பற்பகை என்னும் கதிரவன்போல் (அநுமன்) நின்றான். அநுமனைக் கதிரவனாகவும் அவ்வரக்கர் இருவரையும் கதிரவனைக் கொள்ளவரும் இராகு கேதுக்கள் என்னும் பாம்புகளாகவும் கூறினர். கதிரவனைக் கண்ட ஆம்பல் மலர் வாடுதலால், கதிரவனுக்கு ஆம்பற்பகை என ஒரு பெயர் வந்தது. ஞாயிறு கண்ட ஆம்பல் அழிதலை, 'ஓம்பு திங்களு வந்து சுடர் கண்ட, ஆம்பலாய்மலர்க் காடொத்தழிந்ததே' எனச் சிந்தாமணியுள்ளும் (2336) காண்க. (62)

## எஞ்சிய ஒருவனையும் அனுமன் ஒழித்தல்

**925.** நின்றன னேனைய னின்றது கண்டான்
குன்றிடை வாவுறு கோளரி போல
மின்றிரி வன்றலை மீதுகு தித்தான்
பொன்றிய வன்புவி தேரொடு புக்கான்.

*நின்றனன் ஏனையன்; நின்றது கண்டான்;*
*குன்று இடை வாவு உறு கோளரி போல,*
*மின் திரி வன் தலை மீது குதித்தான்;*
*பொன்றி, அவன் புவி தேரொடு புக்கான்.*

எஞ்சிய ஒருவன் நின்றான். நின்றதை (அநுமன்) கண்டான்; மின்னலைத் திரித்தாலொத்து ஒளிரும் (முடியுடைய) அவன் தலைமேல், குன்றிடையே தாவும் கோளரிபோல் குதித்தான். அவன் இறந்து தேரோடு மண்ணில் புதைந்தான். (63)

### கவிக் கூற்று

926. வஞ்சமுங் களவும் வெஃகி
☆ வழியலா வழிமே லோடி
நஞ்சினுங் கொடிய ராகி
நவைசெயற் குரிய நீரார்
வெஞ்சின வரக்க ரைவ
ரொருவனே வெல்லப் பட்ட
அஞ்செனும் புலன்க ளொத்தா
ரவனுநல் லறிவு போன்றுன்.

*வஞ்சமும் களவும் வெஃகி, வழி அலா வழிமேல் ஓடி,*
*நஞ்சினும் கொடியர் ஆகி, நவைசெயற்கு உரிய நீரார்*
*வெம் சின அரக்கர் ஐவர், ஒருவனே வெல்லப்பட்ட*
*அஞ்சு எனும் புலன்கள் ஒத்தார்; அவனும் நல் அறிவு போன்றுன்.*

வஞ்சத்தையும் களவையும் விரும்பி நல்வழியல்லாத தீய வழியிலேயே விரைந்து சென்று நஞ்சினும் கொடியவர்களாய்த் தீமையே செய்வதற்கு ஒருப்பட்டவராய்க் கொடிய சினங்கொண்ட அரக்கர் ஐவரும் நல்லறிவால் வெல்லப்பட்ட ஐம்புலன்கள்போல் செயலின்றி ஒழிந்தார்கள். அநுமனும் ஐம்புலன்களை வென்ற அறிவுபோல் தனித்து நின்றுன். தத்துவ உவமை. (64)

### அரக்கர் அழிவை யாவருங் காணல்

927. நெய்தலை யுற்ற வேற்கை
நிருதரச் செருவி னேர்ந்தார்
உய்தலை யுற்று மீண்டா
ரொருவரு மில்லை யுள்ளார்
கைதலைப் பூசல் பொங்கக்
கடுகினர் கால னுட்கும்
ஐவரு முலந்த தன்மை
யனைவரு மமையக் கண்டார்.

*நெய்தலை உற்ற வேல் கை நிருதர் அச் செருவில் நேர்ந்தார்*
*உய்தலை உற்று மீண்டார், ஒருவரும் இல்லை; உள்ளார்,*
*கை தலைப் பூசல் பொங்கக் கடுகினர்; காலன் உட்கும்*
*ஐவரும் உலந்த தன்மை, அனைவரும் அமையக் கண்டார்.*

காலனும் அஞ்சும் ஐவரும் மடிந்ததை எல்லோரும் பார்த்தார்கள்; நெய் பூசப்பெற்ற முனைகளையுடைய வேற்படையைக் கையிற் கொண்ட அரக்கர், அந்தப் போரில் கலந்தவர் ஒருவரும் உயிரோடு திரும்பவில்லை. உள்ளவர்களெல்லாம் போர் தொடங்கியவுடன் விரைந்து ஓடி வந்தவர்களே. *(65)*

**ஐவரும் அழிந்ததை இராவணனிடம் சொல்லல் 828, 829**

**928.** இறுக்குறு மின்று நம்மைக்
குரங்கென விரங்கி யேங்கி
மறுக்குறு கின்ற நெஞ்சின்
மாதரை வைது நோக்கி
உறுக்குறுஞ் சொல்லா னூழித்
தீயென வுலக மேழும்
சுறுக்கொள நோக்கு வான்றன்
செவித்தொளை தீயச் சொன்னார்.

'இறுக்குறும் இன்று நம்மைக் குரங்கு' என, இரங்கி, ஏங்கி, மறுக்கு உறுகின்ற நெஞ்சின் மாதரை, வைது நோக்கி, உறுக்குறும் சொல்லான், ஊழித் தீ என வுலகம் ஏழும் சுறுக்கொள நோக்குவான் தன், செவித் தொளை தீயச் சொன்னார்.

குரங்கினால் விளையும் அழிவுகளைக் கேட்ட அரண்மனையிலுள்ள பெண் மக்கள், இன்று நம்மைக் குரங்கு முடிவு செய்துவிடும் என இரங்கி ஏங்கி அலமந்து நிற்றலைப் பார்த்துக், கடுமொழிகளால் வைது ஏழுலகமும் தீயும் வண்ணம் ஊழித்தீப் போன்று (வந்தவர்களைப்) பார்க்கின்ற (இராவணனது) செவிகள் தீயுமாறு (காவலாளர் பின்வருமாறு) சொன்னார்கள். *(66)*

**929.** தானையு முலந்த தைவர்
தலைவருஞ் சமைந்தார் தாக்கப்
போனபின் மீள்வேம் யாமே
யதுவும்போர் புரிகி லாமை
வானையும் வென்று ளாரை
வல்லையின் மடிய நூறி
ஏனைய ரின்மை சோம்பி
யிருந்ததக் குரங்கு மென்றார்.

தானையும் உலந்தது; ஐவர் தலைவரும் சமைந்தார்; தாக்கப்
போனபின் மீள்வேம் யாமே; அதுவும், போர் புரிகிலாமை;
வானையும் வென்றுளாரை வல்லையின் மடிய நூறி,
ஏனையர் இன்மை, சோம்பி இருந்தது அக் குரங்கும் என்றார்.

படையும் பட்டது; தலைவர் ஐவரும் இறந்தனர்; போர் புரிகிலாமையால் யாமே மீண்டோம். வானவரையும் வென்றி கண்டவரை நொடியில் மடியப் பொடியாக்கி, தன்னோடு போர் செய்வார் ஒருவரும் இல்லாதபடியால், அந்தக் குரங்கு சோம்பியிருந்தது என்றார் (காவலாளர்). (67)

பஞ்சசேனுபதிகள் வதைப் படலம் முற்றிற்று.

# 10. அட்சகுமாரன் வதைப் படலம்

அட்சகுமாரன் வதைப் படலம், அநுமனோடு, இராவணனுடைய இளைய மகனாகிய அட்சன் போர்செய்து மடிந்த வரலாற்றைக் கூறும் ஐம்பது செய்யுட்களைக் கொண்டது. அட்சன் என்பதை இடுகுறிப் பெயராகவே கொள்ளவேண்டும்; இந்தச் சொல்லுக்கு வடமொழியில், இந்திரியம்; கண், சூதாட்டம், தான்றிமரம், சகடம், அச்சு, உருளை, கருடன், பாம்பு, சிவன், உருத்திராக்கம் முதலிய பல பொருள்கள் கூறுகின்றார்கள்.

இப்படலத்தின் சுருக்கம் :—

படைத் தலைவர் ஐவரும் படையொடு அழிந்தசெய்தி கேட்டதும், சினத் தீ பொங்கப் போருக்கு எழுந்த இராவணனை அட்சகுமாரன் தடுத்து "தந்தையே உன் பெருமைக்குத் தகுதியில்லாத குரங்கின்மேல் நீ சினந்து செல்லல் ஏற்றதல்ல; அடியேனுக்கு, இப்பணியைக் கொடுக்க வேண்டும்; இங்கு குரங்குபோல் வந்தவன் முக்கண் இறைவன் என்றாலும் நொடிப்பொழுதில் பிடித்துவருகின்றேன்" என்று சொல்லி, விடைபெற்றுக்கொண்டு கரைகடந்து பொங்கும் கடல்போன்ற பெரும்படையுடன் புறப்பட்டான். அப்போது, தேரில் பூட்டிய குதிரைகள் தூங்கி விழுந்தன; இடது தோளும் கண்ணும் துடித்தன; மேகம் செந்நீர் சொரிந்தது; இரவிலும் காக்கைகள் ஏங்கிக் கரைந்தன; வானமும் மேகமின்றி இடித்தது. இத்தகைய தீய நிமித்தங்களைப் பொருட்படுத்தாது வருகின்ற அட்சனை அநுமன் வியந்தான். அட்சன் அநுமனைப் பார்த்து "இக் குரங்கா அரக்கரையெல்லாம் கொன்றது" என்று நகைத்தான். தேர்ப்பாகன், "அவ்வாறு இகழாதே" என வாலியின் வரலாற்றை நினைவுபடுத்தினான். அட்சன் "குரங்கு என்னும் கருவையே அழித்துவிடுகிறேன்" என வஞ்சினங் கூறிப் பல படைக் கலங்களைப் பொழிந்தான். அவை அநுமன் மேற் பட்டு முறிந்தன. உலர்ந்த காட்டில் தீ புகுந்தது போல் அரக்கர் படையில் அநுமன் புகுந்து,நால்வகைப் படையையும் அழித்தான். இலங்கையிலுள்ள எண்ணிறந்த உயிர்கள் ஒரு நொடியில் கொல்லப்பெற்று அவற்றின் செந்நீரும் யாக்கையும் ஆறாகவும் சேறாகவும் குழம்பியிருந்தது,இயமன் எளிதாக உண்ணுவதற்குப் பல உயிர்களையும் ஒரு கிண்ணத்தில் பெய்ததுபோல் தோன்றியது. ஐம்புலன்களும் வென்ற அநுமான் ஊழிக்காலத்துத் தோன்றும் கதிரவன்போலவும், அரக்கர் என்பில்லாத புழுவைப் போன்றும் காணப்பெற்றனர். அரக்கர்கள் தாழியில் பட்ட தயிர்போலவும், ஊழிக்காலத்துப் பொங்கி எழும் கடல்போலவும் நிற்க, அநுமன் தயிர் கடையும் மத்தைப் போலவும், ஊழித் தீப் போலவும் நின்று, அவர்களைக் கலக்கி மாய்த்தான். அநுமனும் அட்சனும் தனித்துப்

போர் செய்தார்கள். அட்சன் எய்த பதினுன்கு அம்புகளை அநுமன் இருப்புத்தூணுல் பொடிசெய்தான். பின்னர் வேறு அம்புகளால் அந்த இரும்புத் தூணை அட்சன் பொடிசெய்தான். பின்னர் அநுமன் தன் கையே படையாகக் கொண்டு, அட்சன் தேர்மேல் சென்று மேகத்திலிருந்து மின்னற் கூட்டங்கள் விழுவனபோல், குண்டலம் முதலிய அணிகள் சிந்தவும் முழையிலிருந்து பாம்புகள் தொங்குவன போல் வயிற்றிலிருந்து குடர்கள் சரியவும், அட்சனைக் குத்தித் தள்ளி, மண்ணோடு மண்ணுகும்படி தேய்த்துவிட்டான். இதைக் கண்ட அரக்கர்கள், தங்கள் உயிரைக் காப்பாற்ற வேண்டி, மீனுகவும், பசுவாகவும், மறையவராகவும், பறவைகளாகவும், பல வேறு உருவங்களைக் கொண்டு ஓடினுர்கள். அரக்க மகளிர் சிலர் தங்கள் கணவர்களைத் தேடிப் போர்க்களத்துக்குச் சென்று புலம்பினுர்கள்; ஆடுகின்ற கவந்தங்களைத் தங்கள் கணவன் எங்கே என்று கேட்டார்கள்; உயிரை விட்டு வானுலகம் சென்று சிலர் தத்தம் கணவரைக் கூடினுர்கள். அரக்கியர் அழுத ஓசை வானத்தையும் எட்டியது. மகன் மாண்ட செய்தி கேட்டு மண்டோதரி கண்ணில் நீர் பெருக, கூந்தல் புழுதியில் புரள, வயிற்றில் அடித்துக்கொண்டு இராவணன் காலில் விழுந்து அழுதாள். இலங்கையிலுள்ள யாவரும் புலம்பிக் கதறினுர்கள். தேவர்களும் வெளிப்படையாக அழுதார்களென்ருலும் சிந்தையில் மகிழ்ந்தார்கள்.

வான்மீகத்துள் அட்சன்வதை நாற்பத்தேழாவது சர்க்கமாக அமைந்துள்ளது; முப்பத்தொன்பது சுலோகங்கள் கொண்டுள்ளது. இராவணன் சினந்து போருக்குப் புறப்பட இருந்த நிலையில் அட்சகுமாரன் அவனைக் கண்டு, அவனே நேரில் போவது மிகவும் இழிவான செயல் எனக் கூறித் தடுத்து, தானே அக் குரங்கினைக் கொண்டுவர விடைபெற்றுச் சென்றதாகக் கம்பர் இப்படலத்தைத் தொடங்குகின்ருர். வான்மீகத்துள், போருக்குச் சென்று கொண்டிருந்த அக்ஷகுமாரனை இராவணன் அன்போடு பார்த்துக் கண்ணுல் ஏவினுன் என்று சொல்லப்பெற்றிருக்கிறது. அட்சன் அநுமனை இழிவாக எண்ணியதாகவே கம்பர் சொல்லுகிருர்; வான்மீகத்துள், பெருமதிப்பைக் காட்டும் நோக்குடன் பார்த்தான் என்று சொல்லப்படுகிறது. மேலும், தன் வலியையும் மாற்றுனுகிய அநுமன் வலியையும் ஆராய்ந்து போர் தொடங்கினுன் என்றும் கூறப்பெறுகிறது. முதலில் அட்சனது இளமை, எழில் முதலியவற்றைப் பார்த்து அவனைக் கொல்லலாகாது என்று எண்ணிய அநுமான் பின்னர் அவனுடைய போர்முறையைப் பார்த்து அவனைக் கொன்றுவிடுவதே முறை என்று முடிவுக்கு வந்து, பலவாறு போர்செய்து முடிவில் அரக்கர் தலைவனுக்கு அச்சத்தை விளைவிக்கும் நோக்குடன் அறைந்து கொன்று மண்மீது அரைத்துத் தேய்த்தான் என்று வான்மீகர் கூறுகின்ருர்.

அநுமனுக்குத் தோற்ற அரக்கவீரர்கள் பலவேறு உருவங்கொண்டு உயிர்தப்பி ஓடிய செய்தியும், அரக்கர் மகளிர் போர்க்களத்துக்குச் சென்று

தங்கள் கணவரைத் தேடிய செய்தியும், கணவரைக் காணுது வருந்தி உயிர்விடுத்த செய்தியும் கம்பரிடமே காணப் பெறுகின்றன. கம்பர் கையாளும் பல உவமைகள் வான்மீகத்துள் காணப் பெறவில்லே. வான்மீகர் கூறும் “புல்லால் மூடப்பெற்ற பெருங் கிணற்றில் யானே சென்று விழ்வதுபோல் அட்சன் அநுமனிடம் சென்ருன்” என்ற உவமை கம்பரிடம் காணப்பெறவில்லே. அட்சன் போர்க்குப் புறப்படும்போது தோன்றியனவாகக் கம்பர் கூறும் தீய குறிகள் வான்மீகத்தில் காணப்பெறவில்லே.

இப் படலத்துள் போர்நிகழ்ச்சியே பெரும்பகுதியும் பேசப்படினும் வீரமும் மானமும் விட்டு உயிரைக் காப்பற்றுவதையே குறியாகக் கொண்டு ஓடிய அரக்கர்கள் செயலேப் பரக்கப் பேசுதல் நகைச் சுவையை ஒருவாறு விளேவிப்பதாக இருப்பதோடு, கடமையைக் கைவிட்டுத் தன் உயிரைக் காப்பாற்றும் கருத்துடையோர் தங்கள் உற்ருர் உறவினரையும் கைவிடுவர் என்றதையும் குறிப்பிடுகின்றது. இதற்கு மாருகப் பெண்களின் உண்மை அன்பு உருக்கமாகக் காட்டப்பெற்றிருக்கிறது; இப்பகுதிச் செய்யுள்கள் கனிவுடையன. இறுதிச் செய்யுளில் ‘யாவரும் அழுதனர்; தேவரும் அழுதனர் களிக்கும் சிந்தையர்’ எனக் கூறியிருப்பது கருதத் தக்கது. கொடுங்கோன்மைக்கு அஞ்சி, வெளிப்புறமாக, கொடுங்கோலனுடைய சார்புக்கு ஏற்றவாறு, தங்களேக் காட்டிக் கொள்ளும் அடக்கியாளப்பட்ட கூட்டத்தார், உள்ளத்தில் கொடுங்கோன்மையின் வீழ்ச்சியையே வரவேற்பர் என்ற, பொதுவான அரசியல் உண்மை சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. போர்ப் பகுதிகளேக் கூறும் ஒரே படியான செட்யுட் பகுதிகளிலும் ஓவ்வோரிடங்களில் உயர்ந்த கருத்துக்கள் காணப்பெறுவதால் வெளிப்படையாக உள்ளத்தை ஈர்க்காத பகுதிகளேயும் ஆய்ந்து படிப்பதில் பயனுண்டு.

# 10. அட்சகுமாரன் வதைப் படலம்

## அட்சகுமாரன் குரங்கைப் பற்றித்தரத் தன்னை அனுப்ப வேண்டல் 930-932.

930. கேட்டலும் வெகுளி வெந்தீக்
கிளர்ந்தெழ விலங்கல் மார்பிற்
றேட்டலர் தெரியன் மாலை
வண்டொடுஞ் சுறுக்கொண் டேற
வூட்டரக் குண்ட போலு
நயனத்தா னொருப்பட் டானைத்
தாட்டுணை தொழுது மைந்தன்
றடுத்திடை தருதி யென்றான்.

கேட்டலும், வெகுளி வெம் தீ
கிளர்ந்து எழ, விலங்கல் மார்பில்
தோடு அலர் தெரியல் மாலை
வண்டொடும் சுறு கொண்டு ஏற,
ஊட்டு அரக்கு உண்ட போலும்
நயனத்தான், ஒருப்பட்டானைத்
தாள் துணை தொழுது, மைந்தன்,
தடுத்து இடை தருதி என்றான்.

அரக்கு ஊட்டு உண்ட போலும் நயனத்தான், (இவரும் படையும் பட்டனர் எனக்) கேட்டலும் வெகுளி கிளர்ந்து, வெம் தீ எழ, விலங்கல் மார்பில் தோடு அலர் தெரியல் மாலை வண்டொடும் சுறு கொண்டு ஏற, (அநுமனைப் பிடிக்கத் தானே செல்ல) ஒருப்பட்டானை, மைந்தன் தாள் துணை தொழுது, தடுத்து (த் தான் சென்று பிடித்துவர) 'இடை தருதி' என்றான். வெகுளி-சினம். விலங்கல்-மலை. தோடு-பூவிதழ். தெரியல்-அணிந்தாரைத் தெரிந்துகொள்ளற்கேற்ற சிறப்புடைய. சுறு-சுடுநாற்றம். ஏற-பரந்து வீச. அரக்கு-சாதிலிங்கம்; மிக்க சிவப்பு நிறமுடையது. இடை தருதி-வாய்ப்புத் தருக. நறுமலர் மாலை சுடுநாற்றங் கொள்ளல், வரவிருக்கும் தீமையை முன்னறிவித்தபடி. வண்டும் கரிந்ததனெல் வெகுளித் தியின் விரைவுகுறித்தவாறு. (1)

**931.** முக்கணு ஞூர்தி யன்றேன்
மூவுல கடியிற் றுயோன்
ஒக்கவூர் பறவை யன்றே
லவன்றுயி லுரக மன்றேல்
திக்கய மல்ல வாகிற்
குரங்கின்மேற் சேறி போலாம்
இக்கட னடியேற் கீதி
யிருத்தியீண் டினிதி னெந்தாய்.

*முக்கணன் ஊர்தி அன்று ஏல், மூவுலகு அடியில் தாயோன்*
*ஒக்க ஊர் பறவை அன்றேல், அவன் துயில் உரகம் அன்று ஏல்,*
*திக்கயம் அல்ல, ஆகில், குரங்கின் மேல் சேறி போலாம்!*
*இக் கடன் அடியேற்கு ஈதி; இருத்தி ஈண்டு இனிதின் எந்தாய்.*

(அட்சன் கூறல்) எந்தாய்; (விலங்கொடு பொருதற்கான இழிநிலை நினக்கு எய்துமாயின்) இன்று எதிர்ப்படுவது ஏரு, பறவையொ, அன்றி அரவோ, யானையோ; குரங்கிடம் சினந்து செல்லலும் (நின் பெருமைக்கு) ஒல்லுமோ? இச் சிறுதொழிலை அடியேற்கு ஈந்து நீ இனிதிருப்பாயாக. முக்கணன்-மூன்று கண்களையுடைய சிவபெருமான்; அவன் ஊர்தி-ஏறு. மூவுலகு அடியில் தாயோன்-மாவலிபால் மண்வேண்டி மூவுலகும் ஈரடியால் அளந்த திருமால்; அவன் ஊர்தி-கலுழன் (பருந்து); துயில் உரகம்-கண் வளரும் பாம்பு (ஆதிசேடன்). திக்கயம் – எட்டுத் திசைகளையும் தாங்கும் யானைகள். (2).

**932.** அண்டர்கோன் றன்னைப் பற்றித்
தருகெனு வடியே னிற்கக்
கொண்டனை யெம்முன் றன்னைப்
பணியென நெஞ்சங் கோடி
உண்டது திரு மன்றே
யுரனிலாக் குரங்கொன் றேனும்
எண்டிசை வென்ற நீயே
யேவுதி யென்னை யென்றான்.

*'அண்டர் கோன் தனைப் பற்றித்*
*தருக' என, அடியேன் நிற்க,*
*கொண்டனை எமமுன் தன்னைப்*
*பணி, என நெஞ்சம் கோடி*

உண்டது; தீரும் அன்றே!
உரன் இலாக் குரங்கு ஒன்று ஏனும்,
எண் திசை வென்ற நீயே,
ஏவுதி என்னை என்றான்.

அடியேன் நிற்க, எண்திசை வென்ற நீயே, எம்முன் தன்னை, 'அண்டர்கோன் தன்னைப் பற்றித் தருக' எனப் பணிகொண்டனை என, நெஞ்சம் கோடி உண்டது; உரன் இலாக் குரங்கு ஒன்றேனும் (பற்றித் தருக என) என்னை ஏவுதி; (முன் கோடியுள்ள கோட்டம்) தீரும் அன்றே! என்க. அண்டர்கோன்-அமரர்க்கு அதிபன்; இந்திரன். எம்முன்-அண்ணன்; இந்திரசயித்து. உரன்-வலிமை. (3)

அட்சகுமாரன் உறுதிகூறல் 933,934

933. கொய்தளிர் கோதும் வாழ்க்கைக்
கோடரத் துருவு கொண்டு
கைதவங் கண்ணி யீண்டோர்
சிறுபழி யிழைக்குங் கற்பான்
எய்தின னிமையா முக்க
ணீசனே யென்ற போதும்
நொய்தினில் வென்று பற்றித்
தருகுவெ னொடியி னுன்பால்.

கொய் தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத்து உருவு கொண்டு,
கைதவம் கண்ணி, ஈண்டு ஓர் சிறு பழி இழைக்கும் கற்பான்,
எய்தினன், இமையா முக்கண் ஈசனே என்றபோதும்,
நொய்தினில் வென்று, பற்றித் தருகுவென் நொடியின் உன்பால்.

'இமையா முக்கண் ஈசனே, ஈண்டு ஓர் சிறு பழி இழைக்கும் கற்பால் கைதவம் கண்ணி, கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத்து உருவு கொண்டு எய்தினன் என்ற போதும் நொய்தினில் வென்று நொடியில் பற்றி உன்பால் தருகுவென்' எனத் தந்தையிடம் மைந்தன் கூறினான். கொய்தளிர்-இளந்தளிர்; கொய் என்பது தளிரின் மென்மை குறித்தது. கோதும்-கோதி உண்ணும். கோடரம் - குரங்கு. கைதவம் - வஞ்சம். கண்ணி-எண்ணி. பழி, இங்கு அரக்கர் புகழையும் வலிமையையும் குறைத்தல். நொய்தில்-எளிமையில். நொடி-நொடிப்பொழுது; விரைவு குறித்தது. (4)

934. துண்டத்தூ ணதனிற் றோன்றுங்
கோளரி சுடர்வெண் கோட்டு
மண்டொத்த நிமிர்ந்த பன்றி
யாயினு மலைத லாற்ரு
தண்டத்தைக் கடந்து போகி
யப்புறத் தகலி லென்பால்
தண்டத்தை யிடுதி யன்றே
நின்வயிற் றந்தி லேனேல்.

துண்டத் தூண் அதனில் தோன்றும்
கோள் அரி, சுடர் வெண் கோட்டு
மண் தொத்த நிமிர்ந்த பன்றி,
ஆயினும், மலைதல் ஆற்ருது;
அண்டத்தைக் கடந்து போகி,
அப்புறத்து அகலில், என்பால்
தண்டத்தை இடுதி அன்றே;
நின்வயின் தந்திலேனேல்.

'தூண் பிளக்க, அதில் தோன்றும் சிங்கமாயினும் ஆகுக, அன்றி ஒளி வீசும் வெள்ளிய கொம்பில் இந் நிலவுலகம் ஒரு துகள்போல ஒட்ட (அதை எடுத்து) மேலோங்கி எழுந்த பன்றியேயாயினும் ஆகுக, அவை என்னோடு போர் செய்ய வல்லனவல்ல; (அவ்வாருக, இந்தக் குரங்கு என்னவாகும்? ஒருக்கால் இது என் கைக்கு அகப்படாது) அண்டத்தைக் கடந்து அப்புறம் சென்று (அதனல்) உன்னிடம் கொண்டுவந்து தர முடியாமல் போவேனுனல், என்னைத் தண்டனைக்கு உள்ளாக்குக.' (5)

### அட்சகுமாரன் விடைபெற்றுப் பெரும்படையுடன் செல்லல் 935-941

935. எனவிவை யியம்பி யீதி
விடையென விறைஞ்சி நின்ற
வனைகழல் வயிரத் திண்டோண்
மைந்தனை மகிழ்ந்து நோக்கித்
துணைபரித் தேர்மே லேறிச்
சேறியென் றினைய சொன்னுன்
புனைமணித் தாரி னுனும்
போரணி யணிந்து போனுன்.

என இவை இயம்பி, "ஈதி விடை"
என, இறைஞ்சி நின்ற
வனைகழல் வயிரத் திண் தோள்
மைந்தனை, மகிழ்ந்து நோக்கித்
"துனைபரித் தேர் மேல் ஏறிச்
சேறி" என்று, இனைய சொன்னான்;
புனை மணித் தாரினானும்
போர் அணி அணிந்து போனான்.

என இயம்பி இறைஞ்சிநின்ற மைந்தனை நோக்கி, சேறி என்று சொன்னான்; தாரினானும் போனான்; என முடிக்க. துனை-விரைவு. சேறி-செல்வாயாக. இனைய - தன் நெஞ்சம் வருந்த; மைந்தன் உரைகளால் மகிழ்ந்து விடைகொடுக்குங்கால், வருந்தினான் என்பது குறிப்பு. (6)

**936.** ஏறின னென்ப மன்னோ
விந்திர னிகலி லிட்ட
நூறொடு நூறு பூண்ட
நொறில்வயப் புரவி நோன்றேர்
கூறின ரரக்க ராசி
குமுறின முரசக் கொண்மூ
வூறின வுரவுத் தானை
யூழிபேர் கடலை யொப்ப.

ஏறினன் என்ப, மன், ஓ, இந்திரன் இகலில் இட்ட,
நூறொடு நூறு பூண்ட, நொறில் வயப் புரவி நோன் தேர்;
கூறினர் அரக்கர் ஆசி; குமுறின முரசக் கொண்மூ;
ஊறின உரவுத் தானை ஊழி பேர் கடலை ஒப்ப.

இந்திரன்...............நோன் தேர் ஏறினன்; அரக்கர் ஆசி கூறினர்; முரசக்கொண்மூ குமுறின; ஊழி பேர் கடலை ஒப்ப உரவுத் தானை ஊறின. இகலில் இட்ட-போரில் தன் தோல்விக்குக் குறியாகக் கொடுத்துப்போன. நொறில்-விரைவு. வய, நோன் என்பன வலிமையைக் குறிப்பன. கொண்மூ-மேகம். இடிக்கும் வினையினால் முரசொடு உருவகப்படுத்தப் பட்டது. ஊறின-மேலும் மேலும் சுரந்தன; குறையாத படை என்பது குறித்தது. ஊழிக்காலத்து உலகைப் பெயர்க்குங் கடல், செயலாலும் அளவாலும், அரக்கர் படைக்கு உவமை. (7)

**937.** பொருகடன் மகர மெண்ணி
லெண்ணலாம் பூட்கை பொங்கித்
திரிவன மீன்க ளெண்ணி
லெண்ணலாஞ் செம்பொற் றிண்டேர்
உருவுறு மணலை யெண்ணி
லெண்ணலா முரவுத் தானை
வருதிரை மரபி லெண்ணி
லெண்ணலாம் வாவும் வாசி.

*பொரு கடல் மகரம் எண்ணில்*
*எண்ணலாம் பூட்கை; பொங்கித்*
*திரிவன மீன்கள் எண்ணில்*
*எண்ணலாம் செம் பொன் திண் தேர்;*
*உரு உறு மணலை எண்ணில்*
*எண்ணலாம் உரவுத் தானை;*
*வரு திரை மரபில் எண்ணில்*
*எண்ணலாம் வாவும் வாசி.*

பூட்கை, பொரு கடல் மகரம் எண்ணில் எண்ணலாம்; செம்பொன் திண்தேர், திரிவன மீன்கள் எண்ணில் எண்ணலாம்; உரவு தானை, உரு உறு மணலை எண்ணில் எண்ணலாம் ; வாவும் வாசி, மரபில் வரு திரை எண்ணில் எண்ணலாம்; யானை, தேர், காலாள் குதிரை ஆகிய நால்வகைப் படையின்மிகுதி குறித்தபடி. உரு உறு மணல் – தனித் தனியாகப் பிரித்துவைத்த மணல். (8)

**938.** ஆறிரண் டடுத்த வெண்ணி
ருயிரங் குமர ராவி
வேறிலாத் தோழர் வென்றி
யரக்கர்தம் வேந்தர் மைந்தர்
ஏறிய தேரர் சூழ்ந்தா
ரிறுதியின் யாவு முண்பான்
சீறிய காலத் தீயின்
செறிசுடர்ச் சிகைக ளன்னார்.

ஆறு இரண்டு அடுத்த எண்ணின் ஆயிரம் குமரர்; ஆவி
வேறு இலாத் தோழர், வென்றி அரக்கர்தம் வேந்தர் மைந்தர்,
ஏறிய தேரர் சூழ்ந்தார், இறுதியின் யாவும் உண்பான்
சீறிய காலத்தீயின் செறி சுடர்ச் சிகைகள் அன்னர்.

இறுதியின் யாவும் உண்பான் சீறிய காலத்தியின் செறி சுடர்ச் சிகைகள் அன்னர், வென்றி அரக்கர்தம் வேந்தர் மைந்தர், ஆவி வேறு இலாத் தோழர், ஆறு இரண்டு அடுத்த எண்ணின் ஆயிரம் குமரர், ஏறிய தேரர் சூழ்ந்தார். ஊழித்தியின் கொழுந்தன்னரும், அட்சகுமாரனோடு உயிர் ஒன்றிய தோழரும் ஆகிய அரக்க அரசரது மைந்தர் பன்னீராயிரவர் தேர் ஏறிப் போர்க்குப் புறப்பட்டார். (9)

**939.** மந்திரக் கிழவர் மைந்தர்
மதிநெறி யமைச்சர் மக்கள்
தந்திரத் தலைவ ரீன்ற
தனயர்கள் பிறருந் தாதைக்
கந்தரத் தரம்பை மாரிற்
றோன்றின ராதி யானோர்
எந்திரத் தேரர் சூழ்ந்தா
ரீரிரண் டிலக்கம் வீரர்.

மந்திரக் கிழவர் மைந்தர், மதி நெறி அமைச்சர் மக்கள்,
தந்திரத் தலைவர் ஈன்ற தனயர்கள் பிறரும், தாதைக்கு
அந்தரத்து அரம்பை மாரில் தோன்றினர் ஆதி ஆனோர்,
எந்திரத் தேரர், சூழ்ந்தார் ஈரிரண்டு இலக்கம் வீரர்.

மந்திரக் கிழவர் என்பது முன்பு அமைச்சராய் இருந்தோரையும் அமைச்சர் என்பது, அப்போது அமைச்சராக உள்ளோரையும் குறிக்கு மெனக் கூறுவர். தந்திரத் தலைவர்-படைத்தலைவர்கள். தனயர்-புதல்வர். அந்தரம்-விண்ணுலகம். எந்திரத்தேர்-பொறியினுல் இயக்கப்படும் தேர். (10)

**940.** தோமர முலக்கை சூலஞ்
சுடர்மழுக் குலிசந் தோட்டி
ஏமரு வரிவில் வேல்கோ
லீட்டிவா ளெழுவிட் டேறு

மாமரம் வீசு பாசம்
வயிர்வளை வயிரத் தண்டு
காமரு கணையங் குந்தங்
கப்பணங் கால நேமி.

தோமரம், உலக்கை, சூலம், சுடர், மழு, குலிசம், தோட்டி,
ஏ மரு வரிவில், வேல், கோல், ஈட்டி, வாள், எழு, விட்டேறு,
மா மரம், வீசு பாசம், வயிர், வளை, வயிரத் தண்டு,
காமரு கணையம், குந்தம், கப்பணம், காலநேமி.

ஈண்டு, போர்க்கருவிகள் பல கூறப்பட்டிருக்கின்றன. தோமரம்-தண்டாயுதம்; உலக்கை-நெல் முதலியன குற்றும் உலக்கைபோல் இரும்பினாற் செய்யப்பட்ட போர்க்கருவி. சூலம் - மூன்று முனைகளையுடைய வேல் போன்ற ஒரு கருவி; சிவபெருமானுக்குரியது. மழு - பழுக்கக் காய்ச்சிய இரும்பு ; கோடாலி; பரசு. குலிசம் – வச்சிராயுதம்; இந்திரனுக்குரியது. தோட்டி – அங்குசம்; பகைவரை வருத்த நிலத்துப் புதைக்கப்படும் கூரிய ஆயுதம். ஏமரு வரிவில் – அம்பு பொருந்திய வரிந்து கட்டப்பட்ட வில். வேல் - இலை போன்ற வடிவும், கூரிய முனையுமுடைய நீண்ட போர்க் கருவி. கோல்–தடி. ஈட்டி-கூரிய முனையையுடைய கருவி. எழு-இருப்புத் தூண். விட்டேறு–கூர்மையான முனையையுடைய எறிகோல். மரம்-இயமரம் என்னும் ஒரு போர்ப்பறை என்றும், கோட்டைக் கதவுகளை உடைக்கும் ஒரு பெரு மரக்கருவி என்றும் கொள்ளலாம். வீசுபாசம்–பகைவர்களை வீசிக் கட்டுகின்ற கயிறு. வயிர்-கொம்பு என்னும் ஊதுகருவி. வளை-சங்கு. வயிரத்தண்டு–வலிய திணிந்த குறுந்தடி. காமரு–போர்வீரர்களுக்குக் கையாள விருப்பம் விளைவிக்கின்ற; கணையம்-வளைதடி. குந்தம்-குத்துக்கோல். கப்பணம் – நெரிஞ்சிமுள்போன்று இரும்பினாற் செய்து யானை அடிவைக்க அஞ்சும்வண்ணம் நிலத்தில் பரப்பப்படும் செய்முள். காலநேமி-கால அயம் என்னும் கருநிறங்கொண்ட திணிந்த எஃகினுல் செய்யப்பெற்ற ஆழிப்படை. *(11)*

**941.** என்றிவை முதல வாய
வெறிறிகழ் படைக ளீண்டி
மின்றிரண் டனைய வாகி
வெயிலொடு நிலவு வீசத்
துன்றிருந் தூளி பொங்கித்
துறுதலா லிறுதி செல்லாப்
பொன்றிணி யுலக மான
பூதல மான மாதோ.

என்று இவை முதல ஆய எழில் திகழ் படைகள் ஈண்டி,
மின் திரண்ட அனைய ஆகி வெயிலொடு நிலவு வீச,
துன்று இரும் தூளி பொங்கித் துறுதலால் இறுதி செல்லாப்
பொன் திணி உலகம் ஆன பூதலம் ஆன மாதோ.

ஈண்டி ஆகி வீச துறுதலால் ஆன என முடிக்க. போர்க்கருவிகள் திரண்டமையால், ஒளிமிகுந்து வெயிலாகவும் நிலவாகவும் காட்டியது. படைகள் செல்லும்போது தூளி எல்லாம் மேற்சென்று மண்ணுலகைப் பொன்னுலகாக்கிற்று; தூளி வெளியேற , இலங்கையின் பொன் மாளிகைகள் மாசு நீங்கி ஒளி வீசினமையின். துன்று-நெருங்கு. தூளி-தூசி. துறுதலால்-நெருங்கியதால். மண்ணுலகத்துகள் மேலேறிப் பரந்து, விண்ணுலகத்தை மண்ணுலகாக்கிற்று என்றும் கூறுவர். (12)

இச்செய்யுளின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :—

941 (a) கடுவையின் மரங்களொடுக் கடைகடிமிலை தாக்க?
உடுவின மான தெல்லா முதிர்ந்தபூ வுதிர்ந்த தென்ன
வடுபுலி யனைய வீர ரணிகளா லார்ப்பு மானை
நெடுமணி முழக்கு மோங்கி மண்ணுல கதிர்ந்த தன்றே.

## அட்சகுமாரன் படையின் தீய நிமித்தங்களும் ஆரவாரமும் 942–945

**942.** காகமுங் கழுகும் பேயுங்
காலனுங் கணக்கில் காலம்
சேகுற வினையிற் செய்த
தீமையுந் தொடர்ந்து செல்லப்
பாகுள கிளவிச் செவ்வாய்ப்
படைவிழிப் பணைத்த வேய்த்தோட்
டோகையர் மனமுந் தொக்க
தும்பியும் தொடர்ந்து சுற்ற.

காகமும், கழுகும், பேயும், காலனும், கணக்கு இல் காலம்
சேகு உற வினையின் செய்த தீமையும், தொடர்ந்து செல்ல;
பாகு உள கிளவி செவ்வாய் படைவிழி பணைத்த வேய்த் தோள்
தோகையர் மனமும் தொக்க தும்பியும் தொடர்ந்து சுற்ற.

[காகமும்......செல்ல, பாகுள......தொக்க தும்பியும்...சுற்ற, (943) உழைக்குல......அமலேயின், அரவச் சேனை பல்லியம் துவைக்கத் தாவி, தழைத்து எழும் ஒலியின், சொன்ன மாற்றங்கள் ஓசை மழைக்குரல் இடியில் உரைப்ப, (944) மணிகள் வெயிற்கரம்......கதிர் விழுங்க, அயில் கரம்......பருக, எயிற்று......ஒளி ஒதுங்க, யாணர்......தோன்ற, (945) ஓங்கிரும்......விழ, தோளும்......துள்ள, மேகம்......விழ்ப்ப, காகம் ஏங்கின ஆர்ப்ப, இருள்......இடிப்ப, (946) வெள்ள வெம் சேனை...... தோன்றும் மாலேயானைக்......காற்றின்சேய் வரவு கண்டான் : என இச் செய்யுள்களைத் தொடர்ந்து முடிக்க. (942) தியகுறிகளான காகம், கழுகு பேய், காலன் முதலியவை படையொடு தொடர்ந்து சென்றன.]

இவ்வரக்கர் எண்ணில்லாத காலம் தொடர்ந்து திட்பமாகச் செய்த திய வினையே மேற் கூறியவற்றைச் செலுத்தித் தானும் தொடர்ந்து சென்றது. திவினை தொடர்ந்த தென்பதன் பொருள், சேமித்த வினை, தன் பயனைக் கொடுக்கத் தொடங்கிற்று என்பதேயாம். வழிவழி அரக்கர் செய்த தி வினை, திய நிமித்தமாகத் தொடர, இங்கு படைத்தலைவனாகச் செல்லும் அட்சகுமாரனது வடிவழகும் இளநலமும் பாகிலும் இனிய செஞ்சொல் படைவிழித் தோகையருடைய உள்ளத்தையும், அவர்கள் தூதாக விடுத்த தும்பி என்னும் வண்டையும் ஈர்த்தது எனக் கூறுகின்றார். (13)

943. உழைக்குல நோக்கி னார்க
ளுலந்தவர்க் குரிய மாதர்
அழைத்தழு குரலின் வேலே
யமலேயி னரவச் சேனை
தழைத்தெழு மொலியி னோசை
பல்லியந் துவைக்கத் தாவி
மழைக்குர லிடியிற் சொன்ன
மாற்றங்க ளுரைப்ப மன்னோ.

உழைக்குல நோக்கினார்கள் உலந்தவர்க்கு உரிய மாதர்
அழைத்து அழு குரலின் வேலே அமலேயின், அரவச் சேனை
தழைத்து எழும் ஒலியின் ஓசை பல்லியம் துவைக்கத் தாவி
மழைக்குரல் இடியில் சொன்ன மாற்றங்கள் உரைப்ப மன் ஓ.

படை செல்லுங்கால், பற்பல ஒலிகள் கேட்கின்றன; சிறிதுமுன் போரில் மடிந்த வீரர்களுடைய மனைவியர், அவ்வீரரை அழைத்தழைத்து அழும் குரல், கடலின் பேரொலியினும் பெரிதாகக் கேட்கின்றது. முரச

மும் சங்கமும் ஒலிக்க, செல்லும் படையின் ஆரவார ஒலியோ, அழுகின்ற ஒலியையும் விஞ்சியது. படையின் நடைமுறைகளைப் பற்றிப் பேசப்படும் சொற்களின் அரவம் எல்லா ஒலியையும் அடக்கி, இடியின் பேரொலி போல் முழங்குகின்றது. உழைக்குலம் - மான்கூட்டம். உலந்தவர் — இறந்தவர். துவைக்க - ஒலிக்க. *(14)*

இச்செய்யுளின் பின் 25-என்னும் குறியிடுள்ள சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :—

943 (a) பத்தியிற் றேர்கள் செல்லப் பவளக்காற் புடைகள் சுற்ற
முத்தினிற் கவிகை சூழ முகிலென முரச மார்ப்ப
மத்தவெங் கரிகள் யாவு மழையென விருண்டு தோன்றத்
தத்திய பரிக டன்னிற் சாமரை தழைப்பப் போனுன்.

**944.** வெயிற்கர மணிகள் வீசும்
விரிகதிர் விழுங்க வெய்ய
அயிற்கர மணிக ளாலு
மவிரொளி பருக வஃதும்
எயிற்றிளம் பிறைக ளீன்ற
விலங்கொளி யொதுங்க யாணர்
உயிர்க்குல விரவு மன்று
பகலன்றென் றுணர்வு தோன்ற.

*வெயில் கர மணிகள் வீசும்*
*விரி கதிர் விழுங்க, வெய்ய*
*அயில் கர மணிகளாலும்*
*அவிர் ஒளி பருக, அஃதும்*
*எயிற்று இளம் பிறைகள் ஈன்ற*
*இலங்கு ஒளி ஒதுங்க, யாணர்*
*உயிர்க் குலவு இரவும் அன்று, பகல்*
*அன்று, என்று உணர்வு தோன்ற.*

வீரர்கள் அணிந்திருந்த அணிகளில் பதித்த மணிகள் வீசும் ஒளி, கதிரவன் ஒளியை விழுங்கிற்று. அம் மணியொளியை வீரர்கள் ஏந்திய விளங்கும் வேலின் ஒளி பருகிற்று. பிறைகள் போன்ற கோரைப் பற்கள் வீசிய ஒளியினுல் அந்த வேலொளியும் ஒதுங்கிற்று. பின்னர், ஒதுங்கிய வேலொளி, எயிற்றொளியை ஒதுக்கிற்று. இவ்வாறு, மாறி மாறி ஒளி வீசும் பொருள்கள் மங்கவும் ஒளி மங்காது நின்று பகலென்றும் இர வென்றும் தெரிய வொண்ணுது ஒரு புது உணர்ச்சியே மாறி மாறித்

தோன்றியது. ஒதுங்க, யானர் என்னும் சொற்களின் பொருள் நயம் கருதத்தக்கன. (15)

இச் செய்யுள் 25 என்னும் குறியிடுள்ள சுவடியில் இல்லை.

**945.** ஓங்கிருந் தடந்தேர் பூண்ட
உளைவயப் புரவி யொல்கித்
தூங்கின வீழத் தோளுங்
கண்களு மிடத்துத் துள்ள
வீங்கின மேக மெங்குங்
குருதிநீர்த் துளிகள் வீழ்ப்ப
ஏங்கின காக மார்ப்ப
விருளில்விண் ணிடிப்ப மாதோ.

*ஓங்கு இரும் தடம் தேர் பூண்ட உளை வயப் புரவி ஒல்கித் தூங்கின விழ, தோளும் கண்களும் இடத்துத் துள்ள, வீங்கின மேகம் எங்கும் குருதிநீர்த் துளிகள் வீழ்ப்ப ஏங்கின காகம் ஆர்ப்ப, இருளில் விண் இடிப்ப மாது ஓ.*

நியமித்தங்கள் செறிந்து தோன்றுகின்றன; தேரிற் பூட்டிய புரவிகள் தூங்கிவிழுகின்றன; வீரர்களது இடப்பக்கத்துத் தோளும் கண்களும் துடிக்கின்றன; மேகம் செந்நீர்த் துளிகளைச் சிந்துகின்றன; இரவில் காகம் ஏங்கிக் கதறுகின்றன. (வானத்திலேயோ மேகக் கூட்டங்கள் காணப் படாமலே) இடி இடிக்கின்றது. உளை - பிடரிமயிர். (16)

இச் செய்யுளின் பின் 25-என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வரும் பாடல் காணப்படுகிறது :—

945 (a) நியவல் லரக்கர் தம்மிற் சிலர்சிலர் செம்பொற் சின்னம்
வாயின்வைத் தூத வீரர் வழியிடம் பொருது செல்லக்
காயும்வெங் களிறு காலாள் கடும்பரி கடுகிச் செல்ல
நாயகன் றாதன்றானும் நோக்கின னகையுங் கொண்டான்.

### அனுமன் அட்சகுமாரனைக் காணலும் ஐயுறலும் 946-949

**946.** வெள்ளவெஞ் சேனை சூழ
விண்ணுளோர் வெருவி விம்ம
உள்ளநொந் தனுங்கி வெய்ய
கூற்றமு முறுவ துன்னத்

துள்ளின சுழல்கட் பல்பேய்
தோள்புடைத் தார்ப்பத் தோன்றும்
கள்ளவிழ் மாலே யானைக்
காற்றின்சேய் வரவு கண்டான்.

வெள்ள வெம் சேனே சூழ,
விண்ணுளோர் வெருவி விம்ம,
உள்ளம் நொந்து அனுங்கி, வெய்ய
கூற்றமும் உறுவது உன்ன,
துள்ளின சுழல் கண் பல் பேய்
தோள் புடைத்து ஆர்ப்ப, தோன்றும்
கள் அவிழ் மாலேயானேக்
காற்றின்சேய் வரவு கண்டான்.

(இத்தகைய தோற்றங்களோடு) வெள்ளம் என்னும் எண்ணேயும் கடந்த கொடுமை மிக்க படைகள் சூழவும்; இப்படைகளேக் கண்டு வானில் உள்ளவர்களும் அஞ்சி நடுங்கவும், கொடிய இயமனும் தன் உள்ளம் நொந்து, எது என்ன ஆகுமோ என அழுங்கி நிற்கவும், சுழலும் கண் களேயுடைய பல பேய்கள், தோள்களேத் தட்டிக்கொண்டு துள்ளிக் குதித்து மகிழவும், மதுமலர் செறிந்த மாலேயை உடைய அட்சகுமாரன் போர்க் களத்தே தோன்றினன். அவன் வரவை அநுமன் பார்த்தான். பல் பேய் ஆர்ப்ப என்பதினல் அரக்கர் அழிவு முற்குறித்ததாயிற்று. (17)

**947.** இந்திர சித்தோ மற்ற
விராவண னேயோ வென்னச்
சிந்தையி னுவகை தோன்ற
முனிவுற்ற குரக்குச் சீயம்
வந்தனன் முடிந்த தன்றே
மனக்கருத் தென்ன வாழ்த்திச்
சுந்தரத் தோளே நோக்கி
யிராமனேத் தொழுது சொன்னன்.

“இந்திரசித்தோ? மற்று அவ்
இராவணனேயோ?” என்னச்
சிந்தையின் உவகை தோன்ற,
முனிவு உற்ற குரக்குச் சீயம்,

"வந்தனன் ; முடிந்தது அன்றே ?
மனக் கருத்து" என்ன வாழ்த்தி,
சுந்தரத் தோளை நோக்கி,
இராமனைத் தொழுது சொன்னான்.

முனிவு உற்ற குரக்குச் சியம், இராமனைத் தொழுது வாழ்த்தி, இந்திரசித்தோ? மற்று அவ் இராவணனேயோ?என்று, சுந்தரத் தோளை நோக்கி, 'வந்தனன் மனக்கருத்து முடிந்ததுஅன்றே?' என்னச் சிந்தையின் உவகை தோன்றச் சொன்னான்: என முடிக்க. அட்சகுமாரனை, இந்திரசித்தோ? இராவணனே? என ஐயுற்று, இருவருள் ஒருவரேல், தன் மனக் கருத்து முடிந்தது என உவகை கொண்டான். இவன் சுந்தரத் தோளுக்கு வலி, இராமனது திருவருளே என்பது தோன்றத் தோளை நோக்குமுன், இராமனை வாழ்த்தித் தொழுது நோக்கிச் சொன்னான் என்க. குரக்குச் சியம் - குரங்குருவில் தோன்றிய சிங்கம் ; இங்கு, சியம் என்றது, நரசிங்கம் என்னிலும் பொருந்தும். (18)

948. எண்ணிய விருவர் தம்மு
ளொருவனால் யானு நோற்ற
புண்ணிய முளதா யெங்கோன்
றவத்தொடும் பொருந்தி னானேல்
நண்ணின னானு நின்றேன்
காலனு நணுகி நின்றான்
கண்ணிய கரும மின்றே
முடிக்குவென் கடிதி னென்றான்.

"எண்ணிய இருவர் தம்முள்
ஒருவனால், யானும் நோற்ற
புண்ணியம் உளதாய், எம் கோன்
தவத்தொடும் பொருந்தினானேல்,
நண்ணினன் நானும் நின்றேன் ;
காலனும் நணுகி நின்றான் ;
கண்ணிய கருமம் இன்றே
முடிக்குவென் கடிதின்". என்றான்.

தான் எண்ணிவந்த கருமம் முடிவதற்கு எற்ற வாய்ப்புகள் கிடைத்து விட்டன எனக் கருதிய அநுமன், உள்ளத்தில் உவகை பொங்க, விட்டு விட்டுப் பொருள் தெரிக்கும் சிறுசிறு சொற்றொடர்களால் தன் உள்ளத்

தைக் காட்டும் எளிய அழகை இச்செய்யுளில் காணலாம். எண்ணிய இருவர் தம்முள் ஒருவன்-இந்திரசித்தோ இராவணனே என ஐயுற்ற இருவருள் ஒருவன். ஐயத்தை எண்ணம் எனக் கூறியது கருதுக. யானும் நோற்ற புண்ணியம் உளதாய் என்பது, இராமனுக்குத் தொண்டனாகப் போந்ததே புண்ணியம் எனக் கருதி. எம் கோன் என்பது சுக்கிரீவனை. தவத்தொடும் பொருந்தினன் என்பது, புண்ணியத்தொடு தொடர்புடையன் எனக் கொள்க. தவத்தைப் புண்ணியம் என்றல் காரண காரிய இயைபு நோக்கி என்க. நானும் நண்ணினன் நின்றேன் என்பதில், நண்ணினன் என்பது, தன் தலைவனாகிய சுக்கிரீவனை நண்ணியிருந்தமையும், அவனைச் சார்ந்து இராமபிரானை நண்ணினமையும், இப்போது இராமனது தொண்டனாக அரக்கர் படையை நண்ணியமையும் ஒரு சேர நினைத்தவாறு. புண்ணியம் உளதாம் காலத்து, விலகியிருந்த காலன், அஃது உலந்தகாலத்து இலங்கையை நணுகிநின்றான். கண்ணிய கருமம் சிறப்புடையதாகலானும், அதனை முடித்தற்கேற்ற சூழ்நிலை பொருந்தியுள்ளமையானும், இன்றே முடிக்குவென் என்பதொடு அமையாது, முடிக்குவென் கடிதின் என விரைவின் விரைவை விரைந்து கூறினபடி. (19)

**949.** பழியில துருவென் றாலும்
பலதலை யரக்க னல்லன்
விழியிடை யிமைக்கு மேனாள்
வேந்தைவென் றானு மல்லன்
மொழியின்மற் றவர்க்கு மேலான்
முரட்டொழின் முருக னல்லன்
அழிவிலொண் குமரன் யாரோ
வஞ்சனக் குன்ற மன்னான்.

"பழி இலது உரு என்றாலும்,
பல தலை அரக்கன் அல்லன்;
விழி இடை இமைக்கும் மேல்நாள்
வேந்தை வென்றானும் அல்லன்;
மொழியின் மற்றவர்க்கு மேலான்;
முரண் தொழில் முருகன் அல்லன்;
அழிவில் ஒண் குமரன் யாரோ?
அஞ்சனக் குன்றம் அன்னான்."

(இருவருள் ஒருவன் என எண்ணிய அநுமன், மேலும் எண்ணுகிறான்.) அஞ்சனக்குன்றம் அன்னான் பல தலை அரக்கன் அல்லன்; மேல்

நாள் விழி இடை இமைக்கும் வேந்தை வென்றுனும் அல்லன்; மொழியின், மற்றவர்க்கு மேலான்; உரு, பழி இலது; என்ருலும், முரண் தொழில் முருகன் அல்லன் ; அழிவு இல் ஒண் குமரன் யாரோ? என இயைக்க. பல தலை அரக்கன் - இராவணன். விழி......வேந்து - இந்திரன். உருவப் பொலிவுடையான் என்பது தோன்றப் பழி இலது உரு என்ருர். முரண் தொழில் - போர்த்தொழில். அஞ்சனக் குன்றம் - மைமலை. மற்றவர்க்கு மேலான் என்பது தோன்ற, முருகனே என ஐயுற்ருன். (20)

### அனுமனை அட்சகுமாரன் எள்ளி நகைத்தல்

**950.** என்றவ னுவந்து விண்டோ
யிந்திர சாப மென்ன
நின்றதோ ரணத்தி னும்ப
ரிருந்தபோர் நீதி யானை
வன்ருெழி லரக்க னேக்கி
வாளெயி றிலங்க நக்கான்
கொன்றதிக் குரங்கு போலா
மரக்கர்தங் குழாத்தை யென்ருன்.

*என்றவன் உவந்து, விண் தோய்,*
*இந்திர சாபம் என்ன*
*நின்ற, தோரணத்தின் உம்பர்*
*இருந்த போர் நீதியானை,*
*வன் தொழில் அரக்கன் நோக்கி,*
*வாள் எயிறு இலங்க நக்கான் ;*
*'கொன்றது இக்குரங்கு போலாம்!*
*அரக்கர் தம் குழாத்தை' என்ருன்.*

வன் தொழில் அரக்கன் விண்தோய் இந்திர சாபம் என்ன நின்ற தோரணத்தின் உம்பர் இருந்த போர் நீதியானை நோக்கி, 'அரக்கர் தம் குழாத்தைக் கொன்றது இக்குரங்குபோலாம்' என்ருன், வாள் எயிறு இலங்க நக்கான்: என இயைக்க. இந்திர சாபம், வளைவாலும் பன்னிறப் பொலிவாலும் தோரணத்துக்கு உவமை. தோரணம் – அரசர் செல்லும் பெருவாயில். அரக்கனை அநுமன் எண்ணியதற்கும், அநுமனை அரக்கன் எண்ணியதற்கும் உள்ள வேற்றுமை காண்க. நீதியான் – முறைமையாக வுடையவன். என்ருன்-என்று. என்றவன்-என்று (முன் செய்யுளில் கண்டவண்ணம்) ஐயுற்றவனுகி. (21)

### தேர்ப்பாகன் ஏளனமாக எண்ணக் கூடாதெனல்

**951.** அன்னதா மச்சொற் கேட்ட
  சாரதி யைய கேண்மோ
இன்னதா மென்ன லாமோ
  வுலகிய லிகழ லம்மா
மன்னனோ டெதிர்ந்த வாலி
  குரங்கென்றான் மற்று முண்டோ
சொன்னது துணிவிற் கொண்டு
  சேறியென் றுணரச் சொன்னான்.

*அன்னதாம் அச்சொல் கேட்ட*
  *சாரதி, "ஐய! கேண்மோ!*
*இன்னதாம் என்னலாமோ உலகியல்?*
  *இகழல்! அம்மா!*
*மன்னனோடு எதிர்ந்த வாலி*
  *குரங்கு என்றால், மற்றும் உண்டோ?*
*சொன்னது துணிவில் கொண்டு*
  *சேறி" என்று உணரச் சொன்னான்.*

அன்னதாம் அச்சொல், இழித்துக் கூறியசொல். சாரதி-தேர்ப்பாகன். 'உலகியல் இன்னது எனக் கூறும் தகைத்தோ? இகழல்' எனக் கூறினான். 'உலகியல் இகழல்; இன்னது எனக் கூறும் தகைத்தோ?' என்னலும் ஆம். குரங்கின் வலிமையை வற்புறுத்த வேண்டி, இராவணனைப் புறங் கண்ட வாலியின் பெயரை நினைவூட்டுகின்றான். மன்னன், இங்கு இராவணன். 'உலகியலை இகழக்கூடாது' என்பது பொது நீதி. (22)

### அட்சகுமாரன் வஞ்சினங் கூறல்

**952.** விடந்திரண் டனைய மெய்யா
  னவ்வுரை விளம்பக் கேளா
இடம்புகுந் தினைய செய்த
  விதனொடு சீற்ற மெஞ்சேன்
தொடர்ந்துசென் றுலக மூன்றுந்
  துருவினெ னொழிவு றுமல்
கடந்துபின் குரங்கென் றேதுங்
  கருவையுங் களைவெ னென்றான்.

விடம் திரண்டு அனைய மெய்யான்,
அவ் உரை விளம்பக் கேளா,
" இடம் புகுந்து, இனைய செய்த
இதனொடு, சிற்றம் எஞ்சேன்,
தொடர்ந்து சென்று, உலகம் மூன்றும்
துருவினென், ஒழிவு உறுமல்
கடந்து, பின் குரங்கு என்று ஓதும்
கருவையும் களைவென் " என்றான்.

(சாரதி) அவ்வுரை விளம்ப, விடம் திரண்டு அனைய மெய்யான், கேளா, ' இடம் புகுந்து இனைய செய்த இதனொடு சிற்றம் எஞ்சேன்; உலகம் மூன்றும் கடந்து சென்று ஒழிவு உறுமல் தொடர்ந்து துருவி (னென்), பின், குரங்கு என்று ஓதும் கருவையும் களைவேன்' என்றான் என்க. விடம் திரண்டமை, நிறத்தாலும் தொழிலாலும் உவமையாயிற்று - இடம் - இலங்கை. இனைய - இத்தகைய அழிவுகளை. எஞ்சேன்-விடமாட்டேன். கருவையும் களைதல் - இனத்தை வேரோடு அறவே அழித்தல். (23)

இச் செய்யுளுக்குப் பின்னர், பின்வரும் செய்யுள் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில், காணப்பெறுகிறது.

952. (a) புலிப்போத்தின் வயவ ரெல்லாம் பொருகரி பரிதேர் பொங்கக்
கலித்தார்க ளும்ப ரோடக் கடையுகத் தெறியுங் காலின்
ஒலித்தாழி யுவாவுற் றென்ன வும்பர்தோ ரணத்தை முட்ட
வலித்தார்திண் சிலைக ளெல்லா மண்டின சரத்தின் மாரி.

### அனுமனும் அரக்கர் படையும் பொருதல் 953-959

953. ஆர்த்தெழுந் தரக்கர் சேனை
யஞ்சனைக் குரிய குன்றைப்
போர்த்தது பொழிந்த தம்மா
பொழிபடப் பருவ மாரி
வேர்த்தனர் திசைகாப் பாளர்
சலித்தது விண்ணு மண்ணும்
தார்த்தனி வீரன் றானும்
தனிமையு மவர்மேற் சார்ந்தான்.

ஆர்த்து எழுந்து, அரக்கர் சேனை, அஞ்சனைக்கு உரிய குன்றைப்
போர்த்தது; பொழிந்தது, அம்மா ! பொழிபடப் பருவ மாரி ;
வேர்த்தனர் திசை காப்பாளர் ; சலித்தது விண்ணும் மண்ணும்;
தார்த் தனி வீரன், தானும் தனிமையும், அவர்மேல் சார்ந்தான்.

அம்மா ! அரக்கர் சேனை ஆர்த்து எழுந்து அஞ்சனைக்கு உரிய குன்றைப் போர்த்தது: பொழிபடப் பருவமாரி பொழிந்தது; திசைகாப்பாளர் வேர்த்தனர் ; மண்ணும் விண்ணும் சலித்தது. அவர்மேல், தார்த்தனி வீரன் தானும் தனிமையும் சார்ந்தான்: என்க. அஞ்சனைக்கு உரிய குன்று-அஞ்சனையின் மகனாகிய குன்றுபோலும் அநுமன். பொழிபட-உடலெல்லாம் பொளிபட; அதாவது உளியினால் கொத்தினாற் போல் படைக்கலம் புண்செய்த என்றபடி. பருவமாரி-பருவகாலத்து விடாமழை. திசை காப்பாளர் அஞ்சி வேர்த்தனர். சலித்தது-அசைந்தது. தானும் தனிமையும்-தனித்த நிலையில். (24)

இதன்பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் செய்யுள் காணப்பெறுகிறது.

953 (a) எடுத்தன னெழுவொன் றங்கை யெடுத்திக லரக்கர் சிந்தப்
பொடித்தன னிரதம் வாசி பொருங்களி றிதனை யெல்லா
முடித்தன னடிப்பிற் பின்னு மூசுபோ ரரக்கர் வெள்ளம்
அடுத்தமர் கோல மேன்மே லடுபடை தூவி யார்த்தார்.

**954.** எறிந்தனர் நிருதர் வெய்தி
னெய்தின படைக ளெல்லாம்
முறிந்தன வீரன் மேனி
முட்டின முகர யானை
மறிந்தன மடிந்த தேரு
மானமாக் குழுவு மற்றும்
நெறிந்தன வரம்பில் யாக்கை
யிலங்கைதன் னிலையிற் பேர.

எறிந்தனர், நிருதர் வெய்தின் எய்தின படைகள் எல்லாம்,
முறிந்தன வீரன் மேனி முட்டின, முகர யானை
மறிந்தன, மடிந்த தேரும் மான மாக் குழுவும், மற்றும்
நெறிந்தன வரம்பில் யாக்கை, இலங்கை தன் நிலையில் பேர.

நிருதர் படைகள் வெய்தின் எறிந்தனர்; எல்லாம் வீரன் மேனி முட்டின (ஆய்) முறிந்தன. (அநுமன் எதிர்த்துத் தாக்க) இலங்கை தன் நிலையில் பேர, முகரயானை மறிந்தன; தேரும் மான மா குழுவும் மடிந்த; மற்

றும் வரம்பில் யாக்கை நெறிந்தன, என்க: வெய்தின்-கடுமையாக. முகரம்-தொடர்ந்த கரடான ஒலி. மான மா குழு-சிறந்த குதிரைக்கூட்டம். வரம்பு இல்-எண்ணிக்கையில்லாத. பெயர என்பது, பேர என நின்றது. இலங்கை தன் நிலையில் பேர்தலாவது, புகழழிதல் படையழிதல் அழகழிதல் முதலியவற்றால் சிதைவுறல். அரக்கர் படைக்கலம், அநுமன் மேல் பட்டு ஆற்றாதனவாய் முறிந்துவிழ, அநுமன் தாக்குதலால் இலங்கையின் நிலை கெடுமாறு படையழிந்தன என்பது கருத்து. (25)

**955.** காயெரி முளிபுற் கானிற்
கலந்தெனக் காற்றின் செம்மல்
ஏயெனு மளவிற் கொல்லு
நிருதர்க்கோ ரெல்லை யில்லை
போயவ ருயிரும் போகித்
தென்புலம் படர்தல் பொய்யா
தாயிர கோடி தூத
ருளர்கொலோ நமனுக் கம்மா.

காய் எரி, முளி புல் கானில் கலந்து எனக் காற்றின் செம்மல் ஏ எனும் அளவில் கொல்லும் நிருதர்க்கு, ஓர் எல்லை இல்லை, போயவர், உயிரும் போகித் தென்புலம் படர்தல், பொய்யாது, ஆயிர கோடி தூதர் உளர்கொலோ! நமனுக்கு அம்மா.

காற்றின் செம்மல், ஏ எனும் அளவில், காய் எரி, முளி புல் கானில் கலந்து எனக் கொல்லும் நிருதர்க்கு, ஓர் எல்லை இல்லை; (போருக்குப்) போயவர், உயிரும் போகித் தென்புலம் படர்தல், பொய்யாது. நமனுக்குத் தூதர் ஆயிர கோடி உளர்கொலோ? அம்மா!

காற்றின் செம்மல்-அநுமான். ஏ எனும் அளவு - நொடிப்பொழுது. காய் எரி-எரிகின்ற தீ. முளி புல் கான் - உலர்ந்த புல்லினையுடைய காடு. நிருதர்-அரக்கர். தென்புலம் - இறந்தவர் உயிர் செல்லும் இடம்; எமன் உலகம். படர்தல்-செல்லல். பொய்யாது-தவறாது. நமன்-எமன். (26)

**956.** வரவுற்றார் வாரா நின்றார்
வந்தவர் வரம்பில் வெம்போர்
பொரவுற்ற பொழுது வீரன்
மும்மடங் காற்றல் பொங்க

விரவிப்போய்க் கதிரோ னூழி
யிறுதிமே லென்ன லானன்
உரவுத்தோ ளரக்க ரெல்லா
மென்பிலா வுயிர்க ளொத்தார்.

வர வுற்றார் வாரா நின்றார் வந்தவர் வரம்பில் வெம் போர்
பொர உற்ற பொழுது வீரன் மும்மடங்கு ஆற்றல் பொங்க
விரவிப்போய்க் கதிரோன் ஊழி இறுதிமேல் என்னலானன்
உரவுத்தோள் அரக்கர் எல்லாம் என்பு இலா உயிர்கள் ஒத்தார்.

வீரன், வரம்பு இல் வெம் போர் பொர உற்ற பொழுது, மும்மடங்கு ஆற்றல் விரவிப் பொங்கப் போய் ஊழி இறுதி மேல் கதிரோன் என்னல் ஆனன்; உரவுத்தோள் அரக்கர், வரவுற்றார், வாராநின்றார், வந்தவர் எல்லாம், என்பு இலா உயிர்கள் ஒத்தார். அரக்கரது மூன்று நிலைக்கேற்ப அநுமனும் மும்மடங்கு ஆற்றல் விரவிப் பொங்கினன். ஊழி இறுதி – உலக முடிவு. கதிரோன் அநுமனுக்கும், என்பிலாதன அரக்கருக்கும் உவமை. ‘என்பிலதனை வெயில் போலக் காயுமே, அன்பிலதனை அறம்’ என்ற திருக்குறளோடு ஒப்பிடுக. அநுமனை அறமாகவும், அரக்கரை என் பிலவாகவும் கொள்க. போய் – நிரம்பி. ‘நலந்துறை போய நங்கை’ (சிந்தாமணி. 2132) என்றாற்போல. (27)

957. பிள்ளப் பட்டன நுதலோ டைக்கரி
★ பிறழ்பொற் றேர்பரி பிழையாமல்
அள்ளற் பட்டழி குருதிப் பொருபுன
லாறு கப்படி சேறாக
வள்ளப் பட்டன மகரக் கடலென
மதில்சுற் றியபதி மறலிக்கோர்
கொள்ளைப் பட்டன வுயிரென் னும்படி
கொன்றா னைம்புலன் வென்றானே.

பிள்ளப்பட்டன, நுதல் ஓடைக் கரி, பிறழ்
பொன் தேர், பரி, பிழையாமல்,
அள்ளல் பட்டு அழி குருதிப் பொருபுனல்
ஆறாகப் படி சேறு ஆக,
“வள்ளப்பட்டன மகரக்கடல் என
மதில் சுற்றிய பதி “மறலிக்கு ஓர்
கொள்ளைப்பட்டன உயிர்” என்னும்படி,
கொன்றான் ஐம்புலன் வென்றான் ஏ.

ஐம்புலன் வென்முன், மகரக்கடல், மதில் எனச் சுற்றிய பதி (வாழ்) கொள்ளைப்பட்டன உயிர், மறலிக்கு ஓர் வள்ளப்பட்டன என்னும்படி, நுதல் ஓடைக்கரி, பிறழ் பொன் தேர், பரி பிள்ளப்பட்டன. அழி ஆறுகப் பொரு குருதிப்புனல் படி சேறு ஆகப் பிழையாமல் கொன்முன். எமன் உண்ணுவதற்குக் கொள்ளைப்பட்ட உயிரை, ஓர் வள்ளத்தில் வார்த்துக் கொடுத்த தொப்ப, இலங்கைவாழ் உயிரெல்லாம் ஓரிடத்து ஒரு கணத்துக் கொல்லப்பட்டன என்பது கருத்து. ஐம்புலன் வென்முன் – அநுமன். இலங்கை, நீர் அரண் உடையது என்பது தோன்ற, ‘மகரக்கடல் மதில் எனச் சுற்றிய பதி’ என்றூர். நுதல் – நெற்றி. ஓடை – யானைக்கு அணியும் நெற்றிப்பட்டம். பிறழ் பொன் - பிறழப் பிறழ ஒளிரும் பொன். பரி – குதிரை. பிள்ளப்பட்டன– சிதைக்கப்பட்டன. குருதி – இரத்தம். சிதைக்கப் பட்ட படையின் குருதி ஆறுகவும், உடல் முதலியன ஆறுபடி சேருகவும் காணப் பெற்றன. கொள்ளைப்பட்ட – மிகுதியான; அளவு கடந்த. வள்ளம் - கிண்ணம். மகரம் – மீன். மறலி – எமன். (28)

**958.** தேரே பட்டன வென்றூர் சிலர்சிலர்
தெறுகட் செம்முக வயிரத்தோள்
பேரே பட்டன வென்றூர் சிலர்சிலர்
பரியே பட்டன சிலவென்றூர்
காரே பட்டலை நுதலோ டைக்கட
கரியே பட்டன கடிதென்றூர்
நேரே பட்டவர் படமா டேதனி
நில்லா வுயிரொடு நின்றூரே.

‘தேரே பட்டன’ என்றூர் சிலர்; சிலர்,
‘தெறு கண் செம்முக வயிரத் தோள்
பேரே பட்டன’ என்றூர்; சிலர் சிலர்,
‘பரியே பட்டன சில’ என்றூர்;
‘காரேபட்டு அலை நுதல் ஓடைக்
கடகரியே பட்டன கடிது’ என்றூர்;
நேரே பட்டவர் பட, மாடே
தனி, நில்லா உயிரொடு நின்றூர் ஏ.

(அரக்கர்களில் அநுமனோடு) நேரே (போர் செய்து) பட்டவர் பட, மாடே, (அச்சத்தால்) நில்லா உயிரொடு தனி நின்றூர் சிலர், ‘தேரே பட்டன’ என்றூர்; சிலர் ‘தெறுகண் செம்முக வயிரத்தோள் பேரேபட்டன’ என்றூர்; சிலர் ‘சில பரியே பட்டன’ என்றூர்; சிலர் ‘கடிது பட்டன, காரே பட்டு நுதல் ஓடை அலை கட கரியே’ என்றூர்; என இயைக்க.

பட்டவர் பட - இறந்தவர் இறந்து ஒழிய. மாடே - பக்கத்திலே. தெறு கண்- கண்டாரை வெருட்டும் சினம் மிக்க கண். செம்முகம் – சினத்தால் சிவந்த முகம். வயிரத்தோள் – வலி மிக்க தோள். பேர் – பெயர்; புகழ். காரே பட்டு - கார் நிறம் தோன்ற ; பட என்பது பட்டு என நின்றது. அலை – அலைகின்ற. கட கரி – மதக்களிறு ; கடம் - மதம். (29)

959. ஆழிப் பொருபடை நிருதப் பெருவலி
யடலோ ராய்மக ளடுபேழ்வாய்த்
தாழிப் படுதயி ரொத்தார் மாருதி
தனிமத் தென்பதொர் தகையானுர்
ஏழிப் புவனமு மிடைவா முயிர்களு
மெறிவே லிளையவ ரினமாக
ஊழிப் பெயர்வதொர் புனலொத் தாரன
லொத்தான் மாருத மொத்தானே.

ஆழிப் பொருபடை நிருதப் பெரு வலி
அடலோர், ஆய்மகள் அடு பேழ்வாய்த்
தாழிப் படு தயிர் ஒத்தார்; மாருதி
தனிமத்து என்பது ஒர் தகையானுன்;
ஏழ் இப் புவனமும் மிடை வாழ் உயிர்களும்,
எறி வேல் இளையவர் இனமாக,
ஊழிப் பெயர்வது ஒர் புனல் ஒத்தார்; அனல்
ஒத்தான், மாருதம் ஒத்தான் ஏ.

போருக்கு எழுந்த, கடல் போன்று மிகுந்த படையில் உள்ள மிக்க வலிமையும் ஆற்றலும் பெற்ற அரக்கர்கள், ஆயர் மகள் அகன்ற வாயுடைய தாழியில் பெய்த தயிரை ஒத்தார்கள். அநுமன் ஒப்பற்ற மத்து என்பதின் நிலையை மேற்கொண்டான்; இந்த ஏழு உலகத்திலும் நெருங்கி வாழ்கின்ற உயிர்த்தொகுதிகளே ஒன்றிவந்ததுபோல் பரவி, எரிகின்ற வேலை யேந்திய அரக்கர்மைந்தர்கள் ஊழிக்காலத்து உலகைப் பெயர்ப்பதற்கு எழுந்த கடல் நீரை ஒத்தார். காற்றை ஒத்த அநுமன் அனலை ஒத்தான். என்பது பொருள். தாழித் தயிரும் ஊழிப் புனலும் அரக்கருக்கு உவமை, தயிர் கடையும் மத்தும், புனலை உறிஞ்சும் அனலும் அநுமனுக்கு உவமை. பேழ்வாய் - அகன்ற வாய். படுதயிர் – கடையப்படும் தயிர். ஏழிப்புவனம் என்பதனை, இ ஏழ்புவனம் என்று மாற்றுக. மாருதம் ஒத்தான் – வலிமை யினால் காற்றை நிகர்த்த அநுமன். (30)

## அனுமனும் அட்சகுமாரனும் பொருதல் 960-966.

**960.** கொன்று னுடன்வரு குழுவைச் சிலர்பலர்
குறைகின் றுருடல் குலேகின்றுர்
பின்ரு நின்றன ருதிரப் பெருநதி
பெருகா நின்றன வருகாரும்
நின்ருர் நின்றிலர் தனிநின் ருெரு
நேமித் தேரொடு மவனேரே
சென்ருன் வன்றிற லயில்வா யம்புக
டெரிகின் ருன்விழி யெரிகின்ருன்.

*கொன்ருன் உடன் வரு குழுவை; சிலர் பலர்*
*குறைகின்ருர் உடல் குலேகின்ருர்;*
*பின்ரு நின்றனர்; உதிரப் பெருநதி*
*பெருகா நின்றன அருகு ஆரும்*
*நின்ருர் நின்றிலர்; தனி நின்ருன், ஒரு*
*நேமித் தேரொடும் அவன் நேரே*
*சென்ருன்; வன் திறல் அயில் வாய் அம்புகள்*
*தெரிகின்ருன் விழி எரிகின்ருன்.*

*அவன் (அட்சன்) உடன் வருகுழுவை (அநுமன்) கொன்ருன்; சிலர் குறைகின்ருர்; பலர் உடல் குலேகின்ருர் பின்ரு நின்றனர்; உதிரப் பெருநதி பெருகா நின்றன; (அட்சன்) அருகு நின்ருர் ஆரும் நின்றிலர்; தனி நின்ருன், விழி அயில் எரிகின்ருன் வன் திறல் வாய் அம்புகள் தெரிகின்ருன், ஒரு நேமித் தேரொடும் நேரே சென்ருன்: என முடிக்க அட்சனுக்குத் துணையாயினுர் அனைவரும் அநுமனுல் கொல்லப்பட்டொழிய, தனி நின்ற அட்சன் அநுமனுக்கு எதிர் நேரே சென்ருன். அயில் – கூர்மை.* (31)

**961.** உற்ரு னிந்திர சித்துக் கிளேயவ
ஞெருநா ளேபல ருயிருண்ணக்
கற்ரு னும்முக மெதிர்வைத் தானது
கண்டார் விண்ணவர் கசிவுற்ருர்
எற்றே மாருதி நிலேயென் ருரினி
யிமையா விழியினை யிவையொன்ருே
பெற்ரு நல்லது பெற்ரு மென்றனர்
பிரியா தெற்ரெதிர் செறிகின்ருர்.

உற்ருன் இந்திரசித்துக்கு இளையவன்;
ஒரு நாளே பலர் உயிர் உண்ணக்
கற்ருனும் முகம் எதிர் வைத்தான்; அது
கண்டார் விண்ணவர்; கசிவு உற்ருர்;
"எற்றே மாருதி நிலை" என்ருர்; இனி
"இமையா விழியினை இவை ஒன்ருே
பெற்ரும், நல்லது பெற்ரும்" என்றனர்;
பிரியாது எதிர் எதிர் செறிகின்ருர்.

இந்திரசித்துக்கு இளையவன் உற்ருன்; பலர் உயிர் ஒரு நாளே உண்ணக் கற்ருனும் முகம் எதிர் வைத்தான்; விண்ணவர் அது கண்டார்; கசிவு உற்ருர்; 'மாருதி நிலை எற்றே' என்ருர்; 'இவை இமையாவிழியினை ஒன்ருே பெற்ரும்: நல்லது பெற்ரும்' என்றனர்; பிரியாது எதிர் எதிர் செறிகின்ருர். இந்திர சித்துக்கு இளையவன் - அட்சன். பலர்... கற்ருன் - அநுமன். அட்சன் அநுமன் போரைக் காண, விண்ணவர் செறிந்தனர் என்பது கருத்து. இமையாவிழி பெற்றது இவ்விருவரும் போர் செய்தலை, விடாமல் பார்ப்பதற்கு உதவியது என எண்ணி மகிழ்ந்தனராம். (32)

இச் செய்யுளின் பின் 25-என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வரும் பாடல்கள் காணப்படுகின்றன :—

961 (a) செறிநா ணுறுமொலி கொண்டா னெருபது
திசைவாய் கிழிபட வழல்கின்ருன்
இறுவா யிதுபொழு தென்ரு னெரிகணை
யெழுகார் மழைபொழி வதுபோலப்
பொறிவாய் திசைதொறு மின்ரு ரையினிலை
பொலியச் சினமொடு பொழிகின்ருன்
உறுமா ருதியுட லுகவெங் குருதிக
ளொழியா தவனெடு மலைவுற்ருன்.

961 (b) மலைபோ லுறுபுய வலிமா ருதிசினம்
வந்தேறிட வெந்திர முந்தேறித்?
துலையா தவன்விடு சரமா ரிகள்பல
துண்டப் படும்வகை மிண்டித்தன்
வலிசேர் கரமதி லெழுவால் முழுதையு
மண்டித் துகள்பட மடிவித்தான்
புலிபோ லடுசின நிருதன் கண்டழல்
பொங்கிப் பொருசிலை வளைவித்தான்.

**962.** எய்தான் வாளிக ளெரிவா யுமிழ்வன
வீரே ழெதிரவை பார்சேரப்
பொய்தான் மணியெழு வொன்ரு லன்றது
பொடியா யுதிர்வுற வடிவாளி
வெய்தா யினபல விட்டான் வீரனும்
வேருேர் படையிலன் மாருவெங்
கைதா னேபொரு படையா கத்தொடர்
காலார் தேரதன் மேலாஞன்.

எய்தான் வாளிகள் எரி வாய் உமிழ்வன
ஈரேழ்; எதிர் அவை பார் சேரப்
பொய்தான் மணி எழு ஒன்ருல்; அன்று, அது,
பொடியாய் உதிர்வுற வடி வாளி
வெய்து ஆயின பல விட்டான்; வீரனும்
வேறு ஓர் படை இலன் மாரு வெம்
கை தானே பொரு படை ஆகத் தொடர்
கால் ஆர் தேர் அதன் மேல் ஆஞன்.

தீ உமிழும் பதினன்கு அம்புகளை அட்சன், அநுமன் மேல் எய்தான்; அநுமன், அவை நிலத்தில் விழும்படி இரும்புத்தூணுல் வீழ்த்திஞன்; அந்த இரும்புத்தூண் பொடியாகும்படி, பல கொடிய அம்புகளை அட்சன் எய்தான்; வீரனுகிய அநுமன், வேறு படைக்கல மில்லாதவனுய், கையே படையாக (அட்சன்) தேர் மேல் பாய்ந்தான். பொய்தான் - விழச் செய்தான். தொடர் காலார் தேர் என்பதை, ஆர் தொடர் கால் தேர் என மாற்றுக. ஆர் - ஆரம். கால் - உருளை. (33)

**963.** தேரிற் சென்றெதிர் கோல்கொள் வாஞயிர்
தின்ரு னப்பொரு செறிதிண்டேர்
பாரிற் சென்றது பரிபட் டனவவன்
வரிவிற் சிந்திய பகழிக்கோல்
மார்பிற் சென்றன சிலபொற் ருேளிடை
மறைவுற் றனசில வறவோனும்
நேரிற் சென்றவன் வயிரக் குனிசிலை
பற்றிக் கொண்டெதி ருறநின்ருன்.

தேரில் சென்று, எதிர் கோல் கொள்வான் உயிர்
 தின்றான் ; அப் பொரு செறி திண் தேர்
பாரில் சென்றது ; பரிபட்டன. அவன்
 வரிவில் சிந்திய பகழிக் கோல்,
மார்பில் சென்றன சில ; பொன் தோள் இடை
 மறைவு உற்றன சில ; அறவோனும்,
நேரில் சென்று, அவன் வயிரக் குனிசிலை
 பற்றிக் கொண்டு, எதிர் உற நின்றான்.

(அநுமன்) தேர் மேல் (பாய்ந்து) சென்று, எதிரில் (நின்ற) தேர்ப் பாகனைக் கொன்றான் ; (அநுமன் பாய்ந்ததின் அதிர்ச்சியால்) அந்தச் செறிந்த திண்ணிய போர்த் தேர் நிலத்தினுள் சென்றது. குதிரைகள் இறந்தன. அட்சன் விடுத்த அம்புகளுள் சில (அநுமன் மார்பில்) சென்றன. சில தோளில் மறைந்தன. அறவோனாகிய அநுமனும் (இந்த அம்புகளைப் பொருட்படுத்தாமல்) நேரில் சென்று வில்லைப் பற்றிக் கொண்டு எதிர்த்து நின்றான். கோல்கொள்வான் – தேர்ப்பாகன். உயிர் தின்றான் – கொன்றான். பகழிக்கோல் – அம்பு. வயிரக்குனி சிலை - திண்ணிய வளைந்த வில். (34)

**964.** ஒருகை யாலவன் வயிரச் சிலைதனை
 யுற்றுப் பற்றலு முரவோனும்
இருகை யாலவன் வலியா முன்னம
 திற்றோ டியதிவர் பொற்றோளான்
சுரிகை யாலெதி ருருவிக் குத்தலு
 மதனைச் சொற்கொடு வருதூதன்
பொருகை யாலிடை பிதிர்வித் தான்முறி
 பொறியோ டும்படி பறியாவே.

ஒரு கையால் அவன் வயிரச் சிலைதனை
 உற்றுப் பற்றலும், உரவோனும்
இரு கையால், அவன் வலியாமுன்னம் அது
 இற்று ஓடியது; இவர் பொன் தோளான்
சுரிகையால் எதிர் உருவிக் குத்தலும்,
 அதனைச் சொல் கொடு வரு தூதன்,
பொரு கையால் இடை பிதிர்வித்தான் முறி
 பொறி ஓடும்படி பறியாவே.

அநுமன் ஒரு கையால் சிலையைப் பற்றினன்; அட்சன் இரு கையால் சிலையைப் பிடித்து இழுக்க, அது ஒடிந்தது. அட்சன் உடைவாளை உருவிக் குத்தினன்; அதை அநுமன், கையினல் பொடியாய் உதிரும்படி செய்தான் என்பது கருத்து. இவர் – உயர்ந்து எழுந்த. சுரிகை – உடைவாள். சொல் கொடு வருதூதன் - இராமன் சொல்லை, பிராட்டிக்குக் கொண்டு வரும் தூதனகிய அநுமன். முறி பொறி ஒடும்படி பறியா – முறிந்த தனல் எழுந்த நெருப்புப்பொறி சிதறும்படி பறித்து. (35)

**965.** வாளா லேபொர லுற்ற னிற்றது
மண்சே ராதமுன் வயிரத்திண்
தோளா லேபொர முடுகிப் புக்கிடை
தழுவிக் கொண்டலு முடன்முற்றும்
நீளா ரயிலென மயிர்தைத் தனமணி
நெடுவா லவனுட னிமிர்வுற்று
மீளா வகைபுடை சுற்றிக் கொண்டது
பற்றிக் கொண்டனன் மேலானன்.

வாளாலே பொரல் உற்றன்; இற்று அது
மண் சேராதமுன், வயிரத் திண்
தோளாலே பொர முடுகிப் புக்கு, இடை
தழுவிக்கொண்டலும், உடல் முற்றும்
நீள் ஆர் அயில் என மயிர் தைத்தன; மணி
நெடு வால் அவன் உடல் நிமிர்வு உற்று
மீளாவகை புடை சுற்றிக்கொண்டது;
பற்றிக்கொண்டனன் மேல் ஆனன்.

உடைவாளாலே போர் செய்யத் தொடங்கிய அட்சன் வாள் ஒடிந்து மண்ணில் விழுவதற்கு முன்பு, தன்னுடைய தோள் வலிமையினலே போர் செய்ய விரைந்து, அநுமனது இடையைப் பற்றிக்கொண்டான். அநுமன் உடலில் உள்ள கூரிய மயிர் அட்சன் மேல் தைத்தன. அவனுடைய அழகிய வால் நிமிர்ந்து அட்சன் உடல் மீளாத வண்ணம் சுற்றிப் பற்றிக் கொண்டது. அநுமனும் அவன் மேல் உட்கார்ந்தான். முன் செய்யுளிற் கூறிய, சுரிகையின் செய்தியே, மீண்டும் இச் செய்யுளில் கூறப்பட்டுள்ளது. (36)

**966.** பற்றிக் கொண்டவன் வடிவா ளென
வொளிர் பல்லிற் றுகநிமிர் படர்கையால்
எற்றிக் கொண்டலி னிடைநின் றுமிழ்சுட
ரினமின் னினம்விழு வனவென்ன
முற்றிக் குண்டல முதலா மணியுக
முழைநா லரவிவர் குடர்நாலக்
கொற்றத் திண்சுவல் வயிரக் கைகொடு
குத்திப் புடையொரு குதிகொண்டான்.

பற்றிக் கொண்டு, அவன் வடிவாள் என ஒளிர்
பல் இற்று உக, நிமிர் படர் கையால்
எற்றி, கொண்டலின் இடை நின்று உமிழ் சுடர்
இன மின் இனம் விழுவன என்ன
முற்றி, குண்டலம் முதலாம் அணி உக,
முழை நால் அரவு இவர் குடர் நாலக்
கொற்றத் திண் சுவல் வயிரக்கை கொடு
குத்திப், புடை ஒரு குதி கொண்டான்.

(அநுமன், அட்சனைப்) பற்றிக் கொண்டு அவனுடைய வடித்த வாள் போன்ற பல் ஒடிந்து விழும்படி, ஓங்கி வீசிய கையால் அறைந்து, மேகத்திலிருந்து மின்னல் கூட்டம் விழுவதுபோல் குண்டலம் முதலிய அணிகள் விழவும், புற்றிலிருந்து பாம்பு வெளிவருவது போல் குடர் வெளியே தொங்கவும், திண்ணிய கையால் (அட்சனது) பிடரையும் புறத்தையும் குத்தி, பக்கத்தில் ஒரு குதி குதித்தான். குண்டலம் முதலிய அணிகலன் மணிகள் சிதற விழுவதற்கும், வயிறு கிழிந்து குடர் வெளிவருவதற்கும், மேகத்திலிருந்து விழும் மின்னற் கூட்டமும் புற்றிலிருந்து வரும் பாம்பும் முறையே உவமைகளாம். நாலுதல் - தொங்குதல். இவர் – ஒத்த. சுவல் – பிடர் ; முதுகு. புடை – பக்கம். (37)

### அநுமன் அட்சகுமாரனை அழித்தல்

**967.** நீத்தா யோடின வுதிரப் பொருநதி
நீரா கச்சில பாராகப்
போய்த்தாழ் தெறிதசை யரிசிந் தினபடி
பொங்கப் போமுயிர் போகாமல்

மீத்தா நிமிர்சுடர் வயிரக் கைகொடு
பிடியா விண்ணொடு மண்காணத்
தேய்த்தா னூழியொ டுலகேழ் தேயினு
மொருதன் புகழிறை தேயாதான்.

நீத்தாய் ஓடின உதிரப் பொரு நதி
நீராகச் சிலே பார் ஆகப்
போய்த் தாழ் தெறி தசை அரி சிந்தினபடி
பொங்கப் போம் உயிர் போகாமல்,
மீத்தா நிமிர் சுடர் வயிரக் கை கொடு
பிடியா, விண்ணொடு மண் காணத்
தேய்த்தான் ; ஊழியொடு உலகு ஏழ் தேயினும்
ஒரு தன் புகழ் இறை தேயாதான்.

ஊழியொடு ஏழ் உலகு தேயினும், தன் புகழ் ஒரு இறை(யும்) தேயாதான், நீத்தாய் ஓடின உதிரப் பொருநதி நீராகவும் பார் சிலேயாகவும், தாழ் போய் தெறி தசை அரி சிந்தினபடி பொங்க, மீத்தா நிமிர் சுடர் வயிரக் கை கொடு பிழியா, போம் உயிர் போகாமல் விண்ணொடு மண் காணத் தேய்த்தான் என்க. அட்சனது குருதியே நீராகவும் தசையே அரிசியாகவும் போர்க்களமே அம்மியாகவும் கொண்டு, தன் திண்ணிய கையினல் விண்ணும் மண்ணும் காண அநுமன் அரைத்தான் என்பது பொருள். நீத்தாய் – வெள்ளமாக. சிலே – கல் ; இங்கு அம்மிக்கல். அரி – அரிசி. இறை – சிறிது. (38)

இச் செய்யுளின் பின் 25 என்னும் குறியிடுள்ள சுவடியில் பின் வரும் பாடல் காணப்படுகிறது :-

967 (a) மாய்ந்தான் மாருதி கையா லகிலமு
முடையான் மகனென வானோர்கண்
டோய்ந்தா ரிலர்குதி கொண்டா ருவகையி
ளெழியா நறுமலர் சொரிகின்றார்
சாய்ந்தார் நிருதர்க ளுள்ளார் தமருட
லிடறித் தரைமிசை விழவோடித்
தேய்ந்தார் சிலர்சிலர் பிடரிற் குதியடி
படவோ டினர்சிலர் செயலற்றார்.

## எஞ்சிய படை சிதறி மறைந்து ஓடல் 968-970

**968.** புண்டாழ் குருதியின் வெள்ளத் துயிர்கொடு
புக்கார் சிலர்சிலர் பொருபேயின்
பண்டா ரத்திடை யிட்டார் தம்முடல்
பட்டா ரிற்சிலர் பயமுந்தத்
திண்டா டித்திசை யறியா மறுகினர்
செத்தார் சிலர்சிலர் செலவற்ருர்
கண்டார் கண்டதொர் திசையே விசைகொடு
கால்விட் டார்படை கைவிட்டார்.

*புண் தாழ் குருதியின் வெள்ளத்து உயிர்கொடு*
*புக்கார் சிலர் ; சிலர், பொருபேயின்*
*பண்டாரத்து இடை இட்டார் தம் உடல் ;*
*பட்டாரில் சிலர் பயம் உந்தத்*
*திண்டாடித் திசை அறியா மறுகினர் ;*
*செத்தார் சிலர் ; சிலர், செலவு அற்ருர் ;*
*கண்டார் கண்டது ஒர் திசையே விசை கொடு*
*கால்விட்டார் ; படை கைவிட்டார்.*

படை கைவிட்டார் சிலர், உயிர் கொடு புண் தாழ் குருதியின் வெள்ளத்துப் புக்கார்; சிலர், பொரு பேயின் பண்டாரத்து இடை தம் உடல் இட்டார் ; சிலர், பட்டாரில் பயம் உந்தத் திண்டாடித் திசை அறியா மறுகினர் ; கண்டார் கண்டது ஓர் திசையே விசைகொடு கால் விட்டார் ; சிலர் செலவு அற்ருர் ; சிலர் செத்தார். பண்டாரம் – நிதிவைக்குமிடம். பேயின் பண்டாரம் – பிணக்குவியல் ; பேய்க்குப் பெருநிதி அதுவேயாகலின். கால் விட்டார் - விரைந்து சென்ருர். பட்டாரில் - இறந்தவரையொப்ப உணர்வற்று. திண்டாடி – வழக்குச் சொல். செலவு அற்ருர் – நடக்க இயலாதவர் ஆயினர். இச் செய்யுள், புறம் கொடுத்து ஓடியவர்களின் செயலுள் சிலவற்றைக் கூறியது. கைவிட்டார் கால் விட்டார் என்பன மரபுச்சொற்கள். (39)

**969.** மீனய் வேலையி லுற்ருர் சிலர்சிலர்
பசுவாய் வழிவழி மேய்வுற்ருர்
ஊனுர் பறவையின் வடிவா னுர்சிலர்
சிலர்நான் மறையவ ருருவானுர்

மானுர் கண்ணிள மடவா ராயினர்
முன்னே தங்குழல் வகிர்வுற்ருர்
ஆனுர் சிலர்சில ரையா நின்சர
ணென்ருர் நின்றவ ரரியென்ருர்.

*மின்ஆய் வேலையில் உற்ருர் சிலர்; சிலர்*
*பசுஆய் வழிவழி மேய்வு உற்ருர்;*
*ஊன்ஆர் பறவையின் வடிவுஆனுர் சிலர்;*
*சிலர் நான்மறையவர் உருஆனுர்;*
*மான்ஆர் கண் இள மடவார் ஆயினர்*
*முன்னே தம் குழல் வகிர்வு உற்ருர்*
*ஆனுர் சிலர்; சிலர், ஐயா நின் சரண்*
*என்ருர்; நின்றவர் அரி என்ருர்.*

சிலர் வேலையில் மீனுய் உற்ருர்; சிலர் வழிவழி பசு ஆய் மேய்வு உற்ருர்; சிலர் ஊனுர் பறவையின் வடிவு ஆனுர்; சிலர் நான்மறையவர் உரு ஆனுர்; சிலர் மான் ஆர் கண் இள மடவார் ஆகி (அநுமன்) முன்னே தம் குழல் வகிர்வுற்ருர் ஆனுர். சிலர் 'ஐயா! நின் சரண்' என்ருர். நின்றவர் அரியென்ருர். அநுமனுக்கு அஞ்சி, தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில், அரக்கர்கள் செய்த மாயச் செயல்களை இச் செய்யுள் குறிப்பிடுகிறது. அநுமன் கடலுள் புகான் என்ற கருத்தோ, அன்றி, தாம் இருக்கும் இடம் அநுமனுக்குத் தெரியக் கூடாது என்ற சூழ்ச்சியோ சிலரைக் கடலில் மறையச் செய்தது. நான்மறைபவரும் பசுவும் பெண்பாலரும் போரில் தாக்கப்படுபவரல்லரென, அவ்வுருக் கொண்டார் போலும் சிலர். உரு மாறும் வகையறியார் சரண் அடைந்தார். நின்றவர் அரி என்ருர் - தறுகண்மையுடையராய் நின்ற அரக்கர் சிலர், 'எம்மைக் கோல்' என்று கூறி, (அநுமனுடன் போர்செய்ய) முற்பட்டனர். வேலை - கடல். வழிவழி - வழியில். ஊன் ஆர் பறவை - கழுகு முதலியன; ஊனைத் தின்னும் பறவை என்க. குழல் - கூந்தல். வகிர்தல் - வாரிக்கொள்ளுதல். சரண் - அடைக்கலம். அரி - கொல்லுக. (40)

**970.** தந்தா ரமுமுறு கிளையுந் தமையெதிர்
தழுவுந் தொறுநும தமரல்லோம்
வந்தோம் வானவ ரென்றே கினர்சிலர்
சிலர்மா னுயரென வாய்விட்டார்

மந்தா ரங்கிளர் பொழில்வாய் வண்டுக
ளானூர் சிலர்சிலர் மருள்கொண்டார்
இந்தா ரெயிறுக ளறுவித் தார்சில
ரெரிபோற் குஞ்சியை யிருள்வித்தார்.

*தம் தாரமும் உறுகிளையும் தமை எதிர்*
*தழுவுந்தொறும், 'நும தமர் அல்லோம்;*
*வந்தோம் வானவர்' என்று, ஏகினர் சிலர்;*
*சிலர், மானுயர் என வாய் விட்டார்;*
*மந்தாரம் கிளர் பொழில்வாய் வண்டுகள்*
*ஆனார் சிலர்; சிலர் மருள்கொண்டார்;*
*இந்து ஆர் எயிறுகள் அறுவித்தார் சிலர்,*
*எரிபோல் குஞ்சியை இருள்வித்தார்.*

சிலர், தங்கள் மனைவியரும் சுற்றத்தாரும் தம்மைக்கண்டு பின் தொடரும்போதெல்லாம், 'யாம் உங்கள் உறவின ரல்லோம்; வானவர்கள், இங்கு வந்தோம்' என்று (ஏமாற்றிவிட்டு) ஓடினார்கள்; சிலர், மானிடர் என்று கூறினார்கள்; சிலர், இளங்காற்று வீசும் சோலைகளில் வண்டுகளாய் மாறினார்கள்; சிலர், ஒன்றும் தோன்றாது மயக்கங் கொண்டனர்; சிலர் பிறைபோன்ற பற்களை அறுத்துக்கொண்டும், நெருப்புப் போன்ற தலை மயிரை இருள் போலக் கருப்பாகச் செய்துகொண்டும் உரு மாறினார்கள். மானுயர் - மானிடர். மந்தாரம் - இளங்காற்று. இந்து - பிறை. குஞ்சி - தலைமயிர். இருள்வித்தல் - இருள் போன்று கருநிறமாக் குதல். *(41)*

## அரக்கியர் அழுதரற்றல்

**971.** குண்டலக் குழைமுகக் குங்குமக் கொங்கையார்
★ வண்டலைத் தெழுகுழற் கற்றைகால் வருடவாய்
விண்டலத் தகவிரைக் குமுதவாய் விரிதலால்
அண்டமுற் றுளதவூ ரழுதபே ரமலையே.

*குண்டலக் குழைமுகக் குங்குமக் கொங்கையார்*
*வண்டு அலைத்து எழு குழல் கற்றை கால் வருட ஆய்*
*விண்டு அலத்தக விரைக் குமுத வாய் விரிதலால்*
*அண்டம் உற்று உளது; அவ்வூர் அழுத பேர் அமலையே.*

குண்டலம் திகழ் முகமும் குங்குமம் அணிந்த மார்பும் உடைய அவ்வூரிலுள்ள அரக்கியர், வண்டுகள் அலைத்து எழுகின்ற கூந்தற் கற்றை

காலடியிற் புரள, நறுமணம் மிக்க ஆம்பல் போன்ற செம்பஞ்சு ஊட்டிய தமது வாய்கள் திறந்து அழுத பேரோசை மெலுலகம் வரை எட்டிற்று என்பது பொருள். அவ்வூர், கொங்கையார் வருட. ஆய், விண்டு, விரி தலால் அழுத அமலை அண்டம் உற்றுளது என முடிவு காண்க. கற்றை – முடித்த குழல். வருட ஆய் - புரளும்படியாய். விண்டு-திறந்து. அலத்தகம்– செம்பஞ்சு. விரை - நறுமணம். குமுதவாய் – ஆம்பல் மலர் போன்ற வாய். (42)

### அரக்கியர் துன்ப நிகழ்ச்சி 972 - 976

**972.** கதிரெழுந் தனையசெந் திருமுகக் கணவன்மா
ரெதிரெழுந் தடிவிழுந் தழுதுசோ ரிளநலார்
அதிநலங் கோதைசே ரோதியோ டன்றவூர்
உதிரமுந் தெரிகிலா திடைபரந் தொழுகியே.

*கதிர் எழுந்து அனைய செம் திருமுகக் கணவன்மார்*
*எதிர் எழுந்து, அடி விழுந்து, அழுதுசோர் இள நலார்*
*அதிநலம் கோதைசேர் ஓதியோடு, அன்று அவ் ஊர்*
*உதிரமும் தெரிகிலாது இடை பரந்து ஒழுகியே.*

எழுகின்ற இளஞாயிற்றின் தோற்றம் போன்ற செவ்விய முகங்களை உடைய (இறந்த) கணவன்மார் எதிரே சென்று, அவர்கள் அடியில் விழுந்து அழுது, சோர்ந்து விழ்ந்த இளம்பெண்களுடைய மணம்மிக்க மாலை சேர்ந்த கூந்தலுக்கும், அன்று அந்த ஊரில் பரந்து ஓடிய இரத்தத் துக்கும் வேற்றுமை தெரியவில்லை என்பது பொருள். போர்க்களம், செந்நீர்ப் பெருக்கால் எங்கும் செந்நிறமாகவே தொன்றியது. அரக்கர் மகளிர் கூந்தலும் செந்நிறமுடையதாகலின், கணவன்மார் அடியில் விழ்ந்து அரற்றி அழும்பொழுது புரளுகின்ற அவர் கூந்தலுக்கும் செங் குருதிக்கும் வேற்றுமை தெரியவில்லை. கோதை-மாலை. ஓதி – கூந்தல். இடை – வேற்றுமை. (43)

**973.** தாவில்வெஞ் செருநிலத் தடியுலந் தவர்தமேல்
ஓவியம் புரைநலார் விழுதொறுஞ் சிலருயிர்த்
தேவுகண் களுமிமைத் தனர்களா மிதுவெலாம்
ஆவியொன் றுருவிரண் டாதலா லேகொலாம்.

*தாவு இல் வெம் செரு நிலத்து அடி, உலந்தவர் தம் மேல்,*
*ஓவியம் புரை நலார் விழுதொறும், சிலர் உயிர்த்து*

ஏவுகண்களும் இமைத்தனர்களாம்; இது எலாம்,
ஆவி ஒன்று, உரு இரண்டு. ஆதலாலே கொல் ஆம்?

கொடிய போர்க்களத்திலே எழுது பாவையை ஒத்த பெண்கள், இறந்தவர் அடியில் விழுந்து அழும்போது சிலர் உயிர்ப்பு தோன்ற, கண்களும் இமைத்தார்கள். இச் செயலெல்லாம் (கணவனுக்கும் மனைவிக்கும்) ஆவி ஒன்று உடல் இரண்டுமாக இருத்தலினாலே தானே என்பது கருத்து. வெம் செரு - கொடிய போர். ஓவியம் புரை நலார் - எழுதிய பாவையை ஒத்த அழகியர். (44)

974. ஓடினா ருயிர்கணா டுடல்கள்போ லுதவியால்
வீடினார் வீடினார் மிடையுடற் குவைகள்வாய்
நாடினார் மடநலார் நவையிலா நண்பரைக்
கூடினா ரூடினா ரும்பர்வாழ் கொம்பனார்.

ஓடினார், உயிர்கள் நாடு உடல்கள் போல்; உதவியால்
வீடினார்; வீடினார் மிடை உடல் குவைகள் வாய்
நாடினார் மடம் நலார்; நவை இலா நண்பரைக்
கூடினார்; ஊடினார் உம்பர்வாழ் கொம்பு அனார்.

சில இளம் பெண்கள் உயிர்களைத் தேடிச் செல்கின்ற உடல்கள் போல், இறந்தவர்களது உடல் நெருங்கியுள்ள குவியல்களில், குற்றமில்லாத தங்கள் அன்பு மிக்க கணவரை நாடிச் சென்றார்கள். (அங்கு காணாதவர்களாய்) அந்தக் கணவன்மார், தங்களுக்குச் செய்த உதவியை எண்ணி (அவர்களோடு தாங்களும்) உயிர்விட்டார்கள்; உடனே வானுலகம் சென்று தங்கள் கணவரோடு கூடினார்கள். விரவானம் எய்தியவரைக் கூடும் தேவமகளிர், இவர்கள் கூடியதைக் கண்டு ஊடினார்கள் என்பது கருத்து. உதவி - மனைவிக்குக் கணவன் செய்த நன்மைகள். விடினார் - இறந்தார். மிடை - நெருங்கிய. குவைகள் - குவியல்கள். வாய் - இடம். நாடினார் - தேடினார். மடம் - இளமை. நவை - குற்றம். உம்பர் - மேலுலகம். கொம்பனார் - பூங்கொடி போன்ற பெண்கள்.

“ தரைமகள்தன் கொழுநன்ற னுடலந் தன்னைத்
தாங்காமற் றன்னுடலாற் றாங்கி விண்ணாட்
டரமகளி ரவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின் ”
(கலி-பரணி 483)

என்ற தாழிசை இங்கே கருதத்தக்கது. (45)

**975.** தீட்டுவா ளனையகட் டெரிவையோர் திருவனாள்
ஆட்டிநின் றயர்வதோ ரறுதலைக் குறையினைக்
கூட்டிநின் னாருயிர்த் துணைவனெங் கோனைநீ
காட்டுவா யாதியென் றழுதுகை கூப்பினாள்.

தீட்டு வாள் அனைய கண் தெரிவை ஓர் திரு அனாள்,
ஆட்டி நின்று அயர்வது ஓர் அறுதலைக் குறையினைக்
கூட்டி, "நின் ஆர் உயிர்த்துணைவன் எம் கோனை நீ
காட்டுவாய் ஆதி" என்று, அழுது கை கூப்பினாள்.

தீட்டிய வாள் போலக் கூரிய கண்களையுடைய திருமகள் போன்ற ஒரு பெண், ஆடி அயர்ந்த ஒரு தலையற்ற உடலைத் தலையுடன் கூட்டி, 'உன்னுடைய உயிர்த்துணைவனாகிய எம் தலைவனை நீ காட்டுவாயாக' என்று அழுது கைகூப்பினாள் என்பது இச்செய்யுள் கூறுவது. போரில் தம் கணவனை இழந்த மகளிர், போர்க்களத்தே சென்று தங்கள் உணர்வும் அறிவும் இழந்தோராய்ப் பேய்களையும் கவந்தங்களையும் தம் கணவனைக் காட்டவேண்டும் என்று அழுது வேண்டிக் கொள்வதாகக் கூறுவது தமிழ் நூல்வழக்கு.

"தங்கணவ ருடன்றாமும் போக வென்றே
சாதகரைக் கேட்பாரே தடவிப் பார்ப்பார்
எங்கணவர் கிடந்தவிட மெங்கே யென்றென்
றிடாகினியைக் கேட்பாரைக் காண்மின் காண்மின்"

என்ற தாழிசையிலும் (கலிங்கத்துப் பரணி 481) காண்க. (46)

**976.** ஏந்தினா டலையையோ ரெழுதருங் கொம்பனாள்
காந்தனின் றாடுவா னுயர்கவந் தத்தினை
வேந்துநீ யலசினாய் விடுதியா னடமெனாப்
பூந்தளிர்க் கையினால் மெய்யுறப் புல்லினாள்.

ஏந்தினாள் தலையை ஓர் எழுது அரும் கொம்பு அனாள்;
காந்தன் நின்று ஆடுவான் உயர் கவந்தத்தினை,
"வேந்து நீ அலசினாய் விடுதியால் நடம்" எனாப்
பூந் தளிர்க் கையினால் மெய் உறப் புல்லினாள்.

ஓவியத்திலும் எழுதுதற்கு அரிய பூங்கொடி போன்றவள் ஒருத்தி, கையில் தலையை ஏந்திக்கொண்டு, தன்னுடைய உயிர்த்துணைவனது உடற்குறை ஆடுவதைப் பார்த்து, 'அரசே நீ மிகவும் களைத்தாய், நட-

மாடுதலை விடு' எனக் கூறி, தன்னுடைய பூப்போன்ற மெல்லிய கையினால் அவ்வுடற்குறையைக் கட்டிப் பிடித்தாள். அலசினாய் - களைத் தாய். புல்லுதல் – அணைத்தல்.

கீழே குறிப்பிட்டுள்ள மூன்று செய்யுள்களுள் (a) 11, 12 என்னும் குறியீடுள்ள சுவடிகளிலும், (b) 16, 18, 23, 26, 28, 34, 36, 37, 53, 54, என்னும் குறியீடுள்ள சுவடிகளிலும், (c) 25 என்னும் குறியீடுள்ள சுவடியிலும் காணப்படுகின்றன. (47)

976 (a) இன்னன நிகழ்வுளி யிராக்கதக் குழாம்
மன்னிய சோதியு மரக்கன் மைந்தனும்
தன்னிக ரநுமனா லிறந்த தன்மையை
முன்னினர் சொலவவன் முன்பு கேட்டனன்.

976 (b) அவ்வகை கண்டவ ரமரர் யாவரும்
உய்வகை யரிதென வோடி மன்னவன்
செவ்வடி யதன்மிசை விழ்ந்து செப்பினர்
எவ்வகைப் பெரும்படை யாவு மாய்ந்ததே.

976 (c) ஈதுமற் றிசைவுற விதுகண் டேங்கியே
மாதுய ரத்தொடு மறுகு நெஞ்சுடை
தூதருற் றோடினர் தொழுது மன்னனுக்
கோதின ரோதல்கேட் டுளந்து ளங்கினன்.*

## அரக்கியர் துன்புறலும் விண்ணவர் இராவணனிடம் உரைத்தலும்

**977.** நாடினார் நாடியே நனைவருங் கொம்பனார்
வாடினார் கணவர்தம் மார்புறத் தழுவியே
வீடினா ரவ்வயின் வெருவிவிண் ணவர்கடாம்
ஓடினா ரரசன்மாட் டணுகிநின் றுரைசெய்வார்.

நாடினார்; நாடியே, நனை வரும் கொம்பு அனார்
வாடினார்; கணவர் தம் மார்பு உறத் தழுவியே
வீடினார்; அவ்வயின், வெருவி விண்ணவர்கள் தாம்
ஓடினார், அரசன்மாட்டு அணுகி நின்று உரை செய்வார்.

நனைவரும் கொம்பு அனார், நாடினார், நாடியே வாடினார், கணவர் தம் மார்பு உறத் தழுவியே விடினார்; அவ்வயின் விண்ணவர்கள் தாம் வெருவி

* இச்சுவடியில் பாசப் படலம் தொடங்குகிறது.

ஓடினர்; அரசன் மாட்டு அணுகி நின்று உரை செய்வார் என முடிக்க. நனைவரும் கொம்பு-மொட்டு அலரும் கொடி. போர்க்களத்து மாண்டாரைத் தேடி வருந்தி உயிர் விடும் மகளிரது பெருக்கத்தைக் கண்டு. சோலைகாக்கும் வானவர் அஞ்சி அரசனிடம் ஓடி, அருகில் நின்று சொல்லுவார்கள் என்பது பொருள்.

இச்செய்யுள் 1, 17, என்னும் குறியீடுள்ள ஏடுகளில் தவிர வேறு ஏடுகளில் இல்லை. அச்சுப் புத்தகம் பலவற்றுள்ளும் காணப்படுகின்றது. (48)

## மந்தோதரி புலம்பல்

**978.** கயன்மகிழ் கண்மலர் கலுழி கான்றிடப்
★ புயன்மகிழ் புரிகுழல் பொடிய ளாவுற
அயன்மகன் மகன்மக னடியில் வீழ்ந்தனள்
மயன்மகள் வயிறலைத் தழுது மாழ்கினள்.

*கயல் மகிழ் கண்மலர் கலுழி கான்றிடப்,*
*புயல் மகிழ் புரிகுழல் பொடி அளாவுற,*
*அயன் மகன் மகன் மகன் அடியில் வீழ்ந்தனள்,*
*மயன்மகள்; வயிறு அலைத்து அழுது மாழ்கினள்.*

கயல் போன்ற கண்கள் நீரை ஆறுகப் பெருக்க, மேகத்தை ஒத்த கூந்தல் மண்ணில் புரள, இராவணன் அருகில் விழ்ந்து வயிற்றில் அடித்துக் கொண்டு அழுதாள் மண்டோதரி என்பது இச் செய்யுளில் கூறியது. கயல் – கெண்டைமீன்; கண்ணுக்கு உவமையாகப் புலவரால் கூறப்பெறுவது. புயல் – மேகம். புரிகுழல் – முறுக்கப்பெற்ற கூந்தல் ; பொடி – மண். அயன் மகன் மகன் மகன் – நான்முகனுடைய மகன் புலத்தியன், அவன் மகன் விச்ரவசு, அவன் மகன் இராவணன். மயன் – அசுரர்களின் சிற்பத்தலைவன்; அவன் மகள், மந்தோதரி. வயிறு அலைத்து – வயிற்றில் அடித்துக்கொண்டு. மகிழ் என்னும் சொல், போல, ஒப்ப என்னும் பொருளில் வந்துள்ளது. (49)

## அனைவரும் அழுதல்

**979.** தாவருந் திருநகர்த் தைய லார்முதல்
ஏவரு மிடைவிழுந் திரங்கி யேங்கினர்
காவலன் கான்மிசை விழுந்து காவன்மாத்
தேவரு மழுதனர் களிக்குஞ் சிந்தையார்.

தாவு அரும் திரு நகர்த் தையலார் முதல்
ஏவரும் இடைவிழுந்து இரங்கி ஏங்கினர்;
காவலன் கால்மிசை விழுந்து, காவல் மாத்
தேவரும் அழுதனர், களிக்கும் சிந்தையார்.

வளப்பம் குறைதலில்லாத அந்த இலங்கைமா நகரத்தில் உள்ள பெண்கள்முதல் எல்லோரும் அட்சன் இறந்ததற்கு வருந்தி, தங்கள் அரசனாகிய இராவணனுடைய காலில் விழுந்து அழுதார்கள். அந்நகரில் காவற்றொழிலிலுள்ள தேவரும் உள்ளத்தில் மகிழ்ந்து வெளியே அழுதார்கள் என்பது கருத்து. (50)

பின்வரும் இரண்டு செய்யுள்கள் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் காணப்பெறுகின்றன.

979 (a) மைந்தனை மடித்தது குரங்கென் றேதவும்
வந்தது போலுநம் வாழ்வு நன்றெனச்
சிந்தையி னழன்றெரி விழித்துச் சென்றுநீர்
இந்திரன் பகைஞனைக் கொணரு வீரென்றான்.

979 (b) என்றலு மேவலுக் குரிய ரோடியே
சென்றுமற் றவனடி பணிந்து திமைவந்
தோன்றிய திறங்களு முரைத்து நுந்தையும்
இன்றுனைக் கூவின னெனவுஞ் சொல்லினர்.

அட்சகுமாரன் வதைப் படலம் முற்றிற்று.

# 11. பாசப் படலம்

இந்தப் படலம் 63 செய்யுட்களையுடையது. இதற்கு இந்திரசெயித்து பாசப் படலம் என்றும் ஒரு பெயர் ஒரு சுவடியில் காணப் பெறுகிறது. இதில் இந்திரசித்து அநுமனோடு போர் செய்து அநுமனை நான்முகன் படையால் கட்டிய செய்தி கூறப்பெறுகிறது. இதன் சுருக்கம் பின்வருமாறு :—

அட்சகுமாரன் அநுமனால் போரில் கொல்லப்பட்ட செய்தி கேட்டு, இந்திரசித்து மனம் கொதித்து வீரமொழிகளை முழங்கிக் கொண்டு பேரார வாரத்துடனும் தம்பியை நினைத்து ஒருபுறம் கண்ணீர் சொரிந்துகொண்டும், ‘எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழன்றோ தேய்ந்தது’ என்று கனன்று கொண்டும் இராவணன் மாளிகைக்கு வந்து, தந்தை தாளில் விழுந்து, தம்பி இறந்ததற்கு இரங்கினான். இராவணனும் இவன் தோளைப் பற்றித் தழுவிக்கொண்டு அழுதான். அருகில், வயிற்றிலடித்துக்கொண்டு அலறி அழுத மாதரை விலக்கி விட்டு, தந்தையைப் பார்த்து, “ஒன்றும் தெரியாமல் திறமில்லாதவர்களை யெல்லாம் ஒருவர் பின் ஒருவராக அந்தக் குரங்கினிடம் போருக்குச் செலுத்தி அரக்கர்கூட்டத்தை நீயே கொன்றுவிட்டாயே! சென்றவர்களில் மீண்டவர்கள் ஒருவரும் இல்லை. நீயும் அக்கனைக் கொன்ற குரங்கை விளையாட விட்டு வேடிக்கைபார்க்கின்றாய். இவ்வளவு அழிவு ஏற்பட்டபின்னர், நாம் அந்தக் குரங்கை வெல்வதானால் அது வெற்றியாகுமா? புகழ்தான் ஆகுமா? என்றாலும் நான் சென்று அதைப் பற்றி வருகிறேன்” எனப் பல கூறி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான். நால்வகைப்படையும் கடல்போல ஆரவாரத்துடன் சூழ்ந்துவர அதன் நடுவே மேருவைப்போல் திகழும் இந்திரசித்தைக் கண்ட அநுமன் ‘அமரின் ஆற்றல் நன்று’ என உவகையுடன் இருந்தான். பிணக்குவியல், செந்நீர்ப் பெருக்கம், முறிந்த படைக்கலங்கள் முதலியவை, மலை, கடல், காடு முதலிய போல் தோன்றிய போர்க்களம், ஒரு புதிய உலகமாகவே காணப் பட்டது. இதைக் கண்ட மேகநாதன் ‘இவ்வளவும் ஒரு குரங்கினால் அழிந்ததன் தோற்றம் என்றால், இராமன் போர்செய்ய வரும்போது எந்தப் படையைக் கொண்டு எதிர்ப்பது’ எனச் சிறிது மனம் தளர்ந்தான். கண் போன்றவர்களும், உயிர் போன்றவர்களும், கைப்படை போன்றவர்களுமான வீரர் பலர் மடிந்து கிடந்ததைப் பார்த்துப் புழுங்கினான். காட்டில் தன் அத்தையாகிய சூர்ப்பநகைக்கு நேர்ந்த மானக்கேடும், கரன் இறந்ததும், தன் தம்பி இறந்ததும், மானிடர் இருவராலும் குரங்கு ஒன்றினாலும் ஏற்பட்டதென்றால் அரக்கர் வீரம் எங்குளது? என ஏங்கினான். பிணக்குவடுகள் தேர் உருளையை இடறச்செய்தன ; அக்குவடுகளின் இடையே தேய்ப்புண்டு கிடந்த தன் தம்பியின் யாக்கையைக் கண்டு கண்

ணிர் பெருகக் கதறினான். "உன் தந்தையின் வெம்மையைக் கருதிக் கூற்று வனும் உன் உயிரை வௌவ மாட்டான்; எந்த உலகத்தவரும் அஞ்சுவர்; ஐயனே! எம்மை விட்டு எங்கு ஒளித்தாய்" என்று புலம்பி அறிவழிந்தான். துன்பவுணர்ச்சியும், வீரவுணர்ச்சியும் ஒன்றுக் கொன்று மாறிட்டு முடிவில் வீரவுணர்ச்சி மேலோங்கத் தேர்மீது ஏறிச் சென்றான். கதிரவன் தேர் போன்ற தேரில் வரும் இந்திரசித்தை, முப்புரம் எரிக்க இறைவன் பார்த் ததுபோல் அநுமன் பார்த்தான். "என் கையால் இந்த வீரவெறிகொண்ட காளை ஒழிந்தானாயின் இராவணன் உள்ளிட்ட அரக்கரது கொடுமை ஒழிந்ததாகும்; பிராட்டியையும் இராமன்பால் கொண்டு வந்து விட்டு விடு வான்; இந்திரனும் துயர் நீங்குவான்" என எண்ணிக் கொண்டிருந்தான். அப்பொழுது அரக்கர்களும் நெருங்கிப் போர்செய்தார்கள்; அநுமன் ஒரு பெரிய மராமரத்தை எடுத்து எல்லோரையும் தாக்கினான். யானைகள், உதையுண்டும், மிதியுண்டும், புதையுண்டும், வதையுண்டும் புரண்டன; தேர்த்தொகுதிகள், இடிந்தும், ஒடிந்தும், முறிந்தும், மண்ணில் படிந்தன; புரவிகள், தலையும், காலும், கழுத்தும், ஒடிந்து சாய்ந்தன; அரக்கர்கள், பிடிபட்டும், ஒடிபட்டும், கடிபட்டும், அடிபட்டும், அச்சப்பட்டும் ஒழிந்தார் கள். அரக்கர் விடுத்த படைக்கலங்களும் பழுக்கக்காய்ச்சிய இரும்பா யினும் பட்டடையைச் சுடாது என்றபடி, அநுமனை எவ்வித ஊறும் செய் யாது, அவன்மேல் பட்டவுடன் கரிந்தும், தீய்ந்தும், புகைந்தும் பொடியா யின. சூழ்ந்தார் ஒழிய, தனித்து நின்ற இந்திரசித்து "வாரும் வாரும்" என அழைக்கின்ற அநுமன்முன் வந்து தன் வில்லை நாண் ஏற்றிப் பேரொலி செய்தான்; அநுமனும், அவ்வொலியிலும் பெரிதாக ஒலி எழும் படி தன் தோள்களைத் தட்டினான். 'உன் வாழ் நாட்கெல்லை இன்றோடு முடிந்தது' என்று வெகுண்டு கூறிய இந்திரசித்துக்கு மாறாக 'உங்கள் அரக்கர் குலத்துக்கே முடிவுகொண்டு வந்திருக்கின்றேன்' என்று அநுமன் சொன்னான். பின்னர், இந்திரசித்து விடுத்த கணைகளை விழும் படி வீசி அடித்து, அவன் தேர்ப்பாகனையும், தேரில் பூட்டிய பேய்களையும் மண்ணில் விழும்படி அறைந்து, அவனையும் ஒரு பெரிய மரத்தால் மணி முடியை நோக்கி அநுமன் அடித்தான்; அடிபட்டவுடன் மலையருவி போல் குருதி வழிந்தது; உணர்விழந்தான்; உணர்வு பெற்றுப் பல்லா யிரம் கணைகளை விடுத்தான். வானரவீரன் அவற்றைப் பொருட்படுத்தாது அவனைத் தேரோடும் எடுத்து வானத்தில் வீசியெறிந்து, அத்தேர் நிலத்தில் விழுவதற்குள் தேர்க் கூட்டமே இல்லாதபடி உதைத்துப் பொடியாக் கினான். ஏறுவதற்குத் தேர் ஒன்றும் இல்லாதவனாய் வலியொடுங்கிய மேக நாதன் இறுதியாக நான்முகன் படையை விடுத்தான்; அது கருடனும் அஞ்சும்படி பாம்பின் உருவு கொண்டு அநுமனைச் சுற்றிப் பிணித்துத் திரு கியது; அவனும் தன்னைப் பிடித்த இராகுவென்னும் கோளுடன் முழுமதி மண்ணில் சாய்ந்ததுபோல் சாய்ந்தான். இந்தப் படையின் பெருமைக்குப் பணிய வேண்டும் என்னும் எண்ணத்துடன் அநுமனும் கண்ணை மூடிக் கொண்டான். அது கண்ட அரக்கர், அவன் வலியிழந்தான் என எண்ணி

ஓடி வந்து அந்தப் பாம்பைப் பற்றி இழுத்து அநுமனை இறுக்கினார்கள். அந்த நகர ஆண்மக்களும் பெண்மக்களும் இடிபோல ஆரவாரம் செய்து கை தட்டி வாய் கொட்டி ஆர்த்தார்கள். அறத்துக்கு ஒரு துணைபோல நின்ற அநுமனைப் பாம்புபிணித்திருந்ததைப் பார்த்தால் வாசுகியால் சுற்றப் பெற்ற மந்தரமலைபோல் தோன்றியது. நகர் முழுதும், களித்து எல்லாத் திசைகளிலும், பேரிரைச்சல் செய்தார்கள் ; இந்திரனைப் பிடித்து வந்த நாளில் மகிழ்ந்ததுபோல் மகிழ்ந்தார்கள்.

வான்மீகத்தில் இந்த வரலாறு நாற்பத்தெட்டாவது சர்க்கத்தில் முதல் நாற்பத்தைந்து சுலோகங்களில் சொல்லப்படுகிறது. இந்திரசித்து இராவணனோடு பேசுவதாக அமைந்த பகுதி இங்குக் காணப்பெறவில்லை. இராவணனே பல நெறிமுறைகளைக் கூறி இந்திரசித்தைப் போருக்கு அனுப்பியதாக வான்மீகம் கூறுகிறது. இந்திரசித்தைப் புகழ்ந்து இராவணன் பேசும்போது கிங்கரர், சம்புமாலி படைத்தலைவர், அட்சகுமாரன் முதலியோர் கொல்லப்பட்ட செய்தியைக் குறிப்பிட்டு "எனக்கு உன்னிடத்தில் உள்ள மதிப்பு அவர்களிடத்தில் இல்லை; நீ காலம் இடம் என்பவற்றுக் கேற்ப நடந்து கொள்ளும் நுண்ணறிவுடையவன்; உன் வலிமை எனக்கு ஒத்ததாக இருக்கும் ; உன் படையின் வன்மை, உன் தனிப்பட்டவன்மை, அநுமனுடையவன்மை, எல்லாம் சீர்தூக்கி உன் தனிப்பட்டவன்மைக்கு ஏற்றதைச்செய்யவேண்டும்; நான் உன்னை அனுப்புவது சிறப்பானதல்ல, என்றாலும், அரசியலுக்கும் அரசனுக்கும் பொருத்தமாக இருக்கிறது" என்று தன் எண்ணங்களைக் கூறுகிறான். இவை கம்பரிடம் காணப்பெறவில்லை. கம்பர், இந்திரசித்தைத் தங்கள் குலப் பெருமையிலும் தந்தையுடையபுகழிலும் பேரார்வம்கொண்டவனாகவும், இறந்த தன் படைவீரர்களிடத்தும் தம்பியிடத்தும் பேரன்புடையவனாகவும் பல இடங்களிலும் காட்டுவது வான்மீகத்தில் காணப்பெறவில்லை. வீரவுணர்ச்சியும் துன்பவுணர்ச்சியும் மாறிட்டுப் போர் செய்வதையும், துன்பத்தை அடக்கி வீரம் மேல் எழுவதையும், முன்னையதற்கு அடிப்படை மானம் என்பதையும் பின்னையதற்கு அடிப்படை அன்பு என்பதையும் இந்திரசித்தின் பண்பில் வைத்துக் கம்பர் காட்டுவது வான்மீகத்தில் காணவில்லை. இந்திரசித்து நான்முகன் படையை எடுப்பதற்குமுன் உள்ளத்தால் வழிபாடு செய்தான்: என்ற வரலாறு வான்மீகத்தில் இல்லை. முன் நிகழ்ந்தனகொண்டு பின் வருவனவற்றைச் சிந்திக்கும் பண்பும் இந்திரசித்தினிடம் கம்பர் காண்பிக்கின்றார். இந்திரசித்தின் தேரில் பூட்டியவை வியாளம் என வான்மீகர் கூற, கம்பர் பேய் என்று கூறுகிறார்.

இந்தப் படலம் போர் நிகழ்ச்சிகளையே கொண்டுள்ளதென்றாலும், ஒரு பெருங்குடியில் தோன்றியவன் அந்தக் குடிக்கு அழிவு தோன்றுங் காலத்தில், என்ன என்ன சிந்திப்பான் என்பது, பல இடங்களில் இந்திரசித்தின் வாயிலாக அழகு படவும் கனிவாகவும் பேசப்பட்டுள்ளது.

எவ்வளவு நெருக்கடியான நிலையிலும் செய்யவேண்டிய முறைகளைத் தவருமல் செய்யவேண்டும் என்பது, இந்திரசித்து நான்முகன் படையை எடுக்கும் போது முறையாக உள்ளத்தால் செய்த வழிபாட்டைக் கூறும் செய்யுளில் அழகாகவும் தெய்வ வுணர்ச்சியோடும் அமைந்திருக்கிறது. போரின் பயன் மாற்ருனைத் தொலைத்தல் என்ற வான்மீகத்தின் கருத்தை ஒருவகையாக மாற்றிப் போரின்பயன் புகழைக் காப்பாற்றலே என்று இந்திரசித்து கொண்டதாக இப்படலம் கருதவைக்கின்றது. எவ்வளவு உயர்ந்தவர்களாயினும் வெகுளிமீறி ஒருவருக்கொருவர் நேர் நின்று கை கலக்கும் நிலைமைக்கு வந்துவிட்டால் சில சமயங்களில் வீணான வீரமொழிகளைப் பேச நேருகிற இயற்கையை அநுமன் இந்திரசித்து பேச்சுக்களில் ஓர் இடத்தில் காணலாம். இந்திரசித்து தன் கையில் அகப்பட்டு விட்டால் எந்த எந்த நன்மைகள் ஒருசேரக்கிடைக்கும் என்று அநுமன் கட்டும் மனக்கோட்டையும் கருதத்தக்கது. இந்தப் படலத்தில் பல உவமைகள் காணப்பெறுகின்றன. ஐம்பொறியும் வென்ற அறிவனும் பாசத்தால் பிணிப்புறும் நிலையும் உண்டு என்பதை இப்படலம் குறிப்பிடுவதாக இந்நூலுள் தொடர்ந்து தத்துவக் கருத்தைக் காணும் விருப்பினர் காணவும் கூடும்.

# 11. பாசப் படலம்

## இந்திரசித்தின் வெகுளி

**980.** அவ்வழி யவ்வுரை கேட்ட வாண்டகை
வெவ்வழி யெரிபுக வெகுளி வீங்கினன்
எவ்வழி யுலகமுங் குலைய விந்திரத்
தெவ்வழி தரவுயர் விசயச் சீர்த்தியான்.

*அவ் வழி அவ் உரை கேட்ட ஆண் தகை,*
*வெவ் வழி எரி புக வெகுளி விங்கினன்,*
*எவ்வழி உலகமும் குலைய, இந்திரத்*
*தெவ் அழி தர உயர், விசயச் சீர்த்தியான்.*

அவ்வழி, அவ் உரை கேட்ட, இந்திரத் தெவ் அழிதர உயர் விசயச் சீர்த்தியான் ஆண்டகை, எவ் வழி உலகமும் குலைய வழி எரி புக வெவ் வெகுளி விங்கினன் என்க. தெவ்-பகை. விசயம்-வெற்றி. சீர்த்தி - புகழ். ஆண்தகை - ஆண்மக்களில் உயர்ந்தோன். வழி-இடம்; செல்லும் வழி. வெவ் வெகுளி-மிக்க சினம். விங்கினன்-மிகுந்தான். கேட்ட ஆண்டகை வெகுளி விங்கினன். (1)

## இந்திரசித்து போர்க்கு எழல்

**981.** அரஞ்சுடர் வேற்றன திளவ லற்றசொல்
உரஞ்சுட வெரியுயிர்த் தொருவ னோங்கினன்
புரஞ்சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய
பரஞ்சுட ரொருவனைப் பொருவும் பான்மையான்.

*அரம் சுடர் வேல் தனது இளவல் அற்ற சொல்*
*உரம் சுட, எரி உயிர்த்து, ஒருவன் ஓங்கினன்;*
*புரம் சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய*
*பரம் சுடர் ஒருவனைப் பொருவும் பான்மையான்.*

புரம் சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய பரம் சுடர் ஒருவனைப் பொருவும் பான்மையான் ஒருவன், அரம் சுடர் வேல் இளவல் அற்ற சொல் தனது உரம்சுட எரி உயிர்த்து ஓங்கினன். புரம் – முப்புரம். வரி

சிலைப் பொருப்பு - கட்டமைந்த வில்லாகிய மலை. வாங்கிய - வளைத்த. பரம் சுடர் ஒருவன் - எல்லா ஒளிகளுக்கும் மேலாம் ஒளிவடிவமான உயர்ந்தோன்; பரமசிவன். பொருவும் - ஒத்த, பான்மை - தன்மை. அரம் சுடர் வேல் - அரத்தால் அராவப்பட்டு ஒளி விசும் வேல். உரம் - நெஞ்சு. எரி உயிர்த்து - அனல்போல் மூச்சுவிட்டு. ஓங்கினன் - பெருஞ் சினம் கொண்டான். சினத்தால் புரம் எரித்தோனுக்கு ஒப்புக்கூறினர். (2)

## இந்திரசித்து தேர் ஏறுதல்

**982.** ஏறினன் விசும்பினுக் கெல்லை காட்டுவான்
ஆறிரு நூறுபேய் பூண்ட வாழித்தேர்
கூறின கூறின சொற்கள் கோத்தலால்
பீறின நெடுந்திசை பிளந்த தண்டமே.

*ஏறினன் விசும்பினுக்கு எல்லை காட்டுவான்*
*ஆறு இருநூறு பேய் பூண்ட ஆழித் தேர்;*
*கூறின கூறின சொற்கள் கோத்தலால்*
*பீறின நெடும் திசை, பிளந்தது அண்டமே.*

ஆயிரத்து இருநூறு பேய்கள் பூட்டிய உருளையுள்ள தேர்மீது, வான முகட்டின் எல்லை இதுவெனக் காட்டுவான்போல் தாவி ஏறின (அந்த இந்திரசெயித்து) பலவாகக் கூறிய வீரமொழிகள் குவிதலால் உண்டான ஒலியால் நீண்ட திசைகள் எல்லாம் கிழிந்து உலகமே பிளவுபட்டது என்பது, போந்த பொருள். கோத்தல் - குவிதல். பீறின - கிழிந்தன. (3)

## படையின் ஆரவாரம்

**983.** ஆர்த்தன கழலுந் தாரும்
★ பேரியு மசனி யஞ்ச
வேர்த்துயிர் குலைய மேனி
வெதும்பின னமரர் வேந்தன்
சீர்த்தது போரு மென்னுத்
தேவர்க்குந் தேவ ராய
மூர்த்திக டாமுந் தத்தம்
யோகத்தின் முயற்சி விட்டார்.

ஆர்த்தன, கழலும் தாரும் பேரியும் அசனி அஞ்ச;
வேர்த்து உயிர் குலைய மேனி வெதும்பினன் அமரர் வேந்தன் ;
"சிர்த்தது போரும்" என்னுத் தேவர்க்கும் தேவர் ஆய
மூர்த்திகள் தாமும் தத்தம் யோகத்தின் முயற்சி விட்டார்.

அசனி அஞ்சக் கழலும் தாரும் பேரியும் ஆர்த்தன; அமரர் வேந்தன் மேனி வேர்த்து உயிர்குலைய வெதும்பினன்; தேவர்க்கும் தேவராய மூர்த்திகள் தாமும் 'போரும் சிர்த்தது' என்னுத் தம் தம் யோகத்தின் முயற்சிவிட்டார் என்க. அசனி - இடி. கழல் - வீரர்கள் காலில் அணிந்து கொள்ளும் சதங்கை. தார் - குதிரைக்கு அணியும் கிண்கிணி மாலை; பேரி- ஒருவகை முரசு. ஆர்த்தன - ஒலித்தன. அமரர் – தேவர்; மரண மில்லாதவர். வெதும்பினன் - மனம் கலங்கினுன். சிர்த்தது - சீறுதல் என்னும் சொல் பலவாறு திரிந்து, சித்தல் என வழக்குச் சொல்லாகிப் பின்னர் ரகரவொற்றைத் துணைக்கொண்டு, சிர்த்தல் என்னும் இலக்கியப் போலியுருவு கொண்டுள்ளது; வெகுளியோடு தொடங்கல் என்பது இதன் பொருள். யோகம் - சேர்க்கை. முயற்சி – விடாது செய்தல். இங்கு மூர்த்திகள் என்றது, முழுமுதற் கடவுளின் ஆணையால் படைத்தும் காத்தும் அழித்தும் தொழில் புரிபவரை. போர் தொடங்கவே தம் தொழில்கள் பயனிலவென விடுத்தனர்போலும். *(4)*

## இந்திரசித்தின் துன்பமும் வீரமும்

**984.** தம்பியை நினையுந் தோறுந்
தாரைநீர் ததும்புங் கண்ணன்
அம்பியல் சிலையை நோக்கி
வாய்மடித் துருத்து நக்கான்
கொம்பியன் மாய வாழ்க்கைக்
குரங்கினுற் குறுகா வாழ்க்கை
எம்பியோ தேய்ந்தா னெந்தை
புகழன்றோ தேய்ந்த தென்ருன்.

தம்பியை நினையும் தோறும்
தாரைநீர் ததும்பும் கண்ணன்,
அம்பு இயல் சிலையை நோக்கி
வாய் மடித்து உருத்து நக்கான்;
"கொம்பு இயல் மாய வாழ்க்கைக்
குரங்கினுல், குறுகா வாழ்க்கை
எம்பியோ தேய்ந்தான்? எந்தை
புகழ் அன்ருே தேய்ந்தது" என்ருன்.

*தம்பியை எண்ணும்போதெல்லாம், நிரம்பி வழியும் நீரொழுகும் கண்ணையுடையவன் (இந்திரசித்து) அம்பு பயிலும் வில்லைப் பார்த்துச் சினத்தால் வாயை மடித்துச் சிரித்தான்; "மரக்கிளைகளில் நிலையற்று வாழும் குரங்கினால் நிலைகெடா வாழ்க்கையுடைய என் தம்பியோ தேய்ந் தான்? எம் தந்தையின் புகழல்லவா தேய்ந்தது." என்றான்: என்க. மாயம்-நிலையின்மை. தேய்தல் – மாய்தல்.* (5)

## வேற்படை யானைப்படை முதலியவற்றின் மிகுதி

**985.** வேறிரண் டனவும் வில்லு
மிடைந்தவும் வெற்பென் றாலும்
கூறிரண் டாக்கும் வாட்கைக்
குழுவையுங் குணிக்க லாற்றேம்
சேறிரண் டருகு செய்யுஞ்
செறிமதச் சிறுகண் யானை
ஆறிரண் டஞ்சு நூற்றி
னிரட்டிதேர்த் தொகையு மஃதே.

*வேல் திரண்டனவும், வில்லும்*
*மிடைந்தவும், வெற்பு என்றாலும்*
*கூறு இரண்டு ஆக்கும் வாள் கைக்*
*குழுவையும், குணிக்கல் ஆற்றேம்;*
*சேறு இரண்டு அருகு செய்யும்*
*செறிமதச் சிறு கண் யானை*
*ஆறு இரண்டு அஞ்சு நூற்றின் இரட்டி;*
*தேர்த் தொகையும் அஃதே.*

*வேலும் வில்லும் வாளும் ஏந்திய காலாட்படைகளைக் கணக்கிட முடியாது. யானைகளும் தேர்களும் வகைக்குப் பன்னீராயிரம். வாள் மலையேயாயினும் இரண்டாகத் துணிக்கக்கூடிய வன்மையும் கூர்மையும் உள்ளன. யானை இரண்டு பக்கமும் மதநீரால் சேறுபடச் செய்வன; சிறிய கண்களையுடையன. குணித்தல் - கணக்கிடல்.* (6)

## இந்திரசித்து இராவணன் கோயில் புகல்

**986.** ஆயமாத் தானை தான்வந்
தண்மிய தண்ம வாண்மைத்
தீயவா ணிருதர் வேந்தர்
சேர்ந்தவர் சேரத் தேரில்

ஏயெனு மளவின் வந்தா
னிராவண னிருந்த யாணர்
வாயிறோய் கோயில் புக்கா
னருவிசோர் வயிரக் கண்ணன்.

ஆய மாத்தானை தான் வந்து அண்மியது; அண்ம, ஆண்மைத்
தீய வாள் நிருதர் வேந்தர் சேர்ந்தவர் சேரத் தேரில்
ஏ எனும் அளவின் வந்தான்; இராவணன் இருந்த யாணர்
வாயில் தோய் கோயில் புக்கான், அருவி சோர் வயிரக் கண்ணன்.

(மேற்சொன்ன பன்னீராயிரம் என்னும் எண்ணிக்கை) ஆய குதிரைப்படையும் நெருங்கியது. நெருங்கவும், கொடியவாள் ஏந்திய இராக்கதப்படைத் தலைவர் திரண்டு சேர்ந்தார்கள். கண்ணீர் சோரும் வயிரக் கண்ணன் தேரில் ஏறி இராவணன் இருந்த அழகுமிக்க வாயில் பொருந்திய அரண்மனையுள் புகுந்தான். அண்ம - அருகில் வர. யாணர்- அழகு. தோய் - பொருந்திய. (7)

## இந்திரசித்து இராவணனிடம் பேசல் 987-990

**987.** தாளிணை வீழ்ந்தான் றம்பிக்
கிரங்கினன் றறுக ணனும்
தோளிணை பற்றி யேந்தித்
தழுவின னழுது சோர்ந்தான்
வாளிணை நெடுங்கண் மாதர்
வயிறலைத் தலறி மாழ்க
மீளிபோன் மொய்ம்பி னனும்
விலக்கினன் விளம்ப லுற்றான்.

தாள் இணை வீழ்ந்தான்; தம்பிக்கு இரங்கினன்; தறுகணனும்
தோள் இணை பற்றி ஏந்தித் தழுவினன்; அழுது சோர்ந்தான்;
வாள் இணை நெடும் கண் மாதர் வயிறு அலைத்து அலறி மாழ்க,
மீளி போல் மொய்ம்பினனும் விலக்கினன்; விளம்பல் உற்றான்.

வீழ்ந்தான் இரங்கினன்; தறுகணனும் தழுவினன், சோர்ந்தான், மாதர் மாழ்க, விலக்கினன்; விளம்பல் உற்றான் என வினை முடிவு செய்க. தறுகணன் - ஆண்மை மிக்கவன். வாள்இணை என்பதை இணை வாள் எனக் கண்ணுக்கு உவமையாகக் கொள்க. மீளி - கூற்றுவன். மொய்ம்பு - வலிமை. விளம்பல் - சொல்லல். தம்பிக்கு இரங்கித் தாளிணை வீழ்ந்த

தனயனைத் தாதை தழுவினுன், அழுது சோர்ந்தான். அரசமாதர் வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதார்; அழாவண்ணம் விலக்கினுன். சில சொல்லத் தொடங்கினுன். (8)

**988.** ஒன்றுநீ யுறுதி யோரா
யுற்றிருந் துளைய கிற்றி
வன்றிறற் குரங்கி ஞற்றன்
மரபுளி யுணர்ந்து மன்னே
சென்றுநீர் பொருதி ரென்று
திறத்திறஞ் செலுத்தித் தியக்
கொன்றனை நீயே யன்றோ
வரக்கர்தங் குழுவை யென்முன்.

"ஒன்று நீ உறுதி ஓராய், உற்று இருந்து உளையகிற்றி; வன்திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்து மன்னே, 'சென்று நீர் பொருதிர்' என்று, திறத்திறம் செலுத்தித் தியக் கொன்றனை நீயே அன்றோ? அரக்கர் தம் குழுவை" என்முன்.

(தந்தையை நோக்கி, மைந்தன்) "நீ வன்திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்து, உறுதி ஒன்று ஓராய்; 'சென்று நீர் பொருதிர்' என்று திறத்திறம் செலுத்தி, அரக்கர்தம் குழுவை, நீயே அன்றோ தியக் கொன்றனை; இருந்து உற்று உளையகிற்றி" என்முன் என முடிக்க. உறுதி – செய்யத்தக்கது. ஓராய் - அறியாய். உற்று – வருந்தி. உளையகிற்றி - அழுகின்றாய். திறல் - உறுதி. மரபுளி – முறையால். திறத்திறம் – கூறு கூருக. (9)

**989.** கிங்கரர் சம்பு மாலி
கேடிலா வைவ ரென்றிப்
பைங்கழ லரக்க ரோடு
முடன்சென்ற பகுதிச் சேனை
இங்கொரு பேரு மீண்டா
ரில்லையேல் குரங்க தெந்தாய்
சங்கர னயன்மா லென்பார்
தாமெனுந் தரத்த தாமோ.

கிங்கரர், சம்புமாலி, கேடு இலா
ஐவர், என்று இப்
பைங்கழல் அரக்கரோடும் உடன்
சென்ற பகுதிச் சேனே,
இங்கு ஒரு பேரும் மீண்டார்
இல்லேயேல், குரங்குஅது, எந்தாய்!
சங்கரன், அயன், மால், என்பார்
தாம் எனும் தரத்தது ஆமோ.

எந்தாய்! கிங்கரர் ... இல்லேயேல், குரங்கு ... அது ? சங்கரன் ... தரத்தது ஆம் என முடிக்க. இத்தனே அரக்கர் படையையும் மீளாது கொன்றதைக் குரங்கென்று சொல்லலாமோ? மும்மூர்த்திகள் தாம் என்று சொல்லவேண்டும் என்பது கருத்து. கிங்கரர் - இட்ட கட்டளையை எளிதில் முடித்து, மேற்கட்டளே எதுவென நிற்பவர்; 'ஏவல் எதுவோ' என்ற கருத்துப்படும் 'கிம்கரோமி' என்பதனடியாக, கிங்கர என்று முடிந்த வடசொல் என்க. குரங்கது என்பதில், அது என்னும் சுட்டு எடுத்தலோசையால் வினவின் ஆற்றல் பெற்று நின்றது. இதனே, 'காகு' என்பர் வடநூலார். தாம் என்பது கடடுரைச் சுவைபட நின்றது. தரம் - தகுதி. (10)

**990.** திக்கய வலியு மேனு
டிரிபுரந் தீயச் செற்ற
முக்கணன் கயிலே யோடு
முலகொரு மூன்றும் வென்ருய்
அக்கனேக் கொன்று நின்ற
குரங்கினே யாற்றல் காண்டி
புக்கினி வென்று மென்ருற்
புலம்பன்றிப புலமைத் தாமோ.

திக்கய வலியும், மேல்நாள்
திரிபுரம் தீயச் செற்ற
முக்கணன் கயிலேயோடும் உலகு
ஒரு மூன்றும் வென்ருய்;
அக்கனேக் கொன்று நின்ற
குரங்கினே ஆற்றல் காண்டி;
புக்கு இனி வென்றும் என்ருல்,
புலம்பு அன்றிப் புலமைத்து ஆமோ.

எட்டுத் திக்கினும் பூமியைச் சுமந்து நிற்கும் யானைகளின் வலிமையையும் முப்புரமும் எரியில் வேவச் சினந்த மூன்று கண்களையுடைய சிவபெருமானது கயிலாய மலையையும் மூன்று உலகங்களையும் பண்டை நாள் வென்ற நீ, (அருமை மைந்தன்) அட்சனைக் கொன்று, (தான் உயிரோடு) நின்ற குரங்கினை, அதன் ஆற்றல் காண்பிக்குமாறு பார்த்துக்கொண்டிருக்கின்றாய். (நம்மவரில் இவ்வளவுபேர் மடிந்த பின்னர்) நாம் புகுந்து அந்தக் குரங்கினை வென்று விடுவோம் என்றாலோ, அல்லது வென்று விட்டாலோ, நமக்கு அது அழுகையும் இழிவும் அல்லாது அறிவுடைமையும் புகழும் ஆகுமா? என்க. ஆற்றல் காண்டி என்பது, விளையாட விட்டு வேடிக்கை பார்க்கின்றாய் என்பதுபோல நின்றது. *(11)*

## இராவணனிடம் உறுதிகூறிப் புறப்படல்

**991.** ஆயினு மைய நொய்தி
　　ணுண்டெழிற் குரங்கை நானே
ஏயெனு மளவிற் பற்றித்
　　தருகுவெ னிடரொன் றொன்று
நீயினி யுழக்கற் பாலை
　　யல்லைநீ டிருத்தி யென்று
போயின னிலங்கை வேந்தன்
　　போர்ச்சினம் போவ தொப்பான்.

ஆயினும், "ஐய, நொய்தின் ஆண்டு எழில் குரங்கை, நானே ஏ எனும் அளவில் பற்றித் தருகுவென்; இடர் ஒன்று ஒன்றும், நீ, இனி உழக்கற்பாலை அல்லை; நீடு இருத்தி;" என்று, போயினன்; இலங்கை வேந்தன் போர்ச்சினம் போவது ஒப்பான்.

(முன்பு நடந்தனவும் முடிந்தனவும் எவ்வாறு) ஆயினும், 'ஐய! நானே ஏ எனும் அளவில் ஆண்டு எழிற் குரங்கை நொய்தின் பற்றித் தருகுவென்; நீ இனி ஒன்றும் இடரொன்று உழக்கற்பாலையல்லை; நீடு இருத்தி' என்று இலங்கை வேந்தன் போர்ச்சினம் போவது ஒப்பான், போயினன் என முடிக்க. குரங்குக்கு எழில் கூறியது, செயலாலும் வெற்றியாலும் என்க. இலங்கை வேந்தனிடத்துப் பற்பல குணங்கள் இருப்பதனால், அக்குணங்களையெல்லாம் தவிர்த்துப் போர்ச்சினம் ஒன்றே உருவெடுத்துப் போவதுபோலப் பொயினன் எனபது, தந்தையினும் மைந்தனது போர்ச்சினச் செறிவைக் காண்பிக்கின்றது.

கீழ்க்காணும் செய்யுட்கள் (991 a முதல் 991 y வரையுள்ளவை) அதிகப் பாடல்கள் என்ற தலைப்பில் 53-என்னும் குறியிடுள்ள சுவடி

யிலும் தொடர்ந்த எண்ணில் **P. R.** கிருஷ்ணமாசாரியர் பதிப்பிலும் பல ஏடுகளிலும் காணப்படுகின்றன. *(12)*

*991 (a)* பத்தியிற் றேர்கள் செல்லப் பவளக்காற் குடைகள் சுற்ற
முத்தினிற் சிவிகை தன்னை முகிலெனத் தேர்கள் சுற்ற
மத்தவெங் கரிகளெல்லா மழையென விருண்டு தோன்றத்
தத்திய பரிக டன்னிற் சாமரை பதைப்ப வந்தான்.

*991 (b)* சங்குகண் முழங்கப் பேரி
சகடைக ளிடியின் விழ
வெங்குரற் றிமிலை யோடு
கெடுவையின் மரங்கள் விங்கத்
தோங்கலில் குழாமுக் தூளி
வெள்ளமும் விசும்பைத் தூர்க்கத்
திங்களிற் குடைகள் பூப்பத்
திசைக்களி றிரிய வந்தான்.

*991 (c)* நியினிற் செவ்வே வைத்துச் சின்னங்கள் வேறுவேறு
வாயினின் றூத விரர் வழியிடம் பெறாது செல்லத்
தாயவள் சொன்மாறாது தவம்புரிந் தறத்தி னின்ற
நாயகன் றூதன்றானும் நொ(நேர்)ந்தன னகையுங் கொண்டான்.

*991 (d)* செம்பொனின் றேரின் பாங்கர்ச் செங்குடைத் தொங்கற் காடு
மும்பரிற் கும்பரோத்த வொருபிடி நுசுப்பிற் செவ்வாய்
வம்பவிழ் குழலி னார்கள் சாமரை பதைத்து விசக்
கொம்பொடு கோடு தாரை குடர்பறித் தூத வந்தான்.

*991 (e)* தொங்கலின் காடு நாறு யிரமென்பர் தோகை பிச்சம்
பங்கமில் பணிலம் பத்துப் பத்துநா றுகு மென்பர்
செங்குடை வெண்மை நீலம் பச்சையோ டினைய வெல்லாம்
பொங்கொளி மன்னு கோடி புரந்தர கித கோடி.

*991 (f)* தியெழு பொன்னிற் சின்ன மேவிவி மரக்கர் சேர
வாய்களி லூத மண்ணும் வானமு மறுகிச் சோர்ந்த
தாயது முடிவு காலங் கிளர்ந்தன ரரக்க ரென்று
வாய்களிற் பெரிய வானோர் மண்டினர் மலைக னோக்கி.

*991 (g)* அரந்தரு மயிலிற் காடு மழலுமிழ் குந்தக் காடுஞ்
சரந்தருஞ் சிலையிற் காடுந் தானவர் கடலு மின்ன
நிரந்தரஞ் சங்கு தாரை நிலமகண் முதுகை யாற்றுப்
புரந்தரன் றன்னை வென்றோ னென்றன பொன்னின் சின்னம்.

991 (h) புலித்தோலிற் பலகை யெல்லாம் பொருகடற் புரவி யென்னக்
கலித்தோடி யும்ப ரோடு மோடின கால னஞ்ச
வொலித்தாழி யுவாவுற் றென்ன வும்பர்தோ ரணத்தை முட்ட
வலித்தார்திண் சிலைக ளெல்லா மண்டின சரத்தின் மாரி.

991 (i) தடுவையின் மரங்க ளோடு சகடைகள் திமிலை தாக்க
வுடுவின மான தெல்லா முதிர்ந்தன பூவி தென்ன
வடு புலி யனைய விர ரமரினி லார்ப்பு மானை
நெடுமணி முழக்கு மோதை மண்ணக நிறைந்த தன்றே.

991 (j) எண்பதி னாயிர கோடி யிருஞ்சிலை
புண்பயில் வெஞ்சரம் பூட்டின ரன்றோ
விண்புகு தோரண மெல்ல நிறைந்து
மண்புகு சீர்த்தியன் மாருதி வாழ்ந்தான்.

991 (k) பாறெழு வார்படை பத்தினில் வெள்ள
மாறிரு கோடியின் வேலி னமைந்தார்
நூறெரு வெள்ள மமைந்தது நொந்த
வீறுடை மாருதி மேல்வரு சேனை.

991 (l) பந்தென வாடிய பாய்பரி யெல்லாஞ்
சிந்தையின் முந்தின தேர்கள் செறிந்த
வந்தியின் மேனிய வானைக ளெல்லாம்
வந்தன மண்ணை யடித்தக மாய.

991(m) சங்கொடு தாரைகள் சச்சரி சின்ன
மெங்கு மியம்பின பேரி யிடிப்ப
வெங்குர லிற்பறை விண்ணி னிறைந்த
பொங்கி யரக்கர் பொருக்கென வந்தார்.

991 (n) பார்த்தன பார்த்தன பாய்பரி யெங்குந்
தேர்த்திரள் தேர்த்திர ளெத்திசை யெங்குங்
கார்த்திரள் மேனி யினிற்கய மெங்கு
மார்த்தன மண்டு மரக்கர்க ளெங்கும்.

991 (o) நுகம்படு தேரவை நூறிரு கோடி
யுகம்பிறி தென்னவந் துற்றது வென்ன
வகம்படு காவி லரக்கர்க ளின்னம்
அகம்படு விரர்க ளோயிரு வெள்ளம்.

991 (p) வெள்ள மோர் நூறுடை விற்படை யென்பார்
துள்ளிய வாட்படை சொல்லிட வொண்ணுப்
பொள்ளல்த ருங்கரப் பூட்கையு மஃதே
கள்ளவ ரக்கனைச் சுற்றினர் காப்பார்.

991 (q) ஆய பெரும்படை யாய்வது கண்டு
மாய மிகுந்திறல் வானர வீரன்
நாய கனைத்திசை நோக்கி நயத்தால்
மேயதொ ரின்பம் விளங்கிட நின்றான்.

991 (r) ஆழிய ளுனை யரக்கர் பெரும்படை
ஏழுல கும்மிட மில்லென விண்டச்
சூழுமெ ழுந்தனர் தோன்றினர் தம்மைக்
கோழியி னெக்கு வகூவிடு கின்றான்.

991 (s) மாருதி கூவ மகிழ்ந்தன ளுகிக்
கூரிய புந்தியிற் கோவன் குறிக்கொடு
காரென மேனி யரக்கர்கள் காணுன்
வாரிக ளூடு மடுத்தன வாளி.

991 (t) தூளிமி டைந்துறுத் தொன்றில வாகி
யாளியல் தானை யறிந்தில ளுகிச்
சூழுற நோக்கினன் சோதனை பெற்றான்
கோளமைந் தனனவை கூறுதல் செய்தான்.

991 (u) இந்திரன் முன்பு நி(நெ)டுந்திரள் சோதிச்
சந்திர வெண்குடை தானெதிர் கண்டான்
அந்தக னேறிய வானைகள் காணு
சிந்தைபு வந்து சிரித்திட நின்றான்.*

991(v) சிந்தை யுவந்து சிரித்தெதிர் நின்றான்
புந்தி யரக்கர் கனைத்தமை நோக்கி
வெந்திற லாய்விரை வின்வரு கென்றான்
இந்திர சித்தவ னென்ப நிசைந்தான்.

991(w) என்றவன் மாற்ற மியம்புதல் கேட்டுக்
குன்ற மெனும்புய வானர வீரன்
நன்றிது நன்றிது என்ன நயந்தான்
சென்றணை யுற்ற தரக்கன சேனை.

---

* இப்பாடல் 11 என்னும் குறியிட்டுள்ள ஏட்டில் இல்லை.

991(x) ஊழி யெ ழுந்துல கத்தை யொடுக்க
வாழியல் தானை யரக்க ரடங்க
ஏழுல குமிட மில்லை யெனும்படி
ஆழிகி ளர்ந்தன வென்ன வழைத்தான்.*

991 (y) சந்திரன ருக்கனொடு தாரகையி னங்கள்
சிந்திடவெ ழுந்ததிசை மீண்டவெதிர் செவ்வே
வந்தவிவ் வ ரக்கர்குழு வண்மையிது வென்று
லிந்திரனை யன்றியுல கேழும்வெலு மென்றான்.

## படையின் பரப்பு

992. உடைந்தவ லிருணோற் றுப்ப
லுருக்கொடக் கதிர்க்கு ழாங்கள்
மிடைந்தன மிலைச்சி யாங்கு
மெய்யணி பலவு மின்னக்
குடைந்தவெம் பகைவ ரூன்றோய்
கொற்றப்போர் வாள்வில் வீச
அடைந்தகா ரரக்கர் தானை
யகலிட மிடமின் றென்ன.

உடைந்த வல் இருள், நோற்றுப் பல்
உருக்கொடு, அக் கதிர்க் குழாங்கள்
மிடைந்தன, மிலைச்சி ஆங்கு,
மெய் அணி பலவும் மின்னக்
குடைந்து வெம் பகைவர் ஊன் தோய்
கொற்றப் போர் வாள் வில் வீச,
அடைந்த கார் அரக்கர் தானை,
அகலிடம் இடம் இன்று, என்ன.

கார் அரக்கர் தானை, உடைந்த வல் இருள் நோற்று, அக் கதிர்க் குழாங்கள் பல் உருக்கொடு மிடைந்தன மிலைச்சியாங்கு அணி பலவும் மெய் மின்ன, வெம் பகைவர் ஊன் குடைந்து தோய் கொற்றப்போர் வாள் வில் வீச, அகலிடம் இடம் இன்று என்ன அடைந்த: என முடிக்க. கருமைநிறமுள்ள அரக்கர்களுடைய படை, அணிகள் பலவும் உடலில் அணிந்து வாளைக் கையில் தாங்கி உலகத்திலேயே இப்படை நிற்பதற்கு

* இப்பாடல் P. R. கிருஷ்ணமாசாரியர் பதிப்பில் இல்லை.

இடமில்லை என்று சொல்லத்தக்க அளவு பெருகி இந்திரசெயித்திடம் அடைந்தன. கரிய அரக்கர் ஒள்ளிய அணிகளைப் பூண்டிருந்தது, கதிரவனது ஒளிக்குத் தோற்ற திண்ணிய இருள் தவங்கிடந்து, தன்னை வென்ற கதிரவனைத் தான் வென்று, அவனது கதிர்க் கற்றைகளைப் பலஉருவில் சிதைத்து அணியாக அணிந்துகொண்டது போல் தோன்றியது எனக் கூறுகின்றார். அகலிடம் - நில உலகம். மிலைச்சி - பூண்டு. ஆங்கு உவமவுருபு. இந்தச் செய்யுள் 22 என்னும் குறியீடுள்ளசுவடியில் மட்டும் உள்ளது. ஆழ்வார்திருநகரிப் பதிப்பு தவிர மற்ற அச்சுப் புத்தகங்களிலும் காணப்படுகிறது. *(13)*

### இந்திரசித்து மலைபோல் படைநடுவில் நிற்றல்

**993.** ஆழியந் தேரு மாவு
மரக்கரு முருக்குஞ் செங்கட்
சூழிவெங் கோல மாவுந்
துவன்றிய நிருதர் சேனை
ஊழிவெங் கடலிற் சுற்ற
வொருதனி நடுவ ணின்ற
பாழிமா மேரு வொத்தான்
வீரத்தின் பன்மை தீர்த்தான்.

*ஆழி அம் தேரும், மாவும், அரக்கரும், உருக்கும் செம் கண்*
*சூழி வெம் கோல மாவும், துவன்றிய நிருதர் சேனை,*
*ஊழி வெம் கடலில் சுற்ற, ஒரு தனி நடுவண் நின்ற*
*பாழி மா மேரு ஒத்தான்; வீரத்தின் பன்மை தீர்த்தான்.*

வீரத்தின் பன்மை தீர்த்தான், ஆழி அம் தேர்......கடலில் சுற்ற, ஒரு தனி...மேரு ஒத்தான் என முடிக்க. அரக்கர் நால்வகைப்படையும் கடலாகவும், கடல் நடுவே நின்ற மேரு இந்திரசித்தாகவும் கூறினர். வீரத்தின் பன்மை தீர்த்தான் என்றது, வீரத்தின் சிறப்பு பலரால் பங்கிட்டுக்கொள்ளப் பெறாது, தன் ஒருவனுக்கே உரிமையாகப்பெற்றான் எனக் கருதி. *(14)*

### அனுமனால் நேர்ந்த அழிவைக் கருதல் 994–996.

**994.** சென்றன னென்ப மன்னோ
திசைகளோ டுலக மெல்லாம்
வென்றவ னிவனென் றாலும்
வீரத்தே நின்ற வீரன்

அன்றது கண்ட வாழி
யனுமனை யமரி ஞற்றல்
நன்றென வுவகை கொண்டான்
யாவரு நடுக்க முற்ருர்.

சென்றனன் என்ப, மன்ஓ திசைகளோடு உலகம் எல்லாம்
வென்றவன் இவன் என்ருலும், வீரத்தே நின்ற வீரன்,
அன்று அது கண்ட வாழி அநுமனை, அமரின் ஆற்றல்
நன்று என உவகை கொண்டான்; யாவரும் நடுக்கம் உற்ருர்.

மேற்கூறியவாறு இந்திரசித்து, போருக்குச் சென்ருன். திசைகளோடு உலகம் முழுவதையும் வென்றவன் என்ருலும், இவன் வீரத்தே நின்ற வீரன் ஆனமையால், அநுமனைக் கண்ட அன்று 'வாழி அமரின் ஆற்றல் நன்று' என உவகை கொண்டான். யாவரும் நடுக்கம் உற்ருர். தாழ்ந்த ஒரு குரங்கோடு போர் செய்ய நேர்ந்ததே என்று தன்மானம் தடுத்த இந்திர செயித்து அநுமனைக் கண்டவுடன், அவனைத் தனக்கு ஒத்த எதிரி யாகக் கொண்டே போர் செய்வது தகுதியுடையது என எண்ணி, வாழி எனத் தன்னையே வாழ்த்திக் கொண்டான். வீரனது பண்பை வீரன் உணருவான் என்பது இச் செய்யுளாற் பெறப்படுகின்றது. என்ப, மன்னே என்பவை அசை. (15)

995. இலைகுலாம் பூணி ஞனு
மிரும்பிணக் குருதி யீரத்
தலகில்வெம் படைக டெற்றி
யளவிடற் கரிய வாகி
மலைகளுங் கடலும் யாறுங்
கானமும் பெற்று மற்ருேர்
உலகமே யொத்த தம்மா
போர்ப்பெருங் களமென் றுனனு.

இலை குலாம் பூணினனும், "இரும் பிணக் குருதி ஈரத்து,
அலகு இல் வெம் படைகள் தெற்றி, அளவு இடற்கு அரிய ஆகி,
மலைகளும், கடலும், யாறும், கானமும், பெற்று, மற்று ஓர்
உலகமே ஒத்தது, அம்மா! போர்ப் பெரும் களம்;" என்று உன்னு.

இலைவடிவமாகச் செய்த அணிகளை அணிந்த இந்திரசித்து, 'மிகுதி யான பிணங்களை உடைய குருதிவெள்ளத்தில் கணக்கில்லாத கொடிய படைகள் அலைத்து அளவுசெய்யக்கூடாதனவாக மலைகளும் கடலும்

ஆறும் காடும் ஒருங்கே பெற்று இந்தப் போர்க்களம் ஒரு தனி உலகத்தை ஒத்தது' என்று வியந்து எண்ணி, என்றவாறு. எண்ணி என்ற எச்சத்தை மேற் செய்யுளில் வரும் 'விம்மல் கொண்டான்' என்பதனோடு முடிக்க. (16)

**996.** வெப்படை கில்லா நெஞ்சிற்
சிறியதோர் விம்மல் கொண்டான்
அப்படை வேலை யன்ன
பெருமையா ராற்ற லோடும்
ஒப்படை கில்லா ரெல்லா
முலந்தனர் குரங்கு மொன்றே
எப்படை கொண்டு வெல்வ
திராமன்வந் தெதிர்க்கி லென்றான்.

வெப்பு அடைகில்லா நெஞ்சில்,
சிறியது ஓர் விம்மல் கொண்டான் ;
"அப்பு அடை வேலை அன்ன
பெருமையார், ஆற்றலோடும்
ஒப்பு அடைகில்லார், எல்லாம்
உலந்தனர்; குரங்கும் ஒன்றே ;
எப் படை கொண்டு வெல்வது?
இராமன் வந்து எதிர்க்கில் ;" என்றான்.

(இது காறும் அச்சம் அறியாமையால்) தவிப்பு அடையாத தன் உள்ளத்திலே ஒரு சிறு ஏக்கம் கொண்டான். 'நீர் நிறைந்த கடல் போன்ற பெருமையுடையவர்களும், தம்முடைய ஆற்றலுக்கு ஒப்புக் கூறுதற்கு எவரும் இல்லாதவர்களும் ஆகிய அரக்க வீரர்கள் எல்லாம் அழிந்தார்கள். (இவர்களை அழித்த) குரங்கும் ஒன்றே ஒன்றுதான், (இவ்வாறாக ஒருக்கால்) இராமன் வந்து எதிர்த்தால் எந்தப்படையைக் கொண்டு வெல்வது' என்று கருதினான். (17)

## இந்திரசித்து இறந்த வீரருக்கு இரங்கல்

**997.** கண்ணனா ருயிரே யொப்பார்
கைப்படைக் கலத்திற் காப்பார்
எண்ணலாம் தகைமை யல்ல
ரிறந்திடைக் கிடந்தார் தம்மை

மண்ணுளே நோக்கி நின்று
வாய்மடித் துயிர்த்தான் மாயாப்
புண்ணுளே கோலிட் டன்ன
மானத்தாற் புழுங்கு கின்றான்.

கண்அனார், உயிரே ஒப்பார் கைப் படைக்கலத்தில் காப்பார்,
எண்ணலாம் தகைமை அல்லர் இறந்து இடைக் கிடந்தார் தம்மை
மண்ணுளே நோக்கி நின்று, வாய்மடித்து, உயிர்த்தான்; மாயாப்
புண் உளே கோல் இட்டு அன்ன, மானத்தால் புழுங்குகின்றான்.

தனக்குக் கண் போன்றவர்களும் உயிர் போன்றவர்களும், தன்கையில் உள்ள படை போலத் தன்னைக் காக்கக்கூடியவர்களுமான எண்ண முடியாத தொகையினர் இறந்து, செல்லும் வழியில் மண்ணிலே கிடந்தவர்களைப் பார்த்துநின்று வாயை மடித்துப் பெருமூச்சு விட்டான். ஆறாத புண்ணிலே கோல் இட்டாற்போல், மானம் போய்விட்டதே என்று மனம் புழுங்குகின்றான். (18)

## இந்திரசித்து தம்வீரம் குறைந்ததென வருந்தல்

**998.** கானிடை யத்தைக் குற்ற
குற்றமுங் கரனார் பாடும்
யானுடை யெம்பி வீந்த
விடுக்கணும் பிறவு மெல்லாம்
மானிட ரிருவ ராலும்
வானர மொன்றி னாலும்
ஆனிடத் துளவென் வீர
மழகிற்றே யம்ம வென்றான்.

கான் இடை அத்தைக்கு உற்ற குற்றமும், கரனார் பாடும்,
யான் உடை எம்பி வீந்த இடுக்கணும் பிறவும் எல்லாம்
மானிடர் இருவராலும் வானரம் ஒன்றினாலும்
ஆனிடத்து உள, என் வீரம் அழகிற்றே அம்ம என்றான்.

மானிடர் இருவராலும், வானரம் ஒன்றினாலும், கானிடை அத்தைக்கு உற்ற குற்றமும், கரனார் பாடும் யான் உடை எம்பி விந்த இடுக்கணும் பிறவும் எலலாம் உள ஆனிடத்து என் விரம் அழகிற்று! ஏ அம்ம என்றான்.

*மானிடர் இருவர் - இராமனும் இலக்குவனும். வானரம் ஒன்று - அநுமன். அத்தை - சூர்ப்பனகை; உற்ற குற்றம் - மூக்கு முதலிய அரியப்பட்டமை. கரன் - இராவணனுக்குத் தம்பிமுறையினன்; சூர்ப் பனகையின் காவற்சேனைக்குத் தலைவன். பாடும் - இறப்பும். யான் உடை - என்னுடைய. எம்பி - அட்சன். வீந்த - இறந்த. இடுக்கண் - துன்பம். பிற - அசோகவனம், பஞ்சசேனுபதிகள் முதலியோரின் அழிவு. உள ஆனிடத்து - உண்டான இடத்தில்; விரம் அழகிற்று எனத் தன்னையே தான் நொந்துகொண்டான். (19)*

## இந்திரசித்து பிணக்குவியலில் தம்பியின் சிதைவைக் கண்டு வருந்தல் 999—1001:

**999.** நீப்புண்ட வுயிர வாகி
நெருப்புண்ட நிறத்திற் றோன்றி
ஈர்ப்புண்டற் கரிய வாய
பிணக்குவ டிடறச் செல்வான்
தேய்ப்புண்ட தம்பி யாக்கை
சிவப்புண்ட கண்க டீயில்
காய்ப்புண்ட செம்பிற் றோன்றக்
கறுப்புண்ட மனத்தன் கண்டான்.

*நீப்பு உண்ட உயிர ஆகி,*
*நெருப்பு உண்ட நிறத்தில் தோன்றி,*
*ஈர்ப்பு உண்டற்கு அரிய ஆய*
*பிணக்குவடு, இடறச் செல்வான்;*
*தேய்ப்பு உண்ட தம்பி யாக்கை,*
*சிவப்பு உண்ட கண்கள், தீயில்*
*காய்ப்பு உண்ட செம்பில் தோன்றக்*
*கறுப்பு உண்ட மனத்தன் கண்டான்.*

*நீங்குதல் அடைந்த உயிரை உடையவையாய், நெருப்பை ஒத்த நிற முடையவையாய்க் காணப்பட்டு இழுக்கப்படுவதற்குக் கூடாதனவான பிணங்களாகிய மலைகள் தட்டித் தடுக்க, (போர்க்கள வழியே செல்ப வனான) இந்திரசித்து, தேய்க்கப்பட்டுள்ள தன் தம்பியுடைய (உயிர் நீத்த) உடம்பைச் செந்நிறங் கொண்ட தன் கண்கள் நெருப்பில் காய்ச்சப்பட்ட செம்பு போல் விளங்கச் சினங் கொண்ட மனமுடையவனைப் பார்த்தான். (20)*

**1000.** தாருகன் குருதி யன்ன
குருதியிற் றனிமாச் சீயக்
கூருகி ரளைந்த கொற்றக்
கனகன்மெய்க் குழம்பிற் றோன்றத்
தேருகக் கையில் வீரச்
சிலையுக வயிரச் செங்கண்
நீருகக் குருதி சிந்த
நெருப்புக வுயிர்த்து நின்றான்.

*தாருகன் குருதி அன்ன குருதியில் தனி மாச் சீயக்*
*கூர் உகிர் அளைந்த கொற்றக் கனகன் மெய்க் குழம்பில் தோன்றத்*
*தேர் உகக் கையில் வீரச் சிலை உக, வயிரச் செங்கண்*
*நீர் உகக் குருதி சிந்த, நெருப்பு உக உயிர்த்து நின்றான்.*

(முருகனது வேற்படை சிதைத்த) தாருகன் என்ற அசுரனுடைய குருதி எவ்வாறு பெருகிற்றோ, அவ்வாறு பெருகியுள்ள குருதிவெள்ளத்தில், ஒப்பற்ற சிறந்த நரசிங்கமூர்த்தியின் கூரிய நகங்களால் வகிரப் பெற்ற வெற்றியுற்ற இரணியனது உயிர் நீத்த உடல் குழம்பிக் கிடந்தது போல, தன் தம்பியின் உயிரற்ற உடல் காணப்பட, தேர் அழுந்த, கையிலுள்ள விரவில் நழுவ, சினங்கொண்ட தன் சிவந்த கண்களிலிருந்து கண்ணீர் விழ, செந்நீர் சிந்த, கனல் வீச மூச்சு எறிந்து நின்றான். (21)

**1001.** வெவ்விலை யயில்வே லுந்தை
வெம்மையைக் கருதி வீர
வவ்வுதல் கூற்று மாற்றான்
மாறுமா றுலகின் வாழ்வார்
அவ்வுல கத்து ளாரு
மஞ்சுவ ரொளிக்க வையா
எவ்வுல கத்தை யுற்று
யெம்மைநீத் தெளிதி னெந்தாய்.

*வெவ் இலை அயில்வேல் உந்தை வெம்மையைக் கருதி, வீர!*
*வவ்வுதல் கூற்றும் ஆற்றான்; மாறுமாறு உலகின் வாழ்வார்,*
*அவ் உலகத்து உளாரும் அஞ்சுவர் ஒளிக்க; ஐயா,*
*எவ் உலகத்தை உற்றாய் எம்மை நீத்து எளிதின் எந்தாய்.*

'வீரனே! இலை வடிவு போன்றதும் கூர்மையுடையதுமான கொடிய வேலைக் கையிற் கொண்ட உன் தந்தையின் கொடுமையை எண்ணி, எமனும் உன் உயிரைக் கொள்ள வலிமையுடைய வன் ஆகான்; வேறுபட்ட பல உலகில் வாழ்வோர்களும் ஐயனே! உன்னை மறைத்து வைக்க அஞ்சுவார்கள். எந்தாய்! எம்மை எளிதாக விட்டு எந்த உலகத்தை அடைந்தாய்' என இந்திரசித்து புலம்பினான். (22)

## துயரமும் வீரமும்

1002. ஆற்றல ளுகி யன்பா
லறிவழிந் தயரும் வேலை
சீற்றமென் றென்று தானே
மேனிமிர் செலவிற் றுகித்
தோற்றிய துன்ப நோயை
யுள்ளுறத் துரந்த தம்மா
ஏற்றஞ்சா லாணிக் காணி
யெதிர்செலக் கடாய தென்ன.

ஆற்றலன் ஆகி, அன்பால் அறிவு அழிந்து, அயரும் வேலை, சீற்றம் என்று ஒன்று தானே மேல் நிமிர் செலவிற்று ஆகித் தோற்றிய துன்ப நோயை உள்ளுறத் துரந்தது; அம்மா! ஏற்றம் சால் ஆணிக்கு ஆணி எதிர் செலக் கடாயது என்ன.

(இளவலை இழந்தமைக்கு) ஆற்றாதவனாகி (அவன்பால் வைத்த) அன்பினால் அறிவு அழிந்து அயரும் வேளையில் (ஏனைய உணர்ச்சிகளெல்லாம் பின்னடையச்) சீற்றம் என்ற ஒன்று தானே மேல் நிமிர்ந்து செல்வதாகி (முன்பு) உண்டான துன்பமாகிய நோயைக் கீழே அமுந்துமாறு துரத்தியது. (அது) இரண்டு ஆணிகளை ஒன்றுக்கொன்று எதிராக வைத்து அறைவது போல் இருந்தது: என்க. துன்பம் என்ற உணர்ச்சியும் வீரம் என்ற உணர்ச்சியும் ஒன்றுக் கொன்று எதிராக உள்ளத்தே போரிட்டதை, இரண்டு ஆணிகளை ஒன்றுக் கொன்று எதிராக அறைவதற்கு ஒப்புக் கூறினார். முடிவில் துன்பம் அடங்கி வீரமே எழுந்தது. துன்பத்துக்குத் தூண்டுகோல் அன்பும், வீரத்துக்குத் தூண்டுகோல் மானமும் ஆகும். (23)

## இந்திரசித்தைப் பார்த்த அநுமனின் எண்ணம் 1003—1006.

1003. ஈண்டிது நிகழ்வுழி யிரவி தேரெனத்
★ தூண்டுறு தேரின்மேற் றேன்றும் தோன்றலை
முண்டுமுப் புரஞ்சுட முடுகு மீசனில்
ஆண்டகை வனைகழ லனும னேக்கினன்.

*ஈண்டு இது நிகழ்வுழி, இரவி தேர் எனத்*
*தூண்டுறு தேரின்மேல் தோன்றும் தோன்றலை,*
*மூண்டு முப்புரம் சுட முடுகும் ஈசனில்,*
*ஆண்டகை வனைகழல் அனுமன், நோக்கினன்.*

*இந்த இடத்தில் மேற் சொன்னவாறு நடந்து கொண்டிருக்கும் போது கதிரவனது தேர்போல விரைவாகத் தூண்டப் பெற்று வருகின்ற தேரின் மேல் தோன்றும் இந்திரசித்தை ஆண்மை படைத்த வீரக்கழல் அணிந்த அநுமன் சினம் மூண்டு முப்புரத்தை எரிப்பதற்கு விரையும் ஈசனைப் போல் பார்த்தான்.* (24)

1004. வென்றே னிதன்முன் சிலவீரரை
★ யென்னும் மெய்ம்மை
அன்றே முடுகிக் கடிதெய்த
வழைத்த தம்மா
ஒன்றே வினிவெல் லுதறேற்ற
லடுப்ப துள்ளி
யின்றே யமையு மிவனிந்திர
சித்து மென்பான்.

*வென்றேன் இதன்முன் சில வீரரை என்னும் மெய்ம்மை*
*அன்றே, முடுகிக் கடிது எய்த அழைத்தது; அம்மா!*
*ஒன்றே இனி வெல்லுதல்; தோற்றல் அடுப்பது உள்ளி,*
*இன்றே அமையும் இவன்; இந்திரசித்தும் என்பான்.*

*இதன் முன் சில வீரரை வென்றேன் என்னும் மெய்ம்மை அன்றே! தோற்றல் அடுப்பது உள்ளி, 'முடுகிக் கடிது இந்திரசித்தும் என்பால் எய்த அழைத்தது; இவன் இன்றே அமையும், இனி வெல்லுதல் ஒன்றே? என இயையும். யான் சில வீரரை வென்றதால், அரக்கருக்குத் தோல்வி அடுத்தடுத்து வருவதை மனம்வருந்தி எண்ணி, இந்திரசித்தும் விரைந்து*

போர்க்களத்துக்கு வந்துவிட்டான். இவன் இன்றே இல்லாதவனுவான்; இவன் இன்றே முடிவடைவான். இனி வெல்லுதல் ஒன்றுதானு? என எண்ணினுன் அநுமன். அமைதல் - இன்மையாதல். 'துணை யமை வடிவும்' (சிந்தாமணி 1721) என்பது காண்க. (25)

இச்செய்யுளின் பின், 14, 25 என்னும் குறியிடுள்ள சுவடிகளில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :—

1004. (a) என்றே யிவனிப் பொழுதென்கையி னுல்மடிந்தால்
நன்றே மலர்மே லுறைநான்முக னுதி தேவர்
பொன்றுே மினியென்று மிருந்துயிர் போற்றுதற்கு
நின்றே துயர்தீர நிறுத்தின னென்ப மன்னே.

**1005.** கட்டே றுநறுங் கமழ்கண்ணியிக்
காளை யென்கைப்
பட்டா லதுவே யவிராவணன்
பாடு மாகும்
கெட்டே மெனவெண்ணி யிக்கேடருங்
கற்பி னுளை
விட்டே குமதன்றி யரக்கரும்
வெம்மை தீர்வார்.

**கட்டேறு நறும் கமழ் கண்ணி இக் காளை, என் கைப் பட்டால், அதுவே அவ் இராவணன் பாடும் ஆகும்; 'கெட்டேம்' என எண்ணி, இக் கேடு அரும் கற்பினுளை விட்டு, ஏகும்; அது அன்றி, அரக்கரும் வெம்மை தீர்வார்.**

கமழ் நறும் கண்ணி இக் கட்டேறு காளை என் கைப்பட்டால், அதுவே அவ் இராவணன் பாடும் ஆகும், (இராவணன்) கெட்டேன் என எண்ணி இக் கேடு அரும் கற்பினுளை (இராமன்பால்) விட்டு ஏகும்; அது வன்றி, அரக்கரும் வெம்மை தீர்வார் என அநுமன் எண்ணினுன். கமழ் நறும் கண்ணி-நறுமணம் மிக்க மாலை. கட்டேறு காளை - விர வெறி கொண்ட காளைபோல்வான்.: கைப்படுதல்-அகப்படுதல். கேடு அரும் - கெடுதல் இல்லாத. கற்பினுள் - சீதை. வெம்மை - செருக்கு. (26)

**1006.** ஒன்றுே விதனுல் வருமுதிய
மொண்மை யானைக்
கொன்றே னெனிலிந் திரனுந்துயர்
கோளு நீங்கும்

இன்றே கடிகெட் டதரக்கரி
லங்கை மூதூர்
வென்றே னவிரா வணன்றன்னையும்
வேரொ டென்றான்.

ஒன்றோ ? இதனால் வரும் ஊதியம்; ஒண்மையானைக்
கொன்றேன் எனில், இந்திரனும் துயர்கோளும் நீங்கும் ;
இன்றே கடிகெட்டது அரக்கர் இலங்கை மூதூர்;
வென்றேன் அவ் இராவணன் தன்னையும் வேரொடு; என்றான்.

ஒண்மையானைக் கொன்றேன் எனில், இதனால் வரும் ஊதியம் ஒன்றோ? இந்திரனும் துயர்கோளும் நீங்கும் ; அரக்கர் இலங்கை மூதூர் கடி கெட்டது; இன்றே அவ்விராவணன் தன்னையும் வேரொடு வென்றேன் என்றான். ஒண்மையான் - ஒளிமிக்க இந்திரசித்து. ஒளி - தான் உளனாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை (பரிமேலழகர்). துயர் கோள் - துயரம் கொள்ளுதல். கடி - காவல். வேரொடு - அடியோடு, (27)

## அநுமன் அரக்கர் படையுடன் பொருதல் 1007—1012.

**1007.** அக்கா லையரக் கருமானையுந்
தேரு மாவும்
முக்கா லுலகம் மொருமூன்றையும்
வென்று முற்றிப்
புக்கா னின்முன்புக் குயர்பூசல்
பெருக்கும் வேலை
மிக்கா னும்வெகுண் டொர்மராமரங்
கொண்டு புக்கான்.

அக்காலை, அரக்கரும், ஆனையும், தேரும், மாவும்,
முக்கால் உலகம் ஒரு மூன்றையும் வென்று முற்றிப்
புக்கானின் முன் புக்கு, உயர் பூசல் பெருக்கும் வேலை,
மிக்கானும், வெகுண்டு ஓர் மராமரம் கொண்டு புக்கான்.

அப்பொழுது, மும்முறை மூன்றுலகத்தையும் வென்று வன்மை முதிர்ந்தவனுக்கு (இந்திரசித்துக்கு) முன் அரக்கரும், யானையும், தேரும், மாவும் (போர்க்களம்) புகுந்து மிகுந்த ஆரவாரத்தை விளைவிக்கும் வேளையில் (பல வழிகளிலும்) மிகுந்தவன் (அநுமான்) சினங்கொண்டு ஒரு ஆச்சாமரத்தைக் (கையில்) கொண்டு (போர்க்களம்) புகுந்தான். (28)

இச்செய்யுளின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் கீழ்வரும் பாடல் காணப்படுகிறது: —

1007 (a) எழுந்தா னெழுந்த பொழுதங் கரக்கரு மெண்ணில் கோடி
பொழிந்தார் படைக ளவை யாவையும் பொடிந்து சிந்திக்
கழிந்தோடிடத் தன்கை மராமரங் கொண்டு வீசிச்
செழுந்தார்ப் புயத்தண்ணல் செறுத்துடன் மோதலுற்றான்.

**1008.** உதையுண் டனயா னையுருண்டன
யானை யொன்றோ
மிதியுண் டனயா னைவிழுந்தன
யானை மேன்மேல்
புதையுண் டனயா னைபுரண்டன
யானை போரால்
வதையுண் டனயா னைமறிந்தன
யானை மண்மேல்.

உதையுண்டன யானை; உருண்டன யானை; ஒன்றோ,
மிதியுண்டன யானை; விழுந்தன யானை: மேல் மேல்
புதையுண்டன யானை; புரண்டன யானை; போரால்
வதையுண்டன யானை; மறிந்தன யானை மண்மேல்.

அனுமனால் யானைப்படை அடைந்த அழிவைக் கூறுகிறது. உதையுண்டன உருண்டன; மிதியுண்டன விழுந்தன; இவை மேல் மேல் புதையுண்டன; புதையாதவை புரண்டன; அனைத்தும் வதையுண்டன; மறிந்தன எனப் பொருள் காணலாம். (29)

**1009.** முடிந்த தேர்க்குல முறிந்தன
★ தேர்க்குல முரணிற்
றிடிந்த தேர்க்குல மிற்றன
தேர்க்குல மச்சிற்
றொடிந்த தேர்க்குல முக்கன
தேர்க்குல நெக்குப்
படிந்த தேர்க்குலம் பறிந்தன
தேர்க்குலம் படியில்.

முடிந்த தேர்க்குலம்; முறிந்தன தேர்க்குலம், முரண் இற்று
இடிந்த தேர்க்குலம்; இற்றன தேர்க்குலம்; அச்சு இற்று
ஒடிந்த தேர்க்குலம்; உக்கன தேர்க்குலம்; நெக்குப்
படிந்த தேர்க்குலம்; பறிந்தன தேர்க்குலம் படியில்.

தேர்ப்படையின் சிதைவைக் கூறுகின்றது. தேர்க்குலம் – தேர்களின் கூட்டம். முடிந்த – முற்றும் அழிந்த. முறிந்தன , துண்டுகளாய் ஒடிந்தன. முரண் இற்று இடிந்த – வலிமையற்று இடிபட்டன. இற்றன - மூட்டுவாய் விட்டன. அச்சு இற்று ஒடிந்த - அச்சு முறிந்து ஒடிந்தன. உக்கன – உதிர்ந்தன. நெக்குப்படிந்த - கட்டுத் தளர்ந்தன. படியில் பறிந்தன – நிலத்தில் சாய்ந்தன. (30)

**1010.** சிரனெ ரிந்தவுங் கண்மணி
சிதைந்தவுஞ் செறிதாட்
டரனெ ரிந்தவு முதுகிறச்
சாய்ந்தவுந் தார்பூண்
உரனெ ரிந்தவு முதிரங்க
ளுமிழ்ந்தவு மொண்பொற்
குரனெ ரிந்தவுங் கொடுங்கழுத்
தொடிந்தவுங் குதிரை.

சிரன் நெரிந்தவும், கண்மணி சிதைந்தவும், செறிதாள்
தரன் நெரிந்தவும், முதுகு இறச் சாய்ந்தவும், தார்பூண்
உரன் நெரிந்தவும், உதிரங்கள் உமிழ்ந்தவும், ஒண்பொன்
குரன் நெரிந்தவும், கொடுங்கழுத்து ஒடிந்தவும் குதிரை.

குதிரைப்படை அழிந்தமை கூறுகின்றார். சிரன் - தலை. கண்மணி – கண். செறிதாள் தரன் - நெருங்கிய கால்களின் ஆற்றல். முதுகு இற – முதுகு ஒடிய தார்பூண் உரம் - கிண்கிணிமாலையணிந்த மார்பு. உதிரங்கள் - செந்நீர். ஒண் பொன் குரன் - ஒளிவிடும் பொன்னாலாகிய சதங்கை அணிந்த குளம்பு. (31)

**1011.** பிடியுண் டார்களும் பிளத்தலுண்
டார்களும் பெருந்தோள்
ஒடியுண் டார்களுந் தலையுடைந்
தார்களு முருவக்

கடியுண் டார்களுங் கழுத்திழந்
தார்களு மரத்தால்
அடியுண் டார்களு மச்சமுண்
டார்களு மரக்கர்.

பிடியுண்டார்களும், பிளத்தல் உண்டார்களும், பெரும் தோள்
ஒடியுண்டார்களும், தலை உடைந்தார்களும், உருவக்
கடியுண்டார்களும், கழுத்து இழந்தார்களும், மரத்தால்
அடியுண்டார்களும், அச்சம் உண்டார்களும் அரக்கர்.

காலாட்படையில் சிலர் பிடிக்கப்பட்டார்கள். சிலர் பிளக்கப்பட்டார்கள். சிலர், தங்கள் பெரிய தோள்கள் ஒடியப்பெற்றூர்கள். சிலர் தலையுடைந்தார்கள். சிலர், அச்சமுண்டாகும்படி கடிக்கப்பட்டார்கள். சிலர் கழுத்திழந்தார்கள். சிலர் மரத்தால் அடியுண்டார்கள். சிலர் இவற்றைக் கண்டு அச்சங்கொண்டார்கள். (32)

**1012.** வட்ட வெஞ்சிலை யோட்டிய வாளியும் வயவர்
விட்ட வெந்திறற் படைகளும் வீரன்மேல் வீழ்ந்த
சுட்ட மெல்லிரும் படைகலைச் சுடுகிலா தனபோல்
பட்ட பட்டன திசைதொறும் பொடியொடும் பரந்த.

வட்ட வெம் சிலை ஓட்டிய வாளியும் வயவர்
விட்ட வெம் திறல் படைகளும் வீரன்மேல் விழ்ந்த
சுட்ட மெல் இரும்பு அடைகலைச் சுடுகிலாதன போல்
பட்ட பட்டன திசைதொறும் பொடியொடும் பரந்த,

விரன் மேல் வயவர் ஓட்டிய வட்டவெம் சிலை வாளியும், விட்டவெம் திறல் படைகளும் விழ்ந்த. சுட்ட மெல்லிரும்பு அடைகலைச் சுடுகிலா தனபோல் பட்ட பட்டன, திசைதொறும் பொடியொடும் பரந்த. அரக்கர்கள் விட்ட அம்பும் படைகளும், காய்ச்சிய இரும்பு, பட்டடைக் கல்லைச் சுடாததுபோல், அநுமன் மேல் பட்டவை ஓர் இடையூறும் செய்யாது திசைதொறும் பொடியாகிப் பறந்தன என்பது கருத்து. வட்டவெம் சிலை - மிக வளைத்த கொடிய வில். வாளி - அம்பு. வயவர் - விரர் - அடைகல் - பட்டடைக்கல். (33)

### இந்திரசித்தும் அநுமனும் பலவகையாகப் பொருதல் 1013—1032.

**1013.** சிகையெ ழுஞ்சுடர் வாளிக ளிந்திர சித்து
மிகையெ ழுஞ்சினத் தனுமன்மேல் விட்டன வெந்து
புகையெ ழுந்தன வெரிந்தன கரிந்தன போக
நகையெ ழுந்தன வழிந்தன வானுளோர் நாட்டம்.

சிகை எழும் சுடர் வாளிகள், இந்திரசித்து,
மிகை எழும் சினத்து அனுமன் மேல் விட்டன, வெந்து
புகை எழுந்தன, எரிந்தன, கரிந்தன போக
நகை எழுந்தன; அழிந்தன வான் உளோர் நாட்டம்.

பொங்கி எழும் சினத்தையுடைய அனுமன் மேல் இந்திரசித்து விடுத்த கொழுந்துவிட்டு எரியும் அம்புகள், அவன்மேல் பட்டவுடன், புகைந்தனவாகவும் எரிந்தனவாகவும் கரிந்தனவாகவும், (அவனுக்கு ஓர் இடையூறும் செய்ய ஆற்றல் இல்லாதவையாய்) போக, இந்திரசித்துக்கு (வெகுளி)ச் சிரிப்பு உண்டாயது. (அது கண்ட) வானில் உள்ளவர்கள் கண்கள் கலங்கின. அநுமனது சினத்தீ சுடர் வீசும் அம்புகளையும் சுட்டுப் பயனில வாக்கியது என்பது பொருள். சிகை - கொழுந்து விட்டு எரியும் தீயின் நுனி. (34)

இச் செய்யுளின்பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.

*1013.* (a) செறுத்தெழுந்திடு மரக்கர்கள் திசைதிசை நெருக்கி
மறித்துவெஞ்சமர் மலைதலு மாருதிக் கடவுள்
கறுத்துவஞ்சகர் சிரத்தொடு கரம்புயஞ் சிதறிப்
பொறித்தெறித்திடப் புடைத்தனன் பொருபணை மரத்தால்.

*1013.* (b) புகைந்த ரக்கர்கள் விடுங்கொடும் படைகளைப் பொறியிற்
றகைந்து மற்றவ ருடல்களைத் தலைகளைச் சிதறி
மிகுந்திறற்கரி பரிமணித் தேரிவை விளியப்
புகுந்தடித்தனன் மாருதி யனைவரும் புரண்டார்.

**1014.** தேரும் யானையும் புரவியு மரக்கருஞ் சிந்திப்
பாரில் வீழ்தலுந் தானொரு தனிநின்ற பணைத்தோள்
வீரர் வீரனு முறுவலும் வெகுளியும் வீங்க
வாரும்வாருமென் றழைக்கின்ற வனுமன்மேல் வந்தான்.

தேரும், யானையும். புரவியும், அரக்கரும், சிந்திப்
பாரில் விழ்தலும், தான் ஒரு தனி நின்ற பணைத்தோள்
வீரர் வீரனும், முறுவலும், வெகுளியும், வீங்க,
'வாரும், வாரும்' என்று, அழைக்கின்ற அனுமன்மேல் வந்தான்.

தேர், யானை, புரவி, அரக்கர்களாலாகிய காலாட்படை (முதலிய துணை) எல்லாம் சிதறி மண்ணில் விழ்ந்தவுடன், தான் ஒருவனாகத் தனித்துநின்ற பருத்த தோள்களுடைய வீரர் வீரன் (இந்திரசித்து) நகையும் சினமும் பொங்கி, (போருக்கு) வாரும் வாரும் என்று கூப்பிடுகிற அநுமனிடம் நெருங்கினான். "வாரும் வாரும்" என இகழ்ச்சியில் அழைத்தான். (35)

**1015.** புரந்த ரன்றலை பொதிரெறிந்
திடப்புயல் வானில்
பரந்த பல்லுரு மேற்றினம்
வெறித்துயிர் பதைப்ப
நிரந்த ரம்புவி முழுவதுஞ்
சுமந்தநீ டுரகன்
சிரந்து ளங்கிட வரக்கன்வெஞ்
சிலையைநா ணெறிந்தான்.

புரந்தரன் தலை பொதிரெறிந்திடப் புயல் வானில்
பரந்த பல் உருமேற்று இனம் வெறித்து உயிர் பதைப்ப,
நிரந்தரம் புவி முழுவதும் சுமந்த நீடு உரகன்
சிரம் துளங்கிட, அரக்கன் வெம் சிலையை நாண் எறிந்தான்.

இந்திரனது தலை அஞ்சி நடுங்கவும், மேகம் பரவிய வானத்தில் பல சிறந்த இடிகளின் கூட்டம் வெருண்டு உயிர் நடுங்கவும், எப்பொழுதும் உலகம் முழுவதையும் சுமந்துகொண்டிருக்கும் பெரிய பாம்பு தலை நடுங்கவும், அரக்கன் (இந்திரசித்து) கொடிய வில்லில் நாணை விரலால் சுண்டி ஒலி எழுப்பினான். புரந்தரன் - இந்திரன்; நகரத்தையும் உடலையும் அழிப்பவன் என்பது பொருள். பொதிரெறிதல் - அஞ்சி நடுங்கல். புயல் - மேகம்; உருமு - இடி. உருமேறு - பேரிடி. இனம் - கூட்டம். வெறித்து - வெருண்டு; திடுக்கிட்டு. நிரந்தரம் - எப்பொழுதும், உரகன் - பாம்பு; மார்பால் ஊருவது என்பது பொருள்; இங்கு ஆதிசேடனை உணர்த்தியது. சிரம் - தலை. துளங்கல் - நடுங்கல். எறிதல் - நாண் தெறித்தல்; விரலால் சுண்டிவிடுதல். (36)

**1016.** ஆண்ட நாயகன் றூதனு
மயனுடை யண்டம்
கீண்ட தாமெனக் கிரியுக
நெடுநிலங் கிழிய
நீண்ட மாதிரம் வெடிபட
வவனெடுஞ் சிலேயில்
பூண்ட நாணிறத் தன்னெடுந்
தோள்புடைத் தார்த்தான்.

*ஆண்ட நாயகன் தூதனும், அயனுடை அண்டம்*
*கீண்டது ஆம் என, கிரி உக, நெடுநிலம் கிழிய,*
*நீண்ட மாதிரம் வெடிபட, அவன் நெடும் சிலேயில்*
*பூண்ட நாண் இற, தன் நெடும் தோள் புடைத்து ஆர்த்தான்.*

அடிமை கொண்ட தலேவனுடைய தூதனும், அயன் படைத்த உலகம் பிளந்தது என்று சொல்லும்படி, மலே பொடியாகவும், பரந்த நிலம் பிளவு படவும், நீண்ட திசைகள் வெடிக்கும்படியும், அவன் (இந்திரசித்து) நீண்ட வில்லில் பூட்டிய நாண் அறுந்து விழும்படியும் தன்னுடைய உயர்ந்த தோள்களேத் தட்டி ஆரவாரம் செய்தான். முன் இந்திரசித்து எழுப்பிய பேரொலிக்குக் கருவியாக இருந்த நாணும் அறும்படி இருந்தது அநுமன் தோள் புடைத்து ஆர்த்த ஒலி என்பது கருத்து. தலேவன் - இராமன். தூதன் - அநுமன். அயன் - நான்முகன். கிரி - மலே. மாதிரம் - திசை. சிலே - வில். இற - அற்று விழ. புடைத்தல் - தட்டல். (37)

**1017.** நல்லே நல்லேயிஞ் ஞாலத்து
நின்னெக்கு நல்லார்
இல்லே யில்லேயா லெறுழ்வலிக்
கியாரொடு மிகல
வல்லே வல்லேயின் ருகுநீ
படைத்துடை வாணுட்
கெல்லே யெல்லேயென் றிந்திர
சித்துவு மிசைத்தான்.

'நல்லை நல்லை! இஞ் ஞாலத்து, நின் ஒக்கும் நல்லார்
இல்லை இல்லை ஆல், எறும் வலிக்கு, யாரொடும் இகல
வல்லை வல்லை; இன்று ஆகும் நீ படைத்துடை வாழ்நாட்கு
எல்லை எல்லை' என்று, இந்திரசித்துவும் இசைத்தான்.

(அநுமனது ஆரவாரத்தைக் கண்ட) இந்திரசித்துவும், 'நல்லை நல்லை, இஞ்ஞாலத்து எறும் வலிக்கு நின் ஒக்கும் நல்லார் இல்லை இல்லை. நீ யாரொடும் இகல வல்லை வல்லை; நீ படைத்து உடை(ய) வாழ் நாட்கு இன்று எல்லை, எல்லை ஆகும்' என்று இசைத்தான் என்க. நல்லை நல்லை என்னும் அடுக்கு இகழ்ச்சிக் குறிப்பு. எறும் வலி என்னும் ஒருபொருள் குறித்த இருசொல் மிகுதியைக் காட்டியது. உன் வாழ்நாள் எல்லையும் இன்றைய நாள் எல்லையும் ஒன்றாகும் என்றான். (38)

**1018.** நாளுக் கெல்லையு நிருதரா
யுலகத்தை நலியும்
கோளுக் கெல்லையுங் கொடுந்தொழிற்
கெல்லையுங் கொடியீர்
வாளுக் கெல்லையும் வந்தன
வகைகொண்டு வந்தேன்
தோளுக் கெல்லையொன் றில்லையென்
றனுமனுஞ் சொன்னான்.

நாளுக்கு எல்லையும் நிருதராய் உலகத்தை நலியும்,
கோளுக்கு எல்லையும், கொடும் தொழிற்கு எல்லையும், கொடியீர்!
வாளுக்கு எல்லையும் வந்தன; வகைகொண்டு வந்தேன்
தோளுக்கு, எல்லை ஒன்று இல்லை; என்று அனுமனும் சொன்னான்.

'நிருதராய் உலகத்தை நலியும் கொடியீர் நாளுக்கு எல்லையும், கோளுக்கு எல்லையும் கொடுந்தொழிற்கு எல்லையும் வாளுக்கு எல்லையும் வந்தன. வகை கொண்டு வந்தேன், தோளுக்கு எல்லை ஒன்று இல்லை' என்று அநுமனும் சொன்னான் என்க. கொடியீர் என்றது இராவணன் உள்ளிட்ட அரக்கர் எல்லோரையும். உலகம் - உயர்ந்தோர். நலிதல் - துன்புறுத்தல். கோள் - தீய கொள்கைகள். வாள் - படைக்கலங்களுக்குப் பொதுவாக வந்துள்ளது. வந்தேன் - வந்தவனாகிய என். வகை - வலி, திறமை, முறை, காரணம், ஆற்றல் முதலியன. தோள் - தோள் வலிமை. (39)

**1019.** இச்சி ரத்தையைத் தொலைப்பெனென்
றிந்திரன் பகைஞன்
பச்சி ரத்தம்வந் தொழுகிட
வானவர் பதைப்ப
வச்சி ரத்திலும் வலியன
வயிரவான் கணைகள்
அச்சி ரத்திலு மார்பிலுஞ்
செறித்தலு மனுமன்.

"இச்சிரத்தையைத் தொலைப்பென்" என்று இந்திரன்பகைஞன், பச்சிரத்தம் வந்து ஒழுகிட, வானவர் பதைப்ப, வச்சிரத்திலும் வலியன வயிர வான் கணைகள், அச் சிரத்திலும், மார்பிலும், செறித்தலும், அனுமன்,

**1020.** குறிது வானென்று குறைந்தில
னெடுஞ்சினங் கொண்டான்
மறியும் வெண்டிரை மாகட
லுலகெலாம் வழங்கிச்
சிறிய தாய்சொன்ன திருமொழி
சென்னியிற் சூடி
நெறியி னின்றதன் னுயகன்
புகழென நிமிர்ந்தான்.

குறிது வான் என்று குறைந்திலன், நெடும் சினம் கொண்டான், மறியும் வெண் திரை மா கடல் உலகு எலாம் வழங்கிச் சிறிய தாய் சொன்ன திருமொழி சென்னியில் சூடி, நெறியில் நின்ற தன் நாயகன் புகழ் என நிமிர்ந்தான்.

1019, 1020–ஆகிய இரண்டு செய்யுளும் ஒரு தொடர்.

இந்திரன் பகைஞன், 'இந்த உறுதியை அழிப்பேன்' என்று பசிய குருதி வந்து ஒழுகவும் (அது கண்டு) வானவர் பதைக்கவும், (இந்திரன்) வச்சிரப்படையிலும் வன்மையுடைய உறுதியான உயர்ந்த அம்புகளை அவன் தலையிலும் மார்பிலும் நெருக்கி விட, அநுமன் பெருஞ்சிற்றம் கொண்டவனாய் வானத்தின் உயரம் குறியது என்று தான் குறைத்துக் கொள்ளாமல், சிற்றன்னையின் திருமொழிகளைத் தலைமேல் தாங்கி, மடித்தெழும் வெள்ளிய அலைகள் சூழ்ந்த உலகெலாம் (தம்பிக்குக்) கொடுத்து

நல்ல நெறியில் நின்ற தன் தலைவன் (இராமன்) புகழ்போல நிமிர்ந்து ஓங்கினான். சிரத்தை – உள்ளத்தின் உறுதி. பசுமை இரத்தம் – பச்சிரத்தம் – புதிதாக வரும் இரத்தம். வச்சிரம் – இந்திரனுடைய வயிரப் படை; வயிரம் – உறுதியானது. சிரம் - தலை. செறிதல் – நெருக்கி எய்தல். 'குறிது வான் என்று குறைந்திலன்' என்பதற்கு வானமுகட்டிலும் மேற்பட உயர்ந்தான் என்பது பொருள். சிறிய தாய் - கைகேயி. இராமன் புகழ் அநுமன் நெடுமைக்கு உவமைகூறப்பட்டது. (40, 41)

**1021.** பாக மல்லது கண்டில
னனுமனைப் பார்த்தான்
மாக வன்றிசை பத்தொடும்
வரம்பிலா வுலகிற்
கேக நாதனை யெறுழ்வலித்
தோள்பிணித் தீர்த்த
மேக நாதனு மயங்கின
னுமென வியந்தான்.

*பாகம் அல்லது கண்டிலன்; அநுமனைப் பார்த்தான்;*
*மாக வன்திசை பத்தொடும் வரம்பு இலா உலகிற்கு*
*ஏகநாதனை எறுழ்வலித் தோள் பிணித்து ஈர்த்த*
*மேகநாதனும், மயங்கினன் ஆம் என வியந்தான்.*

மாக வன் திசை பத்தொடும் வரம்பு இலா உலகிற்கு ஏகநாதனை எறுழ் வலித் தோள் பிணித்து ஈர்த்த மேகநாதனும், அநுமனைப் பார்த்தான்; பாகம் அல்லது கண்டிலன், மயங்கினன் ஆம் என வியந்தான். மாகம் – வானம். ஏகநாதன் – ஒரு தலைவன்; இந்திரன். பிணித்து – கட்டி. ஈர்த்த - இழுத்த. மேகநாதன் - இந்திரசித்து. பெருவடிவு கொண்ட அநுமனை இந்திரசித்து பார்த்தான்; அவ்வுருவின் நெடுமையும் பெருமையும் இவன் கண்பார்வை செல்லும் சேய்மைக்கும் சேய்மையாகி விட்டபடியால், ஒரு பகுதியே அல்லாமல் முழுவதையும் காண இயலவில்லை. மயக்கங்கொண்டு வியப்படைந்தான் என்பது கருத்து. (42)

**1022.** நீண்ட வீரனு நெடுந்தடங்
கைகளை நீட்டி
ஈண்டு வெஞ்சர மெய்தன
வெய்திடா வண்ணம்

மீண்டு போய்விழ வீசியங்
கவன்மிடற் றடங்தேர்
பூண்ட பேயொடு சாரதி
தரைப்படப் புடைத்தான்.

நீண்ட வீரனும், நெடும் தடம் கைகளை நீட்டி,
ஈண்டு வெம் சரம் எய்தன, எய்திடா வண்ணம்,
மீண்டு போய் விழ வீசி, அங்கு, அவன் மிடல் தடம் தேர்
பூண்ட பேயொடு, சாரதி தரைப்படப் புடைத்தான்.

நெடியோனும் நிமிர்ந்த வீரனுகிய அநுமனும், (இந்திர சித்தால்) விடப்பெற்றுத் தன்னிடம் நெருங்கும் கொடிய அம்புகள் தன்னை அடையாமல், தன் நீண்ட பெரிய கைகளை நீட்டித் திரும்பிக் கீழே விழும்படி வீசி, அவனுடைய (இந்திரசித்தினுடைய) வலிமை மிக்க தேர்ப்பாகனும் தேரில் பூட்டிய பேய்களும் மண்ணில் விழும்படி அடித்தான். (43)

**1023.** ஊழிக் காற்றென வொருபரித்
தேரவ னுதவப்
பாழித் தோளவ னத்தடங்
தேர்மிசைப் பாய்ந்தான்
ஆழிப் பல்படை யனையன
வளப்பருஞ் சரத்தால்
வாழிப் போர்வலி மாருதி
மேனியை மறைத்தான்.

ஊழிக்காற்று என ஒரு பரித் தேர் அவண் உதவப்
பாழித் தோளவன் அத் தடம் தேர்மிசைப் பாய்ந்தான்
ஆழிப் பல்படை அனையன அளப்பரும் சரத்தால்
வாழிப் போர்வலி மாருதி மேனியை மறைத்தான்.

அந்த இடத்தில், ஊழிக் காற்றுப் போன்ற கடுமையுள்ள குதிரை பூட்டிய தேர் ஒன்றை (ஒருவன்) உதவத் தோள்வலியுடையானுன அவ் இந்திரசித்து, அந்தப் பெரிய தேர்மேல் பாய்ந்து ஏறி, ஆழிப்படை போன்ற எண்ணமுடியாத பல அம்புகளால், என்றும் வாழும் பேறு பெற்ற போர்வலியுள்ள அனுமன் உடலை மறைத்தான் என்க. பாழி - வலிமை. ஆழி - சக்கராயுதம். வாழ்+இ=வாழி - என்றும் வாழும் நிலையுள்ளவன். (44)

**1024.** உற்ற வாளிக ளுரத்தடங்
கினவுக வுதருக்
கொற்ற மாருதி மற்றவன்
றேர்மிசைக் குதித்தான்
பற்றி வன்கையாற் பறித்தெறிந்
துலகெலாம் பலகால்
முற்றி வென்றவோர் மூரிவெஞ்
சிலையினை முறித்தான்.

உற்ற வாளிகள் உரத்து அடங்கின உக உதருக்
கொற்ற மாருதி மற்று அவன் தேர்மிசைக் குதித்தான்;
பற்றி வன்கையால் பறித்து எறிந்து உலகு எலாம் பலகால்
முற்றி வென்ற ஓர் மூரி வெம் சிலையினை முறித்தான்.

கொற்ற மாருதி, உற்ற வாளிகள் உரத்து அடங்கின உக உதரு, மற்று அவன் தேர் மிசைக் குதித்தான் : பலகால் உலகு எலாம் முற்றி வென்ற ஓர் மூரி வெம் சிலையினை வன்கையால் பற்றிப் பறித்து முறித்து எறிந்தான் என முடிக்க. கொற்ற மாருதி – வெற்றியை யுடைய அனுமான். உற்ற – தன்மேல் வந்து பட்ட. உரத்து அடங்கின – மார்பில் பதிந்தவையான. உக – சிந்தும்படி. உதரு – உதறி. முற்ற – முடிய. மூரி வெம் சிலை - வலிமையுடைய கொடிய வில். முறித்து எறிந்தான் – ஒடித்து விசியெறிந்தான். (45)

**1025.** முறிந்த வில்லின்வல் லோசைபோய்
முடிவதன் முன்னம்
மறிந்து போரிடை வழிக்கொள்வான்
வயிரவாட் படையால்
செறிந்த வான்பெருஞ் சிறையற
மலைகளைச் செயிரா
எறிந்த விந்திர னிட்டவான்
சிலையினை யெடுத்தான்.

முறிந்த வில்லின் வல் ஓசை போய் முடிவதன் முன்னம்,
மறிந்துபோர் இடை வழிக் கொள்வான், வயிர வாள் படையால்
செறிந்த வான் பெரும் சிறை அற மலைகளைச் செயிரா
எறிந்த இந்திரன் இட்ட, வான் சிலையினை எடுத்தான்.

மீண்டும் போரைத் தொடரவேண்டி வில்லின் முறிந்த வலிய ஒலி நிற்பதற்கு முன்னம், திண்மையான வாட்படையால் சினத்துடன் மலைகளை, உயர்ந்து நெருங்கிய பெரிய சிறகுகள் அறும்வண்ணம் வீழ்த்திய இந்திரன் (தன் தோல்விக்கு அடையாளமாக) வைத்த பெரிய வில்லை எடுத்தான். மறித்து என்பது மறிந்து என ஆயிற்று; மீண்டும் என்பது பொருள். சிறையற - சிறகு அற. செயிரா – சினந்து. எறிந்த - வீழ்த்திய. இட்ட – காணிக்கையாக வைத்த. (46)

இச்செய்யுளின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வரும் பாடல் காணப்படுகிறது :-

1025. (a.) எடுத்து நாணொலி யெழுப்பின னெண்டிசைக் கிரியும்
படித்தலங்களும் வெடிபடப் பகிரண்ட முடையத்
தொடுத்த வானவர் சிரதலந் துளங்கிடச் சினங்கொண்
டடுத்தம் மாருதி யயர்ந்திட வடுசரந் துரந்தான்.

**1026.** நூறு நூறுபோர் வாளியோர்
தொடைகொண்டு நொய்தின்
மாறு வெஞ்சினத் திராவணன்
மகன்சிலை வளைத்தான்
ஊறு தன்னெடு மேனியிற்
பலபட வொல்கி
ஏறு சேவகன் றூதனுஞ்
சிறிதுபோ திருந்தான்.

நூறு நூறு போர் வாளி, ஓர் தொடை கொண்டு, நொய்தின்,
மாறு வெம் சினத்து இராவணன்மகன், சிலை வளைத்தான்;
ஊறு, தன் நெடு மேனியில் பல பட, ஒல்கி,
ஏறு சேவகன் தூதனும், சிறிதுபோது இருந்தான்.

மாறு வெம் சினத்து இராவணன் மகன், ஓர்தொடை நூறு நூறு போர் வாளி கொண்டு நொய்தின் சிலை வளைத்தான்; ஏறு சேவகன் தூதனும், தன் நெடு மேனியில் ஊறு பல படச் சிறிது போது ஒல்கி இருந்தான். மாறு - முரண் பாடு. ஓர் தொடை - ஒரு தொடுப்பு. நொய்தின் விரைவாக. ஊறு - புண். ஒல்கி – தளர்ந்து. ஏறு சேவகன் – சிறந்த வீரன்; இராமன். (47)

1027. ஆர்த்த வானவ ராகுலங்
கண்டறி வழிந்தார்
பார்த்த மாருதி தாருவொன்
றங்கையிற் பற்றுத்
தூர்த்த வாளிக டுணிபட
முறைமுறை சுற்றிப்
போர்த்த பொன்னெடு மணிமுடித்
தலையிடைப் புடைத்தான்.

ஆர்த்த வானவர், ஆகுலம் கண்டு, அறிவு அழிந்தார் :
பார்த்த மாருதி, தாரு ஒன்று, அம் கையில் பற்றுத்
தூர்த்த வாளிகள் துணிபட, முறைமுறை சுற்றிப்
போர்த்த பொன் நெடு மணி முடித் தலையிடைப் புடைத்தான்.

ஆகுலம் கண்டு, (முன்பு) ஆர்த்த வானவர் அறிவு அழிந்தார். (அதைப்) பார்த்த மாருதி, அம் கையால் தாரு ஒன்று பற்றுத் தூர்த்த வாளிகள் துணிபட முறை முறை சுற்றிப் பொன் மணி நெடு முடி போர்த்த தலையிடைப் புடைத்தான் என்க. ஆர்த்த - மகிழ்ச்சியால் ஆரவாரித்த. ஆகுலம் - துன்பம். தாரு - மரம். போர்த்த - கவித்த. புடைத்தான் - அடித்தான். (48)

1028. பார மாமர முடியுடைத் தலையிடைப் படலும்
தாரை யின்னெடுங் கற்றைகள் சுற்றின தயங்க
ஆர மால்வரை யருவியில் வழிகொழுங் குருதி
சோர நின்றுடன் றுளங்கின னமரரைத் தொலைத்தான்.

பாரம் மாமரம், முடி உடைத் தலையிடைப் படலும்,
தாரையின் நெடும் கற்றைகள், சுற்றின தயங்க ;
ஆர மால் வரை அருவியில், வழி கொழும் குருதி
சோர, நின்று, உடன் துளங்கினன் அமரரைத் தொலைத்தான்.

அமரரைத் தொலைத்தான் முடியுடைத் தலையிடை, மா பாரம் மரம் படலும், சுற்றின நெடும் கற்றைகள் தாரையின் தயங்க, மால்வரை அருவியில், வழி கொழும் குருதி, ஆரச் சோர நின்று, உடன் துளங்கினன் என இயைக்க. அமரரைத் தொலைத்தான்-தேவரை வென்ற இந்திரசித்து. முடி உடைத் தலையிடை - முடிசூடிய தலையின்மேல். மா பாரம் மரம் - பெரிய கொடுஞ்சுமையான மரம். படலும் - தலையில் தாக்கியதும். சுற்றின நெடும் கற்றைகள் - சுற்றியிருந்த நீண்ட தலைமயிர்க்கற்றைகள்.

தாரையின் தயங்க - (அவிழ்ந்து) ஒழுங்காகத் தொங்கி அசைய. அருவியில் - அருவி போல. வழி - வழிந்து ஒழுகுகின்ற. கொழும் குருதி - கொழுவிய இரத்தம். ஆர சோர - மிகுதியாக வடிந்தொழுக. உடன் - உடன்று என்பது, உடன் என நின்றது. துளங்கினன் - மனம் கலங்கினன். இந்திரசித்தின் தலைமேல் நின்று வழிந்த செந்நீருக்கு மலை விழ் அருவி உவமை. (49)

**1029.** நின்று போதம்வந் துறுதலு நிறைபிறை யெயிற்றைத்
தின்று தேவரு மவுணரு முனிவருந் திகைப்பக்
குன்று போனெடு மாருதி யாகமுங் குலுங்க
ஒன்று போலவ னுயிரம் பகழிகோத் தெய்தான்.

*நின்று, போதம் வந்து உறுதலும், நிறை பிறை எயிற்றைத்*
*தின்று, தேவரும் அவுணரும் முனிவரும் திகைப்பக்*
*குன்று போல் நெடு மாருதி ஆகமும் குலுங்க,*
*ஒன்று போல், அவன், ஆயிரம் பகழி கோத்து எய்தான்.*

அவன் சிறிது நின்று, உணர்ச்சி வந்தவுடன், தேவர்களும், அவுணர்களும், முனிவர்களும் திகைப்பவும், மலை போன்ற அநுமனின் உடலும் குலுங்கவும், பிறை நிறைந்ததுபோல் நிறைந்த பற்களைக் கடித்து, ஒரு சேர ஆயிரம் அம்புகளைக் கோத்து எய்தான். போதம் - உணர்வு. ஆகம் - உடல். (50)

**1030.** உய்த்த வெஞ்சர முரத்திலுங் கரத்தினு மொளிப்பக்
கைத்த சிந்தையன் மாருதி யதிகமுங் கனன்றுன்
வித்த கச்சிலை விடுகணை விசையினுங் கடுகி
அத்த டம்பெருந் தேரொடு மெடுத்தெறிந் தார்த்தான்.

*உய்த்த வெம் சரம், உரத்திலும் கரத்தினும், ஒளிப்பக்*
*கைத்த சிந்தையன், மாருதி, அதிகமும் கனன்றுன்,*
*வித்தகச் சிலை விடு கணை விசையினும் கடுகி,*
*அத் தடம் பெரும் தேரொடும் எடுத்து, எறிந்து, ஆர்த்தான்.*

(இந்திரசித்து) செலுத்திய கொடிய அம்புகள், அநுமனுடைய மார்பிலும் கைகளிலும் பதிந்து மறைய, நைந்து வருந்திய மனமுடையவனுகி மிகவும் கொதித்து, (இந்திரசித்தின்) வில்லிலிருந்து விடப்படும் அம்புகளின் விரைவைவிட விரைவாகச் சென்று (இந்திரசித்தை) அந்தச்

*சிறப்பமைந்த பெரிய தேரோடு தூக்கி விசி எறிந்தான் என்பது பொருள். கரம் – கை. கைத்தல் – கசத்தல் ; நைந்து வருந்தல். கனலுதல் – கொதித்துச் சினத்தல். வித்தகம் – திறமை. கடுகி – விரைந்து.* *(51)*

**1031.** கண்ணின் மீச்சென்ற விமையிடை
கலப்பதன் முன்னம்
எண்ணின் மீச்சென்ற வெறுழ்வலித்
திறலுடை யிகலோன்
புண்ணின் மீச்சென்ற பொழிபுலால்
பசும்புனல் பொறிப்ப
விண்ணின் மீச்சென்ற தேரொடும்
பார்மிசை விழுந்தான்.

***கண்ணின் மீச் சென்ற இமை இடை கலப்பதன் முன்னம், எண்ணின் மீச் சென்ற எறுழ்வலித் திறல் உடை இகலோன், புண்ணின் மீச் சென்ற பொழி புலால் பசும்புனல் பொறிப்ப, விண்ணின் மீச் சென்ற தேரொடும் பார்மிசை விழுந்தான்.***

*எண்ணின் மீச்சென்ற எறுழ்வலித் திறலுடை இகலோன், மீச்சென்ற புண்ணின் புலால் பொழி பசும் புனல் பொறிப்ப, விண்ணின் மீச்சென்ற தேரொடும், மீச் சென்ற கண்ணின் இமை இடை கலப்பதன் முன்னம் பார்மிசை விழுந்தான் என இயையும். எண்ணின் மீச் சென்ற – எண்ணத்தைக் கடந்து சென்ற. இகலோன் – பகைவன் ; இந்திரசித்து. மீச்சென்ற புண் - உடலின் மேலிடமெல்லாம் பரந்துள்ள புண். பசும் புனல் – புதிய குருதி. பசுமை – புதுமை. புனல் - செம்புனல். பொறிப்ப – சிதற. மீச்சென்ற தேர் – மேலே சென்ற தேர். கண்ணின் மீச்சென்ற...... முன்னம் –கண் இமைப் பொழுதுக்குள்.* *(52)*

**1032.** விழுந்து பாரடை யாமுன்ன
மின்னன மெய்யான்
எழுந்து மால்விசும் பெய்தின
னிடையவன் படையில்
செழுந்தண் மாமணித் தேர்க்குலம்
யாவையுஞ் சிதைய
உழுந்து பேர்வதன் முன்னெடு
மாருதி யுதைத்தான்.

விழுந்து, பார் அடையாமுன்னம், மின் அன மெய்யான்
எழுந்து, மால் விசும்பு எய்தினன்; இடை, அவன் படையில்,
செழும் தண் மா மணித் தேர்க்குலம் யாவையும் சிதைய,
உழுந்து பேர்வதன் முன், நெடு மாருதி உதைத்தான்.

மின் அன மெய்யான் (இந்திரசித்து) விழுந்து, பார் அடையா முன்னம் எழுந்து மால் விசும்பு எய்தினன். இடை நெடு மாருதி அவன் (இந்திரசித்து) படையில், செழும் தண் மா மணித் தேர்க்குலம் யாவையும் உழுந்து பேர்வதன் முன் சிதைய உதைத்தான். மின் அன மெய்யான் – மின்னல் போலும் உடலையுடையவன். மால் விசும்பு – பெரிய வானம். இடை – இடைப்பொழுதில். செழும்......குலம் – வளமிக்க குளிர்ந்த வொளியுள்ள பெருமணிகள் பதித்த தேர்க்கூட்டம். உழுந்து பேர்வதன் முன் என்பது, விரைவையும் சுருக்கப் பொழுதையும் காட்டும் மரபுத் தொடர். உழுந்து - கூலவகையுள் ஒன்று. (53)

### இந்திரசித்து அயன்படை விடுதல் 1033—1037.

**1033.** ஏறு தேரில னெதிர்நிற்கு முரனில னெரியிற்
சீறு வெஞ்சினந் திருகின னந்தரந் திரிவான்
வேறு செய்வதோர் வினைபிறி தின்மையான் விரிஞ்சன்
மாறி லாப்பெரும் படைக்கலந் தொடுப்பதா மதித்தான்.

ஏறு தேர் இலன், எதிர் நிற்கும் உரன் இலன், எரியில்
சீறு வெம் சினம் திருகினன், அந்தரம் திரிவான்,
வேறு செய்வது ஓர் வினை பிறிது இன்மையான், விரிஞ்சன்
மாறு இலாப் பெரும் படைக்கலம் தொடுப்பதா, மதித்தான்.

(இந்திரசித்து) ஏறுவதற்குத் தேர் இல்லாதவனாகவும், (அநுமன்) எதிரே நிற்பதற்கு வலிமை இல்லாதவனாகவும், தீப்போலச் சீறுகின்ற கொடிய சினத்தால் மாறுபட்டவனாக வானத்திலே திரிகின்றவன் தான் செய்யக் கூடிய செயல் வேறு ஒன்றும் இல்லாதபடியால், படைப்புக் கடவுளது எதிர்நிற்றற்கரிய பெரிய படைக் கலத்தைத் தொடுப்பதாகத் துணிந்தான். சினந்திருகல் – சினத்தால் மாறுபடல். அந்தரம் – வானம். விரிஞ்சன் – படைப்புக்கடவுள். மதித்தான் - துணிந்தான். (54)

**1034.** பூவும் பூநிற வயினியுந்
தீபமும் புகையும்
தாவில் பாவனை யாற்கொடுத்
தருச்சனை சமைத்தான்

தேவும் யாவையு முலகமுந்
திருத்திய தெய்வக்
கோவி னுன்முகன் படைக்கலந்
தடக்கையிற் கொண்டான்.

பூவும், பூநிற அயினியும், தீபமும், புகையும்,
தாவு இல் பாவனையால் கொடுத்து, அருச்சனை சமைத்தான்,
தேவும், யாவையும், உலகமும், திருத்திய தெய்வக்
கோவில்; நான்முகன் படைக்கலம் தடக்கையில் கொண்டான்.

தாவு இல் பாவனையால் பூவும், பூநிற அயினியும், தீபமும், புகையும், (தேவும், உலகமும், யாவையும், திருத்திய) தெய்வக்கோவில் கொடுத்து அருச்சனை சமைத்தான்; நான் முகன் படைக்கலம் தடக்கையில் கொண்டான். தாவு இல் – குற்றமில்லாத. பாவனை – உள்ளத்திலே உருவகம் செய்தல். பூ – மலர். பூநிற அயினி – வெண்ணிறச் சோறு. தீபம் – ஆரத்தி. புகை – நறும் புகை. இவை இறைவழிபாட்டின் பதினறுபணிகளுட் சில. சில கூற, முழுதும் கூறினுராயிற்று. திருத்திய - ஒழுங்கு பெறவமைத்த. தடக்கை – வலக்கை. அருச்சனை - வழிபாடு. போர்க்கள மாகலின் கோயிலும் வழிபாடும் உள்ளத்தே அமைத்தான். வழிபாடு செய்து படைக்கலம் எடுத்தான். (55)

1035. கொண்டு கொற்றவெஞ் சிலைநெடு நாணெடு கூட்டிச்
சண்ட வேகத்த மாருதி தோளொடு சாத்தி
மண்டு ளங்கிட மாதிரந் துளங்கிட மதிதோய்
விண்டு ளங்கிட மேருவுந் துளங்கிட விட்டான்.

கொண்டு, கொற்ற வெம் சிலை நெடுநாணெடு கூட்டிச்
சண்ட வேகத்த மாருதி தோளொடு சாத்தி,
மண் துளங்கிட, மாதிரம் துளங்கிட, மதிதோய்
விண் துளங்கிட, மேருவும் துளங்கிட, விட்டான்.

(நான்முகன் படைக்கலமாகிய கணையைக் கையில்) கொண்டு, வெற்றிபொருந்திய கொடிய வில்லின் நீண்ட நாணெடு சேர்த்து, நிலவுலகம் நடுங்கவும், திசைகள் நடுங்கவும், திங்கள் நிலவும் வானம் நடுங்கவும், மேரு நடுங்கவும், மிக்க விரைவினையுடைய அநுமனது தோளுக்கு இலக்கு வைத்து விட்டான். சண்டவேகம் – மிகுந்த வேகம் சாத்தி - குறிபார்த்து. மாதிரம் – திசை. மதி – திங்கள். விண் – வானம். மேரு – மலைகளுள் பெரியமலை. துளங்கிட – நடுங்க. (56)

**1036.** தணிப்ப ரும்பெரும் படைக்கலந்
தழலுமிழ் தறுகட்
பணிக்கு லங்களுக் கரசன
துருவினைப் பற்றித்
துணிக்க வுற்றுயர் கலுழனுந்
துணுக்குறச் சுற்றிப்
பிணித்த தப்பெரு மாருதி
தோள்களைப் பிறங்க.

*தணிப்பு அரும் பெரும் படைக்கலம், தழல் உமிழ் தறுகண்*
*பணிக் குலங்களுக்கு அரசனது உருவினைப் பற்றித்*
*துணிக்க உற்று உயர் கலுழனும் துணுக்குறச் சுற்றிப்*
*பிணித்தது; அப்பெரு மாருதி தோள்களைப் பிறங்க.*

எவராலும் அடக்குதற்கு இயலாத (அந்தப்) பெரிய படைக்கலம், கனல் வீசும் கொடுமை வாய்ந்த பாம்புக்கூட்டங்களுக்கு அரசனுடைய உருவைக் கொண்டு (பாம்புகளைத்) துணிக்கும் (இயல்புடைய) உயர்ந்த கலுழனும் அஞ்சும்படி, அந்தப் பேருருவினனான அநுமனின் தோள்களை, (தன்னுரு விளங்கும் வண்ணம்) இறுகக் கட்டியது என்க. தணித்தல் – அமைதியாக்கல். தழல் – நெருப்பு. பணி – பாம்பு. குலம் – கூட்டம். உரு – வடிவு. துணிக்க – துண்டுசெய்ய. பிணித்தது – துன்புறக் கட்டியது. பிறங்க – விளங்க. (57)

**1037.** திண்ணென் யாக்கையைத் திசைமுகன்
படைசென்று திருக
அண்ணன் மாருதி யன்றதன்
பின்சென்ற வறத்தின்
கண்ணி னீரொடுங் கனகதோ
ரணத்தொடுங் கடைநாள்
தண்ணென் மாமதி கோளொடுஞ்
சாய்ந்தெனச் சாய்ந்தான்.

*திண் என் யாக்கையைத் திசைமுகன்படை சென்று திருக,*
*அண்ணல் மாருதி, அன்று தன்பின் சென்ற அறத்தின்*
*கண்ணின் நீரொடும், கனகதோரணத்தொடும், கடைநாள்*
*தண் என் மாமதி கோளொடும் சாய்ந்து எனச் சாய்ந்தான்.*

பெரியோனாகிய அநுமனுடைய வன்மையுற்ற உடலை, நான்முகன் படை சென்று இறுக்கியதும், தன்னைப் பின் தொடர்ந்து இலங்கையுள் புகுந்த அறக் கடவுள் கண்ணீர் சொரிய, பொன்னாலாகிய கோப்பெரு வாயிலில், குளிர்ந்த முழுத்திங்கள் (தன்னைப் பற்றிய இராகு என்னும்) கோளாகிய அரவொடு ஊழிமுடிவில் விழுவதுபோல் விழுந்தான். யாக்கை - உடல். திருக-இறுக்க. அறம் - அறக்கடவுள். கனகம் - பொன். தோரணம் - கோப் பெருவாயில். கடைநாள் - உலக முடிவான ஊழிக் காலம். கோள் - இராகுவென்னும் அரவு வடிவான கோள். சாய்ந்தான் - விழுந்தான். தோரணத்தொடு என்பதை தோரணத்தில் என உருபு மயக்கமாகக் கொள்க. அநுமனது ஒளி காலும் மேனிக்குத் திங்களும், நான்முகன் படைக்கு இராகு என்னும் அரவும் ஒப்பிடப்பெற்றன. (58)

### அநுமன் அயன்படையில் கட்டுப்படல்

**1038.** சாய்ந்த மாருதி சதுமுகன்
படையெனுந் தன்மை
ஆய்ந்து மற்றித னாணையை
யவமதித் தகல்கை
ஏய்ந்த தன்றென வெண்ணினன்
கண்முகிழ்த் திருந்தான்
ஓய்ந்த தாமிவன் வலியென
வரக்கன்வந் துற்றான்.

சாய்ந்த மாருதி, சதுமுகன்படை எனும் தன்மை
ஆய்ந்து, மற்று இதன் ஆணையை அவமதித்து அகல்கை
ஏய்ந்தது அன்று என எண்ணினன், கண்முகிழ்த்து இருந்தான்;
'ஓய்ந்ததுஆம் இவன் வலி' என, அரக்கன் வந்து உற்றான்.

கீழே விழுந்த அநுமன், (தன்னைப் பிணித்தது) நான்முகன் படை என்றது தெரிந்து, அதன் ஆணையை அவமதித்து அகலுதல் பொருத்தமல்ல என எண்ணிக் கண்ணை மூடிக்கொண்டிருந்தான். இவனுடைய ஆற்றல் ஓய்ந்து விட்டது என்று அரக்கன் (இந்திரசித்து) அண்மையில் வந்தடைந்தான்: என்க. சதுமுகன் - நான்முகன், அவமதித்தல் - பொருட்படுத்தாமை. ஏய்ந்தது - பொருந்தியது. முகிழ்த்தல் - கூம்பல்; மூடியிருத்தல். (59)

### அரக்கர் அநுமனைச் சூழல். 1039–1040.

**1039.** உற்ற காலையி லுயிர்கொண்டு
திசைதொறு மொதுங்கி
அற்ற நோக்கினர் நிற்கின்ற
வாளெயிற் றரக்கர்
சுற்றும் வந்துடல் சுற்றிய
தொளையெயிற் றரவைப்
பற்றி யீர்த்தன ரார்த்தனர்
தெழித்தனர் பலரால்.

*உற்ற காலையில், உயிர் கொண்டு திசைதொறும் ஒதுங்கி*
*அற்றம் நோக்கினர் நிற்கின்ற வாள் எயிற்று அரக்கர்,*
*சுற்றும் வந்து உடல் சுற்றிய தொளை எயிற்று அரவைப்*
*பற்றி ஈர்த்தனர், ஆர்த்தனர், தெழித்தனர், பலர் ஆல்.*

இந்திரசித்து அநுமனுக்கு அண்மையில் வந்து சேர்ந்தபோது, முன் போருக்கு அஞ்சி, உயிரைக் காப்பாற்றிக் கொண்டு திசைதோறும் ஒதுங்கி ஏற்ற சமயம் பார்த்து நின்ற, வாள்போலும் பல்லையுடைய அரக்கர்கள் பலர், அநுமனைச் சுற்றி வந்து, அவன் உடலைச் சுற்றிய தொளையமைந்த பல்லையுடைய பாம்பைப் பிடித்து, அநுமன் உடலை இறுக்குமாறு இழுத்தார்கள் ; ஆரவாரித்தார்கள் ; அதட்டினார்கள். அற்றம் – ஏற்ற பொழுது. வாள் எயிறு – வாள் போலும் பல். தெழித்தனர் - அதட்டினர். (60)

**1040.** குரக்கு நல்வலங் குறைந்த தென்றுவலங் கொட்டி
இரைக்கு மாநக ரெறிகட லொத்ததெம் மருங்கும்
திரைக்கு மாசுணம் வாசுகி யொத்தது தேவர்
அரக்க ரொத்தனர் மந்தர மொத்தன னனுமன்.

*“குரக்கு நல்வலம் குறைந்தது” என்று, ஆவலம் கொட்டி*
*இரைக்கும் மா நகர், எறிகடல் ஒத்தது ; எம் மருங்கும்*
*திரைக்கும் மாசுணம், வாசுகி ஒத்தது; தேவர்;*
*அரக்கர் ஒத்தனர்; மந்தரம் ஒத்தனன் அநுமன்.*

குரங்கின், மிக்க வலிமை ஒடுங்கிவிட்டது என்று ஆவலங்கொட்டிப் பேரொலி செய்யும் அந்தப் பெரிய நகரம் (இலங்கை), அலை எறியும் கடல் போன்றது; எல்லாப் பக்கமும் இறுகப் பற்றி நிற்கும் பெரும்பாம்பு வாசுகியை ஒத்தது ; அரக்கர்கள் தேவரை ஒத்தனர் ; அநுமன் மந்தர

மலையை ஒத்தான். ஆவலங்கொட்டல் – தோல்வியடைந்தாரை ஏளனம் செய்து, கைதட்டிக் கொண்டு ஆர்த்து வாய்கொட்டுதல். திரைத்தல் - இறுகக் கட்டல். வாசுகி – திருப்பாற் கடல் கடையும்போது கயிறுக உதவிய பாம்பு. மந்தரம் - பாற்கடல் கடைந்த மலை. திருப்பாற்கடல் கடைந்த செய்தி உவமையாகக் கூறப்பட்டுள்ளது. மாசுணம் – மலைப்பாம்பு. (61)

### அயன்படையில் கட்டுண்ட அநுமன் தோற்றம்

**1041.** கறுத்த மாசுணங் கனகமா
மேனியைப் பற்ற
அறத்துக் காங்கொரு தனித்துணை
யெனநின்ற வனுமன்
மறத்து மாருதம் பொருதநாள்
வாசுகி யென்பான்
புறத்துச் சுற்றிய மேருமா
மலையையும் போன்றான்.

*கறுத்த மாசுணம், கனக மா மேனியைப் பற்ற,*
*அறத்துக்கு ஆங்கு ஒரு தனித்துணை என நின்ற அனுமன்,*
*மறத்து மாருதம் பொருத நாள், வாசுகி என்பான்*
*புறத்துச் சுற்றிய மேரு மா மலையையும் போன்றான்.*

சினந்த பெரும்பாம்பு பொன்போன்ற மேனியைப் பற்றியதும், அவ்விடத்தில் அறத்துக்கு ஒரு ஒப்பற்றதுணை போல் நின்ற அநுமன், காற்று, வலிமையுடன் மோதியபோது வாசுகியென்னும் பாம்பு சுற்றியிருந்த மேருமா மலையையும் போன்றான். கறுத்த – சினங்கொண்ட ; கருநிறங் கொண்ட. கனக மா மேனி - பொன்னிறமான உடம்பு. மறத்து மாருதம் - வலிமையுள்ள அல்லது பகைமையுள்ள காற்று. பொருத – போரிட்ட ; மோதிய. (62)

### இலங்கையர் மகிழ்ச்சி

**1042.** வந்தி ரைத்தனர் மைந்தரு
மகளிரு மழைபோல்
அந்த ரத்தினும் விசும்பினுந்
திசைதொறு மார்ப்பார்

முந்தி யுற்றபே ருவகைக்கோர்
கரையிலை மொழியின்
இந்தி ரன்பிணிப் புண்டநா
ளொத்ததவ் விலங்கை.

வந்து இரைத்தனர், மைந்தரும் மகளிரும் மழைபோல்
அந்தரத்தினும் விசும்பினும் திசைதொறும் ஆர்ப்பார்;
முந்தி உற்ற பேர் உவகைக்கு ஓர் கரை இலை; மொழியின்,
இந்திரன் பிணிப்பு உண்ட நாள் ஒத்தது அவ் இலங்கை.

மேகத்தின் பேரிடிபோல், ஆண்மக்களும் பெண்மக்களும் பேரொலி செய்தார்கள்; இடைவானத்திலும் விண்ணுலகத்திலும் யற்றத் திசைகள் எல்லாவற்றிலும் ஆரவாரம் செய்தார்கள் அவர்கள் அடைந்த பெரு மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை; சொல்வோமானல், இந்திரனை மேகநாதன் கட்டிக்கொண்டுவந்த நாள்போல மகிழ்ச்சி பெருகியிருந்தது. (63)

பாசப் படலம் முற்றிற்று.

# 12. பிணிவீட்டு படலம்

அனுமனுடன் பெரும்போர் புரிந்த இந்திரசித்து அவனது பேராற்றலைக் கண்டு முடிவில் பிரமாத்திரத்தைப் பிரயோகித்ததும், அதனால் வலியொடுங்கினவன்போல் நின்ற அனுமனது நிலையும் மேலே பாசப்படலத்துட் கூறப்பட்டன. இப் பிணிவிட்டுபடலத்துள், அவ்வாறு கட்டிய பிணிப்பை விடுவித்துக்கொண்ட வரலாறு கூறப்படுகின்றது. [பிணி – பிணிப்பு, கட்டு; விட்டு – விடுவித்த; வினைத்தொகை. படலம் – கதாபாகம் என்பது பொருள்]

இந்திரசித்து பிரயோகித்த நாகவடிவினதான பிரமன் படைக்கு அனுமன் சில நாழிகைவரை கட்டுப்பட்டிருந்து மரியாதை புரிய வேண்டியவனானன். இவ்வாறு அமைந்தது பிரமதேவன் ஆதியில் நியமித்த ஆணையாகும். அத் தெய்வப்படையால் வலியொடுங்கியவனாயினும் சில நாழிகையில் அதன் பிணிப்பு அவனை விட்டு விலகியது. ஆகவே, தன் பழைய ஆற்றலைப் பெற்றனன் அனுமன். ஆனால் அந்நிலைமையை வெளிக்காட்டிக் கொள்ளாமலே அத் தெய்வப்படையால், தான் செயலற்றுப்போன நிலைமையையே காட்டி வந்தனன். இதனை அறியாத இந்திரசித்தும் ஏனை அரக்கர்களும் அனுமன் பிணிப்புண்டு சோர்ந்துள்ளதற்கு அகம் களித்துப் பெரிதும் ஆரவாரித்தனர். இந்திரசித்தின் தூதுவர் இச்செய்தியை இராவணனிடம் ஓடிச்சென்று அறிவித்தார்கள். அது கேட்ட அரக்கர் கோமான் மகிழ்கூர்ந்து அவர்கட்குப் பரிசுகள் வழங்கி, பின் அனுமனைக் கொன்றுவிடாமல் தன்னிடம் கொண்டுவரும்படி ஆணை விடுத்தனன். இந்திரசித்தும் அனுமனை, பிணித்த பிணிப்போடும் இலங்கைத் தெருக்களின் வழியே அனைவருங் காண அரண்மனைநோக்கி அழைத்துச்சென்றான். முதல் நாள் தான் பொழிலிறுத்தபோது அந்தப் பெருநகரம் அடைந்த அழிவுபாடுகளையெல்லாம் கண்டுகொண்டே தெரு நெடுக அரக்கர்குழுவொடு அனுமனும் அடங்கிச்சென்றனன். அன்றியும், இராவணனை நேரிற் காணவும், கண்டு அவனுக்கு வேண்டிய உறுதி கூறவும் நேர்வதற்கு அவன் உளம் மகிழ்ந்தான்.

அப்போது, இராவணன் பெருங்களிப்போடு தன் தேவியருடனும் பெருங் குழுவினருடனும் சிங்காதனத்தில் ஒலக்கமாக வீற்றிருந்த நிலை சிறப்பிக்கப்படுகின்றது. இவ்வருணனைகளுள் அவன் முகங்கள் பத்தும் வெவ்வேறு குறிப்புக்களையும் செயல்களையும் காட்டிநின்ற நிலைமைகளைக் கம்பர்பெருமான் மிக அழகாகச் சித்திரிக்கின்றார். இராவணனது அப்பேரோலக்கத்துக்கு அனுமனை அழைத்துச்சென்றதும் அவனைக் கண்ட அரக்கர்கோமான் அடைந்த சீற்றத்துக்கு அளவில்லை. அவ்வாறே கோபம்

பெருகி அவன்மேற் பாய்ந்து கொல்ல எண்ணினன் அனுமனும். ஆயினும் அதனைத் தன் மதிவலியால் அடக்கிக்கொண்டு, இராவணன் முன்னிலையில் நின்ற அவனை நோக்கி அரக்கன், அவனைப்பற்றியும் அவன் வந்த காரியத்தைப் பற்றியும், இலங்கையோடு அரக்கர்களை அழித்ததுபற்றியும் கடுஞ்சினத்துடன் உசாவலானன். தான் இராமபிரான் தூதனுக வந்ததையும் தீயோரை அழித்து நல்லோரைக் காக்க வந்த அவதார மூர்த்தியே அப்பெருமானென்பதையும், இராவணன் ஆற்றலையுங்கடந்த பெருவீரனுன வாலியைக் கொன்று அவனது அரசினை அவன் இளவலுக்கு அம்மூர்த்தி அளித்த செய்தியையும் நீதியுரைகள் பலவற்றுடன் கூறி நின்றனன் அனுமன். இவற்றைக் கேட்டுப் பரிகசித்து, இராவணன், 'தூதனுய் வந்த நீ எனது பூஞ்சோலையையும் அரக்கர்களையும் அழித்த காரணம் என்னை?' என்று உசாவ, 'உன்னை எனக்குக் காட்டுவார் எவருமே இல்லாமையால் உன் அசோகவனத்தை முதலில் அழித்து, அதனுல் என் வரவை உணர்த்த விரும்பினேன்; ஆனுல் அரக்கர்கள் நந்தவனத்தை அழித்த காரணத்தை வினவாமலே, ஆயுத பலத்துடன் என்னைத் தாக்கிக் கொல்லவந்தனர். அதனுல் நான் போர் புரிந்தே அவர்களைக் கொல்ல நேர்ந்தது' என்றுன் மாருதி. இவ்வாறு அஞ்சாமலும் அலட்சியமாகவும் விடை கூறியதும், அனுமனை உடனே கொன்றுவிடும்படி ஆணையிட்டனன் இராவணன். கொலையாளிகளும் வாளுடன் நெருங்கிவிட்டனர். அவர்களை இராவணன் இளவலான விபீஷணன் தடுத்து - "மாதர்களைக் கொலைபுரிந்தவர்கள் உண்டேனும், வந்த தூதரைக் கொன்றவர்கள் உலகில் இல்லை", என்பதற்குற்ற காரணங்களையும் நீதிகளையும் தன் தமையனுக்கு எடுத்துரைத்தான். அதனுல் சிற்றம் தணிந்த இராவணன், வானரத்திற்கு முக்கிய அங்கமான வாலைக் கொளுத்தி அவனை நகர எல்லையில் விட்டுவரும்படி ஆணையிட்டான். உடனே இந்திரசித்து பிரமன் படையால் தான் அனுமனைப் பிணித்திருந்தமையின், அப்பிணிப்பை நீக்கும் மந்திரத்தைப் பிரயோகஞ் செய்து அனுமன் கட்டை அவிழ்த்துவிட்டான். உண்மையில் அக்கட்டு முன்னமே பிரமனருளால் நீங்கிய செய்தியை அவன் அறிந்திலன். இதன் பின்பு இந்திரசித்தின் ஆணைப்படி, நாடு நகர்களில் உள்ள கயிறுகளையெல்லாம் திரட்டிக் கொணர்ந்து அரக்கர்கள் அனுமனை இறுகக் கட்டியபின், அவன் வாலில் கிழிகளைச் சுற்றி நெய்யிட்டுத் தீக்கொளுவினர். துட்டக் குரங்கு, தீயிட்டு எரிவதைப் பார்க்கத் திரண்டனர் அரக்கர்கள். வாலில் தீப் பிழம்புடனும் பிணிப்புடனும் தெரு வழியே அனுமன் இழுத்துச் செல்லப்படுவதை, அரக்கியர் சிலர் சென்று சீதாதேவிக்குத் தெரிவித்தனர். அவள் அதுகேட்டுப் பதைபதைத்து அக்கினிதேவனைத் தொழுதவண்ணம் 'கருணைமூர்த்தியான என் நாயகனுக்குத் துணையாகிய அனுமனை, நான் கற்பினில் தூயேன் என்னில், பகவானே! சுடாதொழிக' என்று பிரார்த்தித்தாள். அக்கினிதேவனும் அவள் வேண்டியபடியே அனுமனது வாலின் தீக் குளிரும்படிசெய்துதவினுன். அக் குளிர்ச்சிநிலை, பிராட்டியின்

அருளால் தனக்கு விளைந்ததென்பதை ஊகித்துணர்ந்து களித்த னன் அனுமன். இவ்வாறு தீயிடப்பட்ட வாலுடனே தெரு நெடுகச் சென்று இலங்கைநகர் முழுமையும் அவன் இனிது பார்த்துக் கொண் டான். பின்பு தன் வாலைப் பெரிதாக நீட்டி இலங்கைநகருட் செலுத்தி யும், தானும் வீடுகள்தோறும் தாவித்தாவிச் சென்றும், யுகாந்த காலத் தில் அக்கினிதேவன் எல்லாவற்றையுமே தகித்து அழிப்பதுபோல அம் மாநகர முழுமையுமே எரிக்கலாயினன் அனுமன் என்பது, கம்பர் பெரு மான் கூறிய கதாபாகம்.

இனி, வான்மீகத்திற் கண்ட வரலாறுகளில் மேற்கூறிய கம்பர் கதைக் கூறுகளுடன் வேறுபட்ட செய்திகள் பின்வருமாறு :—

இந்திரசித்தின் பிரமாத்திரப் பிரயோகத்தால் அனுமன், பிரமதேவன் ஆணைப்படி தான் கணப்பொழுது அடங்கி மரியாதைசெய்யவேண்டி யிருப்பதை உணர்ந்தான். இவ்வாறு அவனது ஒடுங்கிய நிலையைக்கண்ட அரக்கர்கள் பெரிதும் மகிழ்ந்து ஆரவாரித்து, உறுதியான நார் களாலும் மரப்பட்டைக் கயிறுகளாலும் அவனைக் கட்டி வருத்தலானார்கள். கயிறுகளால் கட்டப்பட்டதனால். பிரமாத்திரப் பிணிப்பு அனுமனை உடனே விட்டு விலகியது. அந்தப் பிரமன்படை மற்றொரு பிணிப்பை ஏற்காததே அவ்வாறு விட்டுவிட்டதன் காரணமாகும். இவ்வுண்மையை அறியாமல் அரக்கர்கள் கயிறுகள்கொண்டு கட்டியிருப்பதை அறிந்த இந்திரசித்து, மனக்கலக்கம் பெரிதுங்கொண்டவனாகி, “தெய்வப்படையின் தன்மையை அறியாமல் அரக்கர்கள் என் செயல்முழுதையும் பாழாக்கி விட்டனரே. வேறு அஸ்திரங்களால் அனுமனை வெல்லவோ கொல் லவோ, இனி முடியாதே ; என் செய்வது ? இச்செயலால் எல்லாருமே பிராணபத்தை அடைந்தவர்கள் ஆனோம்” என்று வேதனைப்பட்டான். ஆனால், அனுமனோ, அரக்கர்களின் கயிற்றுப்பிணிப்பால் தான் விடுபட்ட தைக் காட்டிக்கொள்ளாமலே, அவர்கள் விளைக்கும் உபத்திரவத்துக்கும் இணங்கியவனாய் இழுத்துச்செல்லப்பட்டனன். இந்திரசித்து உண்மை யுணர்ந்தவனாயினும் இராவணன் ஆணைப்படி, அவன் முன்னிலையில் அனுமனைக் கொண்டுவந்துநிறுத்தினன் என்பர், வால்மீகி முனிவர். கம்ப நாடரோ பிரமாத்திரம் நாகவடிவினதாய் அனுமன் தோள்களைப் பிணித்துக்கொண்டதென்றும், பிரமதேவனது ஆணையால் அவன் சில நாழிகைவரை அக்கட்டுக்கு உட்படவேண்டியதாயிற்று என்றும் அதனை அறியாத பல்லாயிரக்கணக்கான அரக்கர்கள் அந்த நாகபாசத்தைப் பிடித்தவண்ணமே அனுமனை இழுத்துச்சென்றனர் என்றும் கூறினர். இக்கதாபாகம் முற்கூறிய வான்மீகத்தோடு வேறுபட்டிருத்தல் காணலாம்

இனி, இராவணனது ஓலக்கத்தில் நிறுத்தப்பட்ட அனுமனை, அரக்கர்கோமானது ஆணைப்படி பிரகத்தன் என்ற அமைச்சர் தலை வனே, அவன் யாவன் என்பதனையும் வந்த காரியத்தைப் பற்றியும்

வினவினன் என்பர் வான்மீகர். கம்பரோ, இராவணனே நேரில் உசாவினன் என்கின்ருர். இவ்வாறு வினவியதற்கு அனுமன் கூறிய விடைகள் உண்மைகளும் உறுதிகளும் உடையன என்பதை வான் மீகத்தால் தெளியலாம். 'நீ கூறியபடி நான் எந்த தேவனுகவோ தேவ தூதனுகவோ வந்தவனல்லன்' மானிட வுருத்தாங்கியுள்ள இராமதூதனே நான்; பிரமதேவன் அனுக்கிரகத்தால் எந்த அஸ்திர சஸ்திரங்களும் என்னை ஊறுபடுத்தக் கூடியனவல்ல. பிரம்மாஸ்திரத்திற்கு நான் அடங்கியிருந்தது உன்னைக் காணவேண்டியேயன்றி வேறில்லை : என்பன போன்றவை. இவ்வாறு, கம்பநாடர் கூறினரில்லை. தன் ஆற்றலை அறியாத பகைவர்முன்பு இவ்வாறு அனுமன்கூறியது தற்புகழ்ச்சியாகாதென்றே கொள்ளற்பாலது.

முடிவில், தன்னைக் கட்டி இழுத்துச் சென்ற பல்லாயிரவரான அரக்கர்களுடன் அனுமன் பேருருவினனுய் ஆகாயத்தில் எழும்பி, கட்டிய கயிறுகள் அற்றுப்போம்படி செய்து உதிர்க்கவே, அதனிற் ெருங்கிய யாவரும் தரையில் விழுந்து மாண்டனர். பின் தன் வாலை இலங்கை நகருள் செல்லும்படி நீட்டியும் மாளிகைதோறும் தாவிச் சென்றும் வாலிற்றீயால் அந்நகரை அழிக்கலாயினன் என்பர் கம்பர்.

வான்மீகிமுனிவரோ, தீயிடப்பட்ட வாலுடன் தெருவழியே அழைத்துச் செல்லப்பட்டபோது அனுமன் இலங்கை நகர் முழுமையும் நன்கறிந்தவரானர். அவ்வாறு அறிந்த பின் முடிவாக ஆகாசத்தில் கிளம்பிக் கர்ஜனை செய்தார். பின் நகரத் தோரண வாயிற் கோபுரத்தின் மேனின்று, தன் கட்டுக்களெல்லாம் நெகிழ்ந்துவிழச் செய்துவிட்டு அங்கிருந்த இருப்பு உழல்தடியொன்றை எடுத்துக்கொண்டு காவலர்களை எல்லாம் கொன்ருர். அதன்பின் வாலின் தீச்சுவாலையுடன் இலங்கைக்குள் புகுந்து மேலே நிகழ்த்தும் செயல்களை ஆலோசிக்கலானர் - என்பர்.

# 12. பிணிவீட்டு படலம்

## பிணிக்கப்பட்ட அனுமனைக்கண்ட அரக்கர்களின் நிலைமை 1043—1047

**1043.** எய்யுமி னீருமி னெறிமின் போழுமின்
கொய்யுமின் குடரினைக் கூறுகூறுகள்
செய்யுமின் மண்ணிடைத் தேய்மின் தின்னுமின்
உய்யுமே லில்லைநம் முயிரென் றோடுவார்.

*"எய்யுமின், ஈருமின், எறிமின், போழுமின்,
கொய்யுமின் குடரினைக் கூறுகூறுகள்
செய்யுமின், மண்ணிடைத் தேய்மின் தின்னுமின்,
உய்யுமேல் இல்லை நம் உயிர்" என்று ஓடுவார்.*

*ஈர்தல் - கிழித்தல். போழ்தல் - பிளத்தல். குடரினைக் கொய்யுமின் - குடரைப் பிடுங்குங்கள். உய்யுமேல் - (இக்குரங்கு) தப்பிப் பிழைத்தால். (1)*

**1044.** மைத்தடங் கண்ணியர் மைந்தர் யாவரும்
பைத்தலை யரவெனக் கனன்று பைதலை
இத்தனை பொழுதுகொண் டிருப்ப தோவென
மொய்த்தனர் கொலைசெய முயல்கின் றார்சிலர்.

*மைத் தடம் கண்ணியர், மைந்தர், யாவரும்
பைத் தலை அரவு எனக் கனன்று, 'பைதலை
இத்தனை பொழுது கொண்டு இருப்பதோ?' என
மொய்த்தனர், கொலை செய முயல்கின்றார் சிலர்.*

*மைத்தடங் கண்ணியர் - மையிட்ட பெரிய கண்களையுடைய மகளிர். மைந்தர் - ஆடவர். பைத்தலை அரவென - படமுள்ள தலையையுடைய நாகம்போல. பைதலை - (அந்தக் குரங்குப்) பயலை; துஷ்டக் குரங்கை என்றபடி; பையன், பயல் என்பன இக்கால வழக்கு. கொண்டிருப்பதோ - உயிருடன் வைத்துக்கொண்டிருக்கலாமோ. (2)*

**1045.** நச்சடை படைகளா னலியு மீட்டதோ
வச்சிர வுடன்மறி கடலின் வாய்மடுத்
துச்சியி னழுத்துமி னுருத்த தன்றெனின்
கிச்சிடை யிடுமெனக் கிளக்கின் றார்சிலர்.

'நச்சு அடை படைகளால் நலியும் ஈட்டதோ?
வச்சிர உடல், மறி கடலின்வாய் மடுத்து,
உச்சியின் அழுத்துமின் உருத்து; அது அன்றெனின்
கிச்சு இடை இடும்' எனக் கிளக்கின்றார் சிலர்.

நஞ்சு தடவிய ஆயுதங்களைக்கொண்டு வருத்திக் கொல்லக்கூடி யதோ இவனது வச்சிர உடல்? என்பது முன்னிரண்டடிகளின் பொருள். உடல் ஈட்டதோ எனவும் உருத்து அழுத்துமின் எனவும் இயையும். அது அன்றெனின் கிச்சிடை இடுமின் - அங்ஙனம் செய்யாதுபோனால் நெருப் பிடையே இட்டுக் கொளுத்துங்கள் எ - று. கிச்சு - நெருப்பு ; கன்னடச் சொல். (3)

**1046.** எந்தையை யெம்பியை யெம்மு னோர்களைத்
தந்தனை போகெனத் தடுக்கின் றார்பலர்
அந்தரத் தமரர்த மாணை யாலிவன்
வந்ததென் றுயிர்கொள மறுகினார் பலர்.

'எந்தையை எம்பியை எம் முன்னோர்களைத்
தந்தனை போக' எனத் தடுக்கின்றார் பலர்;
'அந்தரத்து அமரர்தம் ஆணையால் இவன்
வந்தது' என்று உயிர்கொள மறுகினார் பலர்.

அரக்கர் பலருடைய தந்தையர் தம்பியர் தமையன்மார்களை முன் நிகழ்ந்த போர்களில் அனுமன் கொன்றனனாதலின் இறந்த அவர்களைத் திருப்பித் தந்து போம்படி அவர் சுற்றத்தார் பலரும் கூறினர் என்க. முன் னோர்கள் - பாட்டன் முதலியோர் எனினுமாம். 'விண்ணுலகத்து அமரர் ஆணையால் இவன் வந்தவனே; ஆதலால் நம்மால் உயிர்கொள்ளப் படான். இவனைக் கொல்வது எங்ஙனமோ' என்று மனம் கலங்கினர் பலர் என்க. அமரர் - மரணமில்லாதவர். (4)

**1047.** ஓங்கலம் பெருவலி யுயிரி னன்பரை
நீங்கல மின்றொடு நீங்கி னாமினி
ஏங்கல மிவன்சிர மிருத்த லாற்றிரு
வாங்கல மென்றழு மாத ரார்பலர்.

'ஓங்கல் அம் பெருவலி உயிரின் அன்பரை
நீங்கலம், இன்றொடு நீங்கினும்; இனி
ஏங்கலம், இவன் சிரம் இருத்தலால், திரு
வாங்கலம்' என்று அழும் மாதரார் பலர்.

ஓங்கல் – மலை ; யானை எனினுமாம். உயிரின் அன்பர் - உயிரனைய கணவர். 'அவ்வன்பரை இதுவரை பிரியாதிருந்தோம் ; இன்றொடு அது நீங்கினோம். அதற்காக மிகுதியும் ஏங்கவில்லை. இக்குரங்கின் தலை உள்ள மட்டும், நாங்கள் எங்கள் திருமங்கலியத்தை வாங்கப்போவதில்லை' என்று அழுகின்ற மாதர்கள் பலர் ; அரக்கியராதலால் குரங்கினைக் கொன்று பழிக்குப் பழிவாங்கியல்லது எங்கள் தாலிகளை அறுக்கமாட்டோம் என்றார். இதனால் தம் துக்கநிலையினும் அரக்கியர் வன்கண்மையே மிக்கவர் என்று குறித்தவாறு. (5)

### அரக்கர்களின் ஆரவாரம்

**1048.** கொண்டன ரெதிர்செலுங் கொற்ற மாநகர்
அண்டமுற் றதுநெடி தார்க்கு மார்ப்பது
கண்டமுற் றுளவருங் கணவர்க் கேங்கிய
குண்டல முகத்தியர்க் குவகை கூரவே.

கொண்டனர் எதிர்செலும் கொற்ற மாநகர்,
அண்டம் உற்றது, நெடிது ஆர்க்கும் ஆர்ப்பு அது ;
கண்டம் உற்றுள அரும் கணவர்க்கு ஏங்கிய
குண்டல முகத்தியர்க்கு, உவகை கூரவே.

கொண்டனர் எதிர் செலும் கொற்றமாநகர் – (நாகபாசத்தை இட்டு இழுத்துக்) கொண்டவர்களின் எதிரே செல்லும் வெற்றியையுடைய இலங்கைமாநகர். இலங்கை மக்கள் எல்லாருமே அனுமனைப் பார்க்க வந்தவராதலின் 'எதிர் செலும்.........மாநகர்' என்றார். மாநகர் – மாநகர் மக்கள்; கண்டம் உற்றுள - துண்டங்களாக்கப்பட்டு உயிரிழந்த. இறந்த அக்கணவர்பொருட்டு ஏங்கிய அவர் மனைவியர், பிணியுண்ட அனுமன் இழுக்கப்பட்டுச் செல்லுதலால் தம் துக்கம் நீங்கி மகிழ்ச்சி மிக்கனர் எ – று. குண்டல முகத்தியர் - குண்டலம் என்ற காதணியினால் விளங்கு முகமுடைய அரக்கர் மனைவியர். அவர்கள் உவகை பொங்கும்படி இலங்கை யார்ப்பு அண்டமுற்றது என இயையும். (6)

### அனுமன் இலங்கையின் அழிவுபாடுகளைக் கண்டுகொண்டே செல்லுதல்

**1049.** வடியுடைக் கனற்படை வயவர் மால்கரி
கொடியுடைத் தேர்பரி கொண்டு வீசலின்
இடிபடச் சிதைந்தமால் வரையி னில்லெலாம்
பொடிபடக் கிடந்தன கண்டு போயினான்.

*வடி உடைக் கனல் படை வயவர், மால்கரி,*
*கொடி உடைத் தேர், பரி கொண்டு வீசலின்,*
*இடிபடச் சிதைந்த மால் வரையின், இல் எலாம்*
*பொடிபடக் கிடந்தன, கண்டு போயினான்.*

*வடி உடை–கூர்மையுடைய. வயவர் - காலாள் வீரர். நாற்படைகளை யும் கையாற்பற்றி வீசினமையால் அரக்கர்மாளிகைகள் எல்லாம் சிதைந்து தூளாகிக்கிடந்ததைக் கண்டு (உண்மகிழ்ந்து வீதிவழியே) அனுமன் செல்லலாயினன் என்க. மால்வரையின் – பெரிய மலை போன்று.* (7)

### அனுமனைக்கண்ட அரக்கர்கள் நிலை 1050—1053.

**1050.** முயிறலைத் தெழுமுது மரத்தின் மொய்ம்புதோள்
கயிறலைப் புண்டது கண்டு காண்கிலா
தெயிறலைத் தெழுமித ழரக்க ரேழையர்
வயிறலைத் திரியலின் மயங்கி னார்பலர்.

*முயிறு அலைத்து எழும் முது மரத்தின், மொய்ம்பு தோள்,*
*கயிறு அலைப்புண்டது கண்டு, காண்கிலாது,*
*எயிறு அலைத்து எழும் இதழ் அரக்கர் ஏழையர்*
*வயிறு அலைத்து இரியலின் மயங்கினார் பலர்.*

*முயிறு அலைத்து எழும் முது மரத்தின் – எறும்பினங்களால் சூழப் பெற்று வளர்ந்த முதிய மரத்தைப்போல. அனுமனது வலிய தோள்கள் நாகபாசத்தாற் கட்டப்பட்டிருப்பதை அறியாதவராய், அரக்கியர்கள் வயிற் றில் அடித்துக்கொண்டு ஓடுதலின், மேலும் குரங்கால் விளைந்த ஆபத்து என்னையோ ? என்று மயங்கின மக்கள் பலர் என்க.*

*முயிறு – முசிறு என வழங்கும் கொடிய எறும்புவகை. ‘இடம் நல்லது, முசிறு பொல்லாதது’ என்பது முதுமொழி. திண்டியவரைக்*

கடிப்பதன்றிக் கேடு விளையாத முயிற்றினம் சூழ்ந்த முதுமரம், தோற்றத்தாலும் செய்கையாலும், பாசத்தாற் கட்டுண்ட அனுமனது தோள் கட்டு உவமை. கண்டு காண்கிலாது - (கேள்வியால்) அறிந்தும் (அச்சத்தால்) அறியாதவராய்; "காணுதாற் காட்டுவான் தான்காணுன் காணுதான், கண்டானுந் தான்கண்ட வாறு" (திருக்குறள் - 849) என்புழிப்போல, காணுதல் அறிதற்பொருளது. அரக்கமாதர் நிலைகுலைக்தோடியதால் சிந்தை கலங்கிய மக்கள் பலர் என்க. வயிறு அலைத்து இரியலின் - வயிற்றில் அடித்துக்கொண்டு ஓடுதலால். (8)

**1051.** ஆர்ப்புற வஞ்சின ரடங்கி ஞர்பலர்
போர்ப்புறச் செயலினைப் புகல்கின் ருர்பலர்
பார்ப்புறப் பார்ப்புறப் பயத்தி னுற்பதைத்
தூர்ப்புறத் திரியலுற் ருேடுவார் பலர்.

*ஆர்ப்பு உற அஞ்சினர், அடங்கினர் பலர்,*
*போர்ப் புறச்செயலினைப் புகல்கின்ருர் பலர்,*
*பார்ப்புறப் பார்ப்புறப் பயத்தினுல் பதைத்து,*
*ஊர்ப்புறத்து இரியலுற்று ஓடுவார் பலர்.*

ஆர்ப்பு - போர், வெற்றிகளின் ஆரவாரம். "சேனை வீரர் நின்ருர்த்திடும் ஆர்ப்பினில்" என்பர் (கலிங்க, 149); போர்ப் புறச் செயலினை - போரில் நிகழ்ந்த புறத்துறைச்செயல்களை; அச்செயல்களாவன:— அதிரப்பொருதல் ஆகிய தும்பைத்துறை போன்றவை. போரிடத்து எனினும் ஆம். பார்ப்புற - பார்த்தல் உற. அடுக்கு, தொறுப்பொருளது. (9)

**1052.** காந்துறு கதழெயிற் றரவின் கட்டொரு
பூந்துணர் சேர்த்தெனப் பொலியும் வாண்முகம்
தேர்ந்துறு பொருள்பெற வெண்ணிச் செய்யுமின்
வேந்துறல் பழுதென விளம்பு வார்சிலா.

*'காந்து உறு கதழ் எயிற்று அரவின் கட்டு, ஒரு*
*பூந்துணர் சேர்த்தெனப் பொலியும் வாள் முகம்;*
*தேர்ந்து உறு பொருள்பெற எண்ணிச் செய்யுமின்,*
*வேந்து உறல் பழுது' என விளம்புவார் சிலர்.*

காந்துறு அரவு, எயிற்று அரவு எனத் தனித்தனி கூட்டுக. காந்துதல்-சினத்தல். கதழ்தல் – கொடுமையதாதல். அரவின் கட்டு – நாகபாசத்தின் பந்தம். அனுமனது ஒளிபொருந்திய முகம், கட்டிய பாசத்தால் வருந்தாமல் ஒரு பூமாலை சேர்ந்ததுபோலப் பொலிகின்றது என்க. வேந்து உறல்–அரக்கர்கோமானிடம் இக்குரங்குடன் செல்லுதல் ; அது குற்றமாகும் எ – று. (10)

1053. ஒளிவரு நாகத்துக் கொல்கி யன்றுதன்
எளிவர வின்றித னெண்ணம் வேறெனுக்
களிவரு சிந்தையாற் காண்டி நங்களைச்
சுளிகிலை யாமெனத் தொழுகின் றூர்சிலர்.

'ஒளி வரும் நாகத்துக்கு ஒல்கி அன்று, தன்
எளிவரவு, இன்று இதன் எண்ணம் வேறு' எனுக்
'களிவரு சிந்தையால் காண்டி! நங்களைச்
சுளிகிலையாம்' எனத் தொழுகின்றுர் சிலர்.

நாகம் – நாகபாசம். எளிவரவு-எளிமைத் தன்மை. ஒல்கி – தளர்ந்ததனுல். இன்று இக்குரங்கு மேற்கொண்டுள்ள எளிமைத் தன்மை, ஒளிபொருந்திய நாகபாசத்துக்குத் தளர்ச்சியுற்றதனுல் அன்று எ–று. களிவரு சிந்தையால் காண்டி – மகிழ்ச்சியுற்ற மனத்தோடு பார்ப்பாயாக. சுளிகிலை – கோபியாதே. (11)

### நாகபாசத்தைப்பற்றி இழுத்துச்செல்லும் கிங்கரர்களின் வலிமையும் தொகையும்

1054. பைங்கழ லனுமனைப் பிணித்த பாந்தளைக்
கிங்கர ரொருபுடை கிளர்ந்து பற்றினுர்
ஐம்பதி னுயிர ரளவி லாற்றலர்
மொய்ம்பினி னெறுழ்வலிக் கருளன் மும்மையார்.

பைங்கழல் அனுமனைப் பிணித்த பாந்தளைக்
கிங்கரர் ஒருபுடை கிளர்ந்து பற்றினுர்;
ஐம்பதினுயிரர், அளவு இல் ஆற்றலர்,
மொய்ம்பினின் எறுழ்வலிக் கருளன்மும்மையார்.

பாந்தள் – நாகபாசம். கிங்கரர் – ஏவலாளர். மொய்ம்பினில் எறுழ் வலிக் கருளன் மும்மையார்–புயவன்மையில் பெருந்திறல் பெற்ற கருடனிலும் மூன்று மடங்கு அதிகமான வலிமையுடையவர்.

கிங்கரர் ஒரு புடை கிளர்ந்து பற்றினர் என்றது, நாகபாசத்து வாலின் நுனிப்பக்கமே அவரால் தைரியமாகப் பற்றப்பட்ட தென்பதும், அதன் முன்பக்கம், அனுமனை அணுக வேண்டுதலால் அச்சங் காரண மாகப் பற்றப்பட்டதில்லை என்பதும் பெறப்படும். பின்னிரண்டடிகள் இன வேதுகையாக வந்தன. (12)

### அரக்கர்கள் கூற்று

**1055.** திண்டிற லரக்கர்தஞ் செருக்குச் சிந்துவான்
தண்டலி றன்னுருக் கரந்த தன்மையான்
மண்டமர் தொடங்கினன் வான ரத்துருக்
கொண்டன னந்தகன் கொல்லென் றுரர்பலர்.

'திண் திறல் அரக்கர்தம் செருக்கு சிந்துவான்,
தண்டல் இல் தன் உருக் கரந்த தன்மையான்,
மண்டு அமர் தொடங்கினன், வானரத்து உருக்
கொண்டனன் அந்தகன் கொல்' என்றுரர் பலர்.

'அந்தகன் அரக்கர் செருக்குச் சிந்துவான் தன்னுருக் கரந்து வான ரத்து உருக்கொண்டு அமர்தொடங்கினன்கொல்' என்றுரர் பலர் என்க. திண் திறல் – பலமும் பராக்கிரமமு முடைய. சிந்துவான் - ஒடுக்கவேண்டி. தண்டல் – கெடுதல். 'தண்டாக்காதல்' (புறப். வெண். 9-45). மண்டு அமர் – நெருங்கிய போர். அந்தகன் - (முன்பு இராவணனது திக்கு விசயத்தில் தோல்வியுற்றோடிய) யமன். (13)

### அரக்கரும் அரக்கியரும் நெருங்கிநின்று காணுதல்

**1056.** அரமியத் தலந்தொறு மம்பொன் மாளிகைத்
தரமுறு நிலைதொறுஞ் சாள ரந்தொறும்
முரசெறி கடைதொறு மிரைத்து மொய்த்தனர்
நிரைவளை மகளிரு நிருத மைந்தரும்.

அரமியத்தலம் தொறும், அம்பொன் மாளிகைத்
தாம் உறு நிலைதொறும், சாளரம் தொறும்,
முரசு எறி கடைதொறும், இரைத்து மொய்த்தனர்;
நிரைவளை மகளிரும் நிருதமைந்தரும்,

அரக்கர் மகளிரும் ஆடவரும், அரமியம் மாளிகையின் நிலைகள் சாளரம் கடைவாயில் ஆகிய இடங்களில் எல்லாம் ஆரவாரித்து நெருங் கினர் எ - று.

அரமியம் – நிலாமுற்றம். சாளரம், ஜன்னல் என்பது இக் கால வழக்கு. (தலைவரது மாளிகையின்) கடைவாயிலில் முரசு முழக்கம் நிகழ்தலின் முரசெறி கடைதொறும் எனப்பட்டது. நிரைவளை – முன்கையிற் செறிந்த வளையல்கள். (14)

### அனுமனைக் கண்டு அரக்கர் சிலர் எண்ணியது

**1057.** கயிலையி னொருதனிக் கணிச்சி வானவன்
மயிலியற் சீதைதன் கற்பின் மாட்சியான்
எயிலுடைத் திருநகர் சிதைப்ப வெய்தினன்
அயிலெயிற் றொருகுரங் காயென் பார்சிலர்.

*'கயிலையின் ஒரு தனிக் கணிச்சி வானவன்,*
*மயில் இயல் சீதைதன் கற்பின் மாட்சியான்,*
*எயில் உடைத் திருநகர் சிதைப்ப எய்தினன்,*
*அயில் எயிற்று ஒரு குரங்காய்;' என்பார் சிலர்.*

கணிச்சி வானவன், ஒரு குரங்காகித் திருநகர் சிதைப்ப எய்தினன் என்பார் சிலர் எ – று. கணிச்சி வானவன் – மழுவாயுதம் தரித்த சிவபிரான். மயில் இயல் - மயில்போலும் சாயல். இது உலகியற் குரங்கன்றித் தெய்வக்குரங்கே என்று சங்கித்தபடி. (15)

### தேவமாதர் பலர் அக்காட்சியைக் காண வந்து கூடுதல்

**1058.** அரம்பையர் விஞ்சைநாட் டளக வல்லியர்
நரம்பினு மினியசொ லுக நாடியர்
கரும்பியல் சித்திய ரியக்கர் கன்னியர்
வரம்பறு சும்மையர் தலைம யங்கினர்.

*அரம்பையர், விஞ்சைநாட்டு அளக வல்லியர்,*
*நரம்பினும் இனிய சொல் நாக நாடியர்,*
*கரும்பு இயல் சித்தியர், இயக்கர் கன்னியர்,*
*வரம்பு அறு சும்மையர், தலைமயங்கினர்.*

அளகவல்லி – கூந்தலுள்ள கொடி; இல்பொருள். அக் கொடிபோலும் மகளிர் என்க. நரம்பு - யாழ் நரம்பின் இசை. நாக நாடியர் – நாகலோக கன்னியர். நாடியர் - நாட்டுமகளிர். 'அபயற்கிடு திறையாம் மலை நாடியர் துளு நாடியர்' (கலிங். 41) எனக் காண்க. கரும்பு இயல் சித்தியர் –

கரும்பின் இனிமை கொண்ட சித்தரின் மகளிர். வரம்பு அறு சும்மையர் — எண்ணற்ற ஏனை நாட்டினர். சும்மை - நாடு ; தொகுதியுமாம். தலைமயங்கினர் - கலந்து கூடினர். (16)

## அரக்கர் பலர் கருத்து

**1059.** நீரிடைக் கண்டுயி னெடிய நேமியும்
தாருடைத் தனிமல ருலகின் றாதையும்
ஓருடற் கொண்டுதம் முருவ மாற்றினர்
பாரிடைப் புகுந்தனர் பகைத்தென் பார்பலர்.

'நீர் இடைக் கண் துயில் நெடிய நேமியும்,
தார் உடைத் தனி மலர் உலகின் தாதையும்,
ஓர் உடல் கொண்டு தம் உருவம் மாற்றினர்,
பார்இடைப் புகுந்தனர் பகைத்து ;' என்பார் பலர்.

நீர் - திருப்பாற்கடல்; பிரளயவெள்ளம் எனலுமாம். நேமி - சக்கரப்படையையுடைய திருமால்; ஆகுபெயர். "நேமியோ குலிசியோ நெடுங்கணிச்சியோ" (பிணிவீட் - 70) என்பர் பின்னரும். தாருடைத் தனிமலர் - தனிமலர்த் தார் உடை என மாற்றுக. தாமரை மலர் மாலைகளையுடைய பிரமன் எ - று, அந்தணர்தெய்வ மாதலின் தாமரை மலர் கூறப்பட்டது. தாமரை மலரில் உறைபவனாகிய பிரமன் எனினுமாம். ஈண்டு, தார் கொத்து. உலகின்தாதை - பிரமன். அரக்கருடன் பகைமை பூண்டு திருமாலும் பிரமனும் ஒருடலைப் பெற்று வந்தனர் என்க. (17)

## அரக்கரல்லா ஏனையோர் கண்கலங்குதல்

**1060.** அரக்கரு மரக்கியர் குழாமு மல்லவர்
கரக்கிலர் நெடுமழைக் கண்ணி னீரது
விரைக்குழற் சீதைதன் மெலிவு நோக்கியோ
இரக்கமோ வறத்தின தெண்மை யேகொலோ..

அரக்கரும் அரக்கியர் குழாமும் அல்லவர்,
கரக்கிலர் நெடு மழைக் கண்ணின் நீர் அது,
விரைக் குழல் சீதைதன் மெலிவு நோக்கியோ ?
இரக்கமோ ? அறத்தினது எண்மையே கொலோ ?

அல்லவர் - அரம்பை முதலிய தேவமகளிர். இவர்கள் தங்கள் கண்களினின்று மழைபோலப் பெருகும் நீரை மறைக்க முடியாதவராயினர்; இதற்குக் காரணம் சீதாதேவியின் மனமெலிவோ, அனுமன் பிணியுண்டதனுல் உண்டான இரக்கமோ தருமதேவதையின் செயலற்ற எளிமைத் தன்மையோ (அறியேம்) எ - று.

போரில் இறந்த தம் கணவர்பொருட்டுக் கண்ணீர்விட்டு அழுத அரக்கியர், நாகபாசத்தால் அனுமன் பிணிப்புண்டதற்கு மகிழ்ந்து அக் கண்ணீர் மாறினராயினும், அவரை யொத்துப் போலியாகக் கண்ணீர் வடித்த தெய்வமகளிர்க்கு அனுமன் பிணிப்பால் உண்மையில் உண்டான அழுகைநீர் மாறவில்லை என்பது குறிப்பு. தேவகணத்தாரும் அரக்கியர் துக்கத்துக்குப் போலிக்கண்ணீர் வடித்தவர் என்பது, "காவன்மாத் தேவரும் அழுதனர் களிக்குஞ்சிந்தையார்" (அக்ககுமாரன்வதைப்படலம் 150) என்றதனுலும் அறியத்தக்கது. (18)

## அனுமன் கருத்து 1061—1066.

**1061.** ஆண்டொழி லனுமனு மவரொ டேகினன்
மீண்டிலன் வேறலும் விரும்ப லுற்றிலன்
ஈண்டிது வேதொடர்ந் திலங்கை வேந்தனைக்
காண்டலே நலனெனக் கருத்தி னெண்ணினன்.

ஆண் தொழில் அனுமனும் அவரொடு ஏகினன்,
மீண்டிலன், வேறலும் விரும்பலுற்றிலன்,
'ஈண்டு இதுவே தொடர்ந்து இலங்கை வேந்தனைக்
காண்டலே நலன்' எனக் கருத்தின் எண்ணினன்.

அனுமனும் தொடர்ந்து சென்று இலங்கை வேந்தனைக் காண்டலே நலன் என எண்ணினன்; (அதனல்) மீண்டிலன்; வேறலும் விரும்பலுற்றிலன்; அவரொடேகினன் என்க.

மீண்டிலன் (நாகபாசத்தைத் திமிறிக்கொண்டு) திரும்பினனில்லை. வேறலும் விரும்பலுற்றின் - தன்னைப் பிணித்தவர்களை வெல்லுதலையும் விரும்பினனில்லை; ஈண்டு இதுவே தொடர்ந்து - இப்போது கட்டி அழைத்துச் செல்லும் முறையே தொடர்ந்துசென்று. (19)

**1062.** எந்தைய தருளினு மிராமன் சேவடி
சிந்தைசெய் நலத்தினுஞ் சீதை வானவர்
தந்துள வரத்தினுந் தறுகட் பாசமும்
சிந்துவெ னயர்வுறு சிந்தை சீரிதால்.

எந்தையது அருளினும், இராமன் சேவடி
சிந்தை செய் நலத்தினும், சீதை வானவர்
தந்து உள வரத்தினும், தறுகண் பாசமும்,
சிந்துவென், அயர்வு உறு சிந்தை சீரிது ஆல்.

எந்தை – வாயுதேவன். குழந்தை நிலையில் சூரியனைக் கவரச் சென்ற அனுமன், இந்திரனது வச்சிராயுதத்தால் அடிபட்டு மூர்ச்சித்து விழ, வாயு பகவான்வந்து உதவியதும், அப் பகவானுல் மற்றத் தேவரிடமிருந்து வரங்கள் பெற்றதுமாகிய வரலாற்றினை உட்கொண்டு 'எந்தையது அருளினும்', 'வானவர் தந்துள வரத்தினும்' என்றும், கிழ் உருக்காட்டு படலத்தில் "உலகமேழும் ஏழும் வீவுற்றஞான்றும் இன்றென இருத்தி" (73) என்று பிராட்டி அளித்த வரமுண்டாதலின் 'சீதை தந்துள வரத்தினும்' என்றும் கூறப்பட்டன. 'அயர்வுறு சிந்தை – இப்பிணிப்புக்குச் சோர்வுற்றிருக்கும் கருத்து. சீரிது-சிறப்புடையது. (20)

**1063.** வளையெயிற் றரக்கனை யுற்று மந்திரத்
தளவுறு முதியரு மறிய வாணையால்
விளைவினை விளம்பினுன் மிதிலை நாடியை
இளகின னென்வயி னீத லேயுமால்.

வளை எயிற்று அரக்கனை உற்று, மந்திரத்து
அளவு உறு முதியரும் அறிய, ஆணையால்
விளைவினை விளம்பினல், மிதிலை நாடியை
இளகினன் என்வயின் ஈதல் ஏயும் ஆல்.

அரக்கனை உற்று, மந்திரத்து முதியரும் அறிய விளைவினை விளம்பினுல், மிதிலை நாடியை ஈயும் என்க.

வளையெயிற்றரக்கனை – கோரப்பற்களையுடைய இராவணனை. மந்திரத்து அளவுறு முதியர் – ஆலோசனை சபைக்கு உரியவராக அளந்து குறிப்பிடப்பட்ட முதியவர்களை. ஆணையால் – இராமபிரானது திருவாணைப்படி. விளைவினை – பின் நேரக்கூடிய செயல்களை ; அவையாவன அரக்கர்வதை, இராவணனழிவு முதலியன. மிதிலை நாடியை – மிதிலை நாட்டவளான சீதாதேவியை. இளகினன்-மனம் நெகிழ்ந்து. ஈதல் ஏயும் – சிறைவிடுசெய்து கொடுத்தல் கூடும். (21)

**1064.** அல்லதூஉ மவனுடைத் துணைவ ராயினுர்க்
கெல்லையுந் தெரிவுறு மெண்ணுந் தேறலாம்
வல்லவ னிலைமையு மனமுந் தேறலாம்
சொல்லுக முகமெனுந் தூது சொல்லவே.

அல்லதூஉம் அவனுடைத் துணைவர் ஆயினார்க்கு,
எல்லையும், தெரிவு உறும்; எண்ணும், தேறல் ஆம்;
வல்லவன் நிலைமையும், மனமும், தேறல் ஆம்;
சொல் உக முகம் எனும் தூது சொல்லவே.

துணைவர்-சேனாபதிகள், அரசியற் றலைவர் முதலியோர். துணைவர்க்கு – துணைவர்களுடைய; ஆருவதன்கண் நான்காவது வந்த வேற்றுமை மயக்கம்; யானைக்குக் கோடுகூரிது என்றாற்போல. எல்லை – அளவு. எண் – உட்கருத்து. வல்லவன் – வலியோனான இராவணன். சொல் உகுதல் – சொற்கள் அறியாதே வெளிவருதல். அதனாலும் முகமாகிய தூதுவர் சொல்லுதலாலும் அறியப்படும் என்க. (22)

**1065.** வாலிதன் னிறுதியு மரத்துக் குற்றதும்
கூலவெஞ் சேனையின் குணிப்பி லாமையும்
மேலவன் காதலன் வலியு மெய்ம்மையால்
நீனிறத் திராவண னெஞ்சி னிற்குமால்.

வாலிதன் இறுதியும், மரத்துக்கு உற்றதும்,
கூல வெம் சேனையின் குணிப்பு இலாமையும்,
மேலவன் காதலன் வலியும், மெய்ம்மையால்
நீல் நிறத்து இராவணன் நெஞ்சில், நிற்குமால்.

வாலி இராவணனைக் கீழ்ப்படுத்தி அவனை அலைத்தவனாதலின் அவனையும் அழித்தது இராமனது ஆற்றல் என்பார் 'வாலிதன் இறுதியும்' என்றார். மரம் – மராமரங்கள் ஏழனை. கூலம் - குரங்கு. குணிப்பிலாமை – அளவுபடாமை. மேலவன் காதலன் – மேற்சொன்ன வாலியின் மகனான அங்கதன். இனி மேலவன் – விண்ணவனான சூரியனுடைய, காதலன் – மகன் என்று கொண்டு, சுக்கிரீவன் என்றும் பொருள் கூறுவர். வாலியால் அலைப்புண்ட அச் சுக்கிரீவனது எளிமைநிலை இராவணனாலும் அறியப்பட்ட தாதலால், மேலே கூறிய வாலியின்புதல்வன் என்ற பொருளே சிறக்கும். (23)

**1066.** ஆதலா னரக்கனை யெய்தி யாற்றலும்
நீதியு மனக்கொள நிறுவி நின்றவும்
பாதியின் மேற்செல நூறிப் பைப்பையப்
போதலே கருமமென் றனுமன் போயினான்.

'ஆதலான் அரக்கனை எய்தி, ஆற்றலும்
நீதியும் மனம் கொள நிறுவி, நின்றவும்
பாதியின் மேல் செல நூறி, பைப்பையப்
போதலே கருமம்' என்று அனுமன் போயினான்.

*ஆற்றலும் நீதியும் இராமபிரானுடையன. மனக்கொள நிறுவி - உளந் தெரியும்வகை நிறுவி. (அதன் பின்பும் இசையாது போனால்) எனச் சில சொற்கள் வருவிக்க. பாதியின் மேற்செல - அவன் படையில் பாதிக்கு மேலாகவே. நூறி - அழித்து.* (24)

### இந்திரசித்து அனுமனை இராவணன் மாளிகைக்குக் கொண்டு செல்லுதல்

**1067.** கடவுளர்க் கரசனைக் கடந்த தோன்றலும்
புடைவரும் பெரும்படைப் புணரி போர்த்தெழ
விடைபிணிப் புண்டது போலும் வீரனைக்
குடைகெழு மன்னனிற் கொண்டு போயினான்.

கடவுளர்க்கு அரசனைக் கடந்த தோன்றலும்,
புடைவரும் பெரும் படைப் புணரி போர்த்து எழ,
விடை பிணிப்புண்டது போலும் வீரனைக்
குடைகெழு மன்னன் இல் கொண்டு போயினான்.

*கடவுளர்க்கு அரசனைக் கடந்த தோன்றல் - தேவர்களுக்கு அரசனான இந்திரனை வென்ற இந்திரசித்து. (அவன்), சேனைக்கடல் தன்னைச் சூழ்ந்துவர, இடபம் பிணிக்கப்பட்டதுபோன்ற அனுமனை இராவணன் வசிக்கும் அரண்மனைக்குக் கூட்டிக்கொண்டுசென்றான் என்பது பின் னிரண்டடிகட்குப் பொருள். குடைகெழு - வெண்கொற்றக்குடை விளங் கும். இல் - அரசமாளிகை.* (25)

### அச்செய்தியைத் தூதுவர் சென்று இராவணன்பாற் கூறுதல்

**1068.** தூதுவ ரோடினர் தொழுது தொல்லைநாள்
மாதிரங் கடந்தவற் குறுகி மன்னநின்
காதலன் மரைமலர்க் கடவுள் வாளியால்
ஏதில்வா னரம்பிணிப் புண்ட தாமென்றார்.

தூதுவர் ஓடினர், தொழுது தொல்லைநாள்
மாதிரம் கடந்தவற் குறுகி, "மன்ன! நின்
காதலன், மரைமலர்க் கடவுள் வாளியால்
ஏதில் வானரம் பிணிப்புண்டதாம்" என்றார்.

தூதுவர் ஓடினர், மாதிரங்கடந்தவற் குறுகித் தொழுது, 'மன்ன: நின் காதலன் கடவுள்வாளியால் வானரம் பிணிப்புண்டது' என்றார் என்க.

மாதிரங்கடந்தவன் - திசைகளை வென்றவன்; திக்கு விசயஞ்செய்த இராவணன் எ - று. குறுகித் தொழுது என இயைக்க. காதலன் - புத்திரன்; இந்திரசித்து. மரைமலர்க் கடவுள் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன். அவன் வாளி - பிரமாஸ்திரம். ஏதில் - அந்நியமான. (26)

### நற்செய்தி கூறிய தூதுவர்க்கு இராவணன் பரிசளித்தல்

**1069.** கேட்டலுங் கிளர்சுடர் கெட்ட வானென
ஈட்டிருள் விழுங்கிய மார்பின் யானையின்
கோட்டெதிர் பொருதபே ராரங் கொண்டெதிர்
நீட்டின னுவகையி னிமிர்ந்த நெஞ்சினன்.

கேட்டலும், கிளர்சுடர் கெட்ட வான் என,
ஈட்டு இருள் விழுங்கிய மார்பின், யானையின்
கோட்டு எதிர் பொருத பேர் ஆரம் கொண்டு எதிர்
நீட்டினன், உவகையின் நிமிர்ந்த நெஞ்சினன்.

கேட்டலும் உவகையின் நிமிர்ந்த நெஞ்சினன், மார்பின் ஆரங் கொண்டு எதிர் நீட்டினன் என்க.

மார்பினின்று இருள் விழுங்கிய ஆரத்தை இராவணன் பரிசளித்தற்குக் கையில் வாங்கியபோது அவன் மார்பு, சந்திரனை இழந்த ஆகாசம் போல ஆயிற்று என்பார், கிளர் சுடர் கெட்ட வான் என ஆரம் கொண்டு என்றும், முன் திக்குவிசயகாலத்தில் திசையானைகளின் கொம்புகளால் தாக்கப்பட்டபோது இராவணன் மார்புடன் அதனில் அணிந்த ஆரமும் சேர்ந்து அவற்றைத் திருப்பித்தாக்கியதாதலின் யானையின் கோட்டெதிர் பொருத பேர் ஆரம்' என்று உபசரித்தும் கூறினார். கிளர் சுடர் கெட்டவான் - விளங்கும் சந்திரனை நீங்கிய ஆகாசம். ஈட்டிருள் விழுங்கிய மார்பு - தொகுப்புண்ட இருளைப் போக்கிய மார்பு. நிமிர்தல் - மேலோங்குதல்; உற்சாகமுறுதல். (27)

## அனுமனைக் கொல்லாமல் கொணரும்படி இராவணன் பணித்தல்

**1070.** எல்லையி லுவகையா லிவர்ந்த தோளினன்
புல்லுற மலர்ந்தகட் குமுதப் பூவினன்
ஒல்லையி னோடிநீ ருரைத்தென் னாணையால்
கொல்லலை தருகெனக் கூறுவீ ரென்றான்.

'எல்லையில் உவகையால் இவர்ந்த தோளினன்,
புல் உற மலர்ந்த கண் குமுதப் பூவினன்,
ஒல்லையின் ஓடி நீர் உரைத்து, "என் ஆணையால்,
கொல்லலை தருக" எனக் கூறுவீர்' என்றான்.

இவர்ந்த தோளினன், கட்குமுதப் பூவினன், 'நீர் என் ஆணையால் ஓடி உரைத்து, "கொல்லலை தருக" எனக்கூறுவிர்' என்றான் என்க,

இவர்ந்த - மேல் எழுந்த. கண்ணாகிய செங்கழுநீர்ப் பூவினை யுடையவன் என்றது, செங்கழுநீர்ப் பூப்போன்ற கண்ணுடைய னாய் இன்முகத்தனாயினன் என்றபடி. கண்களின் மலர்ச்சி அழ கால் யாவரும் அவனை அணுகிப் புல்லும்படி யிருந்தது என்பார் 'புல் லுற மலர்ந்த கட் குமுதப்பூ' என்றார். உரைத்து - என் மகிழ்ச்சியைச் சொல்லி. என் ஆணையால் கொல்லலை தருக – அக்குரங்கைக் கொன்றுவிடாமல் என் ஆணையோடு இங்கே கொணர்க. தருக – என்பால் கொணர்க. 'வருக மற்றவட் டருக ஈங்கென' (சிலப் – வழக்) என்புழிப்போல. (28)

## தூதுவர் இராவணன் ஆணையை இந்திரசித்துக்குக் கூறுதலும் சீதாதேவியின் நிலைமையும்

**1071.** அவ்வுரை தூதரு மாணையால் வரும்
தெவ்வுரை நீக்கினா னறியச் செப்பினார்
இவ்வுரை நிகழ்வுழி யிருந்த சீதையாம்
வெவ்வுரை நீங்கினா ணிலைவி ளம்புவாம்.

அவ் வுரை தூதரும், ஆணையால், வரும்
தெவ் வுரை நீக்கினான் அறியச் செப்பினார்;
இவ் வுரை நிகழ்வுழி இருந்த சீதையாம்
வெவ் வுரை நீங்கினாள் நிலை விளம்புவாம்.

ஆணையால் – முற்கூறிய இராவணனது ஆக்கினையோடும்; வரும் தெவ்வுரை நீக்கினுன் - (எதிர்த்து) வரும் பகைவர் (இவனுக்கு உண்டு) என்ற சொல்லை நீக்கியவனுன இந்திரசித்து. இவ் உரை நிகழ்வுழி, இதுவே சமயத்தில் எ – று. வெவ்வுரை நீங்குதலாவது – பழி நாணித் தகை சான்ற சொற்காத்தலாகும். (29)

## அனுமன் பிணிப்புண்ட செய்தியைத் திரிசடை சீதைக்குக் கூறுதல்

**1072.** இறுத்தனன் கடிபொழி லெண்ணி லோர்பட
ஒறுத்தன னென்றுகொண் டுவக்கின் ருளுயிர்
வெறுத்தனள் சோர்வுற வீரற் குற்றதைக்
கறுத்தலில் சிந்தையாள் கவன்று கூறினுள்.

"இறுத்தனன் கடிபொழில், எண்ணிலோர் பட
ஒறுத்தனன்," என்று கொண்டு உவக்கின்ருள், உயிர்
வெறுத்தனள் சோர்வு உற, வீரற்கு உற்றதைக்
கறுத்தல் இல் சிந்தையாள் கவன்று கூறினுள்.

கறுத்தலில் சிந்தையாள், கடிபொழில் இறுத்தனன் ஒறுத்தனன் என்று உவக்கின்ருள்; வீரர்க்கு உற்றதை உயிர் சோர்வுறக் கவன்று கூறினுள் என்க,

கறுத்தலில் சிந்தையாள் – களங்கம் அற்ற மனமுடைய திரிசடை. (30)

## அதுகேட்டு வருந்திய சீதை அனுமனைக் குறித்துப் பலகூறிப் புலம்புதல் 1073—1077.

**1073.** ஓவி யம்புகை யுண்டது போலொளிர்
★ பூவின் மெல்லியன் மேனி பொடியுறப்
பாவி வேடன்கைப் பார்ப்புறப் பேதுறும்
தூவி யன்னமன் ருளிவை சொல்லினுள்.

ஓவியம் புகை உண்டது போல் ஒளிர்
பூவின் மெல் இயல், மேனி பொடி உறப்
பாவி வேடன் கைப் பார்ப்பு உறப் பேது உறும்
தூவி அன்னம் அன்னுள் இவை சொல்லினுள்.

அன்னமன்னுள், பூவின் மெல்லியல் மேனி ஓவியம் புகையுண்டது போல் பொடியுற இவை சொல்லினுள் என்றும், பார்ப்பு வேடன் கை உறப் பேதுறும் அன்னம் என்றும் இயையும்.

மேனி பொடி உற - மேனி புழுதி படிய ; பிராட்டி துயராற்ருது மண்ணிற் புரண்டதனுல் அவள் மேனி புழுதியுறலாயிற்று. பாவி - கொலைத் தொழில் புரியும் தீவினையாளன். அவன் கையில் தன் குஞ்சு அகப்பட்டுக் கொள்ள அதனுல் மனங்குலையும் அன்னம் போன்றவள் எ - று; இந்திர சித்துக்குப் பாவி வேடனும், அனுமனுக்கு அவன் கையிற் சிக்கிய பார்ப்பும், பிராட்டிக்கு அதனுற் பேதுறும் அன்னமும் உவமைகளாம். (31)

**1074.** உற்றுண் டாய விசும்பை யுருவினுய்
முற்றுண் டாய்கலை யாவையு முற்றுறக்
கற்றுண் டாயொரு கள்ள வரக்கனுல்
பற்றுண் டாயிது வோவறப் பான்மையே.

உற்று, உண்டாய விசும்பை உருவினுய்,
முற்று உண்டாய், கலை யாவையும் முற்றுறக்
கற்று உண்டாய், ஒரு கள்ள அரக்கனுல்
பற்று உண்டாய் இதுவோ அறப்பான்மையே.

உற்று உண்டாய விசும்பு - (ஏனைப் பூதங்கட்கு இடங்கொடுத்தல்) பொருந்தி அதனுல் பெருமையுள்ளதாகிய ஆகாயம். "அனைத்தும் வழி போம் விண்ணும் நீ" என்ருர் கூத்தரும் (தக்கயாக. 717). விசும்பை உருவினுய் என்றது, கீழ் உருக்காட்டுபடலத்தில் அனுமன் பிராட்டிக்குக் காட்டிய விசுவருபத்தை. விசும்பை உருவினுய் முற்றுண்டாய் - ஆகாசத்தை ஊடுருவிச் சென்று அதனை முழுவதும் அளாவி ; முற்றெச்சம். இத்தகைய நீ வஞ்சகனுன அரக்கனுல் பிணிப்புண்டாய் (எனில்), தருமத்தின் இயல்பு இதுவேயோ ? எ - று. (32)

**1075.** கடர்க டந்து புகுந்தனை கண்டகர்
உடர்க டநதுநின் னூழி கடந்திலை
அடர்க டந்த திரள்புயத் தையநீ
இடர்க டந்தனை வந்திடர் மேலுமே.

கடர் கடந்து புகுந்தனை; கண்டகர்
உடர் கடந்தும் நின் ஊழி கடந்திலை,
அடர் கடந்த திரள் புயத்து ஐய! நீ
இடர்கள் தந்தனை; வந்து இடர் மேலுமே.

கடல், உடல் எனற்பாலன கடர், உடர் எனப் போலி எழுத்துப் பெற்றன. கண்டகர் – கொடியோர். உடல் - உடலின் வலிமை ; அதனைக் கடந்து என்றது, அவரை முழுதும் அழித்து எ – று. ஊழி – வாழ்நாள்; ஊழ்நிலைமைக்கேற்ப அமைதலால் அப்பெயர் பெற்றது. அடல் - போர். இராமனைப் பிரிந்த சோகத்தின் மேலும், இராமதூதன் கட்டுண்டதனால் உண்டாகிய சோகமுஞ் சேர்ந்ததாகலின் 'இடர் மேலும் இடர்கள் தந்தனை' என்றாள் பிராட்டி என்க. (33)

**1076.** ஆழி காட்டியென் னாருயிர் காட்டினாய்க்
கூழி காட்டுவெ னென்றுரைத் தேனது
வாழி காட்டுமென் றுண்டுன் வரைப்புயப்
பாழி காட்டி யரும்பழி காட்டினாய்.

ஆழி காட்டி, என் ஆர் உயிர் காட்டினாய்க்கு,
ஊழி காட்டுவென் என்று உரைத்தேன், அது
வாழி காட்டும் என்று உண்டு, உன் வரைப்புயப்
பாழி காட்டி, அரும் பழி காட்டினாய்.

ஆழி - இராமபிரான் அளித்த கணையாழி. காட்டினாய்க்கு – காட்டி அளித்த உனக்கு. ஊழிகாட்டுவென் என்று உரைத்தேன்–கற்பாந்தத்தைக் காணுமாறு நீண்ட ஆயுளை அளிப்பன் என்று கூறினேன். அது வாழி காட்டும் என்று உண்டு - அச்சொல் சாவாத நிலையை உனக்குத் தரும் என்பது நிலைபெற்றதே. இப்போது உன் புய வலிமை காட்டிப் பெரும்பழி வெளிப்படுத்தினையே (என் செய்வேன்) என்பது இறுதியடிக்குப் பொருள். உண்டு – என்பது 'செல்வமொன் றுண்டாக வைக்கற் பாற் றன்று' (நாலடி.–1) என்புழிப்போல நிலைபேறுடையது என்ற பொருள தாகும். 'காட்டும் என்று (என் மனத்தில்) உறுதியுண்டு என்று' அத் தொடர்க்குப் பொருள் கூறினும் அமையும். (34)

**1077.** கண்டு போயினை நீணெறி காட்டிட
மண்டு போரி னரக்கனை மாய்த்தெனைக்
கொண்டு மன்னவன் போமெனுங் கொள்கையைத்
தண்டி னாயெனக் காருயிர் தந்தநீ.

கண்டு போயினை, 'நீள்நெறி காட்டிட,
மண்டு போரின் அரக்கனை மாய்த்து எனைக்
கொண்டு மன்னவன் போம்' எனும் கொள்கையைத்
தண்டினாய், எனக்கு ஆருயிர் தந்த நீ.

எனக்கு ஆருயிர் தந்த நீ, நெறிகாட்டிட அரக்கனை மாய்த்து மன்னன் எனைக்கொண்டு போம் எனும் கொள்கையை மாற்றினை என்க. கண்டு போயினை – இங்குள்ள இடம் நிலைமைகளைப் பார்த்துச் சென்று; முற்றெச்சம். தண்டினுய் – நீக்கிவிட்டாய்; தடைப்படுத்தினுய். ' கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்' (முதுமொழிக் காஞ்சி. தண்டாப்பத்து-3) என்புழிப்போலத் தண்டுதல் – நீங்குதற்பொருளது. (35)

## சீதை தளர்ந்து மூர்ச்சித்தல்

**1078.** ஏயப் பன்னின ளின்னன தன்னுயிர்
தேயக் கன்று பிடி.யுறத் தீங்குறு
தாயைப் போலத் தளர்ந்து மயர்ந்தனள்
தீயைச் சுட்டதொர் கற்பெனுந் தீயினுள்.

ஏய, பன்னினள் இன்னன; தன் உயிர்
தேயக் கன்று பிடி உறத் திங்கு உறு
தாயைப் போலத் தளர்ந்து மயர்ந்தனள்;
தீயைச் சுட்டது ஒர் கற்பு எனும் தீயினுள்.

ஏய இன்னன பன்னினள் – சந்தருப்பத்துக்கேற்ற இவ்வார்த்தைகளைச் சொன்னவளாய். உயிர் தேய – ஆன்மவலி குன்றும்படி. மயர்ந்தனள் – மயக்கம் அடைந்தாள். தீயைச் சுட்டதொர் கற்பெனும் தீயினுள் – நெருப்பையும் சுடவல்ல பதிவிரதா தருமம் என்னும் ஒரு பெரு நெருப்பையுடைய சிதாதேவி எ – று. சுட்டது என்பது ஈண்டுக் காலங் கருதாது தன்மை கருதியதாயினும், பின் யுத்தகாண்டத்தில் சிதாபிராட்டியின் கற்பில் ஐயமுற்றுக் கடிந்து கூறிய இராமபிரான் முன்பு தீ வளர்ப்பித்து அதனில் தன் தூய்மை காட்டவேண்டி அப்பிராட்டி பிரவேசித்தபோது அக்கினிபகவான் அவளைக் கைகளில் ஏந்தியவனுய்த் தன்னையும் சுட்ட அவளது கற்பினுற்றலைப் பெருமானறியக் கூறிய செய்திக்குப் பெரிதும் ஏற்புடையதாதல் காணலாம். (36)

## இந்திரசித்து அனுமனை இராவணன் அரண்மனையுட் கொண்டு சேர்தல்

**1079.** பெருந்த கைப்பெரி யோனைப்பி ணித்தபோர்
முருந்தன் மற்றை யுலகொரு மூன்றையும்
அருந்த வப்பய னுலர சாள்கின்றுன்
இருந்த வப்பெருங் கோயில்சென் றெய்தினுன்.

பெருந்தகைப் பெரியோனைப் பிணித்த, போர்
முருந்தன், மற்றை உலகு ஒரு மூன்றையும்,
அரும் தவப் பயனால் அரசு ஆள்கின்றான்,
இருந்த அப் பெருங் கோயில் சென்று எய்தினான்.

மயில் முதலிய பறவைகளின் வலிய அடிக்குருத்து 'முருந்து' எனப்படும். இராவணனாகிய பெரும் பறவையின் இறகடிபோன்றவன் இந்திரசித்து ஆதலால் 'முருந்தன்' எனப்பட்டான். வலியனாய்ப் போரில் துணை நிற்பவன் என்றபடி. பெரியோனான அநுமனைப் பிணித்த வலிய இளைஞன் என்றதனால், அவன் பிணித்த பிணிப்பு உண்மையில் போலியே என்பது குறிக்கும். அரசாள்கின்றான் இருந்த பெருங்கோயிலை முருந்தன் சென்று எய்தினான் என்க. (37)

## இராவணன் அரசுவீற்றிருக்கும் சிறப்பு 1080—1096.

**1080.** தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு
★ மதிதழைத் தென்ன
அலங்கல் வெண்குடைத் தண்ணிழ
லவிரொளி பரப்ப
வலங்கொ டோளினன் மண்ணின்று
வானுற வெடுத்த
பொலங்கொண் மாமணி வெள்ளியங்
குன்றெனப் பொலிய.

தலங்கள் மூன்றிற்கும் பிறிது ஒரு மதி தழைத்தென்ன.
அலங்கல் வெண்குடைத் தண் நிழல் அவிர் ஒளி பரப்ப,
வலம் கொள் தோளினன், மண்ணின்று வானுற எடுத்த,
பொலம் கொள் மாமணி வெள்ளிஅம் குன்று எனப் பொலிய.

வெண்குடை, மதி தழைத்தென்ன அவிரொளி பரப்ப(வும், தூக்கிய அக்குடை) வானுற எடுத்த வெள்ளியங்குன்று எனப் பொலிய(வும்) என்க.

திரிலோகாதிபதியாதலால் மூவுலகத்துக்கும் ஒரு சந்திரன் விளங்குவதுபோல வெண்கொற்றக் குடை ஒளிபரப்பியது என்றார் என்க. அலங்கல் – குடையைச் சுற்றித் தொங்கவிட்ட சரங்கள். (அவ்வாறு விளக்கமுறத் தூக்கிய வெண்குடை முன்பு இராவணன் தன் வலி பொருந்திய தோளினால் மண்ணினின்று விண்ணுறத் தூக்கிய கயிலாயகிரிபோல விளங்கலாயிற்று என்பது பின் இரண்டடிகளின் கருத்து. வலங்கொள் – வலிமை

கொண்ட. மாமணி வெள்ளியம் குன்று - பெரிய இரத்தினங்கள் கொண்ட கயிலையங்கிரி. இதனல் குடையும் இரத்தினங்கள் அமையப்பெற்றது என் பது பெறப்படும். மாமணி – பெரிய சிறப்புடைய எனினும் ஆம்.

இக்கவியில் வரும் பரப்ப, பொலிய என்ற செயவெனெச்சங்களும், அடுத்த பதினுறுகவிகளில் வரும் வினையெச்சங்களும் அடுக்கி, மேல் 1097 – ஆம் கவி முதலில் வரும் 'இருந்த' என்ற பெயரெச்சத்தைக் கொள்வனவாம். இவை குளகம். (38)

**1081.** புள்ளு யர்த்தவன் றிகிரியும் புரந்தர னயிலும்
தள்ளின் முக்கணுன் கணிச்சியுந் தாக்கிய தழும்பும்
கள்ளு யிர்க்குமென் குழலியர் முகிழ்விரற் கதிர்வாள்
வள்ளு கிர்ப்பெருங் குறிகளும் புயங்களின் வயங்க.

புள் உயர்த்தவன் திகிரியும், புரந்தரன் அயிலும்,
தள்ளின் முக்கணுன் கணிச்சியும், தாக்கிய தழும்பும்,
கள் உயிர்க்கும் மென் குழலியர் முகிழ் விரல் கதிர்வாள்,
வள் உகிர்ப் பெருங் குறிகளும் புயங்களின் வயங்க.

திகிரியும் அயிலும், கணிச்சியும் தாக்கிய தழும்பும், குழலியர் உகிர்க் குறிகளும் புயங்களில் வயங்க என்க.

புள்ளுயர்த்தவன் – கருடக் கொடியுடைய திருமால். புள் என்னும் பொதுப் பெயர் கருடனுக்குச் சிறப்புப்பற்றி வந்தது. புரந்தரன் அயிலும்– இந்திரனது வேலாயுதமும். அயில் கூர்மையாய், ஆகுபெயரால் வச்சிரா யுதம் எனலுமாம். முக்கணுன் தள்ளில் கணிச்சி என மாறுக. கணிச்சி – மழுப்படை. கள் உயிர்க்கும் மென்குழலியர் – தேன் மணங்கமழும் மெல் லிய கூந்தலையுடைய மகளிர். இவர்கள் மண்டோதரி, தானியமாலினி போன்ற தேவியரென்க. உயிர்த்தல் - மணம் கமழ்தல். 'உயிர்த்த தாமத் தன்' (நிகும்பலை. 114) என்பர் பின்னும்.

முகிழ் விரல் கதிர் வாள் வள் உகிர்ப்பெருங் குறிகளும் – (தாமரை) மொட்டுப்போலும் விரல்களில் அமைந்த ஒளிபொருந்திய வாள்போல் வளமையுள்ள நகங்கள் பட்டதனல் ஆகிய பெரிய வடுக்களும்; இவ் வடுக்கள் போன்றனவே, இராவணன், தேவர்களால் திக்விசயப் போரிற் பட்ட முற்கூறிய விழுப்புண்களும் என்பது குறிப்பு. அந்தணரின் தெய்வமும், வரமளித்தவனு மாதலால், பிரமனையும் அவன் படையினையும் கூருராயினர். வயங்க – விளங்க. (39)

**1082.** துன்று செம்மயிர்ச் சுடர்நெடுங் கற்றைகள் சுற்றி
நின்று திக்குற நிரல்படக் கதிர்க்குழா நிமிர
ஒன்று சீற்றத்தி னுயிர்ப்பெனும் பெரும்புகை யுயிர்ப்பத்
தென்றி சைக்குமோர் வடவன றிருத்திய தென்ன.

துன்று செம்மயிர்ச் சுடர்நெடும் கற்றைகள் சுற்றி,
நின்று திக்கு உற, நிரல்படக் கதிர்க்குழாம் நிமிர,
ஒன்று சீற்றத்தின் உயிர்ப்பு எனும் பெரும் புகை உயிர்ப்பத்
தென் திசைக்கும் ஓர் வட அனல் திருத்தியது என்ன.

செம்மயிர்க் கற்றைகள் சுற்றிக் கதிர்க்குழாம் நிமிர, உயிர்ப்பெனும் பெரும்புகை உயிர்ப்ப, தென்திசைக்கும் ஓர் வடவனல் திருத்தியது என்ன – எ – று.

சுடர் நெடுங் கற்றைகள் – ஒளிவிடும் நீண்ட கதிர்த் தொகுதிகள். சுற்றி நின்று திக்குற நிரல்பட நிமிர – சூழப் பரவிநின்று வரிசையாக உயர்ந்து தோன்றுதலாலும்; சீற்றத்தின் உயிர்ப்பெனும் பெரும் புகை உயிர்ப்ப – சினத்தோடு விடப்படும் பெருமூச்சாகிய பெரும் புகை வெளிப்படுதலாலும். வடவனல் – வடவையனல் என்பதன் திரிபு. ‘படபாமுகாக்கினி’ என்பர் வடநூலார்; அது பெண்குதிரையின் முகம் போன்று கடல் நடுவில் அமைந்து, அக்கடல் நீர் பெருகி உலகை அழியாதவாறு காத்துவரும் என்பது நூற்கொள்கை. தென்றிசைக்கும் ஒரு வடவனல் அமைத்தவைபோன்றிருந்தன, இராவணனது செம்மயிர்க் கற்றைகளும் பெருமூச்சும் என்று குறித்தவாறு. (40)

**1083.** மரக தக்கொழுங் கதிரொடு
மாணிக்க நெடுவாள்
நரக தேயத்து ணடுக்குரு
விருளையு நக்கச்
சிரம னைத்தையுந் திசைதொறுந்
திசைதொறுஞ் செலுத்தி
உரகர் கோனினி தரசுவீற்
றிருந்தன னொப்ப.

மரகதக் கொழும் கதிரொடு மாணிக்க நெடுவாள்,
நரக தேயத்துள் நடுக்கு உரு இருளையும் நக்கச்
சிரம் அனைத்தையும், திசைதொறும் திசைதொறும் செலுத்தி,
உரகர்கோன், இனிது அரசு வீற்றிருந்தனன் ஒப்ப.

மரகதக் கதிர், மாணிக்க நெடுவாள் நரக தேயத்து இருளையும் நக்க, உரகர் கோன் சிரமனைத்தையும் செலுத்தி அரசு விற்றிருந்தனன் ஒப்ப என்க.

நெடுவாள் - நீண்ட ஒளி. நரக தேயத்துள் நடுக்குறு இருள் - நரகலோகத்தில் எந்தச் சுடருக்கும் அஞ்சாத இருள்; ஏழாம் நரகங்களுள் கீழாம் நரகமான இருள் வட்டம் என்றபடி. அரக்கர்கோமானுடைய பத்துத் தலைகளில் ஒவ்வொன்றும் ஆதிசேடனது நூறு தலைகட்கு ஈடாகும் என்பார், ஆயிரந் தலைகளுடைய அவ் ஆதிசேடன் தன் தலைகளைப் பத்துத் திசைகளினும் செலுத்தி அரசு வீற்றிருந்தது போலும் என்றார். (41)

**1084.** குவித்த பன்மணிக் குப்பைகள்
கலையொடுங் கொழிப்பச்
சவிச்சு டர்க்கல னணிந்தபொற்
றோளொடு தயங்கப்
புவித்த டம்படர் மேருவைப்
பொன்முடி யென்னக்
கவித்து மாலிருங் கருங்கட
லிருந்தது கடுப்ப.

குவித்த பன்மணிக் குப்பைகள், கலையொடும் கொழிப்பச்
சவிச் சுடர்க் கலன் அணிந்த பொன் தோளொடு தயங்கப்
புவித்தடம் படர் மேருவைப் பொன்முடி என்னக்
கவித்து மால் இரும் கரும் கடல் இருந்தது கடுப்ப.

பன்மணிக்குப்பைகள் கொழிப்ப, கலன்கள் தோளொடு தயங்க, கருங்கடல் மேருவைப் பொன்முடி என்னக் கவித்து இருந்தது கடுப்ப என்க.

குப்பைகள் - தொகுதிகள். கலை - மேகலாபரணம். சவி - காந்தி. புவித்தடம்படர் மேரு - பூமியிடம் நெடுந்தூரம் பரவியுள்ள மேருமலை. (42)

**1085.** சிந்து ராகத்தின் செறிதுகிற் கச்சொடு செறியப்
பந்தி வெண்முத்தி னணிகலன் முழுநிலாப் பரப்ப
இந்து வெண்குடை நீழலிற் றுரகை யினம்பூண்
டந்தி வானுடுத் தல்லுவீற் றிருந்ததா மென்ன.

சிந்துராகத்தின் செறி துகில் கச்சொடு செறியப்
பந்தி வெண் முத்தின் அணிகலன் முழு நிலாப் பரப்ப,
இந்து வெண்குடை நீழலில், தாரகை இனம் பூண்டு
அந்தி வான் உடுத்து, அல்லு வீற்றிருந்தது ஆம் என்ன.

சிந்துராகம் - சிந்தூரம். அதன் நிறமான செம்மை செறிந்த துகில், அரைக் கச்சோடு கூடி விளங்க, வரிசையாக வெண் முத்துக்களைக் கொண்டு அமைக்கப்பட்ட ஆபரணங்கள் பூர்ண சந்திரன் ஒளியைப் பரப்ப என்பது இரண்டாம் அடியின் பொருள். அல் – இருள்; உகரச் சாரியை பெற்றது. (இராவணது தோற்றம்) இருளானது செவ்வானத்தை ஆடையாக உடுத்தும், நட்சத்திரத்தின் கூட்டத்தை ஆபரணமாகத் தரித்துக் கொண்டும், சந்திரனாகிய வெண்குடை நிழலில் ஓலக்க மிருந்தகாட்சி போலும் என்று கண்டவர் சொல்லும் படியும் என்க. (43)

**1086.** வண்மைக் குந்திரு மறைகட்கும்
வானினும் பெரிய
திண்மைக் குந்தனி யுறையுளா
முழுமுகம் திசையிற்
கண்வைக் குந்தொறுங் களிற்றொடு
மாதிரங் காக்கும்
எண்மர்க் கும்மற்றை யிருவர்க்கும்
பெரும்பய மியற்ற.

வண்மைக்கும் திரு மறைகட்கும் வானினும் பெரிய,
திண்மைக்கும் தனி உறையுள் ஆம் முழுமுகம் திசையில்,
கண்வைக்கும் தொறும் களிற்றொடு மாதிரம் காக்கும்,
எண்மர்க்கும் மற்றை இருவர்க்கும் பெரும்பயம் இயற்ற.

வண்மை – வளப்பம். குபேரசம்பத்தை வென்று பெற்றமையின் வண்மைக்கும் என்றும், கயிலையங்கிரியை எடுக்கும் பொழுது சாம கானத்தை யாழிசையில் அமைத்துப் பாடியவன் ஆதலின் திருமறை கட்கும் என்றும், அண்டாண்டங்களை ஏந்திநிற்கும் தன்மையது வான மாதலால் திண்மைக்கும் என்றும் கூறப்பட்டன. 'நிலனேந்திய விசும்பு' என்பர் (புறநா 2). களிறு – திக்கியானைகள். மாதிரம் காக்கும் எண்மர் - அட்டதிக்குப் பாலகர்கள்; அவர்கள் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனக் கிழக்கிலிருந்து எண்டிசைகளையும் முறையே பாதுகாப்போர். மற்றை இருவராவார் ஆகாசத்திற்குத் துருவனும், பாதலத்துக்கு ஆதிசேடனும் என்க. பெரும் பயம் – பேரச்சம். (44)

**1087.** ஏக நாயகன் றேவியை யெதிர்ந்ததற் பின்னை
நாகர் வாழிட முதலென நான்முகன் வைகும
மாக மால்விசும் பீறென நடுவண வரைப்பில்
தோகை மாதர்கண் மைந்தரிற் றோன்றினர் சுற்ற.

ஏக நாயகன் தேவியை எதிர்ந்ததன் பின்னை,
நாகர் வாழ் இடம் முதல் என நான்முகன் வைகும்,
மாகம் மால் விசும்பு ஈறு என, நடுவண வரைப்பில்,
தோகை மாதர்கள், மைந்தரின் தோன்றினர் சுற்ற.

ஏக நாயகன் – எல்லா உயிர்கட்கும் தனி நாயகன். ‘நாராயணனே தனி நாயகனே’ என்றார் பின்னும். அவனது தேவியை எதிர்ந்ததன் பின்னை – சிதாதேவியைச் சந்தித்த பின்பு நாகர் வாழிடம் முதலென – நாகலோகம் முதலாக; நான்முகன் வைகும் மால்விசும்பு ஈறென – பிரமன் தங்கும் சத்திய லோகம் ஈறாக ; நடுவண வரைப்பில் – இடையிலுள்ள ஏனை உலகங்களில் உள்ள. தோகைமாதர்கள் – மயில் போலும் சாயலுள்ள மகளிர். மைந்தரின் தோன்றினர் சுற்ற - ஆடவர்போலச் சுற்றவும்.

மாகம் மால் விசும்பு - திக்குகளையுடை ஆகாயம். “மாக விசும்பொடு வளியுக்தியும்” என்பர் (மதுரைக் காஞ்சி-454). ஈண்டு, விசும்பு என்றது பிரமலோகத்தை ; “சுகவெள்ளம் விசும்பிகந்து” என்றார் பெரியாரும். மைந்தரின் சுற்ற என்றது காமக்குறிப்பு நிகழ்தற்கு இடமில்லாத ஆடவர் போலச் சூழ்ந்து வர எ - று. (45)

**1088.** வான ரங்களும் வானவ ரிருவரு மனிதர்
ஆன புன்றொழி லோரென விகழ்கின்ற வவரும்
ஏனை நின்றவ ரிருடியர் சிலரொழிந் தியாரும்
தூந வின்றவே லரக்கர்தங் குழுவொடு சுற்ற.

வானரங்களும், வானவர் இருவரும், மனிதர்,
ஆன புன் தொழிலோர் என இகழ்கின்ற அவரும்,
ஏனை நின்றவர் இருடியர் சிலர் ஒழிந்து யாரும்,
தூ நவின்ற வேல் அரக்கர்தம் குழுவொடு சுற்ற.

சிலரொழிய யாவரும் அரக்கர் குழுவொடு சேர்ந்து இராவணனது ஓலக்கத்தில் சூழ்ந்துநிற்க என்க.

அச்சிலராவார் வானரங்களும், அரி, அரன் என்ற தலைமைத் தேவர்களும் மானிடரும், இருடிகள் சிலரும் ஆவர். இராவணன் ஒருகால் வாலி

யால் வெல்லப்பட்டவனுதலின், அவரினத்தார் அவனுணைக்கு அடங்காதவ ராயினர்போலும். கடுந்தவம் புரிந்து இராவணன் ஆதியில் பிரம தேவனிடம் வரம் வேண்டியபோது, 'எனக்குத் தேவர்களாலும் சிங்க முதலிய கொடிய பிராணிகளாலுமே சாவில்லாமலிருக்க வேண்டும். மனி தரை நான் ஒருபொருட் படுத்திலேன்' என்று வரம்பெற்றவன் என்பது வான்மீகத்தால் அறியப்பட்டது. இதனுல் மனிதவர்க்கத்தில் இராவண னுக்கிருந்த அவமதிப்பு விளங்கும். இது பற்றியே 'மனிதரான புன் தொழி லோரென இகழ்கின்ற அவரும்' என்ருர்.

திருமால் மானிட அவதாரம் எடுத்ததும், வானரங்களைத் துணைக் கொண்டதும் இவன் பெற்ற வரங்களை நோக்கியே என்க. இனி வானவர் இருவர் என்பது அரியும் அரனும் ஆவர். தலைமைத் தேவர்களான இவர்களும் இருடிகளிற் சிறந்தவர் சிலரும் ஒழிய, ஒழிந்தவர்கள் யாவரும் ஏனை அரக்கர் குழுவொடு சேர்ந்து இராவணனது ஆணைக்கு அடங்கிய வர்களாதலால் அவனைச் சூழ்ந்துநின்றனர் எ – று. வரங்கொடுத்தவ னும் அந்தணனு மாதலின் பிரமதேவன் இங்கே கூறப்பட்டிலன். தூ நவின்ற வேல் – பகைவரின் தசைகள் தோய்ந்த வேற்படை. (46)

**1089.** நரம்பு கண்ணகத் துள்ளுறை நறைநிறப் பாண்டில்
நிரம்பு சில்லரிப் பாணியுங் குறடுநின் றிசைப்ப
அரம்பை மங்கைய ரமிழ்துகுத் தாலன்ன பாடல்
வரம்பி லின்னிசை செவிதொறுஞ் செவிதொறும் வழங்க.

*நரம்பு கண்ணகத்து உள் உறை நறை நிறப் பாண்டில்,*
*நிரம்பு சில்லரிப் பாணியும் குறடும் நின்று இசைப்ப,*
*அரம்பை மங்கையர் அமிழ்து உகுத்தால் அன்ன பாடல்,*
*வரம்பு இல் இன்னிசை செவிதொறும் செவிதொறும் வழங்க.*

நறை, பாண்டில், சில்லரி, பாணி, குறடு (என்பவை) இசைப்ப, அரம்பை மங்கையர் பாடலிசை செவிதொறும் செவிதொறும் வயங்க என்க.

நறை–தேன்போல் இசைக்கும் யாழ்; கண்ணகத்துள்ள நரம்பு நறை என இயையும். நரம்பு - நரம்புள்ளயாழ்; பாண்டில், சில்லரிப்பாணி, குறடு: இசைக் கருவிகள். பாணி – ஓசை. நின்றிசைப்ப – இடையருது ஒலிக்க. அரம்பைமங்கையர் - தேவமாதர்கள். உகுத்தால் அன்ன சொரிந்தாற் போன்ற. பாடல் இன்னிசை - வாய்ப்பாட்டின் இனிய கீதம். (47)

**1090.** கூடு பாணியி னிசையொடு முழவொடுங் கூடத்
தோடு சிறடி விழிமனங் கையொடுந் தொடரும்
ஆட னோக்குறி னருந்தவ முனிவர்க்கு மமைந்த
வீடு மீட்குறு மேனகை மேனகை விளங்க.

*கூடு பாணியின் இசையொடும் முழவொடும் கூடத்*
*தோடு சிறு அடி விழி மனம் கையொடும் தொடரும்,*
*ஆடல் நோக்குறின் அரும் தவ முனிவர்க்கும் அமைந்த,*
*வீடு மீட்குறும் மேனகை மேல்நகை விளங்க.*

தாளத்துடன் கூடிய இசையுடனும் முழவுடனும் இயைய, அடி, விழி, மனம், கை இவற்றோடு ஒற்றுமைப்பட நிகழ்த்தும் தன் நாட்டியத்தை நோக்குதல் உற்றால், அருந்தவ முனிவர்களும் தமக்கமைந்த முத்தியின்பத்தையும் கைவிட்டு மனம் திரும்பும்படிசெய்யவல்ல மேனகையின் மேல் மகிழ்ச்சிப்புன்னகை விளங்கவும் என்க.

தோடு சிறு அடி - பூவிதழினும் மேம்பட்ட சிறிய அடிகள்; சிறு, உவமப்பொருளது. (48)

**1091.** ஊடி னார்முகத் துறுநறை யொருமுக முண்ணக்
கூடி னார்முகக் களிநறை யொருமுகங் குடிப்பப்
பாடி னார்முகத் தாரமு தொருமுகம் பருக
ஆடி னார்முகத் தணியமு தொருமுக மருந்த.

*ஊடினார் முகத்து உறும் நறை ஒரு முகம் உண்ணக்*
*கூடினார் முகக் களிநறை ஒருமுகம் குடிப்பப்*
*பாடினார் முகத்து ஆர் அமுது ஒருமுகம் பருக,*
*ஆடினார் முகத்து அணி அமுது ஒருமுகம் அருந்த.*

இனி இராவணனது முகங்கள் பத்தும் காட்டும் உட்குறிப்புக்களை உணர்த்துவன பின் வரும் கவிகள். ஊடினார், கூடினார், பாடினார், ஆடினாராகிய மகளிரின் செயல்களில் உளமகிழ்ந்து அதனதன் இன்பங்களைத் தன்முகங்களிலே நான்கு அனுபவித்தன என்பது கருத்து.

நறை - இன்பத்தேன்; ஊடினார் முகத்து உறும் நறையாவது, காமம் நுகர்தற்குரிய மகளிரது ஆராமையால் நிகழ்வது. அதனையறிந்து உள்ளுள் உவக்கின்ற குறிப்பைக் காட்டுவது ஒரு முகம் எனவும்; கூடினார் முகக்களி நறையாவது, முதிர்ந்து துனியாகாமலும், முதிராத புலவியாகாமலும், இருவரும் ஒத்த அளவில் நுகர்ந்த இன்பம்; அக்குறிப்பைக் காட்டுவது

மற்றொருமுகம் எனவும் கொள்க. பாடினரும் ஆடினரும் காமக் குறிப் போடு தத்தம் செயல்கள் புரிதலால் அவற்றை அறிந்த உவகைக் குறிப்பை உணர்த்துவன வேறு இருமுகங்கள் எ - று. உண்ண, குடிப்ப, பருக அருந்த என்பன ஒருபொருள் குறிப்பன. (49)

**1092.** தேவ ரோடிருந் தரசிய லொருமுகஞ் செலுத்த
மூவ ரோடுமா மந்திர மொருமுக முயலப்
பாவ காரிதன் பாவக மொருமுகம் பயிலப்
பூவை சானகி யுருவொடு மொருமுகம் பொருந்த.

*தேவரோடு இருந்து அரசியல் ஒருமுகம் செலுத்த,*
*மூவரோடு மா மந்திரம் ஒருமுகம் முயலப்*
*பாவகாரிதன் பாவகம் ஒருமுகம் பயிலப்*
*பூவை சானகி உருவொடும் ஒருமுகம் பொருந்த.*

*அடங்காத தேவர்களை அடக்கியாளுதற்கு அவரினத்தாரில் வேண்டியவர் சிலரையும் மந்திராலோசனைக்கு உரியவராக்கிக்கொள்ளுதலின், தேவரோடு இருந்து அரசியல் செலுத்தியது ஒருமுகம் என்றார். மூவர் - மந்திரிகள், சேனுபதியர், அரசியற்றலைவர் என்போர். பாவகாரி - தீவினையாளன். "பாவகாரியை முன்படைத்தவன்" (பெரியாழ் - திருமொழி) என்ப. பாவகம் - (திய) சிந்தனை. பூவை - நாகணவாய்ப்புள்; ஆகுபெயர். பூவைபோலும் சீதாதேவியின் உருவெளிப்பாடு. இவ் வுருவெளிப் பாட்டை இராவணன் மிகக் கண்டிருந்தவன் என்பதனை மாரீசன் வதைப்படலத் தொடக்கத்தும் காணலாம்.* (50)

**1093.** காந்தண் மெல்விரற் சனகிதன் கற்பெனுங் கடலை
நீந்தி யேறுவ தெங்ஙனென் றொருமுக நினையச்
சாந்த ளாவிய வனமுலை மகளிர்தற் சூழ்ந்தார்
ஏந்து மாடியி னொருமுக மெழிலினை நோக்க.

*'காந்தள் மெல் விரல் சனகிதன் கற்பு எனும் கடலை*
*நீந்தி ஏறுவது எங்ஙன்?' என்று ஒருமுகம் நினையச்*
*சாந்து அளாவிய வனமுலை மகளிர் தற் சூழ்ந்தார்*
*ஏந்தும் ஆடியின் ஒருமுகம் எழிலினை நோக்க.*

*காந்தள் - செங்காந்தள் ; விரற்கு உவமை. கருங்கடலை எளிதிற் கடந்துவந்து சீதையை அபகரித்துவந்த தனக்கு, கடத்தற்கு அரிதாயிருந்தது சீதையின் கற்புக்கடல் என்பான் 'கற்பெனுங்கடலை நீந்தியேறுவ*

தெங்ஙன்' என்ருன் இராவணன். பிராட்டியின் மேனியைக் கொணர்ந்த தன்றி ஆன்ம குணங்களை வசப்படுத்த முடியவில்லையே என்பது குறிப்பு. அத்தகைய பெருங்கற்பினுள் இராமன் வசமாகியது அவனது எழுதரிய பேரழகால் ஆதலின் அவ்வழகு தனக்கு உண்டோ என்று ஆடியில் தன் எழிலினை ஒரு முகம் நோக்கியது என்க.

இங்ஙனம் முகங்கள் பத்தும் ஒவ்வொரு குறிப்பினைத் தோற்றுவித்தன என்ற கருத்து, திருமுருகாற்றுப்படையுள் 'மூவிருமுகனு முறை நவின்ருெழுகிய'தாக நக்கிரர் பாடியவற்றினின்று தோன்றியதென்றே சொல்லத்தகும். (51)

**1094.** பொதும்பர் வைகுதேன் புக்கருந் துதற்ககம் புலரும்
மதம்பெய் வண்டெனச் சனகிமேன் மனஞ்செல மறுகி
வெதும்பு வாரகம் வெந்தழி வார்நகில் விழிநீர்
த்தும்பு வார்விழித் தாரைவே ரூடொறுந் தாக்க.

பொதும்பர் வைகு தேன் புக்கு அருந்துதற்கு அகம் புலரும்
மதம்பெய் வண்டு எனச் சனகிமேல் மனம் செல மறுகி,
வெதும்புவார், அகம் வெந்து அழிவார், நகில் விழிநீர்
ததும்புவார் விழித் தாரைவேல் தோள் தொறும் தாக்க.

சிதையை வசப்படுத்தாதவனுயினும் ஏனைய மகளிரெல்லாம் காமுறும் எழிலுடையவன் என்கிருர் இப்பாட்டில்.

பொதும்பர் - குறுங்காடு; 'முல்லையம் பொதும்பின்' (சீவக. 3042) என்பது காண்க. அர், சாரியை. குறுங்காட்டுத் தூறுகளில் வைக்கப்பட்ட தேனை அருந்த முயன்று அது பெறுதற்கிடமின்றி உழன்று வருந்தும் வண்டு போல, சானகியிடம் சென்று வருந்தும் இராவணனது மனம் என்க. தூற்றிடையில் வைக்கப்பட்ட தேனை உண்ண விரும்பிய வண்டு இராவணனுக்கும், பொதும்பர்த்தேன் பிராட்டிக்கும் உவமைகளாம். தேனுக்கு அடைமொழியான 'பொதும்பர் வைகு' என்ற தொடர், சிஞ்சுபாமரத்தின் கீழ் அமர்ந்துள்ள சிதைக்கும் ஏற்றதாதலும், மதம்பெய்வண்டு என்றதனுல் ஏனைமகளிரின் இன்ப நறவுண்டு மதர்த்துத்திரிபவன் இராவணன் என்பதும் புலப்படும். இங்ஙனம் அவன் மதர்த்தற்குக் காரணமாய் நின்று பின் விரக வேதனையால் இப்போது மனம் வெதும்பி, தம் தனங்களிலே நீர் சோர வெந்தழியும் மகளிர், இராவணனிடம் கொண்டமோகத்தால் அவன் தோள்களில் தம் கூரிய விழிகளாகிய வேலால் தாக்கி நின்றனர் என்பது பின்னிரண்டடிகளின் போந்த பொருள். இம் மகளிரின் விழிவேல், எவ்வகைப் படைகளும் ஊறுபடுத்தமாட்டாத அவன் தோள்களில் தாக்கினவேயன்றி அவனெஞ்சில் தைக்கவில்லை என்பது குறிப்பு. (52)

**1095.** மாற ளாவிய மகரந்த நறையுண்டு மகளிர்
வீற ளாவிய முகிழ்முலை மெழுகிய சாந்தின்
சேற ளாவிய சிறுநறுஞ் சீகரத் தென்றல்
ஊற ளாவிய கடுவென வுடலிடை நுழைய.

*மாறு அளாவிய மகரந்த நறை உண்டு, மகளிர்*
*வீறு அளாவிய முகிழ் முலை மெழுகிய சாந்தின்*
*சேறு அளாவிய சிறு நறும் சீகரத் தென்றல்,*
*ஊறு அளாவிய கடு என உடல் இடை நுழைய.*

இராவணனது கடுஞ்சினத்துக்கு அஞ்சி, இலங்கை மதிலையும் கடவாத வாயுதேவன், காலம் பார்த்திருந்து ஒரு சிற்றுருக்கொண்டுவந்து அவ்வரக்கர்கோமானுடலுள்ளே புகுந்து அவனை வருத்தலாயினன் என்பது கருத்து. 'கறங்கு கால்புகா கதிரவ னொளி புகா' (118) என்பதனால், வாயுதேவன் இவனுணைக்கு அடங்கியிருந்தமை காண்க. வந்த அவ் வாயுவும் ஒரு விடபுருஷன்போல அசதியாடியவனுய் நுழைந்தவன் என்பார், 'மகரந்த நறைபுண்டு மகளிர் முகிழ்முலைச் சாந்தின் சேறளாவி' என்றும், இவை யாவும் அவ் வரக்கனுக்கு ஊறுவிளைக்கும் விடம் போலாயின என்பார் 'கடுவென உடலிடை நுழைய' என்றும் கூறினர்.

மகரந்தநறையுண்டு மகளிரின் முகிழ்முலைச் சாந்தின் சேறளாவிய ...தென்றல்; சிறு தென்றல், நறும் தென்றல், சீகரத்தென்றல் எனத் தனித்தனி கூட்டுக. மகரந்தங்களில் அளைந்து மகளிரின் இளமுலைகளிற் பூசிய சந்தனக்குழம்பில் திளைத்தாடியதும், இளமையுடையதும், நறுமணங் கொண்டதும் குளிர்ச்சியானதும் ஆகிய தென்றல் எ - று. வீறு - இறுமாப்பு. மெழுகிய - பூசிய. சீகரம் - குளிர்ச்சி. (53)

**1096.** திங்கள் வாணுதன் மடந்தையர் சேயரி கிடந்த
அங்க யற்றடந் தாமரைக் கலரியோ னுகி
வெங்கண் வானவர் தானவ ரென்றிவர் விரியாப்
பொங்கு கைகளாந் தாமரைக் கிந்துவே போன்று.

*திங்கள் வாள் நுதல் மடந்தையர் சேயரி கிடந்த*
*அம் கயல் தடம் தாமரைக்கு அலரியோன் ஆகி*
*வெம் கண் வானவர் தானவர் என்று இவர் விரியாப்*
*பொங்கு கைகளாம் தாமரைக்கு இந்துவே போன்று.*

மடந்தையர், அம் கயல் தடம் தாமரைக்கு அலரியோனுகி(யும்) வானவர் தானவர் விரியாக் கைகளாம் தாமரைக்கு இந்துவேபோன்றும் (இருந்த) என்க.

திங்கள் வாள் நுதல் - பிறைமதிபோல் ஒளிபொருந்திய நெற்றியை யுடைய. சேய அரி கிடந்த - செவ்வரி பொருந்திய. அம் கயல் தடம் தாமரை - அழகியகயல் மீன்கள் போன்ற கண்களையுடைய முகமாகிய பெரிய தாமரை. தாமரைகள் இரண்டும் முறையே முகங்களுக்கும் கரங் களுக்கும் உவமை யாகுபெயர்கள். மகளிரின் தாமரை முகங்களுக்குச் சூரியன்போல மலர்ச்சி தந்து என்க. வானவர் தானவர் முதலியோர் கரங்களாகிய விரியாத தாமரை என்றது, தேவகணத்தாரின் கூப்பிய கைகளை; அத் தாமரைகட்குச் சந்திரன் போன்று (இருந்தது இராவணன் தோற்றம்) என்க. சூரியனைக்கண்ட தாமரை மலர்போல் மகளிர் முகங்கள் இராவணனைக் கண்டதனால் அலர்ந்திருந்தன என்றும், பகை வராய்ப் பின் அடங்கிய தேவர் தானவர் கரங்கள் சந்திரனைக் கண்ட தாமரை மலர்போல் குவிந்திருந்தன என்றும் கூறியபடி. வெங்கண் வான வர் தானவர் என்றது, போரிடையே வன்கண்மைகாட்டிய அவர்களது முன்னிலைமை குறித்தவாறும். அலரியோன் - சூரியன். இந்து - சந்திரன். என்றிவர் - முதலியோர்; அவராவார் இயக்கர், கந்தருவர், கின்னரர் போன்ற தேவகணத்தார் என்க. *(54)*

### இராவணனைக் கண்டதும் அனுமன் சினங்கொள்ளுதல்

**1097.** இருந்த வெண்டிசைக் கிழவனை
மாருதி யெதிர்ந்தான்
கருந்தி ணுகத்தை நோக்கிய
கலுழனிற் கனன்ருன்
திருந்து தோளிடை வீக்கிய
பாசத்தைச் சிந்தி
உருந்து நஞ்சுபோல் பவன்வயிற்
பாய்வெனென் றுருத்தான்.

இருந்த எண்திசைக் கிழவனை மாருதி எதிர்ந்தான்;
கரும் திண் நாகத்தை நோக்கிய கலுழனில் கனன்ருன்;
திருந்து தோளிடை வீக்கிய 'பாசத்தைச் சிந்தி,
உருந்தும் நஞ்சுபோல் பவன்வயின் பாய்வென்' என்று உருத்தான்.

மேலே 38-ஆம் கவிமுதல் இதுகாறும் உள்ள செய்யுளின் ஈற்று நிலைகளாக அமைந்த வினையெச்சங்கள் பதினெட்டும் 'இருந்தவெண் டிசைக்கிழவனை' என்பதில் உள்ள 'இருந்த' என்ற பெயரெச்சத்துடன் இயைந்து குளகச் செய்யுள்களாதல் காண்க.

எதிர்ந்தான், கனன்ருன், பாசத்தைச் சிந்திப் பாய்வன் என்று உருத்தான் என்க.

எண்டிசைக் கிழவன் என்றது, அட்டதிக்குப்பாலகரையும் வென்றதனுல் இப்பூவுலகிற்கு உரிமை பூண்ட இராவணன் எ - று. எதிர்ந்தான்- எதிரினிற் கண்டான். திண் கரு நாகம் - வலிமைபொருந்திய கிருஷ்ண சர்ப்பம்; கருநிறத்தவனுன இராவணனுக்கு உவமை. நாகத்தைக்கண்ட கருடனைப்போல் உள்ளங்கொதித்தான் என்றதனுல் அனுமனது பேராற்றல் புலப்படும். சிந்துதல் - அறுத்துத்தள்ளுதல். உருந்து - உருத்து என்பதன் விகாரம். உருத்தும் நஞ்சு - அழலும் நஞ்சு. 'ஆகம் உருப்ப நூறி' (புறநா. 25) என்புழிப் போல. நஞ்சுபோல்பவன் - இராவணன். (55)

## இராவணனைக் கொல்வதற்கு அனுமன்புரிந்த ஆலோசனை 1098—1101.

**1098.** உறங்கு கின்றபோ துயிருண்டல்
குற்றமென் றெழிந்தேன்
பிறங்கு பொன்மணி யாசனத்
திருக்கவும் பெற்றேன்
திறங்க ளென்பல சிந்திப்ப
திவன்றலை சிதறி
அறங்கொள் கொம்பினை மீட்டுட
னகல்வெனென் றமைந்தான்.

"உறங்குகின்றபோது உயிர் உண்டல்
குற்றம்' என்று ஒழிந்தேன்,
பிறங்கு பொன் மணி ஆசனத்து
இருக்கவும் பெற்றேன்,
திறங்கள் என் பல சிந்திப்பது?
இவன் தலை சிதறி,
அறம் கொள் கொம்பினை மீட்டு, உடன்
அகல்வென்" என்று அமைந்தான்.

இராவணன் தூங்கிக் கொண்டிருந்த நிலையில் அவனைக் கொல்லல் குற்றம் என்று கருதி ஊர்தேடுங்காலத்து அச் செயலொழிந்து நின்ற நான் இப்போது பொன்மணிகள் இழைத்த சிங்காதனத்தில் இருப்பதைக் காணப்பெற்றேன்; பலதிறங்கள் சிந்திப்பது என் - பலவகையாக ஆலோசிக்கவேண்டுவது என்ன? (ஒரே முடிவுதான் என்றபடி). பிராட்டியைச்

சிறைமீட்டுக்கொண்டு உடனே இந்நகர் நீங்குவேன் என்று ஆயத்தமாயி னன் (அனுமன்) என்க.

அறங்கொள்கொம்பு - தருமமாகிய கொடி பற்றிக்கொள்ளும் கொம்பு. அறமாவது - கற்புடைமை. அமைந்தான் - ஆயத்தமாயினன். (56)

**1099.** தேவர் தானவர் முதலினர் சேவகன் றேவி
காவல் கண்டிவ ணிருந்தவர் கட்புலன் கதுவப்
பாவ காரிதன் முடித்தலை பறித்திலெ னென்றால்
ஏவ தாமினி மேற்செயு மாள்வினை யென்றான்.

'தேவர் தானவர் முதலினர் சேவகன் தேவி
காவல்கண்டு இவண் இருந்தவர் கட்புலன் கதுவப்
பாவகாரிதன் முடித்தலை பறித்திலென் என்றால்
ஏவதாம் இனிமேல் செயும் ஆள்வினை?' என்றான்.

தேவி காவல்கண்டு இவணிருந்த தேவர் தானவர் முதலினர், கட்புலன் கதுவ, பாவகாரிதன் முடித்தலை பறித்திலென் என்றால், மேற்செயும் ஆள்வினை ஏவதாம்? என்றான் என்க.

சேவகன் – வீரன். காவல்கண்டு இருந்தவர் – சிறையிருப்பதைப் பார்த்துக்கொண்டே பரிகாரஞ்செய்ய இயலாது இருந்த தேவர் என்க. பாவகாரி – தீவினையாளன். 'பாவகாரிதன் பாவகம்' (54) என்றார் முன்னும். ஏவது ஆம் - யாது உளதாம். (57)

**1100.** மாடி ருந்தமற் றிவன்புணர் மங்கையர் மயங்கி
ஊடி ரிந்திட முடித்தலை திசைதொறு முருட்டி
ஆடல் கொண்டுநின் றார்க்கின்ற தகொடி தம்மா
தேடி வந்ததோர் குரங்கெனும் வாசகஞ் சிறிதோ.

'மாடு இருந்த மற்று இவன் புணர் மங்கையர் மயங்கி
ஊடு இரிந்திட முடித்தலை திசைதொறும் உருட்டி
ஆடல்கொண்டு நின்று ஆர்க்கின்றது; அது கொடிது அம்மா!
தேடிவந்தது ஓர் குரங்கு;' எனும் வாசகம் சிறிதோ?

தேடி வந்ததோர் குரங்கு, மாடிருந்த இவன் மங்கையர் இரிந்திட, முடித்தலை உருட்டி, ஆடல்கொண்டு ஆர்க்கின்றது; அம்மா! அது கொடிது எனும் வாசகம் சிறிதோ (என்றான் என்க).

மாடு இருந்த - பக்கத்துள்ள. ஊடு இரிந்திட - ஓலக்கத்தினிடையே சிதறியோட. ஆடல் - வெற்றி. ஓர் குரங்கு ஆடல்கொண்டு நின்று ஆர்க்கின்றது; அம்மா! கொடிது என்க. வாசகம் ஏனை அரக்கரும் உலகத்தாரும் சொல்லும் சொல். சிறிதோ மிகப்பெரியது எ - று. (58)

**1101.** நீண்ட வாளெயிற் றரக்கனைக்
கண்களி னேரே
காண்டல் வேண்டியிவ் வுயிர்சுமந்
தெதிர்சில கழறி
மீண்ட போதுண்டு வசைப்பொருள்
வென்றிலே னெனினும்
மாண்ட போதினும் புகழன்றி
மற்றுமொன் றுண்டோ.

*நீண்ட வாள் எயிற்று அரக்கனைக் கண்களின் நேரே*
*காண்டல்வேண்டி இவ் வுயிர் சுமந்து, எதிர் சில கழறி,*
*மீண்டபோது உண்டு வசைப்பொருள்; வென்றிலேன் எனினும்*
*மாண்டபோதினும் புகழ் அன்றி மற்றும் ஒன்று உண்டோ?*

அரக்கனைக் காண்டல்வேண்டிச் சில கழறி இவ்வுயிர் சுமந்து மீண்டபோது வசைப்பொருள் உண்டு - இராவணனைக் காணுதலாகிய ஒன்றையே விரும்பி அவனெதிரே சில இடித்துரைகளைக் கூறித் திரும்புவேனாயின் அப்பொழுது பழிப்புரைதான் எனக்கு உண்டாம் எ - று. சில கூறிவிட்டுத் திரும்புவேனாயின் பிரமாத்திரத்தால் கட்டுண்ட எனக்கு அப்பழியோடு செயலாற்றாது வெறுந் தூதுரைத்து உயிர்தப்பிவந்தவன் என்ற வசையுரையும் உண்டாகும். அவ்வாறன்றிப் போர்ச்செயல் புரிவேனானால், அதனில் யான் வென்றாலும் மாண்டாலும் அது புகழேயன்றி வேறாகாது என்று மாருதி கருதினன் என்க. காண்டல்வேண்டி, எதிர் சில கழறி உயிர் சுமந்து மீண்டபோது என இயைக்க. (59)

அனுமன் தன் எண்ணம் தகுதியன்றென நினைந்து
மேலும் சிந்தித்தல் 1102—1106.

**1102.** என்று தோளிடை யிறுக்கிய
பாசமிற் றேகக்
குன்றின் மேலெழு கோளரி
யேறெனக் குதியிற்

சென்று கூடுவ னென்பது
சிந்தனை செய்யா
நின்று காரிய மன்றென
நீதியி னினைந்தான்.

*என்று தோளிடை இறுக்கிய பாசம் இற்று ஏகக்*
*குன்றின்மேல் எழு கோள் அரியேறு எனக் குதியில்*
*சென்று கூடுவன் என்பது சிந்தனைசெய்யா*
*நின்று, காரியம் அன்று என நீதியின் நினைந்தான்.*

என்று - இவ்வாறு ஆலோசித்து. பாசம் இற்று ஏக - தோளிடையே இறுக்கிய பாசம் அறுபட்டுப்போம்படி; குன்றின்மேல் எழு கோளரி ஏறென - மலைமேற் பாய்கின்ற ஆண் சிங்கம்போல; 'குதியிற் சென்று' என்றதனால், நாகபாசம் அறுபட்டுப்போதலும், 'கூடுவன்' என்றதனால், 'குன்றின் மேலெழு கோளரி யேறு' போல இராவணன்மேற் பாய்தலும் பெறப்படும். 'குதியிற் சென்று கூடுவன்' என்பது அநுமன் கூற்று; ஏனைய கவிக்கூற்று என்க.

அதிவேகத்தில் தான் செய்த ஆலோசனைகள் தன் ஆற்றற்குப் பெரிதும் ஏற்றவே யாயினும், இராமதூதனுகச் செயல் புரியவந்த தன் கடமையை நினைந்த அளவில் கணநேரத்தில் அவை மாறின என்பார், 'காரிய மன்று என நீதியின் நினைந்தான்' என்று கூறினர். இவ்வாறு 'காரிய மன்று' என அநுமன் நினைந்தவாற்றை நான்கு கவிகளால் இனிக் கூறுகின்ருர். *(60)*

**1103.** கொல்ல லாம் வரத்தனு மல்லன் கொற்றமும்
★ வெல்லலாந் தரத்தனு மல்லன் மேலைநாள்
அல்லெலாந் திரண்டன நிறத்த னுற்றலை
வெல்லலா மிராமனுற் பிறரும் வெல்வரோ.

*கொல்லம் ஆம் வரத்தனும் அல்லன், கொற்றமும்*
*வெல்லல் ஆம் தரத்தனும் அல்லன், மேலை நாள்*
*அல் எலாம் திரண்டு அன நிறத்தன் ஆற்றலை*
*வெல்லல் ஆம் இராமனல்; பிறரும் வெல்வரோ?*

கொல்லலாம் வரத்தனும் அல்லன் - பிறரால் கொல்லக்கூடிய வரம் பெற்றவனுகவும் இல்லை. கொற்றம் - "நீ ஒருவன்மேற் கொற்றம் வைப்பின்" (சீவக. 201) என்புழிப்போல இங்குப் படைப்பெருக்கு முதலிய அரசாங்க பலத்தை உணர்த்தும்; இவனுக்குரிய அத் துணைவலிகளாலும்

பிறரால் வெல்லக் கூடியவனல்லன் என்றபடி. (அரக்கனது) மேலைநாள் ஆற்றலை எனக் கூட்டுக. மேலைநாள் முற்காலம். 'மேலை நாள் உயிருடன் பிறந்து' என்றார் முன்னரும் (சூர்ப்பணகைப் 8). இவனது ஆற்றல், பழங்காலமுதலே பெருகி முதிர்ந்துவந்துளது என்பார் 'மேலை நாள் ஆற்றலை' என்றார். 'இராமனால் வெல்லலாம்; பிறரும் வெல்வரோ' என்றது, அரக்கனை வென்றொழிப்பதற்காகவே அவதரித்துள்ள மூர்த்தியாலன்றி மற்றவரால் வெல்லுதல் கூடாதென்பது பெறப்படும். (61)

**1104.** என்னையும் வெலற்கரி திவனுக் கீண்டிவன்
தன்னையும் வெலற்கரி தெனக்குத் தாக்கினால்
அன்னவே காலங்கள் கழியு மாதலால்
துன்னருஞ் செருத்தொழி றொடங்க றூயதோ.

என்னையும் வெலற்கு அரிது இவனுக்கு; ஈண்டு இவன்
தன்னையும் வெலற்கு அரிது எனக்கு; தாக்கினால்
அன்னவே காலங்கள் கழியும் ஆதலால்
துன் அரும் செருத்தொழில் தொடங்கல் தூயதோ?

இவனுக்கு என்னையும் வெலற்கு அரிது; ஈண்டு, எனக்கு இவன் தன்னையும் வெலற்கு அரிது என்க. ஈண்டு - இராவணன் முன்னிலையில். தாக்கினால் – போர் தொடங்கினால். காலங்கள் அன்னவே கழியும் – பல நாள்கள் அத்தாக்குதலாகவே கழிந்துவிடும். துன் அரும் செருத் தொழில்- பிறர் நெருங்குதற்கு அரிய போர்த்தொழிலை. (62)

**1105.** ஏழுபே ருலகங்கள் யாவு மின்புறப்
பாழிவன் புயங்களோ டரக்கன் பஃறலை
பூழியிற் புரட்டலென் பூணிப் பாமென
ஊழியான் விளம்பிய வுரையு மொன்றுண்டால்.

'ஏழு பேர் உலகங்கள் யாவும் இன்பு உறப்
பாழி வன் புயங்களோடு அரக்கன் பல் தலை
பூழியில் புரட்டல் என் பூணிப்பாம்' என
ஊழியான் விளம்பிய உரையும் ஒன்று உண்டால்.

பாழி – பெரிய. பஃறலை - பல தலைகள். பூழியில் புரட்டல் - புழுதியிற் புரளும்படி செய்தல்; என் பூணிப்பு என ஊழியான் விளம்பிய உரையும் உண்டு – நான் மேற்கொண்ட விரதமாகும் என்று இராமபிரான் கூறிய

வார்த்தையும் ஒன்றுண்டு; என்றது 'சிதையைக் குறித்ததேயோ தேவரைத் திமை செய்த, பேதையைக் கொல்வேனென்று பேணிய விரதப் பெற்றி, வேதியர் அபயமென்ருர்க்கு அன்று நான் விரித்துச் சொன்ன, காதையைக் குறித்துச் சொன்ன அவ்வுரை கடக்கலாமோ' (விபிடணன் அடைக். 118) என்று தண்டகாரணிய வாசிகளான முனிவர் முன்பு தாம் அபயமளித்துச் சொன்ன வார்த்தையை நினைத்து மாருதி கூறினன் என்க.

பூணிப்பு - விரதம், தீர்மானம். 'பூணிப் பொன்றுடையனுக' (அதிகாயன். 188) என்ருர் பின்னும். ஊழியான் – யுகாந்த காலங்களாகி நின்றவன். (63)

**1106.** இங்கொரு திங்களே யிருப்பல் யானென
அங்கணு யகன்றன தாணே கூறிய
மங்கையு மின்னுயிர் துறத்தல் வாய்மையால்
பொங்குவெஞ் செருவிடைப் பொழுது போக்கினல்.

'இங்கு ஒரு திங்களே இருப்பல் யான்' என
அம் கண் நாயகன் தனது ஆணே கூறிய
மங்கையும் இன் உயிர் துறத்தல் வாய்மையால்;
பொங்கு வெம் செருவிடைப் பொழுது போக்கினல்.

செருவிடைப் பொழுது போக்கினல் ('ஒரு திங்களே இருப்பல் யான்' என நாயகன் ஆணே கூறிய) மங்கையும் உயிர் துறத்தல் வாய்மை என்க.

நாயகன் ஆணே கூறியது – 'இன்னும் ஈண்டொரு திங்களிருப்பல் யான், நின்னே நோக்கிப் பகர்ந்தது நீதியோய், பின்னே ஆவி பிடிக்கின்றிலேன் அந்த, மன்னன் ஆணே இதனே மனக்கொள் நீ' (635) என்று சானகி மாருதியை நோக்கிக் கூறிய வசனத்தை. தன் நாயகன் மேல் ஆணேயிட்டுக் கூறினமையின் 'உயிர் துறத்தல் வாய்மையால்' என்று நினேத்தான் அனுமன் என்க. (64)

## இவ்வாறு ஆலோசித்து அடங்கி இராவணனருகிற் சார்தல்

**1107.** ஆதலா னமர்த்தொழி லழகிற் றன்றருந்
தூதனுந் தன்மையே தூய்தென் றுன்னினன்
வேதநா யகன்றனித் துணேவன் வென்றிசால்
ஏதில்வா ளரக்கன திருக்கை யெய்தினன்.

ஆதலான் அமர்த்தொழில் அழகிற்றன்று; அரும்
தூதனும் தன்மையே தூய்து; என்று உன்னினன்.
வேதநாயகன் தனித்துணைவன், வென்றிசால்
ஏதில் வாள் அரக்கனது இருக்கை எய்தினன்.

அழகிற்று அன்று - அழகுடையதன்று. வெற்றியோ தோல்வியோ என்னும் அமர்த்தொழிலில் ஐயப்பாட்டிற்குரிய முயற்சியிற் புகுவதினும், தூதரில் சிறந்தவன் என்பதே மேற்கொண்ட செயற்கு ஏற்றதென்பார் 'அருந்தூதன் ஆம் தன்மையே தூய்து' என்ருன் அனுமன் எனக் கூறினர் என்க. "ஆழி நெடுங்கை ஆண்டகை தன் அருளும் புகழும் அழிவின்றி, ஊழிபலவு நிலைநிறுத்தற்கு ஒருவன் நீயே உளையானுய்" (599) என்ற பிராட்டி வசனத்தாலும், வேதநாயகன் தனித் துணைவன் அவன் என்பது தெளிவாகும். வேதநாயகன் - வேதங்களாற் பிரதிபாதிக்கப்படுந் தலைவன். வென்றிசால் ஏதில் வாள் அரக்கனது இருக்கை - வெற்றி மிக்கவனும் பகைவனும் கொடியவனுமான இராவணனது ஓலக்கத்தை. (65)

### இந்திரசித்து அனுமானை இராவணற்குக் காட்டுதல்

1108. தீட்டிய வாளெனத் தெறுகட் டேவியர்
ஈட்டிய குழுவிடை யிருந்த வேந்தற்குக்
காட்டின னனுமனைக் கடலி னாரமு
தூட்டிய வும்பரை யுலைய வோட்டினன்,

தீட்டிய வாள் எனத் தெறு கண் தேவியர்
ஈட்டிய குழு இடை இருந்த வேந்தற்குக்
காட்டினன் அனுமனைக் கடலின்ஆர் அமுது
ஊட்டிய உம்பரை உலைய ஓட்டினன்.

அனுமன் பிணிப்புண்ட பெரு மகிழ்ச்சியால் தன் உரிமைத் தேவியரையும் ஓலக்கத்தில் உடன் கொண்டிருந்தான் இராவணன் என்பார், 'தேவியர் குழுவிடை யிருந்த வேந்தற்கு' என்ருர். தூது வந்து நகரை அழிவு செய்தவனை அரசாங்க முறையில் வைத்து ஆராயுங் கருத்தினன் ஆதலின் தேவியருடன் சிங்காதனத்தில் விற்றிருந்து விசாரணை புரியலாயினன் இராவணன் என்க.

அரசியல் நெறி, குற்ற விசாரணை முதலிய ஆராய்ச்சி நிகழ்த்தும் போது தேவியரையும் உடன் கொண்டிருத்தல் அரசர்முறை யென்பது கண்ணகி வழக்குரைகாதையாலும் சோழ சாசனங்களாலும் அறியப்படும்.

*திட்டிய வாள் எனத் தெறுகண் தேவியர் - கூர்மையாம்படி திட்டப் பெற்ற வாளாயுதம் போல ஆடவர் நெஞ்சுறுதியை அழிக்கவல்ல கண்களையுடைய உரிமை மகளிர்; பாற்கடலினின்று தோன்றிய அரிய அமுதை உண்டு சாவாத வரம் பெற்ற தேவரையும் உலைந்தோடும்படி செய்த திறலுடைய இந்திரசித்து என்பது பின் தொடர்களின் பொருள். (66)*

## இந்திரசித்து அனுமனைப்பற்றி இராவணனிடம் கூறுதல்

**1109.** புவனமெத் தனையவை யனைத்தும் போர்கடந்
தவனையுற் றரியுரு வான வாண்டகை
சிவனெனச் செங்கணு னென்னச் செய்தவன்
இவனெனக் கூறிநின் றிருகை கூப்பினான்.

புவனம் எத்தனை? அவை அனைத்தும் போர்கடந்
தவனை, 'உற்று அரி உரு ஆன ஆண்தகை
சிவன் எனச் செங்கணான் என்னச் செய்தவன்
இவன்' எனக் கூறி நின்று, இருகை கூப்பினான்.

*உலகங்கள் எத்தனையுண்டோ அவை யனைத்தையும் போரில் வென்ற இராவணனை அணுகி, 'குரங்குருவங்கொண்ட இவ்வீரனே, சிவபிரான் போலவும் திருமால் போலவும் (போர்ச்) செயலாற்றியவன்' என்று கூறி, (இந்திரசித்து) கைகூப்பிநின்றான் என்க.*

*ஆண்டகையான இவனே (செயல்) புரிந்தவன் என இயையும். (67)*

## இராவணன் அனுமனை வெகுண்டு நோக்குதல்

**1110.** நோக்கிய கண்களால் நொறிற் கனற்பொறி
தூக்கிய வனுமன்மெய் மயிர்சு றுக்கொளத்
தாக்கிய வுயிர்ப்பொடுந் தவழ்ந்த வெம்புகை
வீக்கின வவ்வுடல் விசித்த பாம்பினே.

நோக்கிய கண்களால் நொறில் கனல்பொறி
தூக்கிய அனுமன் மெய் மயிர் சுறுக்கொளத்
தாக்கிய உயிர்ப்பொடும் தவழ்ந்த வெம்புகை,
வீக்கின அவ்வுடல் விசித்த பாம்பின் ஏ.

மேல் இந்திரசித்துக் கைகூப்பிச் சொன்னபின், இராவணன் பெருஞ் சினக் குறிப்புக் காட்டி நின்றபடியை வருணிப்பது இப்பாடல்.

பாசப்பிணிப்பால் உடற்குறுக்கம் அமைந்ததில்லை யென்பது தோன்றத் ' தூக்கிய அனுமன் மெய் ' என்றார். மெய் மயிர் சுறுக்கொள - (அவனது) உடலிற் செறிந்த மயிர்கள் எரிந்து கருகும்படி; பலமூக்குக்களாலும் விட்ட பெருமூச்சுக்களினின்று எழுந்த வெப்பப் புகைகள், பிணித்த நாகபாசம்போல அனுமனுடலைச் சூழ்ந்து கட்டலாயின எ-று.

விசித்த பாம்பின் - கட்டிய நாகபாசம்போல ; இன் உருபு ஒப்புப் பொருளது. இனி, விசித்த பாம்பின் என்பதிலுள்ள இன் உருபு, உறழ் பொருளில் வந்தது என்று கொள்ளினும் அமையும். எரிந்து கரியும்படி செய்தலும் புகையின் வெம்மையும் நாகபாசத்துக்கு இன்மையால், அதனினும் கொடிதாயிற்று இராவணனது சுடுநோக்கும் கடுமூச்சும் ஆகிய பாசம் என்பது கருத்து. நொறில்-வேகம். உயிர்ப்பு - பெருமூச்சு. விக்குதல் - கட்டுதல். விசித்த பாம்பு - கட்டிய நாகபாசம். (68)

## அனுமனை வினவுதல் 1111—1115.

**1111.** அன்னவோர் வெகுளிய னமர ராதியர்
துன்னிய துன்னலர் துணுக்கஞ் சுற்றுற
என்னிவண் வரவுநீ யாரை யென்றவன்
தன்மையை வினயினன் கூற்றின் றன்மையான்.

*அன்ன ஓர் வெகுளியன், அமரர் ஆதியர்*
*துன்னிய துன்னலர் துணுக்கம் சுற்றுற,*
*' என் இவண் வரவு ? நீ யாரை ?' என்று அவன்*
***தன்மையை வினயினன். கூற்றின் தன்மையான்.***

அமரர் ஆதியர் - தேவர் முதலிய பதினெண் கணத்தார். துன்னிய - பரிவாரமாய்நின்ற. துன்னலர் - பகைவர். தேவராதியர் முன்பு போரில் எதிர்த்துநின்ற பகைவராயினும், இராவணனால் பின்பு ஒறுத்து அடக்கப்பட்டு, இப்போது ஏவல் கேட்பவராயிருத்தலால், உட்பகை கொண்டவர் என்பார், ' துன்னிய துன்னலர் ' என்றார். துணுக்கம் சுற்றுற - இராமதூதனாய் உதவி புரியவந்த அனுமனுக்கு இரங்கி அவனுக்கு யாது நேருமோ என்ற அச்சம் சூழ. இவண் வரவு என் - இங்கு (நீ) வந்த காரியம் என்ன? நீ யாரை -நீ யார்? ஐ இடைச்சொல்; ''யாரையோ நீ மடக்கொடி யோய் '' (சிலப். 20, 43) என்றார் இளங்கோவடிகளும். தன்மை - நிலைமை ஆற்றல் முதலிய இயல்புகள். ' வினயினன் கூற்றின் தன்மையான் ' என்றதனால், ஒறுக்கும் இயல்பினனாய் உசாவினன் என்பது புலப்படும். (69)

**1112.** நேமியோ குலிசியோ நெடுங்க ணிச்சியோ
தாமரைக் கிழவனோ தறுகட் பஃறலைப்
பூமிதாங் கொருவனோ பொருது முற்றுவான்
நாமமு முருவமுங் கரந்து நண்ணினாய்.

*நேமியோ? குலிசியோ? நெடும் கணிச்சியோ?*
*தாமரைக் கிழவனோ? தறுகண் பல் தலைப்*
*பூமி தாங்கு ஒருவனோ? பொருது முற்றுவான்*
*நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்!*

*நேமி - சக்கரம்; திருமாலுக்கு ஆகுபெயர். குலிசி - வச்சிராயுதமுடைய இந்திரன். கணிச்சி - மழுப்படை; அஃதுடைய சிவபிரானை உணர்த்திற்று. தாமரைக்கிழவன் - பிரமன்; திருமாலின் திரு உந்திக் கமலத்து உதித்து அக் கமலத்துக்கு உரிமைபூண்டவன். தறுகண் பஃறலை பூமிதாங்கு ஒருவனோ - பல்தலைகளையும் கொடுமையான கண்களையுமுடையவனும் பூமியைத் தாங்கி நிற்பவனும் ஆகிய ஆதிசேடனோ?' பொருது முற்று உற - போர் புரிந்து முடிக்க; முற்றுற நண்ணினாய் என இயையும்.* (70)

**1113.** நின்றிசைத் துயிர்கவர் நீலக் காலனோ
குன்றிசைத் தயிலுற வெறிந்த கொற்றனோ
தென்றிசைக் கிழவனோ திசைநின் றாட்சியர்
என்றிசைக் கின்றவர் யாருள் யாவனீ.

*நின்று இசைத்து உயிர் கவர் நீலக் காலனோ?*
*குன்று இசைத்து அயில் உற எறிந்த கொற்றனோ?*
*தென்திசைக் கிழவனோ? திசை நின்று ஆட்சியர்*
*என்று இசைக்கின்றவர் யாருள் யாவன்? நீ.*

*காலன் - யமகிங்கரருள் தலைவன்; 'காலனோடந்தகன்' (தேவாரம்) என்பதனால், யமனினும் வேறானவன் காலன் என்க. இவன் ஓலை விட்டு முன்னெச்சரிக்கை செய்து உயிர் கவர்பவன் என்பது, மார்க்கண்டர், சத்தியவான் சரிதங்களாலும் அறியத்தகும். "ஆரோலைக்கு மடங்கான் காலனோலைக்கும் அப்படியே" என்றார் பின்னோரும் (பெருந்தொகை, 1263). தென்றிசைக்கிழவன் - யமதருமன். திசை நின்று ஆட்சியர் - எட்டுத் திசைகளிலும் நிலைநின்று ஆட்சிபுரியும் ஏனைத் திக்குப் பாலகர்; ஏனையர் என்றது, இந்திரனும் யமனும் மேலே கூறப்பட்டமையால் அவரொழிந்த*

ஏனைத் திசை காவலர் என்க. மேற்கூறியவர்களுள், எவ்வினத்தான், நீ யாவன் என்பான் 'என்றிசைக்கின்றவர் யாருள் யாவன் நீ' என்றான். (71)

**1114.** அந்தணர் வேள்வியி னாக்கி யாணையின்
வந்துற விடுத்ததோர் வயவெம் பூதமோ
முந்தொரு மலருளோ னிலங்கை முற்றறச்
சிந்தெனத் திருத்திய தறுகட் டெய்வமோ.

*அந்தணர், வேள்வியின் ஆக்கி, ஆணையின்*
*வந்து உற விடுத்தது ஓர் வய வெம் பூதமோ?*
*முந்து ஒரு மலர் உளோன், 'இலங்கை முற்றுறச்*
*சிந்து' எனத் திருத்திய தறுகண் தெய்வமோ?*

வேள்வி – அபிசாரயாகம். வந்துற – என்பால் வந்து சேரும்படி. முற்றுறச் சிந்தென – முழுதுமே அழிப்பாயாக என. (72)

**1115.** யாரைநீ யென்னையிங் கெய்து காரணம்
ஆருனை விடுத்தவ ரறிய வாணையால்
சோர்விலை சொல்லுதி யென்னச் சொல்லினான்
வேரொடு மமரர்தம் புகழ விழுங்கினான்.

*'யாரை நீ? என்னை இங்கு எய்து காரணம்?*
*ஆர் உனை விடுத்தவர்? அறிய ஆணையால்*
*சோர்வு இலை சொல்லுதி!' என்னச் சொல்லினான்.*
*வேரொடும் அமரர்தம் புகழ் விழுங்கினான்.*

'என் இவண் வரவு; நீ யாரை' என்று முன் தொகுத்துச் சுட்டியதையே 'ஆரை நீ, என்னை இங்கு எய்துகாரணம்' என்று வகுத்துக்கூறும்படி உசாவினன் இராவணன் என்க. என்கட்டளையாலும் சோர்வில்லாமலும் யான் அறியச் சொல்லுக. சோர்விலை – பாசப்பிணிப்பால் உண்டான தளர்ச்சியின்றி; தவறுதல் இல்லாமல் எனினும் ஆம். அமரர் புகழ்விழுங்குதலாவது – பழிப்புரையே யன்றி அவர்கள் பெற்றிருந்த புகழ்ச்சியுரை யாவும் தன்னதாக்கியதுமாம். (73)

### அனுமன் விடை கூறல் 1116—1124.

**1116.** சொல்லிய வனைவரு மல்லலென் சொன்னவப்
புல்லிய வலியினோ ரேவல் பூண்டிலேன்
அல்லியங் கமலமே யனைய செங்கணோர்
வில்லிதன் றூதன்யா னிலங்கை மேயினேன்.

சொல்லிய அனைவரும் அல்லலென்; சொன்ன அப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்;
அல்லி அம் கமலமே அனைய செங்கண் ஓர்
வில்லிதன் தூதன் யான்; இலங்கை மேயினேன்.

இராவணன் கூறியவரெல்லாம் புல்லிய வலியினோர் ஆதலின் அவர் பெயர்களைத் திருப்பிக் கூறவும் விருப்பின்றி, சொல்லிய அனைவரும் அல்லென் என்றான் மாருதி. 'நீ பிரமனிடம் வரம்பெற்றபோது இகழ்ந்து ஒதுக்கிய மானிட வில்லி ஒருவன் விடுத்த தூதனே யான்' என்றும், 'அந்த வில்லி, மனிதவுருவில் தோன்றியவனாயினும், புண்டரிகாட்சனான திருமாலின் அமிசமேயானவன்' என்பது தோற்ற 'அல்லியங்கமலமே யனைய செங்கணோர்வில்லி' என்றும் குறிப்பித்தான். தூதனாக யான் இலங்கைக்கு வந்த காரணம் இன்னது என்பது சொல்லாமலே உனக்கு விளங்கும் என்பான் 'இலங்கைமேயினேன்' என்பதனாற் பெறவைத்தான் மாருதி. இதனால், யாரை நீ? என்னை இங்கெய்து காரணம்? யார்உனை விடுத்தவர்? என்ற இராவணன் கேள்விகள் மூன்றற்கும் சுருக்கமாக விடைகூறினானாயிற்று.

அவ்வில்லி யாவன் என்பதை இனி வரும் கவிகளில் விரிவும் தெளிவுமுறக் கூறுகின்றான் அனுமன். (74)

**1117.** அனையவன் யாரென வறிதி யாதியேல்
முனைவரு மமரரு மூவர் தேவரும்
எனையவ ரெனையவர் யாவர் யாவையும்
நினைவரு மருவினை முடிக்க நின்றுளோன்.

'அனையவன் யார்?' என அறிதியாதியேல்,
முனைவரும் அமரரும் மூவர் தேவரும்
எனையவர் எனையவர் யாவர் யாவையும்
நினைவு அரும் அருவினை முடிக்க நின்றுளோன்.

அறிதி ஆதியேல் – அறியவேண்டுவாய் ஆனுல். எனையவர் எனையவர் யாவர் யாவையும் – இனவகையாலும் மேம்பாட்டாலும் எத்தனை பேர்கள் உண்டோ அவரனைவராலும், ஏனை அஃறிணைப் பிராணிகளாலும். நினைவரும் அருவினை – நினைத்தற்கும் அரிய காரியத்தை. அவ்வரியகாரியமாவது, தேவகணங்களாலும் அஃறிணைப் பிராணிகளாலும் அழிவுருதபடி பிரமனிடம் ஆதியில் இராவணன் பெற்றிருந்த வரத்தை அழித்தல். இருவினை என்பது பாட.மாயின் பெரியகாரியத்தை என்க. (75)

**1118.** ஈட்டிய வலியு மேனு
★ ளியற்றிய தவமும் யாணர்க்
கூட்டிய படையுந் தேவர்
கொடுத்தநல் வரமுங் கொட்பும்
தீட்டிய வறிவு மெய்தத்
திருத்திய பிறவு மெல்லாம்
நீட்டிய பகழி யொன்ருன்
முதலொடு நீக்க நின்ருன்.

ஈட்டிய வலியும் மேனுள் இயற்றிய தவமும் யாணர்க்
கூட்டிய படையும் தேவர் கொடுத்த நல் வரமும் கொட்பும்
தீட்டிய அறிவும் எய்தத் திருத்திய பிறவும் எல்லாம்
நீட்டிய பகழி ஒன்ருல் முதலொடும் நீக்க நின்ருன்.

வலி, தவம், படை, வரம், கொட்பு, அறிவு முதலியன (வாக நீ) திருத்தமுறப்பெற்றனவெல்லாம், பகழியொன்ருல், முடிக்க நின்றவன் (அவன்) என்க.

ஈட்டுதல் - சம்பாதித்தல். யாணர் - புதியனவாக. கொட்பு - கோட்பாடு. முதலொடு – அடியோடு. (76)

**1119.** தேவரும் பிறரு மல்லன் றிசைக்களி றல்லன் றிக்கிற்
காவல ரல்ல னீசன் கயிலையங் கிரியு மல்லன்
மூவரு மல்லன் மற்றை முனிவரு மல்ல னெல்லைப்
பூவல யத்தை யாண்ட புரவலன் புதல்வன் போலாம்.

*தேவரும் பிறரும் அல்லன்; திசைக்களிறு அல்லன்; திக்கில்*
*காவலர் அல்லன்; ஈசன் கயிலேயங்கிரியும் அல்லன்;*
*மூவரும் அல்லன்; மற்றை முனிவரும் அல்லன்; எல்லேப்*
*பூவலயத்தை ஆண்ட புரவலன் புதல்வன் போல் ஆம்.*

திசைக்களிறுகள், முன்பு இராவணனுல் கொம்புகள் முறிபட்டுத் தோற்றவையாதலாலும்; ஈசன் கயிலேயங்கிரி, அவ்வரக்கனுல் பெயர்த்துத் தூக்கப்பட்டதனுலும் உயிருள்ளதும் இல்லதுமாகிய அவ்வஃறிணைப் பொருள்கள் வேற்றுருவெடுத்துப் பழிவாங்கப் பகைத்துவந்தனபோலும் என்று கருதவேண்டா எ – று.

'வாரணம் பொருதமார்பும் வரையினை எடுத்ததோளும்' (யுத்த-முதனுட் போர்-1) எனமேலும் வாரணமும் கயிலேயும் இராவணனுற்றற்குக் கீழ்ப்பட்ட நிலே கூறப்பட்டவாறு காண்க. (77)

**1120.** போதமும் பொருந்து கேள்விப்
 புரையறு பயனும் பொய்தீர்
மாதவஞ் சார்ந்த தீரா
 வரங்களு மற்று முற்றும்
யாதவ னினேந்தா னன்ன
 பயத்தன வேது வேண்டின்
வேதமு மறனுஞ் சொல்லு
 மெய்யற மூர்த்தி வில்லோன்.

*போதமும் பொருந்து கேள்விப் புரைஅறு பயனும் பொய் தீர்*
*மாதவம் சார்ந்த தீரா வரங்களும் மற்றும் முற்றும்*
*யாது அவன் நினேந்தான் அன்ன பயத்தன ஏது வேண்டின்*
*வேதமும் அறனும் சொல்லும் மெய் அற மூர்த்தி வில்லோன்.*

போதம் – கற்றறிந்த ஞானம் ; அந்த ஞானத்தை வளர்ப்பது கேள்வி; அஃதாவது நூற்பொருளேக் கற்றறிந்தார் கூறக் கேட்டலாம். அக்கேள்வி, கற்றவழி அதனினுய அறிவைப் பெருக்குவதும், கல்லாதவழியும் அதனே உண்டாக்குவது மாகும்; அக்கேள்வியின் பயன்கள் நற்குண நற்செய்கைகளாம். மாதவம் சார்ந்த தீரா வரங்களும் - பெருந்தவத்தொடுகூடிய நற்பயனளித்தலிற் றவருத வரங்களும். மற்றும் முற்றும் – மற்றுள்ளன எல்லாம். அக்கோமகன் நினேத்தவை எவையோ, அப்பயன்களேயே விளேப்பன

ஆகும். இவற்றின் காரணம் அறிய நீ விரும்பினுல், 'வில்லி' என்ற நான் கூறிய அவ்வீரன், வேதமும் அறக்கடவுளும் புகழ்ந்து சொல்லும் உண்மைத் தருமரூபியான பரம்பொருளென்பதேயாம் எ – று. (78)

**1121.** காரணங் கேட்டி யாயிற்
கடையிலா மறையின் கண்ணும்
ஆரணங் காட்ட மாட்டா
வறிவினுக் கறிவு மன்னேன்
போரணங் கிடங்கர் கவ்வப்
பொதுநின்று முதலே யென்ற
வாரணங் காக்க வந்தா
னமரரைக் காக்க வந்தான்.

காரணம் கேட்டி ஆயில், கடை இலா மறையின் கண்ணும் ஆரணம் காட்ட மாட்டா அறிவினுக்கு அறிவும் அன்னேன்; போர் அணங்கு இடங்கர் கவ்வப் பொதுநின்று 'முதலே' என்ற வாரணம் காக்க வந்தான் அமரரைக் காக்க வந்தான்.

(இவ்வாறு தசரத புத்திரனுகப் பரம் பொருள் தோன்றுதற்குக்) காரண மென்ன என்று கேட்பாயானுல்; கடையிலா மறையின் கண் ஆரணமும் – முடிவிலாத வேதங்களிடத்துள்ள உபநிடதங்களும். மறையின்கண்ணும் என்ற உம்மையை ஆரணத்துடன் கூட்டுக; 'நல்லினத்தி னூங்குந் துணையில்லை' (திருக்குறள்–400) என்புழிப்போல. ஆரணம் - வேதத்தின் ஞானகாண்டமான உபநிடதம். அதனுலும் இத்தன்மையன் என்று முழுவதும் அறிவிக்கமுடியாதவனும், எல்லாப்பொருட்டன்மைகளையும் அறிகின்ற அறிவுக்கும் அறிவானவனும் ஆகிய அப் பரம்பொருள் எ - று.

காட்டுதல் – அறிவித்தல் ; 'காணுதாற் காட்டுவான்' என்புழிப்போல. முதலை யொன்று தன்னைக் கவ்வி வருத்தியபோது, 'ஆதிமூலமே' என்று பொதுப்பட அழைத்த கசேந்திரனைக் காக்கவந்த பரம்பொருள், சிறப்பாகத் தங்களைக் காத்தல் வேண்டி அபயமிட்ட அமரரது துயர் நீக்க இப்போது அவதரித்தான் என்க. "அரும்பரமே பரமேயென், றெடுத்தொருவாரணமழைப்ப நீயோ அன் றேனென்ருய்" (49) எனச் சாப நீங்கிய விராதன் கூற்றுலும் இக்கருத்தே கூறப்படுதல் ஒப்பிடுக.

கேட்டி ஆயின் – கேட்பாயானுல், கடையிலா – முடிவு இல்லாத (அனந்தமான). மறையின்கண் ஆரணமும் – வெதத்துள்ள உபநிடதங்களும். ஈண்டு, ஆரணம் – உபநிடதம் என்க. போர் அணங்கு இடங்கர் – போரில் வருத்தம் விளைத்த முதலை. வாரணம் - கசேந்திரன். (79)

**1122.** மூலமு நடுவு மீறு
மில்லதோர் மும்மைத் தாய
காலமுங் கடந்து நின்ற
காரணன் கைவி லேந்திச்
சூலமுந் திகிரி சங்குங்
கரகமுந் துறந்து தொல்லை
ஆலமு மலரும் வெள்ளிப்
பொருப்பும்விட் டயோத்தி வந்தான்.

மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய
காலமும் கடந்துநின்ற காரணன், கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்பொருப்பும் விட்டு, அயோத்தி வந்தான்.

'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் காலம்' என்றது, காலம் நித்திய மாதலால் என்க. மும்மைத்து ஆய காலம், இறப்பு நிகழ்வு எதிர்வுகள். அவற்றைக் கடந்துநின்றகாரணன் என்றது, காலக்கழிவினாலுண்டாம் வேறுபாடுகளை உடையனல்லன் என்றபடி; சூலம் – சிவனுக்கும், திகிரி சங்குகள் திருமாற்கும், கரகம் பிரமனுக்கும் உரியன. கரகம் - குண்டிகை; இதுவே பிரமகுலத்தார்க்கும் உரிய தாம்; 'விரிகுடை தண்டு குண்டிகை காட்டம்' என்ப (சிலப் 22. 31). திரிமூர்த்தியுருவமான பரம்பொருள் அம்மூர்த்திகளின் படைகளைத் துறந்ததோடு, அமர்ந்த இடங்களையும் நீங்கி அயோத்தியில் அவதரித்தது என்பார், 'ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்திவந்தான்' என்றார். வந்தான் – அவதரித் தான்; "வந்தாய் போல வாராதாய் வாராதாய்போல் வருவானே" (திருவாய்மொழி) என்புழிப்போல. (80)

**1123.** அறந்தலை நிறுத்தி வேத
மருள்சுரந் தறைந்த நீதித்
திறந்தெரிந் துலகம் பூணச்
செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோ
ரிடர்துடைத் தேக வீண்டுப்
பிறந்தனன் றன்பொற் பாத
மேத்துவார் பிறப்ப றுப்பான்.

அறம் தலை நிறுத்தி, வேதம் அருள்சுரந்து அறைந்த நீதித்
திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்து உக நூறித் தக்கோர் இடர் துடைத்து ஏக, ஈண்டுப்
பிறந்தனன். தன் பொன் பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான்.

ஏத்துவார் பிறப்பறுப்பான் (ஆகிய) அப்பரமன், நீதித்திறம் தெரிந்து உலகம் பூண அறம் தலைநிறுத்தி, செந்நெறி செலுத்தி, தீயோர் உக நூறி, தக்கோர் இடர் கெடுத்து ஏக, ஈண்டுப் பிறந்தனன் என்க.

தலைநிறுத்தி - நிலைநிற்கச் செய்து. வேதம் அருள் சுரந்து அறைந்த நீதி – வேதங்கள் அருளோடு ஓதிய நீதிகளை. பூண - மேற்கொள்ள. செம்நெறி - ஒழுங்கான மார்க்கங்களில். இறந்து உக நூறி - அழிந்தொழியக் கொன்று. இனி விண்டு என்று பாடங்கொள்ளின் விஷ்ணுவே பிறந்தனன் என்க. (81)

**1124.** அன்னவற் கடிமை செய்வே
ைமமு மனும னென்பேன்
நன்னுத றன்னைத் தேடி
நாற்பெருந் திசையும் போந்த
மன்னரிற் றென்பால் வந்த
தானைக்கு மன்னன் வாலி
தன்மக னவன்றன் றூதன்
வந்தனென் றனியே னென்றான்.

'அன்னவற்கு அடிமை செய்வேன், நாமமும் அனுமன் என்பேன்,
நல்நுதல் தன்னைத் தேடி நால் பெரும் திசையும் போந்த
மன்னரில், தென்பால் வந்த தானைக்கு மன்னன், வாலி
தன் மகன், அவன் தன் தூதன், வந்தனென் தனியேன்' என்றான்.

அன்னவற்கு – சக்கரவர்த்தி திருமகனாக அவதரித்த அப்பெருமானுக்கு. தேடிப் போந்த மன்னராவார் :—சுடேணன், சதவலி, வினதன், அங்கதன் என்போர் (கிட்கிந்தா – நாடவிட்ட). இவருள் தெற்குத் திசையில் தேடிவந்த வாலி மகன் தூதன் யான்; தனியனாக வந்தேன் என்றான் என்க.

அடிமை அவதார மூர்த்திக்கும், தூதுவத் தன்மை, அம்மூர்த்தியின் ஏவல்புரியும் தலைவர்க்கும் உரிமையாக்கி, அடியார்க்கு அடியேன் என்று குறிப்பிட்டான் மாருதி என்பது கருத்து.

நன்னுதல் - சீதாபிராட்டி. மன்னரில் தானைக்கு மன்னனான வாலி மகன் என்க. துணைவலியில்லாமலே இச்செயல்கள் புரிந்தவன் என்பது குறிக்கத் 'தனியேன்' என்று, 'தன்னுடை யாற்றல் உணரானிடைக்' கூறினன் அனுமன். (82)

## இராவணன் வாலியின் நலங்களைப் பற்றி வினவக்கேட்டு அனுமன் நகுதல்

**1125.** என்றலு மிலங்கை வேந்த
னெயிற்றின மெழிலி நாப்பண்
மின்றிரிந் தென்ன நக்கு
வாலிசேய் விடுத்த தூத
வன்றிற லாய வாலி
வலியன்கொ லரசின் வாழ்க்கை
நன்றுகொ லென்ன லோடு
நாயகன் றூத னக்கான்.

என்றலும் இலங்கை வேந்தன், எயிறு இனம் எழிலி நாப்பண்
மின் திரிந்தென்ன நக்கு, 'வாலிசேய் விடுத்த தூத!
வன் திறல் ஆய வாலி வலியன்கொல்! அரசின் வாழ்க்கை
நன்றுகொல்!' என்னலோடும் நாயகன் தூதன் நக்கான்.

என்றலும் இலங்கைவேந்தன் நக்கு, வாலிசேய் விடுத்த தூத ! வாலி வலியன் கொல்? அரசின்வாழ்க்கை நன்றுகொல்? என்னலோடும் தூதன் நக்கான் என்க.

எழிலி நாப்பண் மின் திரிந்து என்ன எயிற்றினம் (தோன்ற) நக்கு - மேகங்களின் இடையே மின்னல் மிளிர்ந்ததுபோலப் பல் வரிசை வெளிப் படச் சிரித்து. மேகங்கள் இராவணனது மேனிக்கும், மின்னல்கள் அவனது பத்து முகங்களினின்று தோன்றிய பல்வரிசைகட்கும் உவமையாயின. இராவணனது சிரிப்பு, தன் தோழனுடைய சிறுவன் ஒருவனது தூதனாக வந்தேன் என்றதனால் உண்டாயது. அவ்வரக்கன் பின்பு வினவியவை அச்சம் காரணமாக உண்டானமையின் அனுமன் சிரிக்கலாயினன் என்க. 'வன்திறலாய வாலி' என்ற அவன் கூற்றும் இக் கருத்தே புலப்படுத்தும். (83)

## வாலி இறந்த செய்தியை அனுமன் கூறுதல்

**1126.** அஞ்சலை யரக்க பார்விட்
டந்தர மடைந்தா னன்றே
வெஞ்சின வாலி மீளான்
வாலும்போய் விளிந்த தன்றே
அஞ்சன மேனியான்ற னடுகணை
யொன்றுன் மாழ்கித்
துஞ்சின னெங்கள் வேந்தன்
சூரியன் றோன்ற லென்றான்.

*'அஞ்சலை. அரக்க! பார்விட்டு, அந்தரம் அடைந்தான் அன்றே*
*வெஞ்சின வாலி, மீளான்; வாலும் போய் விளிந்தது; அன்றே,*
*அஞ்சன மேனியான் தன் அடுகணை ஒன்றால் மாழ்கித்*
*துஞ்சினன். எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல்' என்றான்.*

'அரக்க! அஞ்சலை, வெஞ்சின வாலி அன்றே பார்விட்டு அந்தரம் அடைந்தான்; வாலும்போய் விளிந்தது; அஞ்சன மேனியான் கணை யொன்றினால் துஞ்சினன். அன்றே சூரியன் தோன்றல் எங்கள் வேந்தன்' (ஆயினன்) என்றான்.

அந்தரம் – விண்ணுலகு. ஒருகால் தேவருடன் போர்புரியும் நோக்குடன் விண்ணுலகடைந்தனனோ என்று கருதாதிருக்க, "துஞ்சினன் வாலி மீளான்" என்றும், உன்னை முன்பு இறுகக் கட்டி அலைத்த வாலும் அவனுடனே போய்விட்டது என்பான், "வாலும்போய் விளிந்தது" என்றும், இவ்வாறு வன்றிறலாய வாலி வருத்தமுற்று மாண்டது மேற்கூறிய அவதாரமூர்த்தியின் அம்பொன்றால் என்பான் 'கணையொன்றால் மாழ்கித் துஞ்சினன்' என்றும் கூறினான். இராவணன் வாலியின் வாலாற் கட்டுண்டு வருந்திப் பின் அவனிடம் இரந்து தப்பிய வரலாற்றை உத்தர காண்டத்து வாலிவாலாற் கட்டுண்ட படலத்துட் காண்க. இரண்டாம் அடியின் ஈற்றிலுள்ள 'அன்றே' என்பதனை, சூரியன் தோன்றல் வேந்தன் (ஆயினன்) என்ற தொடருடன் இயைக்க. சூரியன் தோன்றல் – சுக்கிரீவன். கடும் பகைகொண்டு நெடுங் காலம் தன்னை அலைத்த வாலியின் முடிவுக்குக் காத்திருந்தவன் அவனிளவல் என்பதனை 'அன்றே' என்ற சொல் குறிப்பது காணலாம். அன்றே எங்கள் வேந்தன் 'ஆயினன்' என ஈற்றில் ஒருசொல் வருவித்துரைக்க. (84)

### இராவணன் மற்றும் சில வினவுதல்

**1127.** என்னுடை யீட்டி னலவ்
வாலியை யெறுழ்வா யம்பால்
இன்னுயி ருண்ட திப்போ
தியாண்டையா னிராம னென்பான்
அன்னவன் றேவி தன்னை
யங்கத னாட லுற்ற
தன்மையை யுரைசெய் கென்னச்
சமீரணன் றனயன் சொல்வான்.

*'என் உடை ஈட்டினல் அவ்*
*வாலியை எறுழ்வாய் அம்பால்*
*இன் உயிர் உண்டது? இப்போது*
*யாண்டையான் இராமன் என்பான்?*
*அன்னவன் தேவி தன்னை*
*அங்கதன் நாடலுற்ற*
*தன்மையை உரைசெய்க' என்னச்*
*சமீரணன் தனயன் சொல்வான்.*

என்னுடை - எந்த வகையாற் பெற்ற. ஈட்டினல்-வலிமைகொண்டு. ஈடு - வலிமை. 'ஒரு கரியீடழித்து' (தேவாரம்) என்பது காண்க. எறுழ் வாய் அம்பு - வலிய நுனியுடைய அம்பு. இராமன் என்பான் வாலியை அம்பால் உயிருண்டது என்னுடை ஈட்டினல் என இயையும். சமீரணன்- வாயுதேவன். யாண்டையான் - எங்குள்ளான். (85)

### அனுமன் விடை பகர்தல் 1128—1129.

**1128.** தேவியை நாடி வந்த
செங்கணற் கெங்கள் கோமான்
ஆவியொன் றாக நட்டா
னருந்துயர் துடைத்தி யென்ன
ஓவியர்க் கெழுத வொண்ணு
வுருவத்த னுருமை யோடும்
கோவியற் செல்வ முன்னே
கொடுத்துவா லியையுங் கொன்றான்.

'தேவியை நாடி வந்த செங்கணற்கு எங்கள் கோமான்
ஆவி ஒன்றாக நட்டான்; 'அருந்துயர் துடைத்தி' என்ன,
ஓவியர்க்கு எழுத ஒண்ணா உருவத்தன் 'உருமையோடும்
கோ இயல் செல்வம் முன்னே கொடுத்து வாலியையும் கொன்றான்'.

செங்கணான் – இராமன். நட்டான் – நட்பினனானான். அருந்துயர் – வாலி படுத்திய பாடுகளால் தான் அடைந்த துன்பங்கள்; அஃதாவது சுக்கிரீவனை நாடு நகரங்களிலும் வேறெந்த இடங்களிலும் தங்கவொட்டாமல் அலைந்து திரிய விட்டதும், அவன் மனைவியைத் தானே கவர்ந்ததும் ஆகியவை. முன்னே கொடுத்து – வாக்களித் துதவி. ஓவியர் – சித்திரகாரிகள். உருமை – சுக்கிரீவன் மனைவி. கோவியல் செல்வம் – அரசியல் சம்பத்து. (86)

**1129.** ஆயவன் றன்னொ டாண்டுத்
திங்களோர் நான்கும் வைகி
மேயவெஞ் சேனை சூழ
வீற்றினி திருந்த வீரன்
போயினி நாடு மென்னப்
போந்தனம் புகுந்த தீதென்
றேயவன் றூதன் சொன்னா
னிராவண னிதனைச் சொன்னான்.

'ஆயவன் தன்னொடு ஆண்டுத் திங்கள் ஓர் நான்கும் வைகி
மேய வெம் சேனை சூழ, வீற்று இனிது இருந்த வீரன்,
போய் இனி நாடும் என்னப் போந்தனம், புகுந்தது ஈது' என்று
ஏயவன் தூதன் சொன்னான். இராவணன் இதனைச் சொன்னான்.

ஆயவன் தன்னோடு – நண்பன் ஆகிய சுக்கிரீவனோடு. ஆண்டு – அவனது நகர்ப்பக்கத்தே. திங்கள் ஓர் நான்கும் என்றது, மழைக் காலமான ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மாதங்களை. தவத்தோர் தங்கள் விரதங்களை இடம் பெயராது இருந்து அனுட்டித்தற்குரிய காலமாதலால், அவ்விரதம் 'சாதுர்மாசியம்' எனப்படும். அதனால் 'திங்களோர் நான்கும்' என முற்றும்மை கொடுக்கப்பட்டது. சேனை சூழ வீற்றினிதிருந்த வீரன் - சுக்கிரீவனால் திரட்டப்பட்ட வானரப் படைகள் தன்னைச் சூழ்ந்திருக்கச் சிறப்புடன் நன்கு இருந்த இராமபிரான். நாடும் – தேடுங்கள். புகுந்தது ஈது - நடந்த செய்தி இதுவாகும். ஏயவன் – ஏவப்பட்ட அனுமன். (87)

இராவணன் இகழ்ந்துரைத்தல் 1130—1131.

1130. உங்குலத் தலைவன் றன்னே
டொப்பிலா வுயர்ச்சி யானை
வெங்கொலை யம்பிற் கொன்றாற்
காட்டொழின் மேற்கொண் டீரேல்
எங்குலப் புறுநுஞ் சீர்த்தி
நும்மொடு மியைந்த தென்றால்
மங்குலிற் பொலிந்த ஞால
மாதுமை யுடைத்து மாதோ.

'உம் குலத்தலைவன் தன்னோடு
ஒப்பு இலா உயர்ச்சியானை
வெம் கொலை அம்பில் கொன்றாற்கு
ஆள் தொழில் மேல் கொண்டீரேல்,
எங்கு உலப்புறும் நும் சீர்த்தி?
நும்மொடும் இயைந்தது என்றால்
மங்குலில் பொலிந்த ஞாலம்
மாதுமை உடைத்து. மாதோ'.

உங்குலத் தலைவன் தன்னேடு ஒப்பிலா உயர்ச்சியோனை – உங்கள் குலத்துக்குத் தலைவனுதலோடு ஒப்பற்று உயர்ந்தவனுகவும் உள்ளவனை (வாலியை); கொன்றாற்கு ஆள் தொழில் மேற்கொண்டீரேல் – கொன்ற இராமனுக்கு அடிமையாதற் றொழிலையும் மேற்கொண்டீர்களானுல். எங்கு உலப்புறும் நும் சீர்த்தி–உங்கள் புகழ் எங்கே சென்று முடிவதோ? அப்புகழ் உங்களோடு இயைவதே என்று உலகம் கூறுமானுல், அது பெண் தன்மை உடையதேயாம் எ – று.

ஆள் தொழில் – அடிமைத் தன்மை. உலப்புறுவது எங்கு – முடிவுறுவது எங்கே? முற்றும் அழிந்தொழியும் என்றபடி. "எங்குலக்க ஓதுவனே" (திருவாய் 3, 1, 5) என்புழிப்போல. மாதுமை – மாதரின் தன்மை; பெண்டன்மை. "மாதுமைக் குணமான ஸௌந்தர்யாதிகள்" என்ப (திருவாய், 4, 2, 7 பன்னீராயிரப்படி). மங்குலிற் பொலிந்த ஞாலம் – மேகங்களால் பொலிவு பெற்ற இவ்வுலகம்; என்றது மழையால் வளம்பெற்றதாயினும் அறிவுவளத்தால் ஏழைமையுடையதாம் (எ – று) (88)

1131. தம்முனைக கொல்வித் தன்னுற்
கொன்றவற் கன்பு சான்ற
உம்மினத் தலைவ னேவ
யாதெமக் குணர்த்த லுற்ற
தெம்முனைத் தூது வந்தா
யிகல்புரி தன்மை யென்னை
நொம்மெனக் கொல்லா நெஞ்ச
மஞ்சலை நுவறி யென்றான்.

'தம்முனைக் கொல்வித்து, அன்னுற்
கொன்றவற்கு அன்பு சான்ற
உம் இனத் தலைவன் ஏவ, யாது
எமக்கு உணர்த்தல் உற்றது?
எம் முனைத் தூது வந்தாய்
இகல்புரி தன்மை என்னை?
நொம் எனக் கொல்லாம்! நெஞ்சம்
அஞ்சலை, நுவல்தி' என்றான்.

தம்முனைக் கொல்வித்து – தன் தமையனைக் கொல்வித்து. அன்னுற் கொன்றவற்கு அன்பு சான்ற – அம்முன்னேனைக் கொன்ற இராமனிடம் அன்புமிக்க. கொன்றவற்கு என்ற நான்கனுருபு ஏழாவதன்கண் வந்தது; 'கிழங்கு மணற்கின்ற முளை' என்புழிப்போல. எம்முனை – எமது முன்னை. முன்னை என்பது இடைத் தொக்கது. தூதனுக வந்த நீ, என்பால் நேரில் வந்து தூதுமொழி கூருமல் போர்விளைத்த காரணம் என்னை? நொம்மென – குறிப்புச்சொல்; ஆராயாது விரைவாக என்றபடி. 'நும் மினைக் கொல்லாம்' என்ற பாடத்துக்கு 'நும்மைக் கொன்றுவிட மாட் டோம்' என்று கொள்க. ஈண்டு 'இன்' சாரியையாம். நுவறி – சொல்லுக. (89)

அனுமன் ஆராய்ந்து சில கூறத்தொடங்குதல்

1132. துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களைப்
★ புணர்த்து நோக்கிப் பொதுநின்ற நீதியை
உணர்த்தி னலை துறுமென வுன்னரும்
குணத்தி னுனு மினையன கூறினன்.

துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களைப்
புணர்த்து நோக்கிப் 'பொது நின்ற நீதியை
உணர்த்தினால் அது உறும்' என உன்னரும்
குணத்தினானும், இனையன கூறினான்.

உன் அரும் குணத்தினானும் - இத்தகையோன் என்று நினைத்தற்கும் அரிய குண விசேடங்களையுடைய அநுமனும். உன்னுதல் - நினைத்தல். துணர்த்த தாரவன் - பூங்கொத்துக்களாலாகிய மாலையணிந்துள்ள இராவணன். புணர்த்து நோக்கி - ஒன்றுசேர்த்துப் பார்த்து. பொது நின்ற நீதியை - உலகியற்குப் பொதுவான நீதிமொழிகளை. உறும் - தக்கதாம். (90)

அனுமன் கூறிய அறிவுரைகள் 1133—1148.

1133. தூது வந்தது சூரியன் கான்முளை
ஏது வொன்றிய நீதி யியைந்தன
சாது வென்றுணர் கிற்றியேற் றக்கன
கோதி றந்தன நின்வயிற் கூறுவாம்.

தூது வந்தது; சூரியன் கான்முளை
ஏது ஒன்றிய, நீதி இயைந்தன,
சாது என்று உணர்கிற்றியேல், தக்கன,
கோது இறந்தன, நின்வயின் கூறுவாம்.

சூரியன் கான்முளை(யின்) தூதுவந்தது; நீதி இயைந்தன, தக்கன, கோது இறந்தன, சாதுவென்று உணர்கிற்றியேல் கூறுவாம் - என இயைக்க. 'ஞாயிறன்ன வாய்மையும்' என்றபடி, வாய்மை தவறாதவன் மைந்தன் என்பார் 'சூரியன் கான்முளை' என்றார். தூதுவந்தது - அவன் விடுத்த தூதனாக நான் வந்துளேன் எ-று.

கான்முளை - புத்திரன். ஏது ஒன்றிய நீதி - காரணங்களோடுங் கூடிய நீதிநெறி. தக்கன - உன் தகுதிக்கு ஏற்றவை; கோது இறந்தன - குற்றம் அற்றவை; (ஆகிய) நீதி இயைந்தனவற்றை என இயையும். சாது என்று உணர்கிற்றியேல் - நல்லவை என்று நீ உணரக் கூடுமானால். (91)

1134. வறிது வீழ்த்தனை வாழ்க்கையை மன்னறம்
சிறிது நோக்கலை தீமை திருத்தினாய்
இறுதி யுற்றுள தாயினு மின்னுமோர்
உறுதி கேட்டி யுயிர்நெடி தோம்புவாய்.

வறிது வீழ்த்தனை வாழ்க்கையை; மன் அறம்
சிறிதும் நோக்கலை; தீமை திருத்தினாய்;
இறுதி உற்றுளது; ஆயினும், இன்னும் ஓர்
உறுதி கேட்டி; உயிர் மடிது ஓம்புவாய்!

மன் அறம் - அழியாதுநிற்கும் தருமநெறி. திருத்தினாய் - வளர்த்து விட்டனை. இறுதியுற்றுளது-அறம் நோக்காமையாலும் தீமைகளைத் திருத்தியதனாலும் முடிவு காலமே உன்னை அடைந்துள்ளது. ஆயினும் நான் கூறும் உறுதி கேட்பாயாக. நெடுங்காலம் நீ இன்னும் வாழ்வாயாக. (92)

1135. போயிற் றீர்நும் புலன்வென்று போற்றிய
வாயிற் றீர்வரி தாகிய மாதவம்
காயிற் றீர்வருங் கேடருங் கற்பினாள்
தீயிற் றூய வளைத்துயர் செய்ததால்.

'போய் இற்றீர்; நும் புலன் வென்று போற்றிய
வாயில் தீர்வு அரிது ஆகிய மா தவம்,
காயில், தீர்வு அரும் கேடு அரும் கற்பினாள்
தீயில் தூயவளைத் துயர் செய்ததால்.'

கற்பினாள் தூயவளைத் துயர்செய்ததால் நும் மாதவம் போய் இற்றீர் என்க. புலன் - ஐம்புல நுகர்ச்சி. அவற்றை வென்று போற்றியதும், வாயினாற் சொல்லி அடங்காத (பெருமையுடைய)துமாகிய மாதவம் என்க. சினமுற்றால் தீர்க்க முடியாத (தீமை விளைப்ப)தும் கேடு உறாததுமாகிய கற்பு உடையவளும், தீப்போன்ற தூயவளுமான சிதை எனப் பின்னிரண்டடிகட்குப் பொருள்கொள்க. (93)

1136. இன்று வீந்தது நாளைச் சிறிதிறை
நின்று வீந்தத லாலிறை நிற்குமோ
ஒன்று வீந்தது நல்லுண ரும்பரை
வென்று வீங்கிய வீக்க மிகுத்ததால்.

'இன்று வீந்தது; நாளைச் சிறிது இறை
நின்று வீந்தது; அல்லால் இறை நிற்குமோ?
ஒன்று வீந்தது, நல் உணர் உம்பரை
வென்று வீங்கிய வீக்கம் மிகுத்ததால்.'

உம்பரை வென்று விங்கிய விக்கம் மிகுத்ததால், இன்று விந்தது சிறிது, இறை நின்று விந்தது, நிறை நிற்குமோ ; ஒன்று வீந்தது என்க.

விங்கிய விக்கம் – செருக்கு மிகுதலால் உண்டான பூரிப்பு. (அது) இன்று நிகழ்ந்த அழிவால் நாளைச் சிறிதே உள்ளது. அச்சிறிதும் நின்றழிந்தே திருமல்லாது நிறைவுடன் நிற்கப்போவதோ. உங்கள் பெருமை முழுதும் நிச்சயமாக அழிந்தே திரும் எ–று.

இறை நின்று விந்தது, விரைவுப் பொருள்பட இறந்த காலத்தில் வந்தது ; நிற்பதுபோலத் தோன்றினும் அழிந்தே திரும் என்றபடி. ஒன்று என்பது நிச்சயம் என்ற பொருளது. (94)

**1137.** தீமை நன்மையைத் தீர்த்தலொல் லாதெனும்
வாய்மை நீக்கினை மாதவத் தால்வந்த
தூய்மை தூயவ டன்வயிற் றேன்றிய
நோய்மை யாற்றுடைக் கின்றனை நோக்கலாய்.

" தீமை நன்மையைத் தீர்த்தல் ஒல்லாது " எனும்
வாய்மை நீக்கினை ; மாதவத்தால் வந்த
தூய்மை தூயவள் தன்வயின் தோன்றிய
நோய்மையால் துடைக்கின்றனை ; நோக்கலாய்'.

ஒல்லாது – கூடாதது. " தீமையானது நன்மைகளைப் போக்க முடியாது " என்ற முதியோர் வாய்மொழியை மறந்து மாறுபட்டனை; பெரிய தவஞ்செய்து பெற்ற உன் பரிசுத்த நிலைகளைத் தூயவளான பிராட்டியிடத்து உண்டான காமநோயினால் ஆராயாமலே துடைக்கின்றாய் எ – று. தூயவள் தன்வயின் தோன்றிய நோய்மை – தூயவளான பிராட்டியைக் குறித்து உண்டான காமநோய். (95)

**1138.** திறந்தி றம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்த மதியின் மயங்கினார்
இறந்தி றந்திழிந் தேறுவ தேயலால்
அறந்தி றம்பின ராருள ராயினார்.

' திறம் திறம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்தம் மதியின் மயங்கினார்,
இறந்து இறந்து இழிந்து ஏறுவதே அலால்,
அறம் திறம்பினர் ஆர் உளர் ஆயினார் ?'

திறம் திறம்பிய காமச் செருக்கினால் - முறைமை தவறிய காமக்களிப்பால் : அக்களிப்பு பிறனில்விழைதல் முதலியனவாம். மறந்து – நல்வழியினை மறந்துவிட்டு. தங்கள் தங்கள் அறிவே நேர்மையானது என்று மயங்கினார் என்பது இரண்டாமடியின் பொருள். இறந்து இறந்து இழிந்து ஏறுவதேயலால் - செத்துச் செத்தும் இழிந்தும் ஏறியும் இவ்வாறு மாறி மாறி வருவதன்றி; அழியா வாழ்வுடையரானவர் யாவர் உளர் எ – று. திறம்புதல் – மாறுபடுதல். (96)

**1139.** நாமத் தாழ்கடன் ஞாலம் புரந்தவர்
ஈமத் தான்மறைந் தாரிள மாதர்பாற்
காமத் தாலிறந் தார்களி வண்டுறை
தாமத் தாரின ரெண்ணினுஞ் சால்வரோ.

'நாமத்து ஆழ்கடல் ஞாலம் புரந்தவர்
ஈமத்தால் மறைந்தார், இளமாதர் பால்
காமத்தால் இறந்தார், களிவண்டு உறை
தாமத் தாரினர், எண்ணினும் சால்வரோ?'

ஞாலம் புரந்தவர், தாமத்தாரினர் ஈமத்தால் மறைந்தார் (உம்) காமத்தால் இறந்தார் (உம்) எண்ணினுக்கு அடங்கினவரோ என்க.

நாமத்து ஆழ்கடல் – அச்சம் விளைக்கும் ஆழ்ந்த கடல். வாமம் – சத்திவழிபாடு ; ஈண்டு அதற்குரிய கள்ளை உணர்த்தியது. "வாமக்கள்ளைக் குடித்தவர் போலே" என்பர் பின்னோரும் (குற்று. குறவஞ்சி 105). சால்வரோ – அமைந்தவரோ (அடங்கினவர் அல்லர் என்றபடி). தாமத்தாரினர் - ஒழுங்காக அமைந்த மாலை யணிந்தவர் ; "தடமலர்த் தாமமாலை (சிவகசிந். 1358) என்புழிப்போல ; பூ - எனினுமாம் (பிங்). (97)

**1140.** பொருளுங் காமமு மென்றிவை போக்கிவே
றிருளுண் டாமென வெண்ணல ரீதலும்
அருளுங் காதலிற் றீர்தலு மல்லதோர்
தெருளுண் டாமென வெண்ணலர் சீரியோர்.

'பொருளும் காமமும் என்று இவை போக்கி, வேறு
இருள் உண்டாம் என எண்ணலர்; ஈதலும்
அருளும் காதலில் தீர்தலும் அல்லது ஓர்
தெருள் உண்டாம் என எண்ணலர் சீரியோர்.'

போக்கி - தவிர்த்து, ஒழிய. கண்ணை மறைப்பதில் பொருளும் காமமுமே கொடியவை என்பார் "வேறு இருளுண்டாமென எண்ணலர்" என்றார். ஈதலும் அருளலும் காமக் காதலின்மையும் அல்லது அகத்தெளிவுதருவது வேறில்லை எ – று.

எண்ணலர் என்ற இரண்டிற்கும் சிரியோர் என்பது எழுவாய். (98)

**1141.** இச்சைத் தன்மையி னிற்பிற ரில்லினை
நச்சி நாளு நகையுற நாணிலன்
பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉம்
கொச்சை யாண்மையுஞ் சிர்மையிற் கூடுமோ.

'இச்சைத் தன்மையினில் பிறர் இல்லினை
நச்சி, நாளும் நகை உற, நாண் இலன்,
பச்சை மேனி புலர்ந்து, பழிபடூஉம்
கொச்சை ஆண்மையும், சிர்மையில் கூடுமோ?'

இச்சைத் தன்மையினில் – காம குணத்தால். இல் - மனையாள். நகையுற – பிறர் சிரிக்க. பச்சை மேனி புலர்ந்து - காமதாபத்தால் தம் பசுமையான உடல் வாடப்பெற்று. கொச்சை ஆண்மையும் – இழிவான ஆண் தன்மையும்; "பேசுவது மானம் இடைபேணுவது காமம்" (இராவணன். மந். 51) என்று இக்கருத்தே படப் பின்னரும் கூறப்படுதல் காண்க. (99)

**1142.** ஓத நீருல காண்டவ ருன்றுணைப்
போத நீதிய ராருளர் போயினர்
வேத நீதி விதிவழி மேல்வரும்
காத னீயறத் தெல்லை கடத்தியோ.

'ஓதநீர் உலகு ஆண்டவர் உன் துணைப்
போத நீதியர் ஆர் உளர்? போயினர்
வேத நீதி விதிவழி மேல்வரும்
காதல் நீ, அறத்து எல்லை கடத்தியோ?'

'உலகாண்டவர் போயினர், (உள்) உன் துணைப் போத நீதியர் யார் உளர்?' என்க. போத நீதியர் – நீதி போதத்தவர் – நீதி அறிவுடையார். மேல்வருதல் முன்னேறிச்செல்லுதல். அறத்து எல்லை – தருமத்தின் வரம்பு. (100)

**1143.** வெறுப்புண் டாய வொருத்தியை வேண்டினல்
மறுப்புண் டாயபின் வாழ்கின்ற வாழ்வினின்
உறுப்புண் டாய்நடு வோங்கிய நாசியை
அறுப்புண் டால தழகென லாகுமே.

*வெறுப்பு உண்டாய ஒருத்தியை வேண்டினல்,*
*மறுப்பு உண்டாய பின், வாழ்கின்ற வாழ்வினின்,*
*உறுப்பு உண்டாய் நடு ஓங்கிய நாசியை*
*அறுப்பு உண்டால் அது அழகு எனல் ஆகுமே.*

வெறுப்பு உண்டாய ஒருத்தியை - தன்னைக் காதலிப்பவனிடம் வெறுப்பு உண்டாகிய ஒருத்தியை. வேண்டினல் - தன் இச்சையைக் கூறி வேண்டிக் கொள்ளுமிடத்து. மறுப்பு உண்டாயபின் - அவளால் மறுக்கப் படுதல் உண்டானபின்னும். வாழ்கின்ற வாழ்வினின்.........அழகென லாகுமே என்பது (அவளையே காதலித்து) வாழ்கின்ற நிலை, மூக்கு அறு பட்டபின்பும் தன் அழகைப் பாராட்டிக்கொள்ளும் முறை போன்றதே என்றவாறு.

மூக்கு அறுபடுவதால் அழகு கெடுவதேயாம்; அதனிலும் தன்னை விரும்பாது வெறுத்தொதுக்கும் ஒருத்தியைக் காமித்து, அவளை மேலும் நெருக்குதல் மிகவும் கேடுகெட்டது என்றபடி. முன்பு இராமனை விரும்பி மூக்கு அறுபட்ட தங்கையை ஞாபகப்படுத்தி, 'அவள் நிலையினும் உன் நிலை பெருநகைக்கு உரியதாம்' என்று குறிப்பித்தவாறு. (101)

**1144.** பாரைஞ் ஞூறுவ பற்பல பொற்புயம்
ஈரைஞ் ஞூறு தலையுள வென்னினும்
ஊரைஞ் ஞூறுங் கடுங்கன லுட்பொதி
சீரைஞ் ஞூறவை சேமஞ் செலுத்துமோ.

*பாரை ஞூறுவ பல் பல பொன் புயம்,*
*ஈர் ஐஞ்ஞூறு தலை உள; என்னினும்,*
*ஊர் ஐஞ்ஞூறும் கடும் கனல் உள் பொதி*
*சீரை ஞூறு அவை சேமம் செலுத்துமோ.*

'பாரை ஞூறுவ...........சேமம் செலுத்துமோ' என்பது உலகை அழிக்கவல்ல பலவான தோள்களும் ஆயிரம் தலைகளும் உளவாயினும், அவை தம்மைப் பாதுகாக்கவல்லனவோ! ஐஞ்ஞூறு ஊர்களே யாயினும் சுட்டெரிக்கவல்ல கடுங்கனலைத் தம்முட் கொண்ட சேலைகள் நூறுனலும், அக்கனலால் எரிபடுதலினின்று காக்கவல்லவோ? என்றவாறு.

இங்கே எடுத்துக்காட்டாகிய 'கடுங்கனலுட் பொதி சிறை நூறு சேமம் செலுத்துமோ' என்ற கருத்து, பலவான தோள்களும் தலைகளும் உடையனாயினும், அவனது ஆற்றல் முழுதும் கற்புத் தீயானவளால் அடியோடு அழிபடும் என உவமேயத்திலும் கூட்டிப் பொருள் கொள்க. 'சுடுதியைத் துகிலிடைப் பொதிந்த துன்மதி' (விடணன் அடைக்கலப். 47) என்றார் பின்னும். நான்கடிகளிலும் நகரத்துக்கு ஞகரம் போலியாக வந்தன: 'செய்ஞ்ஞின்ற நீலம்' (தேவாரம் 4-80-4) என்ற திருவிருத்தப்பாடல் இங்கு ஒப்பிடத்தகும். (102)

**1145.** புரம்பி ழைப்பருந் தீப்புகப் பொங்கியோன்
நரம்பி ழைத்தன பாடலி னல்கிய
வரம்பி ழைக்கு மறைபிழை யாதவன்
சரம்பி ழைக்குமென் றெண்ணுதல் சாலுமோ.

'புரம் பிழைப்பு அரும் தீ புகப் பொங்கியோன்,
நரம்பு இழைத்தன பாடலின் நல்கிய
வரம் பிழைக்கும்; மறை பிழையாதவன்
சரம் பிழைக்கும்' என்று எண்ணுதல் சாலுமோ?

பொங்கியோன் நல்கிய வரம் பிழைக்கும்; மறை பிழையாதவன் சரம் பிழைக்குமென்று எண்ணுதல் சாலுமோ? என்க.

புரம் - திரிபுரங்களும். பிழைப்பு அரும் தீ புக - தப்புதற்கு அரிய தீ மண்டி அழிக்குமாறு. பொங்கினோன் - சிற்றங்கொண்டவனான சிவபிரான். நரம்பு இழைத்த நின்பாடலின் நல்கிய - யாழ் நரம்புகளைக்கொண்டு நீ பாடிய பாடல்களுக்கு இரங்கிக் கொடுத்த. வரம் - வரங்களும். பிழைக்கும் -தவறினாலும் தவறும். மறை பிழையாதவன் சரம் - வைதிகநெறி தவறாத இராமபிரானுடைய அம்புகள். சரம் தவறும் என்று எண்ணுதல் பொருந்தாதென்க. நரம்பு - யாழின் தந்திகள். கயிலையங்கிரியை இராவணன் தூக்க முயன்றபோது சிவபிரானுடைய கால் விரல் சிறிது அழுந்த, அதனால் நசுங்கி நெடுங்காலம் வருந்தித் தன் கை நரம்புகளையே வீணை நரம்புகளாக அமைத்துக்கொண்டு பாடியவனாதலின், 'நரம்பிழைத்த நின் பாடலின்' என்றார் எனினுமாம். (103)

**1146.** ஈறி னுணுக வெஞ்சலி னற்றிரு
நூறி னொய்தினை யாகி நுழைதியோ
வேறு மிந்நகை யாய வினைத்தொழில்
தேறி னார்பலர் காமிக்குஞ் செவ்வியோய்.

ஈறு இல் நாண் உக, எஞ்சல் இல் நல் திரு
நூறி, நொய்தினை ஆகி, நுழைதியோ?
வேறும் இந் நகை ஆய வினைத்தொழில்
தேறினர் பலர், காமிக்கும் செவ்வியோய்!

ஈறு இல் நாண் உக – அழிவின்றிக் காக்கத்தக்க நாணம் கெடும்படி. எஞ்சல் இல் நல் திரு நூறி – குறைவற்ற நல்ல அரசச்செல்வத்தையும் அழித்துக்கொண்டு. நொய்தினை ஆகி – சிறுமைக் குணமுள்ளவனாய். நுழைதியோ – இடுக்குவழியான தியநெறியில் நுழைவாயோ? வேறும் இந் நகையாய வினைத்தொழில் தேறினர் பலர் காமிக்கும் செவ்வியோய்!– மற்றும் இதுபோன்ற நகை விளைக்கும் காரியங்களில் தேறியவர் பலராலும் விரும்பப்படும் செவ்வியை உடையவனே!

நுழைதியோ என்ற சொன்னேக்கால் நேர்மையான பெருநெறியன்றித் திய இடுக்கு வழி என்பது பெறப்படும். இடுக்குவழியாவன:—எவரும் இல்லாத சமயம் பார்த்துப் புகுந்து பிறனில்விழைதல் திருடுதல் போல்வன. இவை இராவணனால் முன்பு சீதையை அபகரித்தலிற் செய்யப்பட்டதைக் குறிப்பிட்டவாறு. இத்தகைய திய தொழிலில் தேறிய சிற்றினத்தார் பலர்க்குக் காட்சிக்கெளியனாய் முகங்கொடுத்துக் கெடுபவன் என்பது தோன்ற, 'நகையாய வினைத்தொழில் தேறினர் பலர் காமிக்கும் செவ்வியோய்!' என்றார். இதனால் அழிவே உனக்கு அமைந்தது என்பது புலப்படும். செவ்வியோய்-முகங்கொடுக்குஞ் சமயங்களையுடையவனே. (104)

**1147.** பிறந்து ளார்பிற வாத பெரும்பதம்
சிறந்து ளார்மற்றுந் தேவர்க்குந் தேவராய்
இறந்து ளார்பிறர் யாரு மிராமனை
மறந்து ளாருள ராகிலர் வாய்மையால்.

பிறந்துளார், பிறவாத பெரும் பதம்
சிறந்துளார், மற்றும் தேவர்க்கும் தேவர் ஆய்
இறந்துளார், பிறர் யாரும், இராமனை
மறந்துளார் உளர் ஆகிலர்; வாய்மையால்.

பிறந்துளார் – நற்பிறவியிற் பிறந்துள்ளவர்களும்; பிறவாத பெரும் பதம் சிறந்துளார் – பிறப்பற்ற வீட்டினைப் பெற்றுச் சிறந்தவர்களும்; தேவர்க்கும் தேவராய் இறந்துளார் – தேவாதி தேவராய் மேம்பட்ட விதி சிவாதி தேவர்களும்; பிறர் யாரும் – உன்னையும் உன் இனத்தாரையும் ஒழிந்த யாரும். மறந்துளார் உளராகிலர் - (அம்மூர்த்தியை) மறந்துள்ளவர்களாய் உள்ளவரே இல்லை. வாய்மை – (இது) சத்தியம்.

'பிறர் யாரும்' என்று பிற்கூறினராதலின், முதலிற் 'பிறந்துளார்' என்றது, நற்பிறவி எடுத்த உத்தம மக்கள் என்பது பெறப்படும். 'மற் றீண்டு வாரா நெறி' ஆதலின் விட்டினைப் 'பிறவாத பெரும்பதம்' என் ருர். (105)

**1148.** ஆத லாற்ற னரும்பெறற் செல்வமும்
ஓது பல்கிளை யும்முயி ரும்பெறச்
சீதை யைத்தரு கென்றெனச் செப்பினன்
சோதி யான்மக னிற்கெனச் சொல்லினன்.

"ஆதலால், தன் அரும் பெறல் செல்வமும்
ஓது பல் கிளையும் உயிரும் பெறச்
சீதையைத் தருக" என்று எனச் செப்பினன்;
சோதியான் மகன் நிற்கு, எனச் சொல்லினன்.

சோதியான் மகன் - சூரியன்மகனை சுக்கிரீவன். உன் அரும் பெறற் செல்வம் முதலியவற்றைப் பெற்று நீ வாழவேண்டி, 'சீதையைச் சிறைமீட்டுத் தருக' என்று கூறும்படி சுக்கிரீவன் உனக்குச் சொல்லி யனுப்பினன் என்று அனுமன் சொன்னன் என்றவாறு.

என்று என - என்று கூறும்படி. என என்பது அசையும் ஆம். 'தரு கென்று இன செப்பினன், என்று ஆதிப்பாடம் இருந்து பின்பு மாறியது -என்றுகருதவும் இடமுண்டு. இன - இன்ன, இத்தகையவான. (106)

## இராவணன் நகுதல்

**1149.** என்ற லும்மிவை சொல்லிய தெற்கொரு
குன்றில் வாழுங் குரங்குகொ லாமிது
நன்று நன்றென மாநகை செய்தனன்
வென்றி யென்றொன்று தானன்றி வேறிலான்.

என்றலும், 'இவை சொல்லியது எற்கு ஒரு
குன்றில் வாழும் குரங்கு கொல் ஆம்; இது
நன்று நன்று' என மாநகை செய்தனன்;
வென்றி என்று ஒன்றுதான் அன்றி வேறு இலான்.

என்றலும் - என அனுமன் நீதிகளைக் கூறிய அளவில், எற்கு இவை சொல்லியது குரங்கு கொலாம்; இது நன்று நன்று என நகை செய்த னன் - எனக்கு இந்நீதிகளைக் கூறியது ஒரு குரங்குபோலும்; இது மிக அழகிது என்று சிரித்து ஏளனம் செய்தான்; வென்றி ஒன்றுதான்

அன்றி வேறு இலான் - வெற்றியென்பது ஒன்றேயல்லது வேறு தோல்வியை அறிந்திலாத இராவணன். தான், தேற்றப்பொருளது ; அசையும் ஆம். (107)

### இராவணன் அனுமனை வினவுதல்

**1150.** குரக்கு வார்த்தையு மானிடர் கொற்றமும்
இருக்க நிற்க நீயென்கொ லடாவிரும்
புரத்தி னுட்டருந் தூது புகுந்தபின்
அரக்க ரைக்கொன்ற தஃதுரை யாயென்றான்.

*'குரக்கு வார்த்தையும் மானிடர் கொற்றமும்*
*இருக்க; நிற்க; நீ என்கொல்; அடா! இரும்*
*புரத்தினுள் தரும் தூது புகுந்த பின்*
*அரக்கரைக் கொன்றது? அஃது உரையாய்' என்றான்.*

குரங்கின் வார்த்தை - சுக்கிரீவன் கூறிய செய்தி. இருக்க - ஒருபுறம் இருக்கட்டும் ; நிற்க - (அவற்றை மேன்மேல் நீ கூறுவதும்) நிற்கட்டும் ; இரும் புரத்தினுள் - மகாநகரமான இலங்கையுள் ; தரும் தூது புகுந்தபின் - என்னிடம் பிறர் அனுப்பிய தூதுவனாக நீ புகுந்த பின்பு ; அரக்கரைக் கொன்றது என்? அடா! அஃது உரையாய்! என்று இயைத்துப் பொருள்கொள்க. (108)

இச்செய்யுளின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது.

*1150 (உ) என்னக் கேட்ட வரக்கனுக் கிறிலாத்*
*தன்னை ராற்றலின் மாருதி சாற்றுவான்*
*என்னை நாயக னேவலின் வாருதி*
*தன்னைத் தாண்டிவந் தேனுன்னைக் காணவே.*

### அனுமன் விடை

**1151.** காட்டு வாரின்மை யாற்கடி காவினை
வாட்டி னேனென்னைக் கொல்ல வந்தார்களை
வீட்டி னேன்பின்னு மென்மையி னாலுன்றன்
மாட்டு வந்தது காணு மதியினால்.

*'காட்டுவார் இன்மையால், கடி காவினை*
*வாட்டினேன்; என்னைக் கொல்ல வந்தார்களை*
*வீட்டினேன்; பின்னும் மென்மையினால் உன தன்*
*மாட்டு வந்தது, காணும் மதியினால்.*

காட்டுவார் இன்மையால் - உன்னை எனக்குக் காட்டுபவர் ஒருவரும் இல்லாமையால்; என் வரவை உனக்கு அறிவிப்பவர் ஒருவரும் இல்லாமையால் எனினும் ஆம். கடி காவினை வாட்டினேன் - உன் காவற் சோலையை அழித்தேன். வாட்டுதல் - மரம் செடி கொடிகள் வாடும்படி அழித்தல். என்னைக் கொல்லவந்தார்களை விட்டினேன் என்றது, கடிகாவினை நான் அழித்தகாரணம்பற்றி என்னை உசாவித் தெரியாமலே, ஆயுதங்களைக் கொண்டு தாக்கி என்னைக் கொல்லவந்தவர்களைக் கொன்றேன் என்றவாறு. விட்டுதல் - விழ்த்துதல், கொல்லுதல். எளிமை நிலையோடு இங்கு நான் வந்தது, உன்னைக் காணவேண்டும் என்ற நோக்கத்தாலே என்றவாறு; மென்மையால் - எளிமைப்பாட்டோடு. இதனால் நின் மகனது நாகபாசத்தால் நான் எளிமைப்பட்டவனல்லன் என்பது குறிக்கப்பட்டவாறு. *(109)*

## விடணன் தூதனாய் வந்த அனுமனைக் கொல்லலாகாதெனல் 1153—1158

**1152.** என்னு மாத்திரத் தீண்டெரி நீண்டுக
மின்னும் வாளெயிற் றன்சினம் வீங்கினன்
கொன்மி னென்றனன் கொல்லியர் சேர்தலும்
நின்மி னென்றனன் வீடண னீதியான்.

*என்னும் மாத்திரத்து, ஈண்டு எரி நீண்டு உக,*
*மின்னும் வாள் எயிற்றன், சினம் வீங்கினன்;*
*கொன்மின் என்றனன்; கொல்லியர் சேர்தலும்,*
*நின்மின் என்றனன்; விடணன் நீதியான்.*

என்னும் மாத்திரத்து - (இவ்வாறு அனுமன் அஞ்சாமலும் அலட்சியமாகவும்) கூறியவளவில், மின்னும் வாள் எயிற்றன், ஈண்டு எரி நீண்டு உகசினம் வீங்கினன், கொன்மின் என்றனன் - ஒளிவிடும் வாள்போலும் கோரப்பற்களுடைய இராவணன் சீற்றம் மிக்கவனாய் (இவனைக்) கொல்லுங்கள் என்று ஆணையிட்டனன். நீதியான் விடணன் நின்மின் என்றனன் - நியாயவாதியான விபீடணன், கொல்ல வந்தவர்களைத் (தடுத்து) நில்லுங்கள் என்றான் எ-று.

சீற்றம் பெருகி இராவணன் ஆணையிட்டதற்கு, அனுமன் காட்டிய அஞ்சாமையும் அலட்சியமுமே காரணம் என்க. கொல்லியர் - கொலையாளிகள்; இருதிணையொருமையினும் வரும் 'கொல்லி' என்பதன் பன்மை, இது. *(110)*

**1153.** ஆண்டெ ழுந்துநின் றண்ண லரக்கனை
நீண்ட கையன் வணங்கின னீதியாய்
மூண்ட கோப முறையதன் றாமென
வேண்டு மெய்யுரை பையவி ளம்பினன்.

*ஆண்டு, எழுந்து நின்று, அண்ணல் அரக்கனை*
*நீண்ட கையன், வணங்கினன்; 'நீதியாய்*
*மூண்ட கோபம் முறையது அன்று ஆம்' என*
*வேண்டும் மெய்யுரை பைய விளம்பினன்.*

நீதியான் அண்ணல் அரக்கனை வணங்கினன், கோபம் முறையதன்றாம் என மெய்யுரை விளம்பினன் என்க.

ஆண்டு - அப்பொழுது. நீதியாய் - நீதி வழுவாதவனே!; முறையதன்றாம் என - நியாயமுடையதில்லை என்று ; நீதிமுறையாகாமையைப் பின்வரும் ஐந்துகவிகளில் விரித்துக் கூறுவர். (111)

**1154.** அந்தண னுலக மூன்று
★ மாதியி னறத்தி னாற்றல்
தந்தவ னன்புக் கான்ற
தவநெறி யுணர்ந்து தக்கோய்
இந்திரன் கரும மாற்று
மிறைவனீ யியம்பு தூது
வந்தனெ னென்ற பின்னுங்
கோறியே மறைகள் வல்லோய்.

*அந்தணன் உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல்*
*தந்தவன் அன்புக்கு ஆன்ற தவநெறி உணர்ந்து, தக்கோய்!*
*இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ, இயம்பு 'தூது*
*வந்தனென்' என்ற பின்னும் கோறியே? மறைகள் வல்லோய்!*

தக்கோய்! மறைகள் வல்லோய்! உலகமூன்றும் தந்தவன் அந்தணன், அன்புக்கு ஆன்ற நெறி உணர்ந்து ஆற்றும் இறைவன் நீ. தூது வந்தவன் என்ற பின்னும் கோறியோ ? என்க.

ஆதியின் அறத்தின் ஆற்றல் உலக மூன்றும் தந்தவன் அந்தணன் - ஆதிகாலத்தில், தருமத்தின் பலங்கொண்டு மூவுலகங்களையும் படைத்தவனான பிரமன். ஆன்ற - அமைந்த, பொருந்திய. இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ - தேவேந்திரனது திரிலோக ஆட்சியைக் கைப்பற்றி

ஆளவல்ல பேரரசன் நீ எ-று ; இந்திரன் கருமம் மாற்றும் எனப் பிரிப்பின், இந்திரனது மூவுலக ஆட்சியைத் தனக்குரியதாக மாற்றிய வலிமையுள்ள நீ எனலும் ஆம். 'உலக மூன்றுந் தந்தவன் மரபில் வந்த' என்ற பாடத்துக்குப் 'பிரமதேவன் மரபில் உதித்த' என்பது பொருள். பிரமதேவன் புத்திரன் புலஸ்தியன்; அவன் மகன் விசிரவசு; அவன் மகன் (பிரமதேவன்பேரன்) இராவணனுதலின் 'மரபில்வந்த தக்கோய்' எனப் பட்டான் என்க. (112)

**1155.** பூதலப் பரப்பி னண்டப்
பொகுட்டினுட் புறத்துட் பொய்தீர்
வேதமுற் றியங்கு வைப்பின்
வேறுவே றிடத்து வேந்தர்
மாதரைக் கொலைசெய் தார்க
ளுளரென வரினும் வந்த
தூதரைக் கொன்று ளார்கள்
யாவரே தொல்லை நல்லோர்.

பூதலப் பரப்பின், அண்டப்
பொகுட்டினுள், புறத்துள், பொய்தீர்
வேதம் உற்று இயங்கு வைப்பின்,
வேறு வேறு இடத்து வேந்தர்,
மாதரைக் கொலை செய்தார்கள்
உளர் என வரினும், வந்த
தூதரைக் கொன்றுளார்கள்
யாவரே ? தொல்லை நல்லோர்.

பூவுலகு முதலிய எல்லா இடங்களிலும் அரசராயுள்ளாருள் மாதரைக் கொலைபுரிந்தவர் சிலர் உளர் என்று கூற இடமுண்டேனும், தன்பால் வந்த தூதரைக்கொன்றவர் ஒருவருமில்லை என்பது இப்பாடற் கருத்து.

பூதலப்பரப்பு - பூவுலகின் விரிவிடம். அண்டப் பொகுட்டினுள் புறத்துள் – அண்டகோளத்தின் உள்ளிடத்தினும் அதன் புறமான பகிரண்டத்தினும். திருமாலின் உந்தித் தாமரையிடையே தோன்றியதாதலின் அண்டப் பொகுட்டு என்றார். பொகுட்டு - தாமரையின் உள்ளிடத்ததாகிய உறுப்பு. வைப்பு – தானம். உளர் என வரினும் – உள்ளார் எனக் கூறநேர்ந்தாலும். (113)

1156. பகைப்புல னணுகி யுய்த்தார்
பகர்ந்தது பகர்ந்து பற்ருர்
மிகைப்புல னடக்கி மெய்ம்மை
விளம்புதல் விரதம் பூண்ட
தகைப்புலக் கருமத் தோரைக்
கோறலிற் றக்கார் யார்க்கும்
நகைப்புலன் பிறிதுண் டாமோ
நங்குல நவையுண் டாமே.

பகைப்புலன் அணுகி, உய்த்தார்
பகர்ந்தது பகர்ந்து, பற்ருர்
மிகைப்புலன் அடக்கி, மெய்ம்மை
விளம்புதல் விரதம் பூண்ட
தகைப்புலக் கருமத் தோரைக்
கோறலின், தக்கார் யார்க்கும்
நகைப்புலன் பிறிது உண்டாமோ?
நம் குலம் நவை உண்டாமே?.

தகைப்புலக் கருமத்தோரைக் கோறலின் நகைப்புலன் பிறிதுண் டாமோ, நம் குலம் நவை உண்டாமே என்க.

தகைப் புலக் கருமத்தோர் – தக்க அறிவும் தொழிலுமுடைய தூதுவர் ; (இவர்கள்) பகைவரிடம் அஞ்சாது அணுகியும், தம்மை உய்த்தார் (தூதுவிடுத்தவர்கள்) கூறியதைப் பகைவரிடம் கூறியும், அப்பகைவர் கொள்ளும் கோபவுணர்ச்சியை (த் தம் சொல்லாற்றலால்) அடக்கியும் உண்மைகூறும் விரதம் பூண்டவர்கள் என்பது முன்னிரண்டடிகட்குப் பொருள் ; அத்தகையோரைக் கொலைசெய்தலினும் பெரியோர்க்கு நகைப் புணர்ச்சியை விளைப்பது வேறில்லை. நம் அரசகுலத்துக்கு அது வசையு மன்ரே? எ – று.

புலம்-இடம். மிகைப்புலன் – கோப உணர்ச்சி. விளம்புதல் விரதம் பூண்ட– சொல்லுதலாகிய விரதத்தை மேற்கொண்ட. தகைப்புலக் கருமத் தோரை – சிரிய அறிவையும் செய்கையையும் உடைய தூதுவரை. இதனல் தூதர்தன்மைகளும் செயல்களும் நன்கு விளக்கப்பட்டன. *(114)*

1157. முத்தலை யெஃகன் மற்றை
முராந்தகன் முனிவன் முன்ன
அத்தலை நம்மை நோன
வமரர்க்கு நகையிற் ருமால்

மெய்த்தலை யுலகங் காக்கும்
வேந்தநீ வேற்றோ ரேவ
இத்தலை யெய்தி னானைக்
கொல்லுத லிழுக்க மின்னும்.

முத்தலை எஃகன் மற்றை
முராந்தகன் முனிவன் முன்னா
அத்தலை நம்மை நோனா
அமரர்க்கும் நகையிற்று ஆம் ஆல்;
மெய்த்தலை உலகம் காக்கும்
வேந்த! நீ, வேற்றோர் ஏவ
இத்தலை எய்தினானைக் கொல்லுதல்,
இழுக்கம்; இன்னும்.

வேற்றோர் ஏவ இத்தலை எய்தினானை நீ கொல்லுதல், நம்மைநோனா அமரர்க்கு நகையிற்றாம்; வேந்தே இழுக்கம் (உம்) ஆம்; இன்னும் என்க.

முத்தலை எஃகன் – மூன்றுதலையுள்ள சூலாயுதங்கொண்ட சிவன் ; (எஃகு – ஆயுதம்). முராந்தகன் – திருமால்: முரன் என்ற அசுரனுக்கு யமனானவன் என்பது உறுப்புப்பொருள். முனிவன் – பிரமன். முன்னா– முதலான. நமமை நோனா அத்தலை அமரர்க்கு என மாறுக. நம் ஆக்கம் கண்டு பொறாத பகைவரான தேவர்க்கு (நகைவிளைப்பதாகும்). நோனா – பொறாத. வேற்றோர் – சுக்கிரீவன் முதலியோர். இத்தலை – இவ்விடத்து நம்மை. இன்னும் – மேலும் (கூறுவதுண்டு). (115)

1158. இளையவ டன்னைக் கொல்லா
திருசெவி மூக்கொ டீர்ந்து
விளைவுரை யென்று விட்டார்
வீரராய் மெய்ம்மை யோர்வார்
களைதியே லாவி நம்பா
லிவன்வந்து கண்ணிற் கண்ட
அளவுரை யாமற் செய்தி
யாதியென் றமையச் சொன்னான்.

'இளையவள் தன்னைக் கொல்லாது,
இரு செவி மூக்கொடு ஈர்ந்து,
'விளைவு உரை' என்று விட்டார்
வீரராய் மெய்ம்மை ஓர்வார்,

களைதியேல் ஆவி, நம்பால்
இவன் வந்து கண்ணில் கண்ட
அளவு உரையாமல் செய்தி
ஆதி;' என்று அமையச் சொன்னான்.

வீரராய் மெய்ம்மை ஓர்வார், இளையவள் தன்னைக் கொல்லாது, இரு செவி மூக்கொடு ஈர்ந்து விட்டார் - சுத்த வீரர்களாய் உண்மை நீதியை உணர்ந்த இராம இலக்குமணர்கள், தங்கட்குத் தீமை விளைக்க வந்த உன் தங்கையைக் கொல்லாமல், அவளது செவிகளை மூக்கோடு அறுத்து, 'நடந்தகாரியத்தை இலங்கைசென்று சொல்லுக' என்று அனுப்பிவிட்டனர் எ - று (அனுமனது) ஆவி களைதியேல்-உயிர்போக்குவையாயின்.

இவனைக் கொலைசெய்யின் 'இங்குள்ள நம் நிலைமைகளை எதிரிகளிடம் சென்று சொல்லுவன்' என்று பகைக்கு அஞ்சிச் செய்தது போலாகும் என்பான் 'கண்ணிற் கண்ட அளவுரையாமற் செய்தியாதி' என்றான்வீடணன் என்க. இளையவள் - சூர்ப்பணகை. ஈர்ந்து - அறுத்து. விளைவு - நடந்த செய்தி. செய்தி ஆதி-செய்தனை ஆவாய். அமைய - பொருந்த. *(116)*

இராவணன் அனுமன் வாலில் தீக்கொளுவப் பணித்தல்.

**1159.** நல்ல துரைத்தாய் நம்பியிவ
★ னவைசெய் தானே யானாலும்
கொல்லல் பழுதே போயிடைநீ
கூறிக் கொணர்தி கடிதென்னாத்
தொல்லை வாலை மூலமறச்
சுட்டு நகரைச் சூழ்போக்கி
எல்லை கடக்க விடுமின்க
ளென்று னின்று ரிரைத்தெழுந்தார்.

"நல்லது உரைத்தாய்; நம்பி! இவன்
நவை செய்தானே ஆனாலும்,
கொல்லல் பழுதே; போய் இடை நீ
கூறிக் கொணர்தி கடிது" என்னாத்
"தொல்லை வாலை மூலம் அறச்
சுட்டு நகரைச் சூழ்போக்கி,
எல்லை கடக்க விடுமின்கள்"
என்றான்; நின்றார் இரைத்து எழுந்தார்

'இடையே நீ போய், இங்கு நடந்த செய்திகளை இராமலக்குமணரிடம் கூறிக் கடிதாக அவர்களை அழைத்து வருக' என்று சொல்லியவண்ணம், நெடுங்காலமாக அபிமானித்து அக்குரங்கு வளர்த்து வந்த வாலை அடியோடு தீயிட்டு எரிவித்து, இலங்கையை வலம்வரச்செய்து, பின் இந்நகரின் எல்லை கடக்கும்படி விட்டு வாருங்கள்' என்றான் இராவணன். அது கேட்டு ஆங்கு நின்ற அரக்கவீரர்கள் ஆரவாரித் தெழுந்தார்கள் என்றவாறு.

நம்பி - உத்தமனே. 'போயிடை நீ......கடிதென்று' என்றது, அநுமனைநோக்கி அரக்கர் கூறவேண்டிய தொடர் என்க. (117)

**1160.** ஆய காலத் தயன்படையோ
டிருப்ப வாகா தனலிடுதல்
தூய பாச மெனப்பலவுங்
கொணர்ந்து பிணிமின் றோளென்று
மேய தெய்வப் படைக்கலத்தை
விட்டா னமரர் போர்வென்றான்
ஏயெ னுமுன் னிடைபுக்குத்
தொடைவன் கயிற்றாற் பிணித்தீர்த்தார்.

ஆய காலத்து, 'அயன்படையோடு
இருப்ப ஆகாது அனல் இடுதல்;
தூய பாசம் எனப் பலவும் கொணர்ந்து
பிணிமின் தோள்' என்று
மேய தெய்வப் படைக்கலத்தை விட்டான்,
அமரர் போர் வென்றான்;
ஏ எனுமுன் இடை புக்குத் தொடைவன்
கயிற்றால் பிணித்து ஈர்த்தார்.

ஆய காலத்து - இங்ஙனம் நிகழ்ந்த சமயத்தில்; அமரர் போர் வென்றான், அயன் படையோடு இருப்ப அனலிடுதல் ஆகாது; பாசம் பலவும் கொணர்ந்து தோள் பிணிமின் என்று - தேவர் விளைத்த போர்களை வென்ற இந்திரசித்து, 'வானரம் பிரமாஸ்திரத்தால் பிணிப்புண்டு உள்ள போது அதனில் தீயையிட்டு எரித்தல் கூடாது; அதனால் கயிறுகள் பலவும் கொண்டுவந்து வானரத்தின் தோள்களைக் கட்டுங்கள்' என்று கூறி; தெய்வப் படைக்கலத்தை விட்டான் - கட்டிய பிரமாஸ்திரத்தை அநுமன் தோள்களினின்று விடுவித்தான். ஏ எனுமுன் - மிக விரைவில். தொடைவன் கயிற்றால் - ஒன்றனுடன் ஒன்று இணைந்த கயிறுகளால்.

இந்திரசித்துப் பிணித்த பிரமாத்திரம் நாக வடிவினதாய் அநுமன் தோள்களைப் பிணித்தது என்பர் முன்பு (பாசப் படலம் - 57). பிரமாத்திரத்தின் பிணிப்புச் சிறிதுபோதே வருத்துவதாயினும், பின் விலகி விடுமெனப் பிரமதேவனிடம் முன்பு வரம்பெற்றிருந்தவன் அநுமன் என்றும், ஆயினும், இராவணனைக் காணும் நோக்குடன் அதன் பிணிப்புக்கு அவன் அடங்கிச் சென்றனன் என்றும் கூறுவர் வான்மீகி பகவான் (ஸர்க்கம் - 48). தெய்வப் படைக்கலத்தை மீட்டான் என்ற பாடத்துக்கு, பிணித்தற்குரிய மந்திரவன்மையால் அதனைப் பிரயோகித்த இந்திரசித்தே பிணிப்பு விடுதற்குரிய மந்திரத்தால் மாற்றினன் என்று பொருள் உரைக்க. பாசத்துக்குத் தூய்மையாவது: ஒழுங்காகத் திரிக்கப்பட்டு இடையறவுபடாமை. (118)

### அரக்கர்கள் கண்ட கயிறுகளையெல்லாம் கொண்டு வருதல்

**1161.** நாட்டி னகரி னடுவுள்ள
கயிறு நவிலுந் தகைமையவே
வீட்டி னூச னெடும்பாச
மற்ற தேரும் விசிதுறந்த
மாட்டும் புரவி யாயமெலா
மருவி வாங்குந் தொடையழிந்த
பூட்டும் வல்லி மூட்டோடும்
புரசை யிழந்த போர்யானை.

நாட்டின் நகரின் நடு உள்ள கயிறு நவிலும் தகைமையவே!
வீட்டின் ஊசல் நெடும் பாசம் அற்ற; தேரும் விசி துறந்த;
மாட்டும் புரவி ஆயம் எலாம் மருவி வாங்கும் தொடை அழிந்த;
பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை இழந்த போர் யானை.

(அரக்கர்களால் கொண்டுபோகப்பட்டதனால்) வீடுகளில் ஆடும் ஊசல்களில் கட்டியிருந்த கயிறுகள் இல்லையாயின; தேர்களும் கட்டுக் கயிறுகளை இழந்தன; பிணிக்கப்பட்ட குதிரையினங்களெல்லாம் கட்டி வாங்கும் கயிறுகள் ஒழியப்பெற்றன; போர் யானைகளும் முடிச்சுடன் கூடிய காற்கயிறுகளும் கழுத்திடுகயிறுகளும் இல்லையாயின. இவ்வாறாயின் நாடு நகரங்களின் உட்பிரதேசங்களில் இருந்த சாதாரணக் கயிறுகளைப்பற்றிச் சொல்லற்குரிய நிலைமையுண்டோ? (யாவுமே கொண்டு வரப்பட்டன) என்க.

கயிறு - சிறப்பற்ற கயிறுகள். பாசம், விசி, தொடை, வல்லி, புரசை என்பன கயிற்றின் வகைகள். வல்லி - யானைபிணிக்குங் காற்கயிறு.

"வல்லி விடு மயிராவதம் வாணன் வரவிடும் நாளையே", 'கால் நிமிர்த் தால் கண்பறிப வல்லியோ' (பெருந்தொகை 516, 1716) என்பன காண்க. புரசை – யானைக் கழுத்திடு கயிறு. (119)

### பல்வேறு பாசங்களால் அனுமனைக் கட்டுதல்

**1162.** மண்ணிற் கண்ட வானவரை
வலியிற் கவர்ந்த வரம்பெற்ற
எண்ணற் கரிய வேனையரை
யிகலிற் பறித்த தமக்கியைந்த
பெண்ணிற் கிசையு மங்கலத்திற்
பிணித்த கயிறே யிடைபிழைத்த
கண்ணிற் கண்ட வன்பாச
மெல்லா மிட்டுக் கட்டினர்.

*மண்ணில் கண்ட, வானவரை*
*வலியின் கவர்ந்த, வரம் பெற்ற,*
*எண்ணற்கு அரிய ஏனையரை*
*இகலின் பறித்த, தமக்கு இயைந்த*
*பெண்ணிற்கு இசையும் மங்கலத்தில்*
*பிணித்த கயிறே இடை பிழைத்த;*
*கண்ணில் கண்ட வன்பாசம்*
*எல்லாம் இட்டுக் கட்டினர்.*

பூவுலகிற் கண்ட கயிறுவகைகளும், தேவரிடத்திலிருந்து வலியாற் கவர்ந்த பாசங்களும், வரங்களாற் பெற்றிருந்த தெய்வத்தன்மையுள்ள பாசங்களும், ஏனையரை இகலிற் பறித்த பாசங்களும், மற்றும் கண்ணிற் கண்ட கயிறுகளும் என்க. (இவை) எல்லாவற்றையுமே அரக்கர்கள் கொணர்ந்து அனுமனைக் கட்டினர்கள்; தத்தம் மனைவியர்க்கு ஏற்றபடி அவர்கள் கழுத்திற் கட்டிய தாலிக் கயிறுகளே அக்காலத்து அறுத்துக்கொண்டு போகாதபடி தப்பியவை என்றவாறு.

'மண்ணிற் கண்ட' என்பவை உலகத்தாரால் வேலைத்திறம் அமையச் செய்யப்பட்டவை என்றும், ஏனையரை இகலிற் பறித்தவை, இராவணனது திக்கு விசயத்தில் அரசரை வென்று பெற்றவை என்றும் கொள்க. வரம் பெற்ற(வை) என்றது, காலபாசம் வருணபாசம் போன்றவற்றை. மங்கலத்திற் பிணித்த கயிறே இடைபிழைத்த என்றதனால், இடையே சிலகாலம் தப்பி நிற்கின்றன அரக்கியர் அணிந்துள்ள தாலிக் கயிறுகள், என்ற குறிப்பும் தோற்ற நிற்றல் காண்க. (120

### அனுமன் மகிழ்தல்,

**1163.** கடவுட் படையைக் கடந்தறத்தி
ஞணை கடந்தே ஞகாமே
விடுவித் தளித்தார் தெவ்வரே
வென்றே னன்ரு விவர்வென்றி
சுடுவிக் கின்ற திவ்வூரைச்
சுடுகென் றுரைத்த துணிவென்று
நடுவுற் றமைய வுறநோக்கி
முற்று முவந்தா னவையற்ருன்.

"கடவுள் படையைக் கடந்து,
அறத்தின் ஆணை கடந்தேன் ஆகாமே,
விடுவித்து அளித்தார் தெவ்வரே;
வென்றேன் அன்ரு இவர் வென்றி;
சுடுவிக்கின்றது, 'இவ் வூரைச் சுடுக'
என்று உரைத்த துணிவு" என்று
நடு உற்று அமைய உற நோக்கி,
முற்றும் உவந்தான் நவை அற்ருன்.

நவையற்ருன் - குற்றமற்ற அனுமன். பிரமாஸ்திரத்தை மீறித் தருமத்தின் ஆணையைக் கடந்தவனுகாமல், பகைவரான அரக்கரே என்னை விடுவித்து உதவினுர்கள். இவர்கள் இதுவரை அடைந்திருந்த வெற்றியையும் நான் வென்றவனேயன்ருே? (இனி என் வெற்றி நிச்சயம் என்றபடி) என்பது முன் இரண்டடிகளின் பொருள்.

"என் வாலினைத் திப்பந்தத்தால் சுடுவிக்கும்படி கூறிய இராவணனது ஆணை, 'நீ இந் நகரைச் சுடுவாயாக' என்று கூறிய உறுதி (போன்றதே) யாகும்" என்று அரக்கர் நடுவே இருந்துகொண்டு, சமயத்தை எதிர்நோக்கி, முற்றும் மகிழ்வானுயினன் அனுமன் என்பது, பின் இரண்டடிகளின் கருத்து. பிரமாத்திரத்தின் வலிமையைக் கடக்கும் ஆற்றல் தனக்கு இருப்பினும், அதனைக் காட்டாமல், அப்படைக்கு அனுமன் அடங்கியிருந்தது, பிரமதேவனைப் பெருமைப்படுத்தும் நோக்கமே என்பதை, 'சாய்ந்த மாருதி சதுமுகன் படையெனுந் தன்மை, ஆய்ந்து மற்றிதன் ஆணையை அவமதித் தகல்கை, ஏய்ந்த தன்றென வெண்ணினன் கண்முகிழ்த்திருந்தான். ஓய்ந்த தாமிவன் வலியென வரக்கன் வந்துற்ருன்' (பாசப் படலம் 59) என்ற செய்யுளாலும் அடுத்துவரும் கவியாலும் அறிக. (121)

## அனுமன் அடங்கிச் செல்லுதல்.

1164. நொய்ய பாசம் புரம்பிணிப்ப
நோன்மை யிலன்போ லுடனுணங்கி
வெய்ய வரக்கர் புறத்தலைப்ப
வீடு முணர்ந்தே விரைவில்லா
வையன் விஞ்சை தனையறிந்து
மறியா தான்போ லவிஞ்சையெனும்
பொய்யை மெய்போ னடிக்கின்ற
யோகி போன்றான் போகின்றான்.

நொய்ய பாசம் புரம் பிணிப்ப,
நோன்மை இலன்போல் உடல் நுணங்கி,
வெய்ய அரக்கர் புறத்து அலைப்ப,
வீடும் உணர்ந்தே, விரைவு இல்லா
ஐயன், விஞ்சைதனை அறிந்தும்,
அறியாதான்போல், அவிஞ்சை எனும்
பொய்யை மெய்போல் நடிக்கின்ற
யோகி போன்றான்; போகின்றான்.

நொய்ய பாசம் புரம் பிணிப்ப - வலிமையற்ற கயிறுகள் தன் மேனியைக் கட்ட ; நோன்மை இலன்போல் உடல் நுணங்கி—அதனைப் பொறுக்கும் ஆற்றல் இல்லாதவன்போல் உடலம் துவண்டு ; வெய்ய அரக்கர் புறத்து அலைப்ப – கொடிய அரக்கர்கள் சூழ நின்று தன்னை வருத்த; வீடும் உணர்ந்தே விரைவில்லா ஐயன்-அப்பிணிப்பினின்று விடுபடுதலை யுணர்ந்தவனாயினும், அதனைப் புரிந்து செயலாற்றுவதில் விரைவுகாட்டாத அனுமன் என்க. இனி, இவ்வாறு ஒழுகும் அனுமனுக்கு, பொய்யை மெய்யாக் கொண்டு ஒழுகும் யோகியர்நிலை உவமிக்கப்படுகின்றது.

விஞ்சைதனை அறிந்தும் அறியாதான்போல்—தத்துவ ஞானம் விளைக்கும் பிரமவித்தையை அறிந்திருந்தும் அறியாதவன்போல; அவிஞ்சை எனும் பொய்யை மெய்போல் நடிக்கின்ற யோகிபோன்றான்-அவித்தியையான பொய்ப்பொருளை மெய்ப்பொருள்போலக் கொண்டு நடக்கும் யோகிபோன்றவன் ; என்பது பின் இரண்டடிகட்குப் பொருள்.

மெய்யுணர்வு இல்லாத உலகத்தாரோடு ஒத்து நடந்து அவர் சென்ற வழிச்சென்று அவரை நல்வழிப்படுத்த முயல்வது தத்துவஞானியரான யோகியர் இயல்பாதலின், 'பொய்யை மெய்போல் நடிக்கின்ற யோகி போன்றான்' என உவமிக்கப்பட்டான் அனுமன். இதனால் உண்மையில் பந்தத்தாற் கட்டுப்படாதவனாயினும், அரக்கர் பிணிப்புக்கு அடங்கி

யொழுகி, அவர் சென்றவழியெல்லாம் சென்றுகொண்டிருந்தவன் மாருதி என்பது பெறப்படும். பரமுத்தி அடையும்வரை உலகியல்புகளுக்கு ஒத்து நடிக்கும் தத்துவ தரிசிகளைச் சிவன்முத்தர் என்பர். ஜடபரதர், சுகர் போன்ரோர் இத்தகையராவர்.

நொய்ய – இலேசான, வலிமையற்ற. புரம் - உடல். நோன்மை – வலிமை. நுணங்கி-தளர்ந்து, துவண்டு. வீடு - விடுதலை. விரைவு - செய லாற்றுவதில் வேகம். விஞ்சை - மெய்யுணர்வினை விளக்கும் வித்தை. அவிஞ்சை - பொய்ப்பொருள். (122)

## அரக்கர் அனுமன் வாலில் தீக்கொளுவுதல்

1165. வேந்தன் கோயில் வாயிலொடு
விரைவிற் கடந்து வெள்ளிடையிற்
போந்து புறநின் றிரைக்கின்ற
பொறைதீர் மறவர் புறஞ்சுற்ற
ஏந்து நெடுவால் கிழிசுற்றி
முற்றுந் தோய்த்தா ரிழுதெண்ணெய்
காந்து கடுந்தீக் கொளுத்தினு
ரார்த்தா ரண்டங் கடிகலங்க.

வேந்தன் கோயில் வாயிலொடு
விரைவில் கடந்து, வெள்ளிடையின்
போந்து, புறம் நின்று இரைக்கின்ற
பொறைதிர் மறவர் புறம் சுற்ற,
எந்து நெடுவால் கிழி சுற்றி,
முற்றும் தோய்த்தார் இழுது எண்ணெய்;
காந்து கடும் தீக் கொளுத்தினர்,
ஆர்த்தார்; அண்டம் கடிகலங்க.

(அனுமனை இழுத்துக்கொண்டு சென்ற அரக்கர்கள்) கோயில் வாயில் கடந்து, வெள்ளிடையிற் போந்து, மறவர் புறஞ் சுற்ற, நெடுவால் கிழி சுற்றி, இழுதெண்ணெய் தோய்த்தார்; கடுந்திக்கொளுத்தினர்; ஆர்த் தார் என்க.

வெள்ளிடை-வெளியிடம். மறவர் – அரக்கவிரர். கடி – நாடு; சீமை (தெலுங்குச்சொல்). (123)

## அனுமனைக் காண அரக்கர் திரளுதல்

**1166.** ஒக்க வொக்க வுடன்விசித்த
வுலப்பி லாத வுரப்பாசம்
பக்கம் பக்க மிருகூரு
நூரு யிரவர் பற்றினர்
புக்க படைஞர் புடைகாப்போர்
புணரிக் கணக்கர் புறஞ்செல்வோர்
திக்கி னளவா லயனின்று
காண்போர்க் கெல்லை தெரிவரிதால்.

ஒக்க ஒக்க உடன் விசித்த
உலப்பு இலாத உரப்பாசம்,
பக்கம் பக்கம் இரு கூறு ஆய்
நூருயிரவர் பற்றினர்;
புக்க படைஞர், புடை காப்போர்,
புணரிக்கணக்கர்; புறம் செல்வோர்
திக்கின் அளவால்; அயல் நின்று
காண்போர்க்கு எல்லை தெரிவு அரிது ஆல்.

உரப்பாசம் இருகூருய் நூருயிரவர் பற்றினர்; படைஞர் (முதலியோர்) ......திக்கின் அளவால் ; காண்போர்க்கு எல்லை தெரியாது ; என்க.

ஒக்கவொக்க உடன்விசித்த-சேர்ந்து ஒன்றுகூடும்படி கட்டிய. உலப்பிலாத - அளவிட முடியாத; அழிவில்லாத எனினுமாம். புடைகாப்போர் – பக்கங்களில் நின்று காவல்புரிவோர்; புணரிக்கணக்கர் - சமுத்திரம் என்னும் அளவையுடையவர். புறஞ்செல்வோர், திக்குகளின் அளவுவரை உள்ளவர். காண்போர்க்கு எல்லையே இல்லை என்றபடி. புணரிக் கணக்கு- இருபத்தாறு தானமுடைய சமுத்திரம் என்ற எண். (124)

## அனுமனுக்கு உற்றதைக் காண வருமாறு அரக்கர் அனைவரையும் அழைத்தல்

**1167.** அந்த நகருங் கடிகாவு
மழிவித் தக்கன் முதலாயோர்
சிந்த நூறிச் சீதையொடும்
பேசி மனிதர் திறஞ்செப்ப

வந்த குரங்கிற் குற்றதனை
வம்மின் காண வம்மென்று
தந்தந் தெருவும் வாயிறொறும்
யாரு மறியச் சாற்றினர்.

'அந்த நகரும் கடிகாவும் அழிவித்து, அக்கன் முதலாயோர்
சிந்த நூறிச், சீதையொடும் பேசி, மனிதர் திறம் செப்ப,
வந்த குரங்கிற்கு உற்றதனை, வம்மின் காண வம்' என்று
தம் தம் தெருவும் வாயில்தொறும் யாரும் அறியச் சாற்றினர்.

கடி கா – அசோகவனம். அக்கன் – அட்சகுமாரன். வம் என்று – வாருங்கள் என்று. ஏனைய வெளிப்படை. (125)

### அனுமனுக்குற்றது கேட்ட பிராட்டி வருந்தல்

**1168.** ஆர்த்தா ரண்டத் தப்புறத்து
மறிவிப் பார்போ லங்கோடிங்
கீர்த்தார் முரச மெற்றின
ரிடித்தார் தெழித்தா ரெம்மருங்கும்
பார்த்தா ரோடிச் சானகிக்கும்
பகர்ந்தா ரவளு முயிர்பதைத்தாள்
வேர்த்தா ளுலந்தாள் விம்மினள்
விழுந்தா ளழுதாள் வெய்துயிர்த்தாள்.

ஆர்த்தார், அண்டத்து அப்புறத்தும்
அறிவிப்பார்போல்; அங்கோடு இங்கு
ஈர்த்தார், முரசம் எற்றினர், இடித்தார்,
தெழித்தார், எம் மருங்கும்
பார்த்தார், ஓடிச் சானகிக்கும்
பகர்ந்தார்; அவளும் உயிர் பதைத்தாள்,
வேர்த்தாள், உலந்தாள், விம்மினள்,
விழுந்தாள், அழுதாள், வெய்து உயிர்த்தாள்.

அண்டத்து அப்புறத்தும் அறிவிப்பார்போல் ஆர்த்தார் என்க. ஈர்த்தார் – அனுமனை இழுத்தார். முரசங்களை ஈர்த்துவந்து எற்றினர் (–அடித்தார்) எனினும் ஆம். வெய்து உயிர்த்தாள் – வெப்பமாகப் பெருமூச்சு விட்டாள். இனிப் பிராட்டியின்கூற்று வருமாறு. (126

## பிராட்டி அங்கியங் கடவுளை வேண்டல்

1169. தாயே யனைய கருணையான்
துணையை யாதுந் தகவில்லா
நாயே யனைய வல்லரக்கர்
நலியக் கண்டா னல்காயோ
நீயே யுலகுக் கொருசான்று
நிற்கே தெரியுங் கற்பினால்
தூயே னென்னிற் றொழுகின்றே
னெரியே யவனைச் சுடலென்றாள்.

'தாயே அனைய கருணையான்
துணையை, யாதும் தகவு இல்லா
நாயே அனைய வல் அரக்கர்
நலியக் கண்டால், நல்காயோ?
நீயே உலகுக்கு ஒரு சான்று;
நிற்கே தெரியும், கற்பினால்
தூயேன் என்னில் தொழுகின்றேன்,
எரியே அவனைச் சுடல்' என்றாள்.

'எரியே! வல்லரக்கர் நலியக் கண்டால் நல்காயோ? நீயே உலகுக்கு ஒரு சான்று ; நிற்கே தெரியும் கற்பு ; தொழுகின்றேன் ; அவனைச் சுடல்' என்றாள் என்க,

தாயே அனைய கருணையான் - தாயைப்போல நன்மக்களிடம் அருள் புரியும் இராமபிரான்;'உலகின் தாயாகின் நீ ஐய' என்றும், 'கருணாகரன்', 'கருணையங்கடல்' என்றும் இக்கவியரசரே, வேறிடங்களிற் கூறுதலால், இராமபிரான் கருணாமூர்த்தி என்பது தெரியலாம். கருணையான் துணையை-அப்பெருமானுக்கு உயிர்த்துணைவனான அனுமனை. அத்தகை யோனை அரக்கர் நலிவதை நீ கண்டு வைத்தும் அருள்புரியமாட்டாயோ! உலகுக்கு ஒரு சான்றானவன் நீயன்றோ? கற்பின் திறன் உனக்கே தெரியும். ஆகையால் அக்கருணையானையன்றி, வேறு தெய்வம் தொழாத நான் உன்னைத் தொழுகின்றேன்; அவனைச் சுடாமல் இருப்பாயாக: என்றாள் என்க.

கருணையான் துணையானவன் அனுமன் என்பது, "என்னே நிருதர் என்னுவர் இவனே எங்கோன்றுணையானால்" (601) என்று, பிராட்டி தன்முன் விசுவரூபத்தைக் காட்டி நின்ற அனுமனைப் புகழ்ந்தமையானும் அறியப்படும். 'கருணையான் துணையே' என்ற பாடமும் உண்டு. இங்கு கருணையான் என்பது வாயுதேவனையும் துணையே என்பது அவனுடைய

நட்பினனுன அக்கினிபகவானையும் குறிக்கும் என்பர். இப்பொருளில் 'நலியக் கண்டால்' என்பதற்குச் செயப்படு பொருள் இல்லாமையும், 'எரியே அவனைச்சுடல்' என்பதற்கு 'அவன்' என்பதனுல் சுட்டப்படு பொருளின்மையும் காண்க. *(127)*

## அனல் குளிர்தல் 1170—1172

**1170.** வெளுத்தமென் னகையவள் விளம்பு மேல்வையின்
★ ஒளித்தவெங் கனலவ னுள்ள முட்கினுன்
தளிர்த்தன மயிர்ப்புறஞ் சிலிர்ப்பத் தண்மையால்
குளிர்த்ததக் குரிசில்வா லென்பு கூரவே.

*வெளுத்த மெல் நகையவள் விளம்பும் ஏல்வையின்,*
*ஒளித்த வெம் கனலவன் உள்ளம் உட்கினுன்;*
*தளிர்த்தன; மயிர்ப்புறம், சிலிர்ப்பத் தண்மையால்*
*குளிர்த்தது; அக் குரிசில் வால் என்பு கூர ஏ.*

நகையவள் விளம்பும் ஏல்வையின், கனலவன் உள்ளம் உட்கினுன்; மயிர்ப்புறம் தண்மையால் தளிர்த்தன; என்புகூரக் குரிசில்வால் குளிர்த்தது: என்க.

வெளுத்த மெல் நகையவள் – வெண்மையான மெல்லிய பற்களை யுடைய பிராட்டி ; விளம்பும் ஏல்வையின் – 'எரியே ! தொழுகின்றேன் ; அவனைச் சுடல்' என்ற அளவில்; ஒளித்த வெம் கனலவன் - மறைத்துக் கொண்ட வெம்மையுடையவனுய்; உள்ளம் உட்கினன்–மனம் நாணினன்.

அக்கினிதேவன் மனம் நாணியது, தான் பிராட்டி குறிப்பறிந்து முன்னமே தண்மைபுரியாமல், அவள் தொழுது பிரார்த்தித்தபின் அது செய்ய நேர்ந்ததால் என்க. ஒளித்த வெங்கனலவன்–வெம்மை ஒளித்த (நீக்கிய) கனலவன் என வடமொழி வழக்குப்பெற்றது ; 'அருங்கேடன்' (திருக்குறள் 212) என்புழிப்போல. 'போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான்' (சூர்ப்பணகைப் 94) என்ருர் முன்னரும். (அக்கினிதேவன் வெம்மை நீங்கினவுடனே) குரிசில் மயிர்ப்புறம் சிலிர்ப்பத் தளிர்த்தன; வால் என்புகூரவே குளிர்த்தது–குரிசிலின் உடற்புற மயிர்கள் சிலிர்த்தல் உண்டாம்படி செழிப்புற்றன; வால் என்புடன் குளிர்ச்சியுற்றது என்க. குளிர்ந்தது எனற்பாலது குளிர்த்தது என வல்லெழுத்தாகத் திரிந்தது. குரிசில் – ஆண்டகையான அனுமன். *(128)*

**1171.** மற்றினிப் பலவென் வேலை
★ வடவனல் புவிய ளாய
கற்றைவெங் கனலி மற்றைக்
காயத்தீ முனிவர் காக்கும்
முற்றுறு மும்மைச் செந்தீ
முப்புர முருங்கச் சுட்ட
கொற்றவ னெற்றிக் கண்ணின்
வன்னியும் குளிர்ந்த வன்றே.

*மற்று இனிப் பல என்? வேலை வடஅனல், புவி அளாய கற்றை வெம் கனலி, மற்றைக் காயத்தி, முனிவர் காக்கும் முற்றுறு மும்மைச் செந்தி, முப்புரம் முருங்கச் சுட்ட கொற்றவன் நெற்றிக் கண்ணின் வன்னியும், குளிர்ந்த அன்றே.*

வடவனல் - வடவையனல் ; புவி அளாய கற்றை வெம் கனலி – பூமியில் பொருந்திய தொகுதியாகிய வெப்பம் உள்ள தி. காயத்தி–ஆகாயத்தில் அமைந்த தி. முனிவர் காக்கும் முற்றுறு மும்மைச் செந்தி – முனிவர்கள் காத்து வளர்க்கும் (வைதிக நியமம்) நிறைவேறற்குரிய மூவகைத் திக்கள். முப்புரம் சுட்ட கொற்றவன் நெற்றிக் கண்ணின் வன்னி–சிவபிரானது நெற்றிக்கண்ணில் உள்ள தி. இவை யாவும் குளிர்ச்சியுடையவாயின (எனின்) வேறு பலவாகக் கூறவேண்டுவதென்? என்றவாறு. முருங்க – அழிய. வன்னி – நெருப்பு. (129)

**1172.** அண்டமுங் கடந்தா னங்கை
யனலியுங் குளிர்ந்த தங்கிக்
குண்டமுங் குளிர்ந்த மேகத்
துருமெலாங் குளிர்ந்த கொற்றச்
சண்டவெங் கதிர வாகித்
தழங்கிருள் விழுங்குந் தாவில்
மண்டலங் குளிர்ந்த மீளா
நரகமுங் குளிர்ந்த மாதோ.

*அண்டமும் கடந்தான் அம் கை அனலியும் குளிர்ந்தது; அங்கிக் குண்டமும் குளிர்ந்த; மேகத்து உரும் எலாம் குளிர்ந்த; கொற்றச் சண்ட வெம் கதிர ஆகித் தழங்கு இருள் விழுங்கும் தாவு இல் மண்டலம் குளிர்ந்த; மீளா நரகமும் குளிர்ந்த மாதோ.*

*அண்டமும் கடந்தான்* - அண்டங்கள் எல்லாவற்றுக்கும் அப்பாலுள்ள சத்தியலோகத்தவனான பிரமனது; *அங்கை அனலி* - உள்ளங்கையில் உள்ள அக்கினி. பிரமன் வலக்கையுள் அக்கினி உண்டு என்பது நூற்கொள்கை. *அங்கிக்குண்டம்* - யாகாதிகள் புரிதற்குரிய அக்கினி குண்டங்கள். *தழங்கு இருள் விழுங்கும் மண்டலம்* - சூரியமண்டலம்; *மீளா நரகம்*-மீள அரிய நரகலோகத் தி ;—ஆகிய திக்களும் குளிர்ச்சியடைந்தன என்க.

*கொற்றச் சண்ட வெம் கதிர ஆகி* - வெற்றி பொருந்திய உக்கிரமான கொடிய கிரணங்கள் கொண்டனவாய். *சண்டம்* - உக்கிரம். *தழங்குதல்*-முழங்குதல், ஒலித்தல். *மீளா நரகம்* - அக்கினி ஜ்வாலம், அக்கினிப் பிரபைபோன்ற கொடுநரகங்கள். பிராட்டியின் பிரார்த்தனைக்கு இரங்கிப் பிரபஞ்சத்தில் உள்ள அக்கினிகள் எல்லாம் தம் கொடுமை நீங்கி அனுதாபங் காட்டலாயின என்பது கருத்தாகக் கொள்க. *(130)*

### அனல் குளிர்ந்தமையால் அனுமன் மகிழ்தல்

**1173.** வெற்பினு லியன்ற தன்ன
மேனியை விழுங்கி வெந்தீ
நிற்பினுஞ் சுடாது நின்ற
நீர்மையை நினைவி னோக்கி
அற்பினு ரருத சிந்தை
யனுமனுஞ் சனகன் பாவை
கற்பினு லியன்ற தென்பான்
பெரியதோர் களிப்ப னானன்.

வெற்பினால் இயன்றது அன்ன மேனியை விழுங்கி, வெம் தீ
நிற்பினும், சுடாது நின்ற நீர்மையை, நினைவின் நோக்கி,
அற்பின் நார் அருத சிந்தை அனுமனும், 'சனகன் பாவை
கற்பினால் இயன்றது' என்பான், பெரியது ஓர் களிப்பன் ஆனான்.

அனுமனும் மலையால் அமைக்கப்பட்டது போன்ற தன் மேனியை முழுதும் கவர்ந்து கொடிய தி நின்று எரிந்தாலும், அது சுடாமலிருந்த தன்மையை யோசித்துப் பார்த்து, இது சானகியின் கற்புக் காரணமாக ஆகியது என்று நினைப்பானாகிப் பெரியதோர் மகிழ்ச்சியுடையனானான் என்க.

*அற்பின் நார் அருத சிந்தை அனுமனும்* - இராமபிரான்பக்கல் அன்பாகிய பாசபந்தம் நீங்காத மனத்தையுடைய அனுமனும் என்றவாறு.

உடலிற் பாசபந்தம் அற்றவனுயினும் உளத்தில் இராமபத்தியான பாச பந்தம் நீங்காதவன் மாருதி என்பது குறிப்பு. (131)

## அனுமன் இலங்கைநகர் முழுதும் காணுதல்

**1174.** அற்றையவ் விரவிற் ருன்ற
னறிவினுன் முழுது முன்னப்
பெற்றில னெனினு மாண்டொன்
றுள்ளது பிழையு ருமே
மற்றுறு பொறிமுன் செல்ல
மறைந்துசெல் லறிவு மானக்
கற்றிலா வரக்கர் தாமே
காட்டலிற் றெரியக் கண்டான்.

அற்றை அவ் இரவில், தான் தன் அறிவினுல் முழுதும் உன்னப் பெற்றிலன் எனினும், ஆண்டு ஒன்று உள்ளது பிழை உருமே, மற்று உறு பொறி முன் செல்ல, மறைந்து செல் அறிவு மானக் கற்றிலா அரக்கர் தாமே காட்டலின், தெரியக் கண்டான்.

முன் பிராட்டியைக் காண ஊர் தேடிவந்த அன்றை இரவில், (தேடுதல் முயற்சியில் மூண்டு விரைந்து சுற்றிவந்ததனுல்) நகர்ப்பகுதிகள் முழுதையும் தன் அறிவு கொண்டு, ஊன்றியறியப் பெற்றிலனுயினும், இப்போது அரக்கர்கள் தாமே காட்டிவந்ததனுல் விளக்கமாகத் தெரியப் பார்த்தான் அநுமன் என்றவாறு.

இதற்கு, கண் செவி மூக்கு முதலிய பொறிகளின்வழி மனஅறிவு புலன்வழிச் சென்று யாவும் அறிதலை மூன்றும் அடியில் உவமைகூறியது நயம் தருவதாம். தூதுவனுப் பகைப்புலம் வந்தவன் புலன் அறிந்து கொண்டு போமாறு அவனுக்குத் தம் நகரம் முழுதையுமே வலியக்கொண்டு காட்டுதல் பேதைமை யாதலின், 'கற்றிலா அரக்கர்' எனப்பட்டார். உருவம் அற்றது அறிவாதலால் அதற்கு, மறைந்துசெல் என்ற அடைகொடுக்கப்பட்டதென்க. (132)

## அனுமன் மேலெழ அரக்கர் தோளற்று வீழ்தல்

**1175.** முழுவதுந் தெரிய நோக்கி
முற்றுமூர் முடிவிற் சென்ருன்
வழுவுறு கால மீதென்
றெண்ணினன் வலிதிற் பற்றித்

தழுவின ரிரண்டு நூரு
யிரம்புயத் தடக்கை தாமபோ
டெழுவென நால விண்மே
லெழுந்தனன் விழுந்த வெல்லாம்.

முழுவதும் தெரிய நோக்கி, முற்றும் ஊர் முடிவில் சென்ருன், 'வழுவுறு காலம்' ஈது என்று எண்ணினன், வலிதின் பற்றித் தழுவினர் இரண்டு நூருயிரம் புயத்தடக்கை, தாம்போடு எழு என நால, விண்மேல் எழுந்தனன்; விழுந்த எல்லாம்.

முற்றும் ஊர் முடிவில் – சூழ்ந்துவரப்பெற்ற நகரின் எல்லே முடிவிற்கு; வழுவுறு காலம் ஈதென்று எண்ணினன்–தப்பிப்போதற்குரிய சமயம் இதுவே என்று கருதியவனுய்; பிணித்த கயிற்றுடன் தன்னே இழுத்துச் சென்ற அரக்கர்களே வலிதிற் பற்றிக்கொண்டு, அவர்களின் இரண்டு நூருயிரம் புயத்தடக்கைகள் தாம்புடன் தூண்போலத் தொங்கும்படி ஆகாயத்தின்மேலே எழுந்தான்; அப்போது அவ்வரக்கர்களின் உடல்களும் தோள்களும் கீழே விழலாயின என்பது பின்னிரண்டடிகட்குப் பொருள்.

'இரண்டு நூருயிரம் புயத் தடக்கை நால' என்றது, அனுமனது உடலிற்பிணித்த கயிறுகளே இரண்டு கூருகப் பிரித்துப் பற்றிநின்ற ஒருலட்சம் அரக்கர்களின் இரண்டு லட்சம் தோள்கள் தாம்போடு தொங்க என்றவாறு. எழு – தூண். நால - தொங்க. (133)

## அனுமனுடைய தோற்றம்

**1176.** இற்றவா ளரக்கர் நூரு
யிரவரு மிழந்த தோளார்
முற்றினு ருலந்தா ரையன்
மொய்ம்பினே டுடலே மூழ்கச்
சுற்றிய கயிற்றி னேடுந்
தோன்றுவா னரவின் சுற்றம்
பற்றிய கலுழ னென்னப்
பொலிந்தனன் விசும்பின் பாலான்.

இற்ற வாள் அரக்கர் நூருயிரவரும், இழந்த தோளார், முற்றினுர் உலந்தார்; ஐயன், மொய்ம்பினேடு உடலே மூழ்கச் சுற்றிய கயிற்றினேடும் தோன்றுவான், அரவின் சுற்றம் பற்றிய கலுழன் என்னப் பொலிந்தனன்; விசும்பின் பாலான்.

இற்ற - விழுந்த. இழந்த தோளார் - தோள் இழந்தவர்களாய்; முற்றினர் உலந்தார் - உயிர் முடிந்து இறந்தார்கள். உடலை மூழ்க மொய்ம்பினேடு சுற்றிய கயிற்றினேடும் - தன்தோள்களோடு உடம்பையும் சுற்றி வலிந்து கட்டிய கயிற்றுடனே; விசும்பில் தோன்று வான் ஐயன் - வானத்தினிடமாகக் காணப்படுகின்ற அனுமன். பாம்பினங்களால் சுற்றிக் கட்டப்பட்ட கருடன்போல விளங்கினன் என்றவாறு.

சிறியதிருவடியாகிய அனுமனுக்குப் பெரியதிருவடியான கருடன், பெரிய வடிவாலும், நாகங்கள் சுற்றியுள்ள உடலாலும் ஏற்ற உவமையாதல் காண்க. இதனல் கருடனுக்கு நாகங்கள்போல அனுமனுக்குக் கயிற்றுப்பிணிப்புக்கள் எளிதில் நீக்கக்கூடியவை என்பது போதரும். பாம்புகளைக் கருடன் பற்றிக்கொள்ளும்போது அதனுடம்பில் அப்பாம்புகள் சுற்றிக்கொள்ளுதல் இயல்பு. *(134)*

### அனுமன் தன்வாலை இலங்கைமீது செலுத்தல்

**1177.** துன்னலர் புரத்தை முற்றும்
சுடுதொழில் தொல்லை யோனும்
பன்னின பொருளும் நாணப்
பாதக ரிருக்கை பற்ற
மன்னனை வாழ்த்திப் பின்னை
வயங்கெரி மடுப்பெ னென்னுப்
பொன்னகர் மீதே தன்போர்
வாலினைப் போக விட்டான்.

'துன்னலர் புரத்தை முற்றும்
சுடுதொழில் தொல்லையோனும்,
பன்னின பொருளும், நாணப்
பாதகர் இருக்கை பற்ற,
மன்னனை வாழ்த்திப் பின்னை
வயங்கு எரி மடுப்பென்' என்னுப்
பொன் நகர் மீதே தன்போர்
வாலினைப் போக விட்டான்.

துன்னலர்புரம் - பகைவரது திரிபுரம். தொல்லையோன் - முன்னேனை சிவபிரான். (அவனும்), பன்னின பொருளும் நாண - அப்பிரானுக்குத் துணையாக வந்தன என்று சொல்லப்பட்ட பொருள்களும் நாணும்படி. பாதகர் இருக்கை பற்றப் பொன்னகர் மீதே தன் வாலினைப் போக

விட்டான் – தியோரான அரக்கரின் இருப்பிடங்கள் யாவும் எரியும்படி இலங்கைமாநகரில் தன் வாலினைச் செல்லவிட்டான் அனுமன் என்றவாறு.

மன்னனை வாழ்த்திப் பின்னை வயங்கு எரி மடுப்பன் – இராமபிரானைத் துதித்துக்கொண்டு பின்பு ஒளிரும் அக்கினியை மூட்டுவேன். இது அனுமன் உட்கோள். என்னு வாலினைச் செல்லவிட்டான் என்க. சிவபிரானுக்குத் துணைபுரியவந்த பொருள்கள்:—ஆதிசேடனுன நாணி, திருமாலாகிய அம்பு, பூமியாகிய தேர் என்பன. அத் துணைவலிகள் இன்றியே அனுமன் செயலாற்றத் துணிந்தமையின், சிவபிரானும் துணைப்பொருள்களும் நாண எனப்பட்டது. இராமபிரானது திருவருளால் தன் நோக்கம் முற்றுப் பெறுவதாம் என்பார், 'மன்னனை வாழ்த்திப் பின்னர் வயங்கெரி மடுப்பென்' என்று அனுமன் கூறினனென்றூர் என்க. (135)

### வாலின் வருணனை

**1178.** தன்னிறைக் குறுகண் வெய்யோர்
தாமியற் றலுங்கேட் டின்னே
அன்னவர்க் கிறுதி யாக
வணிநக ரழிப்ப லென்னுச்
செந்நிறச் சிகைய வெம்போர்
மழுப்பின்னர்ச் சேற லொக்கும்
அன்னிறத் தண்ண றூத
னனல்கெழு கொற்ற நீள்வால்.

தன் இறைக்கு உறுகண் வெய்யோர்
தாம் இயற்றலும் கேட்டு, 'இன்னே
அன்னவர்க்கு இறுதி ஆக,
அணிநகர் அழிப்பல்:' என்னுச்
செந்நிறச் சிகைய வெம்போர்
மழு, பின்னர்ச் சேறல் ஒக்கும்;
அல் நிறத்து அண்ணல் தூதன்
அனல்கெழு கொற்ற நீள் வால்.

நீள் வால், தன் இறைக்கு உறுகண் வெய்யோர் இயற்றலும் கேட்டு, வெம்போர் மழு, 'அணிநகர் அழிப்பல்' என்னுப் பின்னர்ச் சேறல் ஒக்கும் என்றவாறு.

தன் இறைக்கு–தன் கடவுளான சிவபிரானுக்கு; என்றது அப்பிரானுடைய அமிசமான அனுமானுக்கு என்றவாறு. அன்னவர்க்கு – வெய்யோரான அரக்கர்க்கு; இன்னே அணிநகர் அழிப்பல் என்ன – இப்போதே அவரது இலங்கைநகரை அழிப்பேன் என்று. வெம்போர் மழு – சிவபிரானது போர்க்குரிய மழுப்படையானது; பின்னர் – பின்புறமாக; சேறல் ஒக்கும் – சேர்தலைப்போலும்; அனல்கெழு கொற்ற நீள் வால் – அக்கினி மிக்கதான (அனுமனது) வெற்றியையுடைய நீண்ட வால் என்றபடி.

அனுமன் சிவபிரான் அமிசமாதலால், அப்பெருமான் வலக்கையிற் கொண்ட படையான மழுவே பின்பக்கத்திருந்து அரக்கரையும் அவர் நகரையும் அழிக்கவந்தது போலும் அக்கினி மயமான அனுமன்வால் என்பது கருத்து. அல் நிறத்து அண்ணல் – இருட்டையொத்த நிறத்தவனை இராமபிரான். 'இருட்கனியும் போல்பவன்' (மிதிலைக். 139) என்றார் முன்னும். (136)

**1179.** அப்புறழ் வேலை காறு
மலங்குபே ரிலங்கை தன்னை
எப்புறத் தளவுந் தீய
வொருகணத் தெரித்த கோட்பால்
துப்புறழ் மேனி யண்ணன்
மேருவிற் குழையத் தோளால்
முப்புரத் தெய்த கோலே
யொத்ததம் மூரிப் போர்வால்.

அப்பு உறழ் வேலை காறும்
அலங்கு பேர் இலங்கை தன்னை,
எப் புறத்தளவும் தீய
ஒரு கணத்து எரித்த கோட்பால்,
துப்பு உறழ் மேனி அண்ணல்,
மேருவில் குழையத் தோளால்
முப்புரத்து எய்த கோலே
ஒத்தது; அம் மூரிப் போர் வால்.

மூரி வால்; வேலைகாறும் இலங்கைதன்னை எரித்த கொட்பால், துப்பு உறழ் மேனி அண்ணல், மேருவில் குழைய முப்புரத்து எய்த கோலே

ஒத்தது எ - று. அப்பு உறழ் வேலைகாறும் அலங்கு பேர் இலங்கைதன்னை – நீர்மிக்க கடல்வரை விளங்கும் இலங்கைமாநகரை; அலங்குதல் – விளங்குதல். கோட்பு – கோட்பாடு. 'கொட்பால்' என்றும் பாடம். இதற்குக் கருத்தால் என்பது பொருள். 'கூடவைக்குங் கொட்பினளாகி' (மணிமேகலை. 21, 77) துப்பு – உறழ் – பவளத்தை ஒத்த. முப்புரம் – திரிபுரம். கோல் – திருமாலாகிய அம்பு. (137)

## அனுமன் தன் வாலிற்பற்றிய தீயை இலங்கை முழுதும் பரவும்படி உய்த்தல்

**1180.** உகக்கடை யுலகம் யாவு
முணங்குற வொருதன் ஞட்டம்
சிகைக்கொழுங் கனலை வீசுஞ்
செயன்முனம் பயில்வான் போல
மிகைத்தெழு தீய ராயோர்
விரிநகர் வீயப் போர்வால்
தகைத்தலி னேன்மை சாலுந்
தனிவீரன் சேணி லுய்த்தான்.

*உகக்கடை, உலகம் யாவும்*
*உணங்குற, ஒரு தன் நாட்டம்*
*சிகைக் கொழுங் கனலை விசும்*
*செயல் முனம் பயில்வான் போல,*
*மிகைத்து எழு தீயர் ஆயோர்*
*விரிநகர் வீயப், போர் வால்,*
*தகைத்தல் இல் நோன்மை சாலும்*
*தனி வீரன், சேணில் உய்த்தான்.*

யுகாந்தத்தில் எல்லாவுலகங்களும் அழிவுறும்படி தன் நெற்றிக்கண்ணால் நெருப்பை விசுஞ்செயலை முன்பே பயின்றுகொள்பவன்போல, தனிவீரனை அனுமன் தீயோரின் இலங்கை நகரம் அழியும்படி தன் ஒப்பற்ற வாலினை நெடுந்தூரம் செலுத்தினன் எ - று.

உகக்கடை – யுகமுடிவு. உணங்குற - அழியும்படி: சிகை – சுவாலையுடைய. மிகைத்து எழு – சினந்து போர்க்கு எழுகின்ற. விய – அழிவுற.

தகைத்தல் இல் நோன்மை சாலும்-தடுக்கமுடியாத வலிமை மிக்க. சேண் - நெடுத்தூரம். (138)

இச்செய்யுள், 1, 4, 5, 6, 8, 9, 10, 11, 12, 13, 14, 16, 17, 18, 20, 23, 25, 26, 28, 33, 34, 36, 37, 54 என்னும் குறியிடுள்ள சுவடிகளில் இல்லை.

### அனுமன் தன் வாலிற்பற்றிய தீயுடன் இலங்கைநகர மாளிகைதோறும் தாவிச்செல்லுதல்

**1181.** வெள்ளியிற் பொன்னி னுஞ
விளங்குபன் மணியின் விஞ்சை
தெள்ளிய கடவுட் டச்சன்
கைமுயன் றரிதிற் செய்த
தள்ளறு மனைக டோறு
முறைமுறை தாவிச் சென்றான்
ஒள்ளெரி யோடுங் குன்றத்
தூழிவீ ழுருமொ டொப்பான்.

வெள்ளியின் பொன்னின் நாறு
விளங்குபல் மணியின் விஞ்சை
தெள்ளிய கடவுள் தச்சன்,
கை முயன்று அரிதின் செய்த,
தள் அறு மனைகள் தோறும்,
முறை முறை தாவிச் சென்றான்;
ஒள் எரியோடும் குன்றத்து
ஊழிவிழ் உருமொடு ஒப்பான்.

விஞ்சை தெள்ளிய கடவுள் தச்சன், வெள்ளியின் பொன்னின் மணியின் அரிதிற் செய்த மனைகள்தோறும், ஊழிவிழ் உருமொடு ஒப்பானுய்த் தாவிச்சென்றான் எ - று.

கடவுள் தச்சன் - தெய்வத் தச்சனான விசுவகருமா. இந்திரனும் தேவர்களும் வசிப்பதற்கென்று ஆதியில் இத்தெய்வத் தச்சன் இலங்கையை நிருமித்தனன் என்றும், அவர்களைத் துரத்திவிட்டு இராவணன் இலங்கையில் குடியேறினன் என்றும் கூறுவர். ஒள் எரியோடும் குன்றத்து ஊழி விழ் உருமு - ஒள்ளிய அக்கினியோடு மலைகளின் மீது ஊழிக்காலத்தே விழுகின்ற பேரிடி. மாடங்கட்கு மலைகளும் தன் வாலின்

*தியோடு அவற்றிற் பாயும் அனுமனுக்கு நெருப்புடன் விழும் பேரிடியும் உவமைகள்.* *(139)*

## இலங்கை நகரை எரி உண்டமை

**1182.** நீனிற நிருதர் யாண்டு
நெய்பொழி வேள்வி நீக்கப்
பால்வரு பசிய னன்பான்
மாருதி வாலைப் பற்றி
ஆலமுண் டவனன் றூட்ட
வுலகெலா மழிவி னுண்ணும்
காலமே யென்ன மன்னோ
கனலியுங் கடிதி னுண்டான்.

*நீல் நிற நிருதர், யாண்டும்*
*நெய் பொழி வேள்வி நீக்க,*
*பால் வரு பசியன், அன்பான்*
*மாருதி வாலைப் பற்றி,*
*ஆலம் உண்டவன், அன்று ஊட்ட,*
*உலகு எலாம் அழிய உண்ணும்,*
*காலமே என்ன, மன் ஓ*
*கனலியும் கடிதின் உண்டான்.*

*கறுத்த நிறத்தவரான அரக்கர்கள், நெய்சொரிந்து புரியும் யாகங்களை எங்குமே புரியவொட்டாமல் நீக்கிவிட்டதனால், தன் வயிற்றில் பசி மிக்கவனான அக்கினிதேவன், மாருதியின் வாலை ஆதாரமாகக்கொண்டு விரைவில் உண்ணலானான் என்பது இப்பாடற் கருத்து*

*வாயுதேவனுக்கு நண்பனாகலின் 'அன்பால் மாருதிவாலைப் பற்றி' என்றார். சிவபிரான் உண்பிக்க உலகெல்லாம் தான் உண்ட அந்த ஊழி முடிவாகவே கருதி அக்கினிபகவான் உண்ணலாயினன் என்றும், இவ்வாறு கருதியது, சிவபிரான் அமிசமாக அனுமன் உள்ளமையால் என்றும் கொள்க.* *(140)*

பிணிவிட்டு படலம் முற்றிற்று.

# 13. இலங்கை யெரியூட்டு படலம்

இந்தப் படலம், இலங்கையை அநுமன் கொளுத்திய செய்தியைக் கூறும் அறுபத்துநான்கு செய்யுட்களை உடையது; ‘ எரியூட்டு படலம் ’ ‘ ஊர் சுடு படலம் ’ என்ற பெயராலும் சில ஏடுகளிலும் அச்சுப் புத்தகத்திலும் காணப்பெறுகிறது. எரி ஊட்டுதல் என்பதற்கு எரிக்கு உணவாக ஊட்டுதல் என்பது பொருள். இப்படலத்தின் சுருக்கம் பின்வருமாறு: —

அந்தக் கொடிய கனல் மாளிகைகளின் உள்ளும் புறமும் பரவியது. மணவாசலிட்டு மகிழ்ந்திருந்த மாளிகையிலிருந்தவர்களெல்லாம் கதறி அழுதுகொண்டு போவதும் வருவதுமாக ஊசல்போல் ஆடி அலமந்தார்கள். செம்மணிகளால் கட்டப்பெற்ற மாளிகைகள் வீசும் ஒளியையும் பரவுகின்ற தீயின் ஒளியையும் வேறு பிரித்துக் காணவியலாது சில மகளிர் மாளிகைகளிலேயே தங்கி மாண்டார்கள். புறம் எல்லாம் புகை சூழ்ந்து தீப்பொறி பறந்துகொண்டிருந்ததைப் பார்த்தால் இருண்ட சோலையில் தேன் பொழிந்த மலர்கள் சிந்துவதுபோல் இருந்தது; அங்கே சென்ற மகளிரும் சோலையிலே உலவும் மயில்போலத் தோன்றினார்கள். அரக்கர்கள் செந்நிறத் தலைமயிர் உடையவர்களானபடியால் தீப்பற்றிய தலைக்கும் பற்றாத தலைக்கும் வேறுபாடு தெரியாமல் மைந்தரும் மகளிரும் ஒருவர் தலையில் ஒருவர் தண்ணீர் ஊற்றினார்கள். இவ்வளவு காலம் இராவணனது ஆணையில் அடங்கித் தனித்தனியாக வீடுகளில் குறிப்பிட்ட அளவில் அடைபட்டிருந்த தீ, இந்தப் பெருந்தீயைக் கண்டவுடன், கடவுட் காட்சியில் மாயையின் கட்டு ஒழிந்து தன் இயல்பை யடையும் பக்குவமுற்ற ஆன்மாவைப் போல், பெருந்தீயில் கலந்துவிட்டது. குறளுருவாய் நீண்ட நெடுமால்போல் புகைக்கொடி மேலுயர்ந்தது. வெம்மைக்கு ஆற்றாது நீர்நிலைகளுக்குச் சென்றமகளிர், அங்கு ஓடிவந்த எருமைகளைக் கண்டு அன்னம்போல் ஒதுங்கினார்கள்; கடல் வெதும்பி மீன்கள் எல்லாம் உயிர் சோர்ந்தன. பொன் மாளிகைகளெல்லாம் உருகி ஓடிக் கடல் நீரில் கலந்து பொற்பாளங்களாயின. மேகங்கள் கொதித்தன; சோலைகள் கரிந்தன; குதிரைகள் மாய்ந்தன; யானைகள் தோலுரிந்து ஐராவதம் போல் வெண்ணிறமடைந்தன. நற்கடன் பூண்ட அரக்கியர்கள் சிலர், தங்கள் நாயகர் மாண்டமையால் வீட்டை விட்டு வெளிவராது உள்ளிருந்தே மாண்டார்கள். கனல், வானவர் உலகையும் செங்கதிர் மண்டலத்தையும் தாக்கியது. திங்களைத் தாக்கியதால் அதிலிருந்து உருகி விழுந்த அமுதத் துளிகளைச் சில அரக்கர் உண்டு உயிர்பெற்றார்கள். வீட்டை விட்டு வெளியே ஓடிவந்த சில அரக்கியர், தாங்கள் வளர்த்த கிளி கூட்டிலே இருந்து வெந்து பதைப்பதைக் கண்டு வருந்தினார்கள். சில மகளிர்

புகைக்குள் மறைந்து நின்ற காட்சி, திரையினுள்ளே விளங்கும் ஓவியம் போல் தோன்றியது. புகை எங்கும் பரந்தமையால் கயிலைமலையும் ஐராவதமும் அன்னமும் கருநிறம் அடைந்தன. வெம்மைக்கு ஆற்ருது அரக்கர்களெல்லாம் கடலில் சென்று முழுகினமையால் அவர்கள் தலைமயிர் கடல் முழுவதும் பரந்து கிடந்தது, கடலே நெருப்புப்பற்றி எரிவதுபோல் தோன்றியது. மேலெழுந்து பறக்க வியலாது கடலில் விழுந்த பறவைகளை மீன்கள் தின்றன. இவ்வாறு இலங்கை யெல்லாம் தணலாக்கிய தீ, இராவணன் மாளிகையிலும் புகுந்து அதிலுள்ள நறும் பொருள்களின் மணம் திசையெல்லாம் பரவ எரித்தொழித்தது ; அம்மாளிகையும் உருகிக் கட்டியாகி ஒரே பொன்மலையாகத் தென்றிசை மேரு என நின்றது. இராவணன் புஷ்பக விமானத்தில் தன் சுற்றத்துடன் மேல் ஏறினுன் ; நிகழ்ந்தது வினவி, அந்தக் குரங்கினுல் ஏற்பட்ட தீங்கு என்பது தெரிந்து, தன் வீரத்தைத் தானே இகழ்ந்துகொண்டு, அக்குரங்கைப் பற்றிவர வீரர்களை அனுப்பினுன். விரைந்து சென்ற வீரர்கள் எழுவரும், பலவாறு கூவிக்கொண்டு அநுமனைத் தேடி மிக்க சினத்துடன் எதிர்த்தார்கள். அநுமன் ஒரு பெரிய மரத்தைத் தன் வாலால் எடுத்து அடித்து அவர்களைக் கொன்ருன். அவர்களுடைய குருதி இலங்கையில் ஓடி ஊரிலிட்ட நெருப்பைத் தணித்தது. மீண்டும் சிலர் வந்து பொருது மாய்ந்தனர் ; சிலர், கடலில் போய் மறைந்தனர். அநுமன் தன் தீப்பட்ட வாலைக் கடலில் நனைத்தான் ; நீர் முழுதும் கொதித்தது ; கடலில் மறைந்தவர்களும் இறந்தார்கள். வான் வழியாகச் சென்றவர்கள் சிலர் 'பிராட்டியிருந்த பொழிலின் புறத்திலும் தீ நெருங்கவில்லை' என்று சொல்லக் கேட்டு மிக மகிழ்ந்து, அங்குச் சென்று, பிராட்டியை வணங்கி விடைபெற்றுக்கொண்டு விரைவாகப் புறப்பட்டான் அனுமன். செந்தீச் செல்வனும் அரக்கருக்கு அஞ்சி மறைந்தான்.

இப்படலச் செய்திகள், வான்மீகத்துள் ஐம்பத்துநான்காவது சருக்கம் முதல் ஐம்பத்தாருவது சருக்கத்து முதல் ஒன்பது சுலோகங்கள் வரையில் கூறப்பட்டுள்ளன. 'லங்காதஹனம்' என்னும் ஐம்பத்து நான்காவது சருக்கத்தில், அநுமன் ஒவ்வொரு அரக்கர் தலைவர்கள் வீட்டையும் பார்த்து அவர்கள் செல்வம் முதலியன அழியும்படி தீயைக் கொளுத்தியதாகவும், பிறகு தீ, எங்கும் பரவிக் கொழுந்துவிட்டு எரிந்து மாளிகைகளை எரித்துச் சாம்பலாக்கியது என்றும், அரக்கர்கள் ஒன்று கூடித் 'திருமாலின் ஆற்றலே இவ்வாறு குரங்குருவில் வந்து அழிக்கின்றது' என்று பேசிக்கொண்டார்கள் என்றும், முடிவில் அழுகுரல் ஒலி ஓங்கிச் சுடுசொல்லால் அழிக்கப்பட்டதுபோல் இலங்கை அழிந்ததென்றும், இவ்வாறு அந்தப் பட்டணத்தை எரித்துவிட்டுச் சிறிது ஓய்வாக இருந்து, அனுமன் 'இராமனை' நினைத்தார் என்றும், தேவர்கள் ஆனந்தமடைந்தார்கள் என்றும் கூறுகின்றது. இச்செய்திகள் கம்பரிடம் இந்தப் படலத்தில் காணப்பெறவில்லை. இலங்கையில் தீப்பற்றி எரிந்தபோது காணப்பட்ட

தாகக் கம்பர் கூறும் பல காட்சிகளும், அந்த நிகழ்ச்சிகளை அடிப்படையாக வைத்துக்கூறும் பல நெறிகளும், நகரையும் மாளிகையையும் அழியவிட்டு விட்டு இராவணன் புஷ்பக விமானத்தில் ஏறி மேலே சென்ற செய்தியும், பின்னர் அநுமனுக்கும் அரக்கர்களுக்கும் போர் நிகழ்ந்து அரக்கர் அழிந்தமையும் வான்மீகத்தில் காணப்பெறவில்லை. வான்மிகத்துள் காணப்பெறும் சில உவமைகளைக் கம்பர் விரிவுபடுத்தி யிருக்கக் கூடுமோ என ஐயுறத்தக்க, ஒன்று இரண்டு இடங்கள் இப்படலத்தில் காணப்பெறுகின்றன. இந்தச் சருக்கம் 31 வது சுலோகத்தில், தீக் கொழுந்துகள் சில இடங்களில் புனமுருக்கமலர் போலவும், சில இடங்களில் இலவமலர் போலவும் விளங்கின என்கிறார். இக்கருத்தே, இப்படலம் நாலாவது செய்யுளில் 'தேனகத்த மலர் பல சிந்திய கானகம்' எனப் புகை சூழ்ந்து தீப்பொறி பறக்கும் இடத்தைக் கூறியதற்கு வித்தாக இருக்கக் கூடுமென்று கருதலாம். 43 வது சுலோகத்தில் 'சுடுசொல்லால் அழிக்கப்பட்டதுபோல் தோன்றிற்று' என்று காணப்படுவதே 12 வது செய்யுளில் 'உரையின் முந்துல குண்ணும் எரி' எனக் கூறுவதற்குத் தூண்டியிருக்கலாம்.

ஐம்பத்தைந்தாவது சருக்கம், அநுமன், தன்னால் கொளுத்தப் பெற்ற தீ, இலங்கையை எரித்துவிட்டபடியால் அங்கிருந்த பிராட்டிக்கும் தீங்கு நேர்ந்திருக்குமோ எனப் பலவாறு அஞ்சிப் பின்னர், பிராட்டியின் பெருமையை எண்ணி, அவளருளால் தீப்பற்றிய தன் வாலையும் சுடாத கனல், பிராட்டிக்கு இடையூறு செய்திருக்கமுடியாதெனத் தேறி நிற்கின்ற நிலையில், 'பிராட்டியார் தீயால் துன்புறவில்லை' என்று சாரணர்கள் பேசிக் கொள்வதைக் கேட்டுப் பிராட்டியாரை நேரில் கண்டு வணங்கி விடைபெற்றுப் போக எண்ணினன் என்ற செய்தியைக் கூறுகின்றது; இடையே சினத்தால் நிகழும் தீமைகளைப்பற்றி அநுமன் சிந்தனையில் வைத்துப் பல நெறிகளையும் கூறுகின்றது. இந்தச் சருக்கத்தில் காணப்பெறுவனவற்றுள், 'பிராட்டியார் தங்கும் சோலையில் தீ புகவில்லை' என்று வானவர் பேசிக்கொள்ளும் ஒரு செய்தியே இப்படலத்துள் காணப்பெறுகிறது. ஐம்பத்தாறுவது சருக்கத்தில் முதல் ஒன்பது சுலோகங்களில் அநுமன் பிராட்டியாரைக் கண்டதும், பிராட்டி, அநுமனுடைய ஆற்றலைப் புகழ்ந்து பேசி, இராமனே தன் அம்புகளால் இலங்கையை அழித்துவிட்டுத் தன்னை அழைத்துக்கொண்டு போவது ஏற்புடையதாகும் என்பதை ஏற்ற முறையில் இராமனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று சொல்லியதாகவும், அதற்கு, ஒரே பேச்சில், அநுமான் 'இலங்கையை அழிக்க இராமர் படைகளுடன் எழுந்தருளப் போகின்றார்' என்பதைக் கூறிப் பிராட்டியைத் தேற்றித் தான் திரும்பிச் செல்ல வேண்டியதை விண்ணப்பம் செய்துகொண்டு அரிஷ்டம் என்னும் மலைக்குப் போய்ச் சேர்ந்தார் என்பதும் பேசப்படுகிறது. இந்தப் படலத்துள் இச் செய்திகளைக் கம்பர் மிகச் சுருக்கமாக, 'அநுமன் பணிந்தான், சானகி

குளிர்ந்தாள்; வணக்கம் என்று சொல்லிவிட்டுப் போனுன்' என்று அழகு பெறக் கூறிவிட்டார்.

இப்படலத்துள், ஒரு பெரும் பட்டணம் தீப்படுமானுல் அப்போது அங்கே காணக்கூடிய தோற்றங்களுள் உள்ளத்தைக் கவர்ந்து உருக்கக் கூடியவைகளில் சிலவற்றைச் சுருக்கமாகவும் கனிவாகவும் பல இடங் களில் காணலாம் ; சில நிகழ்ச்சிகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு குறிப்பிட்டிருக்கும் தத்துவ உண்மைகளேயும் காணலாம் ; சில நெறிமுறை களேயும் நடைமுறைகளேயும் காணலாம் ; அழகிய உவமைகள் இடை யிடையே அணிசெய்விக்கின்றன. உள்ளத்தை உருக்கும் செய்யுட்களில் 2, 18, 27, 34 வது செய்யுட்களைக் குறிப்பிடலாம். இரண்டாவது செய் யுள் மணக்கோலம் இட்ட மாளிகையின் அழிவும், அங்கிருந்த மக்கள் புறமே ஓடுவதும், பின்னர் தாம் மாளிகையினுள் விட்டுச்சென்ற அரும் பொருள், சுற்றம் முதலியவற்றை எண்ணி உள்ளே வருவதுமாக ஊசல் போல அங்கும் இங்கும் அலறி ஓடினுர்கள் என்பது ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது.

'வாசலிட்ட' என்று அங்காந்து எழும் இடையின நெடிலில் தொடங்கி, வல்லின மெய்யும் உயிர்மெய்யும் இணைந்து இறுதியாக நிற்கும் ஒலி நிலேயே, உள்ளத்தில் ஒருவகைக் கலக்கத்தை இடம் நோக்கி எழுப்பக்கூடிய ஆற்றலுடையதென்பதைக் காணலாம். பதினெட்டாவது செய்யுளில் கூறியிருக்கும் கணவனையிழந்த அரக்கமகளிரது மன நிலே மையும், அமைதியும், உறுதியும், கனிவுடன் போற்றத்தக்கன. இருபத் தேழாவதுசெய்யுளில், "பஞ்சரத்தொடு பசுநிறக் கிளி வெந்து பதைப்ப" என்று, நின்று, நின்று, நெஞ்சடைத்துவருவதுபோல் தடுமாறிவரும் ஒலியே, நெஞ்சுருகும் நிலேயைத் தொடங்குகின்றது. பின்னர், 'கிளி வெந்து பதைப்ப' என்பது, சொல்லும் பொருளும் ஒன்று சேர்ந்து கண் ணீரைப் பெருக்குகின்றது ; சிறிது சிந்தித்தால், துன்ப ஓவியம் ஒரு நொடிக்குள் துன்பத்தின் முடியைத் தொட்டுவிடுகிறது. வெந்துபதைக் கும் கிளிக்கு ஏங்குவாளா ? தான் தொடர்ந்துவந்த கணவனைத் தொடர வியலாது புகை சூழ்ந்ததற்கு வருந்துவாளா ? திட்டிய மையும் கரைந்து, கண்ணீர் மார்பகத்து அலேக்கும் மகள் உருவம், எவர் நெஞ்சைத்தான் உருக்காது ? முப்பத்துநான்காவதுசெய்யுளில் வருகின்ற பெண்ணின் நிலேமை மிகவும் கொடியது ; முன் கூறிய பெண், வளர்த்த கிளிக்கு இரங்கினுள் ; இவள், பெற்ற பிள்ளேக்கு இரங்கி மடிகின்ருள் ; கையில் ஒரு பிள்ளே ; இடுப்பில் ஒரு பிள்ளே ; ஐயோ ! ஒரு பிள்ளே பின் நின்று அழுகின்றது ; என் செய்வாள் ? தத்துவக் கருத்துக்களேக் குறிப்பிடும் செய்யுட்களாக, 6, 35 வது செய்யுட்களைக் கூறலாம். ஆருவது செய்யு ளில், மாயையின் ஆற்றலால் வலியழிந்து, தன் உண்மைநிலேயறியாமல் அடங்கியிருக்கும் உயிர்த் தொகுதிகள், பேரருளாளன் திருமுன் மாயையின்

வலியடங்கப்பெற்றுத் தம் தொன்மையான உண்மைநிலையை அடைவது. சிறுநெருப்புகள், பெருநெருப்போடு கலந்த நிகழ்ச்சியில் வைத்துப் பேசப்படுகிறது. முப்பத்தைந்தாவது செய்யுளில் சிற்றறிவுக்குப் பலவேறு பாட்டுடன் காணப்பெறுவனவெல்லாம் பேரறிவுக்கு ஒன்ருகவே காணப் பெறும் என்ற உண்மை, பலவேறுவகைப்பட்டனவும், பெயருடையனவு மாகத் தோன்றிய படைக்கலங்களெல்லாம், பெரு நெருப்பில் உருகி ஒன்ருன உருவம் அடைந்த நிகழ்ச்சியில் வைத்துப் பேசப்படுகிறது. நெறி முறைகளையும் நடைமுறைகளையும் குறிப்பிடுவனவாக 9, 14, 37, 43 வது செய்யுட்களைக் கூறலாம். 9 வது செய்யுளில், எவ்வளவு நெருக்கடியான காலத்திலும் பெண்மக்கள், கூட்டங்களில் முட்டிக்கொண் டும் மோதிக்கொண்டும் போகமாட்டார்கள் என்பதையும், பெண்கள் இருக்கும் கூட்டங்களில், அவர்களுக்கு முதல் இடம் கொடாமல் முரட்டுத் தனமாக முந்துகிற செயல் எருமைகளிடத்திலேயே காணப்படும் என்ப தும் குறிப்பிடப்பெற்றிருக்கிறது. 14 வது செய்யுள், ஊரை உண்ட பெருந் தீ, கட்குடிலுள்ளும் புகுந்து, அங்கிருந்த கள் வகைகளையும் உண்டது எனக் கூறும்போது, தூயவர்கள் என்று சொல்லப்பெறுபவர்கள், தீயவர்கள் தங்கும் இடத்துக்குச் செல்வார்களானல் தாங்களும் தீயவர்களாவதோடு தீய செயல்களையும் செய்வார்கள்: என்ற உலக நடை முறை ஒன்றைக் குறிப்பிடுகின்றது. உலகத்தவரால் தூய்மைக்குத் துணை யாகக் கொள்ளப்பெறும் செந்தீச் செல்வன், மதுவகைகள் உள்ள இடத்துக்குச் சென்றவுடன், அங்கு அரக்கர் குடித்து எஞ்சியிருந்த எச்சி லாகிய கள்ளையும் உண்டான் என்று கூறுவது, பல நெறிமுறைகளையும் நடைமுறைகளையும் நினைவுக்குக் கொண்டுவருகிறது. சில தீமைகளை விலக்கும் கடமை பூண்டார், அந்தத் தீமைகளைத் தாங்களே செய்து கொண்டும், தீயவர்கள் என்ற பெயரைக் கொள்ளாமல் நல்லவர்போல நடித்துத் திரிவது எக்காலத்துமுள்ள ஒரு நிலைபோலும்! 37 வது செய் யுள், புகைப்படலத்தால் மேலே பறக்கவியலாதனவாகிக் கடலில் விழுந்த பறவைகளை மீன் கூட்டம் விழுங்கின என்பதைக் கூறும்போது பற வைகளின் நிலை, வஞ்சகர்களைத் தஞ்சமாக அடைந்தவர் நிலையை ஒத்தது என ஒரு நடைமுறையும் காட்டப்பெறுகிறது; இதன் வழியாக, "தமக்கு ஆற்றலுள்ள காலத்தில் தம்மால் துன்புறுத்தப்பட்டவர்களை, தாம் ஆற்றல் அழிந்த காலத்தில் அடைக்கலம்புகுந்தால், முன்பு தாம் செய்த துன்பத்தை எண்ணிப் பழிக்குப் பழி வாங்குவார்கள்" என்ற நெறியும் தோற்றுகின் றது. 43 வது செய்யுள் இலங்கைமாநகரம் அழிந்தது என்பதைக் கூறும் போது, இராவணன் முதலியோர் தாங்கள் தாங்கள் தீயிலிருந்து தப்பித் துக்கொள்ளும் செயல்களைச் செய்தார்களேயல்லாமல், நீங்காது நின்று தீயைப் பரவாதுதடுக்கும் செயல்களைச் செய்யாதபடியால், இலங்கை வெந்தொழிந்தது எனக் குறிப்பாகக் கூறி, ஒரிடத்துக்குப் பேரிடர் ஒன்று உண்டாகுமானல் ஒவ்வொருவரும் தாம்தாம் தப்பியுய்யும் முயற்சியி லேயே ஈடுபட்டு, பேரிடரை எல்லோரும் ஒன்றுபட்டு நின்று நீக்கும்

முயற்சியை மறப்பார்களாயின் பேரழிவு உண்டாகும் என்ற பொதுவான உண்மையை வற்புறுத்துகின்றது.

நான்காவது செய்யுளில் தீப்பொறி பறக்கப் புகைசூழ்ந்த வானத்தை, தேன் பொதிந்த மலர்கள் சிந்தும் இருள் நிறைந்த சோலைக்கு ஒப்பிடுவதும், இருபத்தெட்டாவது செய்யுளில், புகைப்படலத்துள் மறைந்த மகளிரைத் திரையினுள்ளே பொதிந்துள்ள ஓவியப் பாவைக்கு ஒப்பிடுவதும், மகளிரது செவ்விதழிடையே காணும் நகையை இலவ மலரிலும் முத்துள்ளதுபோலக் காணப்படுவதாகக் கூறுவதும் உவமைநயம் மிக்கன. மூன்றாவது செய்யுளில், மணிமாளிகையினுள்ளிருந்த மகளிர், தங்கள் மாளிகை வீசும் செஞ்சுடர் ஒளியில், தீ பரவுவதால் தோன்றும் ஒளியைக் காணவியலாதவர்களாய் அலமந்தார் எனக் கூறுவது, தங்கள் உள்ளத்தில் தோன்றும் கருத்துக்களையே வியந்து, வெளியே யிருந்து பரந்துவரும் கருத்துக்களைக் காணவியலாதவர்களைக் குறிப்பிடக் கூடியதாகத் தோன்றுகிறது. இவை எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டவைகளே யாகும்; நூலுள் பல நலங்களைக் காணலாம்.

# 13. இலங்கை யெரியூட்டு படலம்

### மாளிகைகளில் தீப்பற்றல்

**1183.** கொடியைப் பற்றி விதானங் கொளுவித்தான்
★ நெடிய தூணைத் தழுவி நெடுஞ்சுவர்
முடியச் சுற்றி முழுது முருக்கிற்றால்
கடிகொள் மாநகர் தோறுங் கடுங்கனல்.

கொடியைப் பற்றி, விதானம் கொளுவி, தான்
நெடிய தூணைத் தழுவி, நெடும் சுவர்
முடியச் சுற்றி, முழுதும் முருக்கிற்று ஆல்;
கடி கொள் மா நகர் தோறும் கடும் கனல்.

கொடிய நெருப்பு, காவலையுடைய பெரிய மாளிகைகளில் எல்லாம், கொடிகளைப் பற்றிக்கொண்டும் மேற்கட்டிகளை எரித்தும், உயர்ந்த தூண்களைச் சூழ்ந்தும், நீண்ட சுவர் முற்றிலும் சுற்றியும், மாளிகைகள் முழுவதும் எரித்து அழித்தது. விதானம் – மேற்கட்டி. கொளுவி – எரித்து. முருக்கிற்று – அழித்தது. கடி - காவல். கடும்–கொடிய. கனல் – நெருப்பு. தான், ஆல் அசை. *(1)*

இச்செய்யுளின்முன் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வரும் பாடல், இப் படலத்தின் முதற்பாட்டாக வரையப்பட்டுள்ளது.

*1183* (a) தெய்வ நாயகி கற்பெனும் செந்தழல்
எய்து மாருதி வாலிடைப் பேணியே
பொய்கொள் வஞ்சகப் புல்லர் புரமெலாம்
வெய்தி னுண்ட தகைமை விளம்புவாம்.

### நகரமக்கள் அங்குமிங்கும் ஓடிக் கூக்குரலிடல்

**1184.** வாச லிட்ட வெரிமண மாளிகை
மூச முட்டி முழுது முருக்கிற்றால்
ஊச லிட்டென வோடி யுளைந்துலைப்
பூச லிட்ட திரியற் புறமெலாம்.

வாசல் இட்ட எரி மண மாளிகை
மூச முட்டி, முழுதும் முருக்கிற்று ஆல்,
ஊசல் இட்டு என ஓடி, உளைந்து உலைப்
பூசல் இட்டது இரியல், புறம் எலாம்.

எரி, வாசல் இட்ட மண மாளிகை முழுதும் மூச முட்டி முருக்கிற்று, இரியல் ஊசல் இட்டு என புறம் எலாம் உளைந்து ஓடி உலைப்பூசல் இட்டது என முடிக்க. வாசல் இட்ட - மணவறை வாசல் செய்த. மூச–அழிய; நெருங்க. உளைந்து – வருந்தி. உலைப்பூசல் - வருந்தி அழைக்கும் கூப்பாடு. புறம்-மாளிகைக்கு வெளிப்பக்கங்கள். வாசலிட்ட என்பது, பின் விளைவை நோக்க இரங்கற்குறிப்பாய் ஒலிக்கின்றது. ஊசலிட்டு மகிழ வேண்டிய மாளிகையில் ஊசல்போல மக்கள் அலைந்து உளைந்தார்கள், என்பது குறிப்பு. இரியல்-அஞ்சி ஓடுதல்; தொழிற்பெயர் இங்கு ஓடிய மக்களைக் குறித்தது. (2)

### மணிமாளிகைகளில் மாதர் மயங்கி அலமரல்

**1185.** மணியி னுய வயங்கொளி மாளிகை
பிணியிற் செஞ்சுடர்க் கற்றை பெருக்கலால்
திணிகொ டீயுற்ற துற்றில தேர்கிலார்
அணிவ ளைக்கைநல் லாரல மந்துளார்.

மணியின் ஆய வயங்கு ஒளி மாளிகை
பிணியில் செம் சுடர்க் கற்றை பெருக்கலால்
திணி கொள் தீ உற்றது உற்றில தேர்கிலார்
அணி வளைக் கை நல்லார் அலமந்துளார்.

இலங்கை என்னும் பெரும்பட்டினத்தில் மாளிகைகளெல்லாம் ஒளி விசுகின்ற செம்மணிகளால் கட்டப்பட்டிருந்தன. அந்தச் செம்மணிகள் மிகவும் திண்ணியதான சிவந்த ஒளித்தொகுதியை உள்ளும் புறமும் பெருக்கிக்கொண்டிருந்தன. அந்தப் பட்டினத்தில் தீப்பிடித்தவுடனே திண்ணியதான நெருப்பின் சிவந்த ஒளிக்கும், மாளிகை மணி விசும் ஒளிக்கும் வேற்றுமை தெரிந்துகொள்ளமுடியாததனுல், தீ பற்றியதும் பற்றுததும் தெரிந்துகொள்ளமுடியாமல் வளையணிந்த கையையுடைய பெண்மக்கள் வருந்தியிருந்தார்கள், என்பது பொருள். மாளிகை விசும் மணி ஒளிக்கும் தீ பரவிய செஞ்சுடர் ஒளிக்கும் வேற்றுமை காணுது அலமந்தார் என்பது கருத்து. (3)

### புகையில் அகப்பட்ட மகளிர்

**1186.** வான கத்தை நெடும்புகை மாய்த்தலால்
போன திக்கறி யாது புலம்பினர்
தேன கத்து மலர்சிலர் சிந்திய
கான கத்து மயிலன்ன காட்சியார்.

*வான் அகத்தை நெடும் புகை மாய்த்தலால்,*
*போன திக்கு அறியாது புலம்பினர்;*
*தேன் அகத்து மலர் சிலர் சிந்திய*
*கான் அகத்து மயில் அன்ன காட்சியார்.*

சிலர் தேனகத்து மலர் சிந்திய கானகத்து மயிலன்ன காட்சியார் நெடும் புகை வானகத்தை மாய்த்ததால் போன திக்கு அறியாது புலம் பினர் என முடிக்க. வானையும் மறைத்த புகையில் திசைதெரியாது அங்குமிங்கும் அலைந்து அரற்றிய மகளிர்க்கு, கானகத்தில் திரியும் மயில் உவமையாகக் கூறப்பட்டது. மாய்த்தல் – மறைத்தல். கானகம், மரச் செறிவுடையது என்பது தோன்றத் தேனகத்து மலர் சிந்திய எனக் கூறி னர். மரச்செறிவால் தோன்றும் இருள், புகைப்படலத்துக்கும் சிந்தும் மலர், பறக்கும் தீப்பொறிகளுக்கும் உவமை. (4)

### தலையில் தீப்பற்றியதும் பற்றாததும் தெரியாமை

**1187.** கூய்க்கொ ழும்புனல் குஞ்சியிற் கூந்தலில்
மீச்சொ ரிந்தனர் மாதரும் வீரரும்
ஏய்த்த தன்மையி னலெரி யின்மையும்
தீக்கொ ளுத்தின வுந்தெரி யாமையால்.

*கூய்க் கொழும் புனல் குஞ்சியில் கூந்தலில்*
*மீச் சொரிந்தனர்; மாதரும் வீரரும்,*
*ஏய்த்த தன்மையினல், எரி இன்மையும்,*
*தீக் கொளுத்தினவும், தெரியாமையால்.*

அரக்கமகளிரும் வீரரும் தங்கள் கூந்தலும் குஞ்சியும் எரிபோல் செந்நிறமுடைமையின், தங்கள் தலையில் தீப்பற்றியதையும் பற்றாததை யும் தெரிந்துகொள்ளமுடியாமல், செந்நிறத்தைக் கண்டு, தீப்பற்றிய தாகவே எண்ணி ஒருவரையொருவர் கூவித் தண்ணீரைத் தலையில் ஊற்றினர்கள். இது, துன்பக் காட்சியிலும் ஓர் நகைச்சுவை தருவது. தீப்பற்றாத தலையில் இயற்கைச் செந்நிறத்தைக் கண்டு நீர் ஊற்றியும்,

உண்மையாகத் திப்பிடித்த தலையை, இயற்கையான செந்நிறமெனக் கொண்டு நீரூற்றுமலும் இருந்தார்போலும். (5)

## ஒரு தத்துவக்கருத்து

1188. இல்லிற் றங்கு வயங்கெரி யாவையும்
சொல்லிற் றீர்ந்தன போல்வன தொல்லுருப்
புல்லிக் கொண்டன மாயைப் புணர்ப்பறக்
கல்வித் தம்மியல் பெய்துங் கருத்தர்போல்.

இல்லில் தங்கு வயங்கு எரி யாவையும்,
சொல்லின் தீர்ந்தன போல்வன, தொல்லுருப்
புல்லிக் கொண்டன; மாயைப் புணர்ப்பு அறக்
கல்வித் தம் இயல்பு எய்தும் கருத்தர் போல்.

இலங்கையில் இராவணனது கட்டளையால், நெருப்பு ஒவ்வொரு வீட்டிலும், தனித்தனியாக அந்த அந்த வீட்டிற்கு வேண்டிய அளவி லிருந்து, பெருகாமல் அடங்கியிருந்தது; பெரு நெருப்பு நகரைப் பற்றவே, அடங்கியிருந்த தனித்த நெருப்பெல்லாம் பெருநெருப்போடு கலந்து தமது தொன்மையான உருவையும் ஆற்றலையும் பெற்றன ; இது, மாயை யினுல் கட்டுப்பட்ட உயிர்கள், ஞானத்தால் அந்த மாயையின் வலி குன்றிய வுடன், இறைவனேடு இரண்டற நிற்கும் தமக்கு இயல்பான நிலையை அடையும் கொள்கைபோல் இருந்தது. சொல் – கட்டளை. தீர்ந்தன - விலகின. தொல் உரு-கட்டுப்பாட்டுக்கு முன்னுள்ள உருவம். புல்லுதல்-தழுவிக்கொள்ளுதல். மாயை-இறைவனை அறியவொட்டாது ஆன்மாவைக் கட்டுப்படுத்தி நிற்கும் ஒரு ஆற்றல். புணர்ப்பு-கலப்பு, அற-கெட. கல்வி – ஞானம். தம்-இங்கு ஆன்மாவைச் சுட்டியது. எய்தும்-அடையும். கருத்து என்பது கருத்தர் என நின்றது; கொள்கை என்பது பொருள். (6)

## புகை மேலோங்கி எழுதல்

1189. ஆய தங்கொர் குறளுரு வாயடித்
தாய ளந்துல கங்க டரக்கொள்வான்
மீயெ ழுந்த கரியவன் மேனியில்
போயெ ழுந்து பரந்தது வெம்புகை.

ஆயது அங்கு ஓர் குறள் உரு ஆய், அடித்
தாய், அளந்து, உலகங்கள் தாக் கொள்வான்,
மீ எழுந்த கரியவன் மேனியில்,
போய் எழுந்து பரந்தது; வெம் புகை.

வெம்புகை ஆயது; அங்கு ஓர் குறள் உரு ஆய், (மாவலி) தர, உலகங்கள் அடி தாய் அளந்துகொள்வான், மீ எழுந்த கரியவன் மேனியில், எழுந்துபோய்ப் பரந்தது. வெம் புகை-கொடிய புகை. அங்கு - முன்னுள். குறள் உரு-குறுகிய வடிவு. அடி தாய் - அடிகளால் தாவி. கொள்வான் - கொள்ளும்பொருட்டு. மீ எழுந்த-மேல் எழுந்த. கரியவன் - திருமால். மேனியில்-திருமேனிபோல். இது நிறத்தாலும் மேல் எழலாலும் புகைக்கு உவமை. *(7)*

## எரியினுல் யானைகள் நிறம் மாறுதல்

**1190.** நீல நின்ற நிறத்தன கிழ்நிலை
மாலின் வெஞ்சின யானையை மானுவ
மேல்வி ழுந்தெரி முற்றும் விழுங்கலால்
தோலு ரிந்து கழன்றன தோலெலாம்.

*நிலம் நின்ற நிறத்தன, கிழ்நிலை*
*மாலின் வெம் சின யானையை மானுவ;*
மேல் விழுந்து எரி முற்றும் விழுங்கலால்
தோல் உரிந்து, கழன்றன; தோல் எலாம்.

*நிலம் நின்ற நிறத்தன* தோல் எலாம், எரி, மேல் விழுந்து முற்றும் விழுங்கலால், தோல் உரிந்து கழன்றன. கிழ்நிலைமால்-கிழக்குத் திசைக்குத் தலைவனாகிய இந்திரன்; அவன்யானை-ஐராவதம். தோல் உரிந்தமையால் கருநிறமுள்ள யானைகளெல்லாம் வெண்ணிறமுள்ள ஐராவதம்போல் ஆயின என்பது பொருள். *(8)*

## எருமைக்கு மாதர் ஒதுங்கல்

**1191.** மீதி மங்கலந் தாலன்ன வெம்புகை
சோதி மங்கலத் தீயொடு சுற்றலால்
மேதி மங்குலின் வீழ்புனல் வீழ்மட
வோதி மங்களின் மாத ரொதுங்கினர்.

மீது இமம் கலந்தால் அன்ன வெம் புகை,
சோதி மங்கலத் தீயொடு சுற்றலால்,
மேதி மங்குலின் விழ் புனல், வீழ் மட
ஓதிமங்களின், மாதர், ஒதுங்கினர்.

மேலே பனிகலந்ததுபோல் தோன்றும் கொடிய புகை, ஒளியால் பொலிவுபெற்ற தீயொடு சூழ்ந்துகொண்டமையால், எருமைகள் மேகம் போல நீர்நிலைகளில் விரைந்து பாய, (அங்கிருந்த) மகளிர் விலகுகின்ற அன்னப் பறவைகள்போல் ஒதுங்கினர். இமம்-பனி. சோதி-ஒளி. மங்கலம்-பொலிவு. சுற்றல்-சூழல். மேதி-எருமை. மங்குல்-மேகம். விழ்தல்-விரைந்து பாய்தல்; நீங்குதல்; விலகுதல். ஓதிமம்-அன்னப்பறவை. (9)

அனற்பொறிகளால் கடல்மீன் மடிதல்

**1192.** பொடித்தெ ழுந்து பெரும்பொறி போவன
இடிக்கு லங்களின் வீழ்தலி லெங்கணும்
வெடித்த வேலை வெதும்பிட மீன்குலம்
துடித்து வெந்து புலர்ந்துயிர் சோர்ந்தவால்.

பொடித்து எழுந்து பெரும் பொறி போவன
இடிக் குலங்களின் விழ்தலில், எங்கணும்
வெடித்த; வேலை வெதும்பிட, மீன்குலம்,
துடித்து, வெந்து, புலர்ந்து, உயிர் சோர்ந்தவால்.

(அங்குப் பரவிய தியிலிருந்து) சிதறி எழுந்துபோவனவாகிய பெரிய நெருப்புப் பொறிகள், இடிகளின்கூட்டம்போல் விழுந்தபடியால் எல்லாப் பக்கங்களும் வெப்பமுற்று வெடித்தன; கடலும் கொதிப்புற்றமையால் (அங்கிருந்த) மீன் கூட்டங்கள் பதைபதைத்து, வெந்து, வாடி, உயிர்விட்டன; பொடித்தல்-சிதறுதல், வெடித்தல் - வெப்பத்தால் வயல் வெடிப்பதுபோல் பிளவுபடல். வெதும்பல்-சூடாதல். (10)

பொன்மாளிகை உருகித் திரளல்

**1193.** பருகு தீமடுத் துள்ளுறப் பற்றலால்
அருகு நீடிய வாடகத் தாரைகள்
உருகி வேலையி னூடுபுக் குற்றன
திருகில் பொன்னெடுந் தண்டிற் றிரண்டவால்.

பருகு தீ மடுத்து, உள்ளுறப் பற்றலால்,
அருகு நீடிய ஆடகத் தாரைகள்
உருகி, வேலையின் ஊடு புக்கு உற்றன,
திருகில் பொன் நெடும் தண்டில் திரண்டவால்.

அழிக்கின்ற நெருப்பு மூண்டு, (பொன் மாளிகைகளின்) உட்பக்க மெல்லாம் பொருந்தி எரித்ததால், உருகிய பொன், பக்கங்களில் (நீர் போல்) நீள ஓடியவை, கடலின் உள்ளே புகுந்து மறுபடியும் நீண்ட பொற் பாளங்களாக இறுகின. பருகல் – குடித்தல்; இங்கு அழித்தல் என்ற பொருளில் வந்தது. மடுத்தல்-தீ மூட்டுதல். பற்றல் – தீப்பற்றல். அருகு – பக்கம். திருகு இல்-மாறுபாடில்லாத, மாற்றுயர்ந்த. தண்டு – கட்டிப்பட்ட பாளம். திரளல் – இறுகுதல். (11)

## தரையும் வெந்தது

1194. உரையின் முந்துல குண்ணு மெரியதால்
வரைநி வந்தன்ன பன்மணி மாளிகை
நிரையு நீணெடுஞ் சோலையு நிற்குமோ
தரையும் வெந்தது பொன்னெனுந் தன்மையால்.

உரையின் முந்து உலகு உண்ணும் எரி அதால்,
வரை நிவந்து அன்ன பன் மணி மாளிகை
நிரையும், நீள் நெடும் சோலையும், நிற்குமோ?
தரையும் வெந்தது; பொன் எனும் தன்மையால்.

(சான்றோர்) சுடுமொழியினும் விரைவாக உலகை அழிக்கக் கூடிய எரியானமையால், மலைபோல் உயர்ந்த பல மணிகளால் இயன்ற மாளிகை களின் வரிசையும் நீண்டுயர்ந்த சோலைகளும் (கரியளவேனும்) நிற் குமோ? (நில்லாது. கேட்கவும் வேண்டுமோ? அவை நின்ற) நிலமும் பொன்னாக இருந்தமையால் வெந்தது. உரை – சான்றோர் சுடுமொழி; விரைவுக்கு உவமையாகக் கூறப்பெறுவது; 'சொல்லொக்கும் கடிய வேகம்' (தாடகைவதைப். 72)என வேறோரிடத்தும் கூறுவர். உண்ணல்— அழித்தல் என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது. நிரை-வரிசை; ஒழுங்கு. (12)

### புகை வானுலகத்தும் பரவல்

1195. கல்லி னும்வலி தாம்புகைக் கற்றையால்
எல்லி பெற்ற திமையவர் நாடியல்
வல்லி கோலி நிவந்தன மாமணிச்
சில்லி யோடுந் திரண்டன தேரெலாம்.

*கல்லினும் வலிது ஆம் புகைக் கற்றையால்,*
*எல்லி பெற்றது; இமையவர் நாடு, இயல்*
*வல்லி கோலி நிவந்தன; மா மணிச்*
*சில்லி ஓடும் திரண்டன தேர் எலாம்.*

கல்லினும் வலிதாம் கற்றைப் புகையால் இயல் வல்லி கோலி நிவந்த(ன) இமையவர்நாடு, எல்லி பெற்றது; ஓடும் தேர் எலாம் மா மணிச் சில்லி திரண்டன, என முடிக்க. புகையின் பரப்பால், சுற்றிலும் கற்பகக் கொடி ஓங்கிய விண்ணவர் நாடு இருளடைந்தது. அங்கு ஓடுகின்ற தேரெல்லாம் புகையின் கல்போன்ற திண்மையில் மோதுண்டு சில்லு சில்லாகச் சில்லி திரண்டன என்பது பொருள். எல்லி – இருள். இயல் வல்லி – அழகிய கற்பகக் கொடிபோன்ற கொடிகள். கோலி - சுற்றி. சில்லி – துண்டு. திரண்டன – உடைந்து ஒன்ருய்த் திரண்டன. மணிகளால் ஆன தேராகலின், மணி சில்லிகளாகத் திரண்டன போலும். (13)

### கனலும் கள் குடித்தது

1196. பேய மன்றினி னின்று பிறங்கெரி
மாய ருண்ட நறவு மடுத்ததால்
தூய ரென்றவர் வைகிடந் துன்னினுல்
தீய ரன்றியுந் தீமையுஞ் செய்வரால்.

*பேயம் மன்றினில் நின்று, பிறங்கு எரி,*
*மாயர் உண்ட நறவு மடுத்தது ஆல்;*
*தூயர் என்றவர் வைகு இடம் துன்னினுல்*
*தீயர்; அன்றியும், தீமையும் செய்வரால்.*

பிறங்கு எரி பேயம் மன்றினில் நின்று மாயர் உண்ட நறவு மடுத்தது; தூயர் என்றவர் (தியவர்) வைகு இடம் துன்னினுல், தியர்; அன்றியும், தீமையும் செய்வரால். விளங்குகின்ற தீ, கட்குடிக்கும் களத்தைப் பற்றிய போது, வஞ்சகராகிய அந்த அரக்கர் உண்டு எஞ்சியிருந்த கள்ளையும்

உண்டது. இதனால் தூய்மையுடையவர் என்று சொல்லப்படுபவர்கள் தியவர் தங்கும் இடத்தை அணுகினால் தியவராகி விடுவர்; அல்லாமலும், திய செயல்களையும் செய்வார்கள். தூயது என எவராலும் போற்றப்படும் தீ அரக்கர் உண்ட எச்சிலையும் உண்டதல்லவா ? கட்குடியைப் பற்றவில்லையேல் இந்த இழிவு கனற்கடவுளுக்கு வந்திராதன்றோ! பேயம் - கள் முதலிய குடிக்கும் பொருள். மன்று - இடம். பிறங்குதல் - விளங்குதல். மாயர் - வஞ்சனைத்தொழில் வல்ல அரக்கர். வைகு இடம் - தங்கும் இடம். துன்னுதல் - நெருங்கல். ஈற்றடிக்குத் தாங்கள் தியவராக இல்லாதிருந்தும் திமையைச் செய்வர் என்றும் பொருள் கூறுவர். *(14)*

## கடலும் மேகமும் வெப்பமுறுதல்

1197, தழுவி லங்கை தழங்கெரி தாய்ச்செல
வழுவில் வேலை யுலையின் மறுகின
எழுமெ ழுஞ்சுடர்க் கற்றைசென் றெய்தலால்
குழுவு தண்புனல் மேகங் கொதித்தவே.

*தழுவு இலங்கை, தழங்கு எரி, தாய்ச் செல,*
*வழு இல் வேலை, உலையின் மறுகின ;*
*எழும், எழும், சுடர்க் கற்றை சென்று எய்தலால்,*
*குழுவு தண்புனல் மேகம் கொதித்தவே.*

இலங்கை தழுவு தழங்கு எரி தாய்ச் செல, வழு இல் வேலை உலையின் மறுகின ; குழுவு தண்புனல் மேகம் எழும் எழும் சுடர்க் கற்றை சென்று எய்தலால் கொதித்தவே என்க. இலங்கையைச் சூழ்ந்த ஒலி முழக்கம் செய்யும் எரி, தாவித்தாவிப் பரந்ததனால், அந்த இலங்கையைச் சூழ்ந்த குற்றமற்ற கடல், உலைபோல் கொதித்தது; தீச்சுடர் மேலும் மேலும் எழுந்து கற்றை கற்றையாக மேலே சென்று சேர்ந்ததால், குளிர்ச்சி பொருந்திய நீர் கலந்த மேகமும் கொதிப் படைந்தது, என்பது பொருள். தாய்ச்செலல் - தாவித் தாவிச் செல்லுதல். வழு - குற்றம். உலை - உலைநீர், மறுகின - கொதித்துத் துன்பமுற்றன. *(15)*

## பேய்த்தேரைப் புனல் என மயங்கல்

1198. ஊனி லோடு மெரியொ டுயங்குவார்
கானி லோடு நெடும்புனல் காணுறு
வானி லோடு மகளிர் மயங்கினர்
வேனி லோடருந் தேரிடை வீழ்ந்தனர்.

ஊனில் ஓடும் எரியொடு உயங்குவார்,
கானில் ஓடும் நெடும் புனல் காண் என,
வானில் ஓடும் மகளிர் மயங்கினர்,
வேனில் ஓடு அரும் தேர் இடை வீழ்ந்தனர்.

ஊனில் ஓடும் எரியொடு உயங்குவார் வானில், ஓடும் மகளிர், வேனில் ஓடு அரும் தேர் கானில் ஓடும் நெடும் புனல் காண் என மயங்கினர் இடை விழ்ந்தனர் என்க. உடல் முழுவதும் தீப்பற்றி எரிய வருந்தி, வானத்திலே எழுந்த அரக்க மகளிர், பேய்த்தேரைப் புனல் எனக்கருதி விழ்ந்தனர் என்பது பொருள். ஊன் – உடல். உயங்குவார் – வருந்துவார். நெடும் புனல் – நீண்ட நீர்நிலை. வேனில் ஓடு அரும் தேர் - பேய்த்தேர் ; கானல்நீர். (16)

இச்செய்யுள் 14 என்னும் குறியீடுள்ள சுவடியில் காணப்படவில்லை.

### வண்டு தீச்சுடரைத் தாமரை என மயங்கல்

1199. தேன வாம்பொழி றீப்படச் சிந்திய
சோனை மாமலர்த் தும்பி தொடர்ந்தயல்
போன தீச்சுடர் புண்டரி கத்தடங்
கான மாமென வீழ்ந்து கரிந்தவே.

தேன் அவாம் பொழில் தீப்படச் சிந்திய
சோனை மா மலர்த் தும்பி, தொடர்ந்து, அயல்
போன தீச் சுடர், புண்டரிகத் தடம்
கானம் ஆம் என, வீழ்ந்து கரிந்தவே.

நுண்ணிய நீர்த்துளிகள் போலத் தேனைச் சிந்துகிற மலரிலே வாழும் வண்டு, தான் விரும்பிய அந்தப் பொழில் எரிபட, அருகே பறந்து சென்ற தீப்பொறிகளின் தொகுதியைத் தாமரைமலர் நிறைந்த பொய்கைகளை யுடைய காடு என்று கருதி, அதில் விழுந்து கரிந்தன என்பது, இதன் பொருள். தும்பி – வண்டு. தடம் – பொய்கை. கானம் - காடு. (17)

இச்செய்யுள், 14. 20, 25, என்னும் குறியீடுள்ள சுவடிகளில் காணப்பெறவில்லை.

### நற்கடன்பூண்ட நங்கையர் மடிதல்

**1200.** நற்க டம்மிது நம்முயிர் நாயகன்
மற்க டந்தெற மாண்டனன் வாழ்விலம்
இற்க டந்தினி யேகலம் யாமெனு
விற்க டந்த நுதற்சிலர் வீடினர்.

"நல் கடம் இது, நம் உயிர் நாயகன்
மற்கடம் தெற மாண்டனன்; வாழ்வு இலம்;
இல் கடந்து இனி ஏகலம் யாம்" எனு
வில் கடந்த நுதல் சிலர் வீடினர்.

வில் கடந்த நுதல் சிலர், 'மற்கடம் தெற நம் உயிர் நாயகன் மாண்டனன்; யாம் வாழ்வு இலம்; இல் கடந்து இனி ஏகலம்' எனு வீடினர், என முடிக்க. வில்லின் வளைவையும் வென்ற நெற்றியை உடைய அரக்கமகளிர் சிலர், 'குரங்கு கொல்ல நம் உயிர்போன்ற நாயகன் இறந்தான். இனி நமக்கு வாழ்வு இல்லை. வீட்டைக் கடந்து வெளியே செல்லோம். இதுவே நல்ல கடமை' என்று வீட்டில் பற்றிய கனலுக்கு இரையாகி மடிந்தனர். மற்கடம் – குரங்கு. *(18)*

இச் செய்யுள் 20, 33 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் காணப் பெறவில்லை.

### கா வேரொடும் கரிதல்

**1201.** பூக்க ரிந்து முறிபொறி யாயடை
நாக்க ரிந்து சினைநறுஞ் சாம்பராய்
மீக்க ரிந்து நெடும்பணை வேருறக்
காக்க ரிந்து கருங்கரி யானவே.

பூ கரிந்து, முறி பொறி ஆய், அடை
நா கரிந்து, சினை நறும் சாம்பர் ஆய்,
மீ கரிந்து நெடும் பணை, வேர் உறக்
கா கரிந்து, கரும் கரி ஆனவே.

மலர்கள் கரிந்து இளம் தளிர்கள் நெருப்புப் பொறியாய்ப் பறந்து, அயலிலே உள்ள இலை கரிந்து, மொக்குகள் மணம் மிகுந்த சாம்பலாகி, நீண்டகொம்புகள் மேலெல்லாம் கரிந்து, சோலை வேர்வரையில் கரிந்து, எல்லாம் கரியக் கரியாயின. முறி – இளந்தளிர். அடை – இலை. நா -

இலேகளின் நடுவே அமைந்த ஈர்க்கு. சினே - சிறு கிளே. மீ – மேல். பணே - பெருங் கிளே. கா - சோலே. (19)

### விண்ணவர் ஊர்கள் உருகி ஒழுகல்

**1202.** கார்மு ழுக்க வெழுங்கனற் கற்றைபோய்
ஊர்மு ழுக்க வெதுப்ப வுருக்கின
தூரொ ழுக்க மருமையிற் றுன்னுபொன்
வேர்வி ழுப்பது போன்றன விண்ணெலாம்.

*கார் முழுக்க எழும் கனல் கற்றை போய்*
*ஊர் முழுக்க வெதுப்ப உருக்கின ;*
*தூர் ஒழுக்கம் அருமையின், துன்னு பொன்*
*வேர் விழுப்பது போன்றன விண் எலாம்.*

மேகமெல்லாம் முழுகும்படி எழுந்த கனலின் கற்றை, அதன் மேலும் போய்ச் சென்று, வானவர் நகரத்தையும் (தழலில்) முழுகச்செய்து வெதுப்பி உருக்கின. அஃது பொன்னகரமானமையினுலே, உருகிய பொன் இடைவிடாது ஒழுகிற்று. அதைப் பார்த்தால், பொன்னகரத்திலே உள்ள மரத்தூர்கள், பொன் பொருந்திய வேர்களேக் கீழேதொங்க விடுவதுபோல் தோன்றியது. விண்ணவர் ஊர்கள் வெந்து உருகி யொழுகிய பொன்னிற வொழுக்கம், அவ்வூரிலுள்ள பொன்மரங்களின் வேர் கீழே தொங்குவதுபோல் தோன்றிற்றும். (20)

இது முதல் மூன்று செய்யுட்கள் 25 என்னும் குடுயீடுள்ள சுவடியில் காணப்படவில்லே.

### அரக்கரும் அமுதுண்டு ஆவிபெறல்

**1203.** நெருக்கி மீமிசை யோங்கு நெருப்பழல்
செருக்கும் வெண்கதிர்த் திங்களேச் சேணுற
உருக்க மெய்யி னமுத முகுத்தலால்
அரக்க ருஞ்சில ராவிபெற் ருரரோ.

*நெருக்கி, மீ மிசை ஓங்கும் நெருப்பு அழல்*
*செருக்கும் வெண் கதிர்த் திங்களேச் சேண் உற*
*உருக்க மெய்யின் அமுதம் உகுத்தலால்*
*அரக்கரும் சிலர் ஆவி பெற்ருர் அரோ.*

மீமிசை நெருக்கி ஓங்கும் நெருப்பு அழல், சேண் செருக்கும் வெண் கதிர்த்திங்களை உற உருக்க, மெய்யின் அமுதம் உகுத்தலால், சில அரக்கரும் ஆவிபெற்றுர் என்க. மேலும் மேலும் திண்ணியதாக ஓங்கிய நெருப்பின் வெம்மை, நெடுந்தூரத்திலுள்ள களிப்பைத்தரும் வெண்மையான கதிர்களை உடைய திங்களை அடைந்து உருக்க, அத்திங்களின் உடலாகிய அமிர்தம் சிந்துவதால், அரக்கருள்ளும் சிலர், அந்த அமிர்தத்துளிகளை உண்டு உயிர்பெற்றுர்கள். உற்று என்பது உற என நின்றது. உகுத்தல் — சொரிதல். (21)

1204. பருதி பற்றி நிமிர்ந்தெழு பைங்கனல்
கருகி முற்று மெரிந்தெழு கார்மழை
அருகு சுற்று மிருந்தைய தாயதின்
உருகு பொற்றிர ளொத்தன ேனொண்கதிர்.

*பருதி பற்றி நிமிர்ந்து எழு பைங் கனல்*
*கருகி முற்றும் எரிந்து எழு கார் மழை*
*அருகு சுற்றும் இருந்தையது ஆய், அதின்*
*உருகு பொன்திரள் ஒத்தனன் ஒண்கதிர்.*

பருதிவட்டத்தை அளாவி உயர்ந்து எழுந்த அந்தப் புதிய கனலின் வெம்மையால் எழுகின்ற மேகக்கூட்டங்கள், முழுவதும் வெந்து கருகிப் பக்கங்களில் எல்லாம் கரிபோலிருக்க, ஒளிவீசும் கதிர்களையுடைய கதிரவன், கரித்தொகுதியால் சூழப்பெற்று உருகுகின்ற பொற்கட்டியைப்போல் தோன்றினன் என்பது பொருள். இருந்தை - கரி. ஒண்கதிர் - ஒள்ளிய கதிர்களையுடைய ஞாயிறு. (22)

### குதிரைகள் எரிபடல்

1205. தளைகொ ளுத்திய தாவெரி தாமணி
முளைகொ ளுத்தி முகத்திடை மொய்த்தபோர்
உளைகொ ளுத்த வுலந்துலை வுற்றன
வளைகு ளப்பின் மணிநிற வாசியே.

*தளை கொளுத்திய தாவு எரி, தாமணி*
*முளை கொளுத்தி, முகத்து இடை மொய்த்தபோ*
*உளை கொளுத்த, உலந்து உலைவு உற்றன;*
*வளை குளப்பின் மணிநிற வாசியே.*

குதிரைகளின் பின் கால்களைப் பிணைத்திருக்கும் கயிறுகளை எரித்த தாவுகின்ற எரி, தாமணி என்னும் முன் கயிற்றையும் எரித்து, அக்கயிறு

கட்டியிருந்த முளையையும் எரித்து, குதிரைகளின் முகத்தில் நெருங்க வளர்ந்திருந்த மயிர்த் தொகுதிகளையும் கொளுத்தியதனால் வளைந்த குளம்பையும், அழகிய நிறத்தையும் உடைய குதிரைகள் நலிவுற்று அழிந்தன என்பது கருத்து. தளை, தாமணி என்பன குதிரைகளைக் கட்டும் கயிறுகள். வளை குளப்பு - வளைந்த கால் குளம்பு. வாசி - குதிரை. குளம்பு என்பது குளப்பு என நின்றது. (23)

### வான் ஏற முயன்ற அரக்கர் எரியில் விழல்

**1206.** எழுந்து பொற்றலத் தேறலி னீள்புகைக்
கொழுந்து சுற்ற வுயிர்ப்பிலர் கோளுமுற்
றழுந்து பட்டுள ரொத்தயர்ந் தாரழல்
விழுந்து முற்றினர் கூற்றை விழுங்குவார்.

எழுந்து பொன் தலத்து ஏறலின், நீள் புகைக்
கொழுந்து சுற்ற, உயிர்ப்பு இலர்; கோளும் உற்று,
அழுந்துபட்டு உளர் ஒத்து, அயர்ந்து, ஆர் அழல்
விழுந்து, முற்றினர்; கூற்றை விழுங்குவார்.

கூற்றை விழுங்குவார், எழுந்து பொன் தலத்து ஏறலின் நீள் புகை கொழுந்து சுற்ற, கோளும் உற்று உயிர்ப்பு இலர் அழுந்துபட்டுளர் ஒத்து அயர்ந்து, ஆர் அழல் விழுந்து முற்றினர்: என முடிக்க. நகரம் தீப்பற்றவே, அதிலிருந்து தப்பித்துக்கொள்ள எண்ணி, யமனையும் விழுங்கக்கூடிய ஆற்றல் அமைந்த சில அரக்கர்கள், எழுந்து பொன்தலம் எனப்படும் வானுலகத்துக்கு ஏறும்போது, கொழுந்துவிட்டெழுந்த புகை சுற்றிக் கொண்டதனால், மூச்சுவிட முடியாதவர்களானதோடு, அப் புகையையும் உள்ளே கொண்டுவிட்டபடியால் நீருள் அழுந்தியவர்கள்போல அயர் வடைந்து, ஒன்றும் செய்ய ஆற்றாதவர்களாய் நிறைந்த நெருப்பில் விழுந்து இறந்தார்கள் என்பது பொருள். தலம் - இடம். உயிர்ப்பு - மூச்சுவிடுதல். கோளும் உற்று - கொள்ளுதலும் உற்று. அழுந்துபட்டார் என்பது, தண்ணீருள் அழுத்தப்பட்ட நிலையை எண்ணி. முற்றினர் - முடிந்தார்கள். (24)

### அரக்கியர் கூந்தலில் தீப்பற்றல்

**1207.** கோசி கத்துகி லூற்ற கொழுங்கனல்
தூசி னுத்தரி கத்தொடு சுற்றுரு
வாச மைக்குழல் பற்ற மயங்கினர்
பாசி ழைப்பர வைப்பட ரல்குலார்.

கோசிகத் துகில் உற்ற கொழும் கனல்
தூசு இன் உத்தரிகத்தொடு சுற்று உறு
வாச மைக் குழல் பற்ற மயங்கினர்
பாசு இழைப் பரவைப் படர் அல்குலார்.

பசும் பொன்னால் ஆகிய அணிகளை அணிந்த சில மங்கையர், கோசிகம் என்னும் பட்டினாலாய ஆடையில் பற்றிய வலிமிகுந்த நெருப்பு, மேலாடையையும் பற்றிச் சுற்றி, மணம் அமைந்த கரிய கூந்தலில் பற்றவே, மயங்கினார்கள். கோசிகம் – ஒருவகைப் பட்டு. துகில் - ஆடை. உத்தரிகம் – மேலாடை. பாசு இழை – பசும் பொன்னால் ஆகிய அணி. தூசு - பஞ்சினால் ஆகிய ஆடை. (25)

### ஆடையில் தீப்பற்றிய அரக்கர் கடலில் மண்டுதல்

**1208.** நிலவி லங்கிய துகிலினை நெருப்புண நிருதர்
★ இலவி னுஞ்சில முத்துள வெனுநகை யிளையார்
புலவி யின்கரை கண்டவ ரமிர்துணப் புணரும்
கலவி யின்கரை கண்டிலர் மண்டினர் கடன்மேல்.

நிலவு இலங்கிய துகிலினை நெருப்பு உண, நிருதர்,
இலவினும் சில முத்துள எனும் நகை இளையார்,
புலவியின் கரை கண்டவர், அமிர்து உணப் புணரும்
கலவியின் கரை கண்டிலர், மண்டினர் கடல்மேல்.

நிருதர், இலவினும் சில முத்து உள எனும் நகை இளையார் புலவியின் கரைகண்டவர், நிலவு இலங்கிய துகிலினை நெருப்பு உண, அமிர்து உணப் புணரும் கலவியின் கரை கண்டிலர்; கடல்மேல் மண்டினர். ஊடல் தவிர்ந்து கூடல் நிலையை அடையும் நிலைமையில் நிலவுபோல வெண்ணிறமான ஆடையை நெருப்பு எரிக்க அதிலிருந்து தப்புமாறு கடலில் விழுந்தார்கள். இலவினும்.........இளையார் என்பது இலவம் பூப் போலும் செவ்விய இதழ்களின் இடையே நின்ற முத்துப்போலும் பற்களை உடையவர் என்பதாம். இலவு - இலவம்பூ; செந்நிறமுடையது. இளையார் – மகளிர். மண்டினர் - நெருங்கி விழுந்தார்கள். அமிர்து – தேவர் உணவு; மரணத்தைத் தவிர்ப்பது என்பது சொல்லின் பொருள். புலவி – ஊடல். கலவி – கூடல். (26)

இச்செய்யுள் 10-என்னும் குறியிடுள்ள சுவடியில் காணப்படவில்லை.

### கிளி பதைப்பக் கண்டு மகளிர் வருந்தல்

**1209.** பஞ்ச ரத்தொடு பசுநிறக் கிளிவெந்து பதைப்ப
அஞ்ச னக்கணி லருவிநீர் முலைமுன்றி லலைப்பக்
குஞ்ச ரத்தன கொழுநரைத் தழுவுறுங் கொதிப்பால்
மஞ்சு றப்புகு மின்னெனப் புகையிடை மறைந்தார்.

*பஞ்சரத்தொடு, பசும் நிறக் கிளி வெந்து பதைப்ப,*
*அஞ்சனக் கணில் அருவி நீர் முலைமுன்றில் அலைப்பக்*
*குஞ்சரத்து அன கொழுநரைத் தழுவு உறும் கொதிப்பால்,*
*மஞ்சு உறப் புகும் மின் எனப் புகை இடை மறைந்தார்.*

எரி புகுந்த மாளிகைகளிலிருந்து வெளியே ஓடும் அரக்கியர்களுள் சிலர், தம் கணவரைப் பின்பற்றித் தொடர்ந்துவந்தவர்கள், தாம் வளர்த்த பச்சைக் கிளிகளைக் கூட்டிலிருந்து திறந்துவிட மறந்துவிட்டபடியால் அவை என்னவாயின எனத் திரும்பிப் பார்த்தார்கள். கூட்டோடு அக்கிளிகள் வெந்து பதைப்பதைக் கண்டவுடன், அவர்களுடைய மைதிட்டிய கண்களிலிருந்து அருவிபோல் நீர் பெருகி மார்பகத்தில் அலைத்தது. இந்த நிலையில், யானை போன்ற தம் கணவரைப் பின் தொடரவேண்டும் என்று மனக்கொதிப்பினால் ஓடினார்கள். அதற்குள் புகை மிகவும் அதிகமாகச் சூழ்ந்துவிட்டபடியால், மேகத்தினுள்ளே புகுகின்ற மின்னல்போல, புகையினுள்ளே மறைந்தார்கள். பஞ்சரம் – கூடு. அஞ்சனம் - மை. குஞ்சரம் – யானை. கொதிப்பு – விரைவு. மஞ்சு – மேகம். மின் – மின்னல்.

(27)

### புகைப்படலத்துள் மறைந்த மகளிர்

**1210.** வரையி னைப்புரை மாடங்க ளெரிபுக மகளிர்
புரையில் பொற்கலன் வில்லிட விசும்பிடைப் போவார்
கரையி னுண்புகைப் படலையிற் கரந்தனர் கலிங்கத்
திரையி னுட்பொதி சித்திரப் பாவையின் செயலார்.

*வரையினைப் புரை மாடங்கள் எரி புக, மகளிர்,*
*புரைஇல் பொன் கலன் வில் இட, விசும்பு இடைப் போவார்,*
*கரைஇல் நுண் புகைப் படலையில் கரந்தனர்; கலிங்கத்*
*திரையின் உள் பொதி சித்திரப் பாவையின் செயலார்.*

*மலையை ஒத்த மாளிகைகளில் எரி புகுதலும், மகளிர் குற்றமற்ற அழகிய அணிகள் ஒளி வீச, வானத்தில் எழுந்து சென்றவர்கள், அளவில்*

லாத நுண்ணிய புகைப்படலத்தில் மறைந்தார்கள். அது கலிங்கநாட்டில் நெய்த துணித்திரையின் உள்ளே பொதிந்த அழகிய பாவைபோலிருந்தது. புரை – குற்றம். வில் - ஒளி. படலை – புகைப்படலம். கரந்தனர் – மறைந்தனர். கலிங்கத்திரை – கலிங்க நாட்டு அறுவையினுலாய திரைச் சேலை. பாவை - பெண் போன்ற ஓவியம். (28)

## மணம் பரப்பி மலர்ப்பொழில் எரிதல்

**1211.** அகரு நன்னறுஞ் சாந்தமு முதலின வனேகம்
புகரி னன்மரத் துறுவெறி யுலகெலாம் போர்ப்பப்
பகரு முழியிற் காலவெங் கடுங்கனல் பருகும்
மகர வேலையின் வெந்தன நந்தன வனங்கள்.

*அகரும் நல் நறும் சாந்தமும் முதலின அனேகம்*
*புகர் இல் நல் மரத்து உறு வெறி உலகு எலாம் போர்ப்பப்,*
*பகரும் ஊழியில், கால வெம் கடும் கனல் பருகும்*
*மகர வேலையின், வெந்தன நந்தன வனங்கள்.*

உலகமெல்லாம் பெயர்கின்ற கால முடிவில், காலக் கொடுங் கடுந்தீ பருகும் மீனினம் மிக்க கடல், வேவதுபோல், அகிலும் நல்ல மணமுள்ள சந்தனமும் மற்றும் பல நல்ல மரங்களும் அவைகளுள் பொருந்திய நறுமணம் உலகமெல்லாம் கவியும்படி பூம்பொழில்கள் எரிந்தன. அகர் – அகில். புகர் – குற்றம். வெறி – மணம். போர்ப்ப – மூட. பகரும் – பெயரும். மகரம் - மீன். நந்தனவனங்கள் – பூம்பொழில்கள். (29)

## கற்பகக் காவும் கனலும் இடைதெரியாமை

**1212.** மினைப்ப ரந்தெழு கொழுஞ்சுட ருலகெலாம் விழுங்க
நினைப்ப ரும்பெருந் திசையுற விரிகின்ற நிலையால்
சினைப்ப ரந்தெரி சேர்ந்திலா நின்றவுஞ் சிலவெங்
கனற்ப ரந்தவுந் தெரிகில கற்பகக் கானம்.

*மினைப் பரந்து எழு கொழும் சுடர், உலகு எலாம் விழுங்க,*
*நினைப்பு அரும் பெரும் திசை உற விரிகின்ற நிலையால்,*
*சினைப் பரந்து, எரி சேர்ந்து இலா நின்றவும், சில, வெம்*
*கனல் பரந்தவும், தெரிகில; கற்பகக் கானம்.*

கற்பகக்கானம், மினைப்பரந்து எழு சினை, பரந்து, உலகு எலாம் விழுங்க நினைப்பு அரும் பெரும் திசை கொழும் சுடர் திசை உற விரிகின்ற நிலையால் எரி சேர்ந்து இலா நின்றவும், வெம் கனல் பரந்தவும் சில தெரிகில என முடிக்க. மினை – மின்னை. பரந்து – போல. சினை – கிளை. பரந்து– பரவி. சில – சிறிதும். தெரிகில – தெரியக் கூடாதனவாயின. (30)

### புகை கடலை விழுங்கல்

**1213.** மூளும் வெம்புகை விழுங்கலிற் சுற்றுறு முழுநீர்
மாளும் வண்ணமா மலைநெடுந் தலைதொறு மயங்கிப்
பூளை வீய்ந்தன்ன போவன புணரியிற் புனன்மீன்
மீள யாவையுந் தெரிந்தில முகிற்கணம் விசைப்ப.

மூளும் வெம் புகை விழுங்கலின், சுற்று உறு முழு நீர்
மாளும் வண்ணம், மா மலை நெடும் தலை தொறும் மயங்கிப்
பூளை வீய்ந்து அன்ன போவன, புணரியில் புனல் மீன்
மீள, யாவையும் தெரிந்துஇல முகில்கணம் விசைப்ப.

மூளும் வெம்புகை, புணரியில் புனல் மீன் யாவையும் மீள, சுற்று உறு முழுநீர் மாளும் வண்ணம் விழுங்கலின், தெரிந்து இல முகில் கணம் விசைப்ப, மாமலை நெடும் தலைதொறும் மயங்கிப் பூளை வீய்ந்து அன்ன போவன ; என முடிக்க. கடலிலுள்ள மீனினம் மாயும்படி மூண்ட வெம் புகை, சுற்றியுள்ள நீர் முழுமையும் குடித்து விட்டமையால், இது தெரியாது விரைந்து (நீர் முகப்பதற்காக) வரும் மேகங்களின் கூட்டம் பெரிய மலைகளின் உயர்ந்த இடங்களில் எல்லாம் மோதுண்டு, பூளைப்பூ சிதறுவது போல் சிதறிப்போயின என்பது பொருள். மீள – இல்லையாக. (31)

### திசையனைத்தும் புகை சூழல்

**1214.** மிக்க வெம்புகை விழுங்கலின் வெள்ளியங் கிரியும்
ஒக்க வெற்பினோ டன்னமுங் காக்கையி னுருவ
பக்க வேலையின் படியது பாற்கடன் முடிவில்
திக்க யங்களுங் கயங்களும் வேற்றுமை தெரியா.

மிக்க வெம் புகை விழுங்கலின், வெள்ளி அம் கிரியும்
ஒக்க வெற்பினோடு அன்னமும் காக்கையின் உருவ;
பக்க வேலையின் படியது பாற்கடல், முடிவில்
திக்கயங்களும், கயங்களும், வேற்றுமை தெரியா.

மிகுதியான கொடிய புகை கவிந்துகொண்டமையால், வெள்ளியங் குன்றமும் மற்ற மலேகளை ஒத்தது, அன்னப் பறவையும் காக்கையின் நிறத்ததாயிற்று ; பாற்கடலும் அருகிலுள்ள கடலின் தன்மையதாயிற்று. திசை யானைகளுக்கும் ஏனையானைகளுக்கும் வேற்றுமை தெரியாதாயிற்று ; என்பது பொருள். இயற்கையாக வெண்ணிறமாயுள்ள சிறந்தனவெல் லாம் புகை சூழ்ந்த பின்னர், கருநிறமாயுள்ள அவைகளினத்து ஏனைய போலாயின. (32)

### அரக்கரும் அரக்கியரும் கடலில் மூழ்கல்

**1215.** கரிந்து சிந்திடக் கடுங்கன ருெடர்ந்துடல் கதுவ
உரிந்த மெய்யின ரோடினர் நீரிடை யொளிப்பார்
விரிந்த கூந்தலுங் குஞ்சியு மிடைதலிற் ருமும்
எரிந்து வேகின்ற வொத்தன வெறிதிரைப் பரவை.

**கரிந்து சிந்திடக் கடும் கனல் தொடர்ந்து, உடல் கதுவ
உரிந்த மெய்யினர், ஓடினர், நீர் இடை ஒளிப்பார்,
விரிந்த கூந்தலும், குஞ்சியும் மிடைதலில், தாமும்,
எரிந்து வேகின்ற ஒத்தன, எறிதிரைப் பரவை.**

(முன் நின்றவை யெல்லாம்) கரிந்து பொடியாகும் வண்ணம் கடிய நெருப்பு தொடர்ந்து அரக்கர்களது உடலைப் பற்றலும், உடல் தோலுரியப் பெற்றவராய் ஓடித் தண்ணீரில் மூழ்கி மறைந்து கொண்டவர்களுடைய கூந்தலும் குஞ்சியும் நெருங்கிக் காணப்பெறுவதால், விசும் அலைகளை யுடைய கடலும் தீப்பட்டு வேகின்றது போல் இருந்தது என்பது பொருள். கதுவ – பற்ற. கூந்தல் – பெண்பால் தலைமயிர்; குஞ்சி – ஆண்பால் தலை மயிர்; மிடைதல் – ஒன்றோடொன்று இணைதல். அரக்கர்களது தலைமயிர் சிவப்புநிறமுடையதாகலின், கடற் பரப்பில் அவை நெருங்கித் தோன்றி யது, கடலில் தீப் பற்றியதுபோல் தோன்றியது என்பது கற்பனை. (33)

### மகவோடு போந்த அரக்கியர் அவலநிலை

**1216.** மருங்கின் மேலொரு மகவுகொண்
டொருதனி மகவை
அருங்கை யாற்பற்றி மற்ருெரு
மகவுபின் னரற்ற

நெருங்கி நீரொடு நெறிகுழல்
சுறுக்கொள நீங்கிக்
கருங்க டற்றலை வீழ்ந்தன
ரரக்கியர் கதறி.

*மருங்கின் மேல் ஒரு மகவு கொண்டு, ஒரு தனி மகவை*
*அரும் கையால் பற்றி, மற்று ஒரு மகவு பின் அரற்ற,*
*நெருங்கி, நீரொடு, நெறிகுழல் சுறுக்கொள நீங்கிக்*
*கரும் கடல் தலை விழ்ந்தனர் அரக்கியர் கதறி.*

அரக்கியர், ஒரு மகவு மருங்கின்மேல் கொண்டு, ஒரு அரும் மகவைக் கையால் பற்றி, மற்று ஒரு மகவு பின் தனி அரற்ற, நீரொடு நெருங்கி, நெறி குழல் சுறு கொள நீங்கி, கதறி, கருங்கடல் தலை விழ்ந்தனர் என முடிக்க. மருங்கு - இடை. அரற்ற – அழ. நீர் – கண்ணீர். நெறி குழல் – குழற்சியான தலைமயிர். சுறு - சுடுநாற்றம். தலை - இடம். இடையிலும் கையிலும் மகவொடு வெளிவந்த அரக்கியர், தனியாகப் பின் நின்று ஒரு மகவு அழுவதைக் கண்டு, கண்ணீர் விட்டு அதை அணுகுவதற்குள் அவர்கள் தலையில் திப்பற்றிய சுடுநாற்றம் தோன்ற, உடனே விலகிக் கருங் கடலில் கதறிக்கொண்டு விழ்ந்தனர் என்பது பொருள். (34)

### படைக்கலம் உருகி ஒன்றுதலில் ஒரு உண்மை

**1217.** வில்லும் வேலும்வெங் குந்தமு
முதலின விறகாய்
எல்லு டைச்சுட ரெனப்புக
ரெஃகெலா முருகத்
தொல்லை நன்னிலை தொடர்ந்துபே
ருணர்வன்ன தொழிலச்
சில்லி யுண்டையிற் றிரண்டன
படைக்கலச் சாலை.

*வில்லும், வேலும், வெம் குந்தமும் முதலின விறகாய்,*
*எல் உடைச் சுடர் எனப் புகர் எஃகு எலாம் உருகத்*
*தொல்லை நல் நிலை, தொடர்ந்து பேர் உணர்வு அன்ன தொழிலச்*
*சில்லி உண்டையில் திரண்டு அன படைக்கலச் சாலை.*

படைக்கலச் சாலையில் வில், வேல், கொடிய குந்தம் முதலிய படைக் கலங்களிலுள்ள மரப்பகுதிகள் விறகாக, ஒளியுடைய எஃகுப் பகுதிகள் எல்லாம் உருகித் தனித்தனி துண்டுகளாக இருந்த இரும்பெல்லாம் ஒளி வீசும் கதிரவன்போல் ஒரே உருண்டையாகக் கூடித் தமது பண்டைய நிலையை அடைந்தன. அது – பரந்த உணர்ச்சியால் வேற்றுமை ஒற்றுமை யாவது போல் தோன்றியது. குந்தம் – எறிகோல். எல் - ஒளி. சுடர் – கதிரவன். புகர் - ஒளி. தொல்லை – பண்டைய. சில்லி – சிறு துண்டுகள். உண்டை - உருண்டை. முதலில் ஒன்றாக இருந்த இரும்புக்கட்டி கொல்ல னால் பலவேறு படைக்கலங்களாகத் தனித்தனி செய்யப்பெற்றுத் தனித் தனிப் பெயருடனும் உருவுடனும் நிலவியது; பின்னர் தீயில் பட்டு உருகியவுடன் தனித்த வடிவமும் பெயரும் மறைந்து ஒரே உருண்டை யாகித் தன் பண்டைய நிலையை அடைந்தது. பிரிவுணர்ச்சியால் வேறு வேறு காணப்பெற்றவை பரந்த உணர்ச்சியால் ஒன்றிக் காணப்பெறுவது போல் தோன்றியது. இந்த அடிப்படை உண்மையை விரித்துப் பல உண் மைகளைத் தெரிவது பயனுடையது. (35)

## தீப்பற்ற யானைகள் ஓடல்

1218. செய்தொ டர்க்கன வல்லியும் புரோசையும் சிந்தி
நொய்தி னிட்டவன் றறிபறித் துடலெரி நுழைய
மொய்த டச்செவி நிறுத்திவான் முதுகினை முறுக்கிக்
கையெ டுத்தழைத் தோடின வோடைவெங் களிமா.

செய் தொடர்க் கன வல்லியும், புரோசையும், சிந்தி,
நொய்தின் இட்ட வன் தறி பறித்து, உடல் எரி நுழைய,
மொய் தடச் செவி நிறுத்தி, வால் முதுகினை முருக்கிக்
கை எடுத்து அழைத்து ஓடின ஓடை வெம் களி மா.

ஓடை வெம் களி மா, உடல் எரி நுழையத் தொடர் செய்ய இட்ட கன வல்லியும், புரோசையும் சிந்தி, வன் தறி நொய்தில் பறித்து, மொய் தடம் செவி நிறுத்தி, வால் முதுகினை முறுக்கி, கை எடுத்து அழைத்து ஓடின. தொடர் செய்ய – கட்ட. இட்ட – தொடுத்த. கனவல்லி – கால் விலங்கு. புரோசை – யானை கட்டும் கயிறு. வன் - வலிமையான. தறி – யானை கட் டும் தூண். மொய் – வலிய. தடம் பெரிய. நிறுத்தி - அசையாமல் நிறுத்தி. முறுக்கி - வளைத்து நீட்டி. கை – துதிக்கை. ஓடை - நெற்றிப்பட்டம். களிமா – மதக்களிப்புடைய யானை. (36)

பறவைகளை மீன்கூட்டம் விழுங்கல்

**1219.** வெருளும் வெம்புகைப் படலையின் மேற்செல வெருவி
இருளும் வெங்கடல் விழுந்தன வெழுந்தில பறவை
மருளின் மீன்கணம் விழுங்கிட வுலந்தன மனத்தோர்
அருளில் வஞ்சரைத் தஞ்சமென் றடைந்தன ரனைய.

வெருளும் வெம் புகைப் படலையின் மேல் செல வெருவி,
இருளும் வெம் கடல் விழுந்தன, எழுந்தில பறவை;
மருளில் மீன் கணம் விழுங்கிட உலந்தன; மனத்து ஓர்
அருள் இல் வஞ்சரைத் தஞ்சம் என்று அடைந்தனர் அனைய.

பறவைகள் வெருளச்செய்யும் வெம்மை மிக்க புகைக் கூட்டத்தில் மேலே செல்லுவதற்கு அஞ்சி, இருண்ட கொடிய கடலில் விழுந்தவை எழவில்லை. அச்சமில்லாத மீன் கூட்டம் அந்தப் பறவைகளை விழுங்க, அவை ஒழிந்தன. அது, உள்ளத்தில் ஒரு விதமான அருளும் இல்லாத வஞ்சகர்களை அடைக்கலம் புகுந்தவர்கள்நிலைமைபோலிருந்தது. மருளில் மீன் கணம் என்பது, முன்பெல்லாம் பறவைகளுக்கு அஞ்சிய மீன் கூட்டம், இப்போது அப்பறவைகள் தம் இருப்பிடத்துக்கு வந்தமையால் அச்சம் ஒழிந்தன என்பது குறித்தது. பிறரிடம் அச்சம் கொண்டு வஞ்சரைத் தஞ்சம் அடைபவர் அவரால் பாதுகாக்கப்படாததோடன்றித் தம்நலம் கருதி அழிக்கவும் படுவர் என்ற உண்மை விளக்கியபடி. இன்னும் சில உலக உண்மைகளும் காணலாம். (37)

இச்செய்யுளுக்குப் பின் 25-என்னும் குறியிடுள்ள சுவடியில் பின்வரும் பாடல்கள் காணப்படுகின்றன ;—

1219 (a) தேரெரிந்தன வெரிந்தன திரள்பரி யெவையும்
தாரெரிந்தன வெரிந்தன தருக்குறு மதமா
நீரெரிந்தன வெரிந்தன நிதிக்குவை யிலங்கை
ஊரெரிந்தன வெரிந்தன வரக்கர்தம் முடலம்.

1219 (b) எரிந்த மாளிகை யெரிந்தன விலங்கொளிப் பூண்கள்
எரிந்த பூந்துகி லெரிந்தது முரசின முதலாய்
எரிந்த மாமணிப் பந்தர்க ளெரிந்தது கடிகா
எரிந்த சாமரை யெரிந்தது வெண்குடைத் தொகுதி.

1219 (c) ஆடரங்குக ளெரிந்தன வரக்கியர் சிறுவ
ரோடெ ரிந்தன ருலப்பில்பல் கொடிகளு மெரிந்த
தேடருமணிச் சிவிகையோ டருந்திற லரக்கர்
வீடெரிந்தன வெரிந்திடா திருந்ததென் வினவில்.

## இராவணன் மாளிகையில் தீப்புகல்

**1220.** நீரை வற்றிடப் பருகிமா நெடுநிலந் தடவித்
தாரு வைச்சுட்டு மலைகளைத் தணற்செய்து தனிமா
மேரு வைப்பற்றி யெரிகின்ற காலவெங் கனல்போல்
ஊரை முற்றுவித் திராவணன் மனைபுக்க துயர்தீ.

நீரை வற்றிடப் பருகி, மா நெடு நிலம் தடவித்,
தாருவைச் சுட்டு, மலைகளைத் தணல் செய்து, தனிமா
மேருவைப் பற்றி எரிகின்ற கால வெம் கனல் போல்,
ஊரை முற்றுவித்து, இராவணன் மனை புக்கது; உயர் தீ.

அந்த வளர்கின்ற தீ, நீர் முழுதும் வற்றும்படி குடித்து, பெரிய நீண்ட நிலம் முழுவதும் பரந்து அழித்து, மரங்களைச் சுட்டு, மலைகளைக் கனிந்த நெருப்பாகச் செய்து, ஒப்பற்ற உயர்ந்த மேருவைப்பற்றி எரிகின்ற காலக் கொடுந்தீ போல ஊரையெல்லாம் முடித்துவிட்டு, இராவணன் மாளிகையில் புகுந்தது. தணல் – கனிந்த நெருப்பு. மேரு என்னும் பொன்மலை இராவணனது பொன் மாளிகைக்கு ஒப்புக் கூறப்பட்டது. (38)

## வானவர் மகளிர் நிலைகுலைந்தோடல்

**1221.** வான மாதரு மற்றுள மகளிரு மறுகிப்
போன போனதிக் கறிவரு மிரியலர் போனார்
ஏனை நின்றவ ரெங்கணு மிரிந்தன ரிலங்கைக்
கோனவ் வானவர் பதிகொண்ட நாளெனக் குலைவார்.

வான மாதரும், மற்று உள மகளிரும், மறுகிப்
போன போன திக்கு அறிவரும் இரியலர் போனார்;
ஏனை நின்றவர் எங்கணும் இரிந்தனர்; இலங்கைக்
கோன் அவ் வானவர் பதி கொண்ட நாள் எனக் குலைவார்.

வானவர் நாட்டிலிருந்து இராவணனால் சிறை கொண்டு வரப்பெற்ற பல பிரிவினரான வானவர் மகளிர் அனைவரும் அஞ்சி, ஒருவர் போன திசை ஒருவர் அறியாமல் ஓடினார்கள். இராவணன் வான நாட்டைக் கொண்ட நாளில் எவ்வாறு குலைந்தார்களோ அவ்வாறு குலைந்தார்கள் என்பது கருத்து. இரியல் – அச்சத்தால் நிலைகெட்டு ஓடல். (39)

### மகளிர் குழலும் நறுமணம் பெறல்

1222. நாவி யுங்நறுங் கலவையுங் கற்பக நக்க
பூவு மாரமு மகிலுமென் றினையன புகையத்
தேவு தேன்மழை செறிபெருங் குலமெனத் திசையிற்
பாவை மார்நறுங் குழல்களும் பரிமளங் கமழ்ந்த.

நாவியும், நறும் கலவையும், கற்பகம் நக்க
பூவும், ஆரமும், அகிலும், என்று இனையன புகையத்
தேவு தேன் மழை செறி பெரும் குலம் எனத் திசையின்
பாவைமார் நறும் குழல்களும் பரிமளம் கமழ்ந்த.

மான்மதமும், மணம் மிக்க கலவைகளும், கற்பக மலர்களும், சந்தனமும் அகிலும், என்ற நறும் பொருள், புகைந்து எட்டுத்திசைகளிலும் பரவுவதால், திசைகாக்கும் தெய்வமகளிரது இயற்கை மணம் கமழும் கூந்தல்களும், நறுமணம் பெற்று, தேன்மழை பொழிகின்ற தெய்வமுகில் தொகுதிபோல் தோன்றி மணம் வீசின என்பது கருத்து. கலவை - நறுமணப் பொருள்களின் கலப்பு. நக்க – மலர்ந்த. பரிமளம் – மணம். *(40)*

### இராவணன் எழுநிலைமாடம் எரிதல்

1223. சூழும் வெஞ்சுடர் தொடர்ந்திட யாவருந் தொடரா
ஆழி வெஞ்சினத் தாண்டொழி லிராவணன் மனையில்
ஊழி வெங்கன லுண்டிட வுலகமென் றுயர்ந்த
ஏழும் வெந்தன வொத்தன நெடுநிலை யேழும்.

சூழும் வெம் சுடர் தொடர்ந்திட, யாவரும் தொடரா
ஆழி வெம் சினத்து ஆண் தொழில் இராவணன் மனையில்,
ஊழி வெம் கனல் உண்டிட, உலகம் என்று உயர்ந்த
ஏழும் வெந்தன ஒத்தன, நெடும் நிலை ஏழும்.

யாவரும் தொடரா ஆழி வெம் சினத்து ஆண் தொழில் இராவணன் மனையில் நெடுநிலை ஏழும், சூழும் வெம் சுடர் தொடர்ந்திட, உலகம் என்று உயர்ந்த ஏழும் ஊழி வெம் கனல் உண்டிட வெந்தன ஒத்தன: என முடிக்க. இராவணனது ஏழ்நிலை மாடம் வெந்தது, ஏழுலகமும் வெந்தது போலத் தோன்றியது. யாவரும்......இராவணன் - யாவரும் அணுக முடியாத பேராணையையும் சினத்தையும் ஆண்மையையும் படைத்த இராவணன். ஆழி – அரசனது ஆணையைக்குறிக்கும்; படைக்கலத்தின் பெயர் ஆணையைக் குறித்தது. *(41)*

## இராவணன் மாளிகை உருகி மேருப்போலத் தோன்றல்

**1224.** பொன்றி ருத்திய தாதலா லிராவணன் புரைதீர்
குன்ற மொத்துயர் தடநெடு மாநிலைக் கோயில்
நின்று துற்றெரி பருகிட நெரிவுற வுருகித்
தென்றி சைக்குமோர் மேருவுண் டாமெனத் தெரிந்த.

*பொன் திருத்தியது ஆதலால், இராவணன் புரை தீர்*
*குன்றம் ஒத்து உயர் தடம் நெடு மா நிலைக் கோயில்,*
*நின்று துற்று எரி பருகிட, நெரிவு உற உருகித்*
*தென் திசைக்கும் ஓர் மேரு உண்டு ஆம் எனத் தெரிந்த.*

இராவணனுடைய மலைபோல் உயர்ந்ததும், அகன்ற, நீண்ட, பெரிய நிலைகளையுடையதுமான அரண்மனை, குற்றமற்ற பொன்னால் செய்யப் பெற்றதானமையால், நெருப்பு வாயினால் கவ்விக் குடிப்பது போல் எரிப்பதனால் நெரிந்து உருகி ஒரேதிரளாகித் தென்திசையிலும் ஒரு மேரு இருக்கின்றது என்று சொல்லும்படி காணப்பட்டது என்பது பொருள். புரைதிர் - குற்றமில்லாத. மாநிலை - பெரிய அடுக்கு. கோயில் - அரசன் மாளிகை. துற்று - கவ்வி. *(42)*

## இராவணன் முதலியோர் வெளியேறுதல்

**1225.** அனைய காலையி லரக்கனு
மரிவையர் குழுவும்
புனைம ணிப்பொலி புட்பக
விமானத்துப் போனர்
நினையு மாத்திரை யாவரு
நீங்கினர் நீங்கா
வினையி லாமையில் வெந்ததவ்
விலங்கன்மே லிலங்கை.

*அனைய காலையில் அரக்கனும், அரிவையர் குழுவும்,*
*புனை மணிப் பொலி புட்பக விமானத்துப் போனர்;*
*நினையும் மாத்திரை யாவரும் நீங்கினர்; நீங்கா*
*வினை இலாமையில் வெந்தது, அவ் விலங்கல் மேல் இலங்கை.*

அப்பொழுது அரக்கனும் (இராவணனும்) பெண்கள் கூட்டமும், மணிகளால் அழகு செய்யப் பெற்று விளங்கும் புட்பகவிமானத்தில்

சென்றார்கள். நினைத்த அளவில் எல்லோரும் (தீயினின்றும்) நீங்கினர். (ஆனால்,) ஒவ்வொருவரும் தங்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் வேலையைச் செய்தார்களே யல்லாமல் தீயைத் தடுக்கும் வேலையைச் செய்யாதபடியால், அந்த, மலைமேலிருந்த இலங்கை வெந்து அழிந்தது. அரிவையர் - பெண்கள். நினையும் மாத்திரை என்பது, மிகச் சுருங்கிய காலத்தைக் குறித்தது. நீங்காவினை – தாங்கள் நீங்காது நின்று, தீயை நீக்கும் வினை. புட்பகவிமானம் – இராவணனது வானவூர்தி. (43)

இச் செய்யுளின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வரும் பாடல் காணப்படுகிறது :—

1225 (a) தாவி மேலவர்க் கருந்துயர் விளைத்திடிற் றமக்கே
மேவு மத்துய ரெனும்பொருள் மெய்யுற மேனாள்
தேவர் தம்பதிக் கிராவண னிட்டசெந் தழல்போல்
ஓவி லாதெரித் துண்டமை யுரைப்பதற் கெளிதோ.

### இராவணன் நகர் எரிந்த காரணம் வினவுதல்

**1226.** ஆழித் தேரவ னரக்கரை யழலெழ நோக்கி
ஏழுக் கேழென வடுக்கிய வுலகங்க ளெரியும்
ஊழிக் காலம்வந் துற்றதோ பிறிதுவே றுண்டோ
பாழித் தீச்சுட வெந்ததென் னகரெனப் பகர்ந்தான்.

*ஆழித் தேரவன், அரக்கரை அழல் எழ நோக்கி,*
*'ஏழுக்கு ஏழென அடுக்கிய உலகங்கள் எரியும்*
*ஊழிக் காலம் வந்து உற்றதோ? பிறிது வேறு உண்டோ?*
*பாழித் தீச்சுட வெந்தது என்? நகர்', எனப் பகர்ந்தான்.*

ஓராழித் தேரவன்போல் வானவூர்தியில் நின்ற இராவணன், அரக்கரைத் தீ எழ நோக்கிப் பதினான்கு உலகமும் எரிந்தழியும் ஊழிக்காலம் வந்துவிட்டதா? வேறு ஏதேனும் உண்டோ? வலிமிக்க தீ எரிக்க நகர் வெந்தது எதனால்? என வினவினான். ஏழுக்கு ஏழ் - பதினான்கு. (44)

### நிகழ்ந்தது கூற இராவணன் சினத்தல்

**1227.** கரங்கள் கூப்பினர் தங்களைத்
திருவொடுங் காணார்
இரங்கு கின்றவல் லரக்கரீ
தியம்பின ரிறையோய்

தரங்க வேலேயி னெடியதன்
வாலிட்ட தழலால்
குரங்கு சுட்டதென் றுரைத்தலு
மிராவணன் கொதித்தான்.

*கரங்கள் கூப்பினர், தங்களைத் திருவொடும் காணார்,*
*இரங்குகின்ற வல் அரக்கர் ஈது இயம்பினர்: ‘இறையோய்!*
*தரங்க வேலேயின் நெடிய தன் வால் இட்ட தழலால்,*
*குரங்கு சுட்டது’ என்று உரைத்தலும், இராவணன் கொதித்தான்.*

வீரம் செல்வம் முதலிய பொலிவு எல்லாம் இழிந்து, ஏங்கிக் கொண்டிருக்கின்ற வலிய அரக்கர் கைகளைக் கூப்பி இவ்வாறு சொன்னார்கள்; “இறைவனே அலைகளையுடைய கடலிலும் நீண்ட வாலில் நாம் கொளுத்திய நெருப்பால் குரங்கு சுட்டது” என்று சொல்லவும், இராவணன் சினத்தால் பொங்கினன். திரு – வீரம் செல்வம் முதலிய இவை. திரு காணாமையின், தங்களையே காணார்போலாயினர். வாலின் நீளத்துக்குக் கடலின் நீளம் உவமை. (45)

## இராவணன் சினந்து நகைத்தல்

**1228.** இன்று புன்றொழில் குரங்குதன் வலியினு லிலங்கை
நின்று வெந்துமா நீறெழு கின்றது நெருப்புத்
தின்று தேக்கிடு கின்றது தேவர்கள் சிரிப்பார்
நன்று நன்றுபோர் இராவணன் வலியென நக்கான்.

*‘இன்று புன் தொழில் குரங்கு தன் வலியினால் இலங்கை*
*நின்று வெந்து மா நீறு எழுகின்றது; நெருப்புத்*
*தின்று தேக்கிடுகின்றது; தேவர்கள் சிரிப்பார்;*
*நன்று நன்று போர் இராவணன் வலி’என நக்கான்.*

*இழிந்த செயல்களையுடைய குரங்கினது வலியினால், இன்று இலங்கை மாநகர் நின்று வெந்து சாம்பராகின்றது; நெருப்பு எல்லாவற்றையும் தின்று ஏப்பமிடுகின்றது; தேவர்கள் ஏளனம் செய்து சிரிப்பார்; போரில் புகழ்மிக்க இராவணன் ஆற்றல் நன்றாக இருக்கின்றது! என்று சிரித்தான். நீறு – சாம்பர். தேக்கிடுதல் – அளவுக்கு மேல்கொண்டு தெவிட்டல். நன்று நன்று எனும் அடுக்கு, இகழ்ச்சிக் குறிப்பு. போர் இராவணன் வலி பயனில்லை என்றபடி. போர்வலி ஒன்றைக் கைக்கொண்டு நலம்பெறவியலாது; அவ்வலி ஒன்றிலேயே தம்மையும் புகழையும் காப்பாற்ற எண்ணுவோர், தம்மால் இழிந்தவரெனக் கருதப்படுவோராலும் இழிவெய்தக் கூடும் என்பதாம். (46)*

## எரியைப் பற்றிவரக் கட்டளையிடல்

1229. உண்டநெ ருப்பைக்
★ கண்டெதிர் பற்றிக்
கொண்டணை கென்றான்
அண்டரை வென்றான்.

'உண்ட நெருப்பைக்
கண்டு, எதிர், பற்றிக்
கொண்டு, அணைக' என்றான்,
அண்டரை வென்றான்.

அண்டரை வென்றான், (இலங்கையை) 'உண்ட நெருப்பை எதிர் கண்டு பற்றிக்கொண்டு அணைக' என்றான். அண்டரை வென்றான்-முன்பு தேவர்களை வென்ற இராவணன். அணைக - வருக. (47)

## அனுமனைப் பற்றிவரக் கட்டளையிடல்

| | |
|---|---|
| 1230. உற்றக லாமுன் | 'உற்று அகலா முன் |
| செற்றகு ரங்கைப் | செற்ற குரங்கைப் |
| பற்றுமி னென்றான் | பற்றுமின்' என்றான் |
| முற்று முணர்ந்தான். | முற்றும் உணர்ந்தான். |

முற்றும் உணர்ந்த இராவணன், 'இவ்வாறு தீங்கிழைத்த குரங்கை, அது நம்மூர் விட்டு அகல்வதற்குமுன் பற்றுவிராக' என்றான். (48)

## வீரர் விரைந்து செல்லல்

| | |
|---|---|
| 1231. சாரய னின்றார் | சார் அயல் நின்றார் |
| வீரர்வி ரைந்தார் | வீரர் விரைந்தார்; |
| நேருது மென்றார் | 'நேருதும்' என்றார், |
| தேரினர் சென்றார். | தேரினர் சென்றார். |

இராவணனைச் சார்ந்து பக்கத்தில் நின்ற தேர்வீரர்கள், 'அவ்வாறே செய்வோம்' என்று விரைந்து சென்றார்கள். (49)

### பல வீரர்கள் செல்லல்

| | |
|---|---|
| **1232.** எல்லையி கந்தார்<br>வில்லர்வெ குண்டார்<br>பல்லதி காரத்<br>தொல்லர் பெயர்ந்தார். | *எல்லை இகந்தார்*<br>*வில்லர், வெகுண்டார்*<br>*பல் அதிகாரத்*<br>*தொல்லர் பெயர்ந்தார்.* |

*எல்லை இகந்தார் வில்லர், பல் அதிகாரத் தொல்லர் வெகுண்டார் பெயர்ந்தார் என முடிக்க. அளவில்லாத விற்படையினரும், பழமையாகப் பல அதிகாரங்களில் உள்ளவர்களும் சினம் மிக்கவராய்ச் சென்றார்கள்.* (50)

### வீரர்கள் எழுவர் போர்க்கு எழல்

**1233.** நீர்கெழு வேலை நிமிர்ந்தார்
★ தார்கெழு தானை சமைந்தார்
போர்கெழு மாலை புனைந்தார்
ஓரெழு வீர ருயர்ந்தார்.

*நீர்கெழு வேலை நிமிர்ந்தார்*
*தார்கெழு தானை சமைந்தார்*
*போர்கெழு மாலை புனைந்தார்*
*ஓர் எழு வீரர் உயர்ந்தார்.*

*உயர்ந்தவர்களாகிய ஒப்பற்ற ஏழு வீரர்கள், நீர் பொருந்திய கடல் போலப் பொங்கியவர்களாய், போர்க்குரிய தும்பைமாலையை அணிந்தவர்களாய் அணிவகுக்கப் பெற்ற படையை ஆயத்தம் செய்தார்கள்.* (51)

### வீரர் அனுமனைக் காணல்

**1234.** விண்ணினை மேலை விளம்பார்
மண்ணினை யோடி வளைந்தார்
அண்ணலை யோடி யணைந்தார்
கண்ணினில் வேறயல் கண்டார்.

*விண்ணினை, மேலை, விளம்பார்;*
*மண்ணினை ஓடி வளைந்தார்;*
*அண்ணலை ஓடி அணைந்தார்;*
*கண்ணினில் வேறு அயல் கண்டார்.*

காலம் தாழ்க்காமல், மேலிடமான விண்ணகத்தையும் மண்ணகத்தையும் ஓடிவளைத்தார். வேறு அயலிடத்தில் அனுமனைக் கண்ணால் கண்டார்கள். விரைந்து ஓடி, அருகில் சென்றார்கள். விளம்பல் – காலந்தாழ்த்தல். (52)

### அரக்கர் அனுமனைச் சூழ்தல்

**1235.** பற்றுதிர் பற்றுதி ரென்பார்
எற்றுதி ரெற்றுதி ரென்பார்
சுற்றுதிர் சுற்றுதி ரென்பார்
முற்றினர் முற்று முனிந்தார்.

*'பற்றுதிர் பற்றுதிர்' என்பார்;*
*'எற்றுதிர் எற்றுதிர்' என்பார்;*
*'சுற்றுதிர் சுற்றுதிர்' என்பார்;*
*முற்றினர் முற்றும் முனிந்தார்.*

பெருஞ்சினம் கொண்ட அந்த அரக்கர், அனுமனை வளைத்தார்கள்–"பிடியுங்கள் பிடியுங்கள்" என்பாரும், "தாக்குங்கள் தாக்குங்கள்" என்பாரும், "வளையுங்கள் வளையுங்கள்" என்பாருமாகச் சூழ்ந்தார்கள். (53)

### அனுமனும் அரக்கரும் பொருதல் 1236—1242.

**1236.** ஏல்கொடு வஞ்ச ரெதிர்ந்தார்
கால்கொடு கைகொடு கார்போல்
வேல்கொடு கோலினர் வெந்தீ
வால்கொடு தானும் வளைந்தான்.

*ஏல் கொடு வஞ்சர் எதிர்ந்தார்;*
*கால் கொடு கை கொடு கார்போல்*
*வேல் கொடு கோலினர்; வெம்தீ*
*வால் கொடு தானும் வளைந்தான்.*

(அனுமனைப் பிடிப்பதற்கு) ஏற்றுக் கொண்டு வந்த வஞ்சகர்கள், மேகம் போல (ச் சூழ்ந்து) காலைக் கொண்டும் கையைக் கொண்டும் வேலைக் கொண்டும் எதிர்த்தார்கள். அனுமனும் தான் தீக் கொளுவிய வாலைக் கொண்டு (அந்த அரக்கர்களை) வளைந்தான். ஏல்கொடு – ஏற்றுக் கொண்டு. (54)

**1237.** பாதவ மொன்று பகுத்தான்
மாதிரம் வாலின் வளைந்தான்
மோதினன் மோத முனிந்தார்
ஏதியு நாளு மிழந்தார்.

பாதவம் ஒன்று பகுத்தான் ;
மாதிரம் வாலின் வளைந்தான் ;
மோதினன் ; மோத முனிந்தார்
ஏதியும் நாளும் இழந்தார்.

திசைகளை வாலால் வளைத்த அனுமன், ஒரு மரத்தைப் பெயர்த்து (அரக்கர்களை) மோதினுன். மோதியதும் சினங்கொண்ட அந்த அரக்கர்கள் (எதிர்த்தார்கள்) படைக்கலமும் (வாழ்) நாளும் இழந்தார்கள். பாதவம் - மரம். ஏதி - படைக்கலம் (55)

**1238.** நூறிட மாருதி நொந்தார்
ஊறிட வூனிடு புண்ணீர்
சேறிட வூரிடு செந்தீ
ஆறிட வோடின தாருய்.

நூறிட மாருதி, நொந்தார்
ஊறிட ஊன் இடு புண் நீர்,
சேறு இட, ஊரிடு செம்தீ
ஆறிட ஓடினது ; ஆருய்.

மாருதி நூறிட நொந்தார் ஊறிட ஊன் இடு புண் நீர் சேறு இட ஊரிடு செந்தீ ஆறிட, ஆருய் ஓடினது என முடிக்க. நூறிட - அடிக்க. ஊறிட - காயமடைய. புண்நீர் - குருதி. ஆறிட - நெருப்புத் தணிய. (56)

**1239.** தோற்றினர் துஞ்சின தல்லால்
ஏற்றிகல் வீர ரெதிர்ந்தார்
காற்றின் மகன்கலை கற்ருன்
கூற்றினு மும்மடி கொன்ருன்.

தோற்றினர், துஞ்சினர் அல்லால்
ஏற்று இகல் வீரர், எதிர்ந்தார் ;
காற்றின்மகன் கலை கற்ருன்,
கூற்றினும் மும்மடி கொன்ருன்.

இறந்தவர்களைத் தவிர, (எஞ்சிய) சிங்கம் போன்ற வலியுடைய வீரர்கள் எதிர்த்துத் தோன்றினார்கள். கலைகளைக்கற்ற அனுமன். யமனை விட மூன்று மடங்கு (அதிகவலியுடன்) அவர்களைக் கொன்றான். காற்றின் மகன் – அனுமன். மும்மடி - மூன்று மடங்கு. (57)

**1240.** மஞ்சுறழ் மேனியர் வன்றோள்
மொய்ம்பினர் வீரர் முடிந்தார்
ஐம்பதி னுயிர ரல்லார்
பைம்புனல் வேலை படர்ந்தார்.

மஞ்சு உறழ் மேனியர் வன் தோள்
மொய்ம்பினர் வீரர் முடிந்தார்
ஐம்பதினுயிரர் அல்லார்
பைம்புனல் வேலை படர்ந்தார்.

மேகம் போன்ற மேனியும் வலிய தோளும் ஆற்றலும் உடையவர்களான வீரர்களில் இறந்த ஐம்பதினுயிரவர்களைத் தவிர, மற்றையவர்கள், பசியநீரையும் அலையையுமுடைய கடலில் ஓடிமூழ்கினார்கள். மொய்ம்பு – ஆற்றல். முடிதல் – இறத்தல். பைம்புனல் - பசுமையான நீர். படர்ந்தார் – ஓடினார்கள். (58)

இச் செய்யுளின் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் கீழ்க்காணும் பாடல் காணப்படுகிறது.

1240 (a) மற்றொரு கோடியர் வந்தார்
உற்றெதி ரோடி யுடன்றார்
கற்றுறு மாருதி காய்ந்தே
சுற்றினன் வால்கொடு தூங்க.

**1241.** தோய்த்தனன் வாலது தோயக்
காய்த்திய வேலை கலந்தார்
போய்த்திலர் பொன்றினர் போனார்
ஏய்த்தென மைந்த ரெதிர்ந்தார்.

தோய்த்தனன் வால், அது தோயக்
காய்த்திய வேலை கலந்தார்
போய்த்திலர் பொன்றினர் போனார்,
ஏய்த்தென மைந்தர் எதிர்ந்தார்.

(அனுமன்) வாலை (க் கடலில்) தோய்த்தனன்; அது தோய்தலினால், கோதித்த கடல்நீரிற் கலந்தவர்கள், புக்கவுடனேயே இறந்துபோனார்கள். இது ஒரு வஞ்சம் என்று தலைவரான வீரர் எதிர்த்தார். ஏய்த்து - வஞ்சகம். மைந்தர் - வலிமையுடையவர். (59)

**1242.** சுற்றின தேரினர் தோலா
விற்றொழில் வீரம் விளைத்தார்
எற்றினன் மாருதி யெற்ற
உற்றெழு வீரர் உலைந்தார்.

சுற்றின தேரினர், தோலா
வில் தொழில் வீரம் விளைத்தார்
எற்றினன் மாருதி எற்ற
உற்று எழு வீரர் உலைந்தார்.

தேர் ஏறிய அவ்வீரர்கள் (அனுமனை) வளைத்து, தோல்வியில்லாத தமது வில்வீரத்தைக் காண்பித்தார்கள். அநுமன் அவர்களை அடித்தான்; அடிபட்டு ஏழுவீரர்களும் அழிந்தார். தோலா - தோல்வியில்லாத. இந்த ஏழுவீரரும் இராவணனுடைய அமைச்சர்களின் மக்கள். (60)

இச் செய்யுளின்பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் கீழ்க் காணும் பாடல்கள் காணப்படுகின்றன.

1242 (a) உற்றவர் யாரு முலர்ந்தார்
மற்றது போதினில் வானோர்
வெற்றிகொள் மாருதி மீதே
பொற்றரு மாமலர் போர்த்தார்.

1242 (b) வன்றிறல் மாருதி கேண்மோ
நின்றிடி னீபழு தின்றே
சென்றிடு வாயென தேவர்
ஒன்றிய வானி னுரைத்தார்.

1242 (c) விண்ணவ ரோதிய மெய்ம்மை
எண்ணியி ராமனை யின்றே
கண்ணுற லேகட னென்றுங்
கண்ணனு மவ்வயின் மீண்டான்.

### பிராட்டி தங்கும் சோலையில் தீ பரவாமை

**1243.** விட்டுயர் விஞ்சையர் வெந்தீ
வட்ட முலைத்திரு வைகும்
புட்டிரள் சோலை புறத்தும்
சுட்டில தென்பது சொன்னார்.

விட்டு உயர் விஞ்சையர், 'வெம் தீ
வட்ட முலைத் திரு வைகும்
புள் திரள் சோலை புறத்தும்
சுட்டிலது' என்பது சொன்னார்.

வானில் உயரத்தில் செல்லும் விஞ்சையர், 'திருமகள் தங்கிய பறவைக் கூட்டம் நிறைந்த சோலையின் வெளியில் கூட இந்தக் கொடிய தீ சுடவில்லை' என்று சொன்னார்கள். திரு - பிராட்டியார். (61)

### பிராட்டியை அனுமன் வணங்கி மகிழ்தல்

**1244.** வந்தவர் சொல்ல மகிழ்ந்தான்
வெந்திறல் வீரன் வியந்தான்
உய்ந்தனெ னென்ன வுவந்தான்
பைந்தொடி தாள்கள் பணிந்தான்.

வந்து அவர் சொல்ல மகிழ்ந்தான்,
வெம் திறல் வீரன் வியந்தான்,
உய்ந்தனென் என்ன உவந்தான்,
பைந்தொடி தாள்கள் பணிந்தான்.

விஞ்சையர் சொல்ல, மிகுந்த ஆண்மை மிக்க வீரன் வியப்படைந்தான். 'உய்ந்தேன்' என்று மகிழ்ந்தான்; பசிய வளையணிந்த பிராட்டியாரின் திருவடிகளில் பணிந்தான். வீரன் அனுமான். (62)

### பிராட்டி மகிழ அனுமன் மீளல்.

**1245.** பார்த்தனள் சானகி பாரா
வேர்த்தெரி மேனி குளிர்ந்தாள்
வர்ர்த்தையென் ? 'வந்தனை' யென்னாப்
போர்த்தொழின் மாருதி போனான்.

பார்த்தனள் சானகி, பாரா
வேர்த்து எரி மேனி குளிர்ந்தாள்;
'வார்த்தை என்?' 'வந்தனே' என்னுப்
போர்த் தொழில் மாருதி போனன்.

அனுமனுக்கு என்ன வாயிற்ருே என வியர்த்துக் கொதிக்கின்ற மேனியளான சானகி குளிர்ந்தாள். (சொல்ல வேண்டியது) எது வேனும் உளதோ என்னும் குறிப்பால்) வார்த்தை என்ன? என்ருள். போர் வீரனுகிய அனுமன் 'வணக்கம்' என்று சொல்லி (விடைகொண்டு) போனன். (63)

இச் செய்யுளின் பின், 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் கீழ்க் காணும் பாடல் காணப்படுகிறது.

1245 (க) வாலிதின் ஞான வலத்தால்
மாலுறு மைம்பகை மாய்த்தே
மேல்கதி மேவுறு மேலோர்
போல்வய மாருதி போனன்.

## அனுமன் செல்ல அழல் மறைதல்.

**1246.** தெள்ளிய மாருதி சென்ருன்
கள்ளவ ரக்கர்கள் கண்டால்
எள்ளலர் பற்றுவ ரென்னு
ஒள்ளெரி யோனு மொளித்தான்.

'தெள்ளிய மாருதி சென்ருன்
கள்ள அரக்கர்கள் கண்டால்
எள்ளலர் பற்றுவர்' என்னு
ஒள் எரியோனும் ஒளித்தான்.

'தெளிந்த ஞானமுடைய அனுமன் சென்றுவிட்டான். இனி, திருட்டுத்தனமுடைய அரக்கர்கள், என்னைக் கண்டால் எளிதாக விட்டுவிட மாட்டார்கள், பிடித்துக் கொள்ளுவார்கள்' என்று விளங்குகின்ற எரியோனும் மறைந்தான். எள்ளலர் என்பது இடம் நோக்கி, ஆற்றலால் எளிதாக விடார் என்னும் பொருள் பயந்தது. எரியோன் – அங்கியங் கடவுள். (64)

இலங்கை யெரியூட்டு படலம் முற்றிற்று.

## 14. திருவடி தொழுத படலம்.

திருவடி தொழுத படலம் என்பது இராமபிரானது திருவடிகளை அனுமன் தொழுத பகுதி என்றேனும், திருவடியான அனுமன் இராம பிரானைத் தொழுத பகுதி என்றேனும் பொருள்படும். பின்னதான பொருளில் திருவடி என்பது அனுமனுக்கு வழங்கும் வைஷ்ணவ சம்பிர தாயமான பெயர். திருமாலடியார்களுட் சிறந்தமைபற்றிப் 'பெரியதிருவடி' என்று கருடபகவானும், 'சிறிய திருவடி' என்று அனுமனும் வழங்கப் பெறுவர். இனி, 'திருவடி' என்பதற்கு ஸ்வாமி தலைவன் என்ற பொரு ளும் உண்டு. "திருவடியை நாரணனைக் கேசவனை" (திருவாய்மொழி 4. 9. 11.) என்பர். தங்கள் சுவாமியான இராமபிரானை வணங்கிய பகுதி எனினும் ஆம். இனி இப்படலத்தின் வரலாற்றுச் சுருக்கம் பின் வரு மாறு :—

இலங்கையை எரியூட்டி அழித்தபின் அசோகவனஞ் சென்று பிராட்டி யைவணங்கிப் பின் பெருமானிடம் திரும்பிச் செல்ல விரைந்த அனுமன், ஆங்குள்ள மலையொன்றன்மீது ஏறிநின்று எழும்பித் தாவி மைநாகபரு வதம் சென்று, அம்மலைக்கடவுட்கு நிகழ்ந்தசெய்திகளைக் கூறி, அக்கரையில் உள்ள மகேந்திரமலைக்குப் பாய்ந்து குதித்தான். அப்போது, அவன் வரவை எதிர்நோக்கிநின்ற வானரவீரரெல்லாம் பெரிதும் ஆரவாரித்து மகிழலாயினர். அவர்களது வரவேற்பையும் உபசாரங்களையும் பெற்ற மாருதி, இலங்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பலவற்றையும், அப்படைத் தலைவர்கள் அறியக் கூறி, அவர்களுடன் கூடி, இராமபிரானுக்கும் சுக்கிரீ வனுக்கும் அறிவிக்கவேண்டிக் கிட்கிந்தைக்கு விரைந்தனன். இடையில் அந்த நகரின் அருகில் அமைந்த மதுவனத்துள் அங்கதன் ஆணைப்படி அவ்விரரெல்லாம் புகுந்து, ஆங்குள்ள தேன்முழுமையும் பருகலானார்கள். அவ்வானரர்களின் உற்சாகமான சேட்டைகளால் அவ்வனமே சிதைவுற் றது. அது கண்ட வனங்காவலர்கள் தம் தலைவனான ததிமுகனுக்கு நிகழ்ந்தசெய்தியைக் கூற, அவன் சினந்துவந்து படைத்தலைவனான அங்க தனைத் தாக்க, அவனும், ததிமுகனையும் அவன் காவலர்களையும் நையப் புடைத்துக் குருதிவழியத் துரத்திவிட்டனன்.

இந்நிலையில் பிராட்டியைத் தேடிவருமாறு கிட்கிந்தையிலிருந்து வான ரத் தலைவர்களை ஏவிய சுக்கிரீவன், அவளது பிரிவாற்றாது வருந்திநின்ற பெருமானைப் பலவாறு தேற்றிக் கொண்டிருந்த சமயம், ததிமுகன் வந்து, வானரவிரர்கள் மதுவனத்துள் நுழைந்து, அங்குள்ள தேனையெல்லாம் பருகியதையும், தடுத்த தங்களைக் குருதிபெருகப் புடைத்து விரட்டிய

அங்கதன் செய்கைகளையும் கூறினன். அவற்றைக் கேட்ட சுக்கிரீவன், மேலும் விவரம் அறிந்து கொண்டு, 'இவையாவும் உவகைக் குறிகளே! வெற்றியோடு காரியம் முடித்துவந்தவர்களாவர் வீரர்கள்' என்று பெருமானிடம் கூறி, வந்த ததிமுகனுக்கும் ஆறுதல் சொல்லி, அங்கதனிடம் சரண்புகும்படி அத்தலைவனை அனுப்பிவிட்டனன். மதுவனத்திருந்தவானர வீரர்கள், பின் மாருதியை முன்னதாகச் சென்று அறிவிக்கும்படி, இராமபிரான் சுக்கிரீவர்களிடம் அனுப்பிவிட்டு, வெயிற்கொடுமை தணிந்ததும் தாங்களும் அவ்விடம் நோக்கிச் செல்லலானார்கள். இலங்கைசென்ற அனுமன், இனி எத்தகைய செய்திகொண்டு வருவனோ? என்ற கவலையில் ஆழ்ந்திருந்த பெருமான் திருமுன்பு, 'கண்டனன் கற்பினுக்கணியை' என்று கூறியபடியே வந்து தோன்றி, அப்பிரானது திருவடிகளில் வணங்கி நின்றான். பின்பு பிராட்டியின் அரிய பெரிய கற்பின் திறத்தையும் பொறுமையையும், அவள்பால் இராவணன் வந்து கூறிய செய்திகளையும் பிறவற்றையும் தெளிவும் விரிவும் பெறக் கூறிவிட்டுப் பிராட்டி துகிலில் முடிந்து வைத்திருந்த சூளாமணியை அடையாளமாகத் தன்னிடம் அளித்ததனைப் பெருமானிடம் சேர்ப்பித்தான் மாருதி. அவன் திருவாயினின்று யாவும் கேட்டும் சூளாமணியைப் பெற்றும் உள்ளம் பூரித்துப் பேருவகையில் மூழ்கியிருந்த பெருமான், மேலே நடத்தப்படவேண்டிய காரியத்தை விரைந்து செய்யும்படி ஏவி, வானரப்படையுடன் தென்திசை நோக்கிப் படர்ந்து பன்னிரண்டாநாள் தென்கடலைக் கண்டனன் என்பது கம்பர் பெருமான் கூறிய வரலாறு.

இவ்வரலாறு வான்மீகி முனிவர் கூறிய செய்திகளுடன் பொதுவான அமிசங்களில் வேறுபட்டனவல்ல. ததிமுகன்சரிதம், அம் முனிவர் கூறிய முறையே பெரும்பாலும் அமைந்துளது எனலாம். அனுமன் மற்ற வானரத் தலைவருடன் இராமபிரான் இருப்பிடம் சென்றதாக வான்மீகிபகவான் கூறுவர். கம்பரோ அவனை முற்பட வானரத்தலைவர்கள் அனுப்பிவிட்டனர் என்பர். அனுமன்வரவை எதிர்நோக்கிநின்ற பெருமானுக்கும் சுக்கிரீவனுக்கும் ஆறுதலை விரைந்தளிக்கக் கூடியதன்றோ அவன் வரவு.

மாருதி அங்கதன் முதலியோரைத் தம்பால் வரும்படி ததிமுகன் மூலம் சொல்லியனுப்பியதாக முனிவர் கூறியபடியின்றி, மாருதியை முன்னரே அனுப்பிவிட்டதாகக் கம்பர்பாடியது,இராம சுக்கிரீவர்களுடைய பெருநிலைமைகட்கு ஏற்றதெனலாம்.

இலங்கையில் பிராட்டிக்கும் தனக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷணைகள், வான்மீகத்தில் உள்ளபடி கம்பர்வாக்கில் இல்லாதுபோயினும், முதனூற்கருத்துக்களைப் பெரிதும் தழுவியே நம் கவியரசர் வேறுவகையில் கூறுகின்றார். பிராட்டி தன் பிராணனை விட எண்ணி மரத்தடியிலே நின்றபோது, ராமநாம உச்சாரணத்தோடு அவள் திருமுன்பு தோன்றினன்

அனுமன் என்பர் கம்பர். இராமசரிதத்தை ஆதிமுதல் அப்போதை நிகழ்ச்சிவரை கூறியவண்ணம் தோன்றினர் என்பர் முனிவர். இவ்வாறு பெரும்பாலும் ஒத்துச் சிறுபான்மை மாறுபட்ட இடங்கள் வேறுசிலவும் உள. எவ்வாருயினும், கம்பர்பெருமான் தாம் கூறப்புக்கவற்றைத் தம் மனேதருமப்படி பாடிச்செல்வதைப் படிக்கும் எவரும், அவர் வாக்கிலும் போக்கிலும் ஈடுபட்டு வியப்பும் உவப்பும் அடையாதிரார் என்றே சொல்லலாம்.

# 14. திருவடி தொழுத படலம்

## அனுமன் (அரிஷ்டமென்னும்) குன்றினின்று வான் வழி மீளுதல்

**1247.** நீங்குவென் விரைவி னென்னு
நினைவினன் மருங்கு நின்ற
தாங்கொரு குடுமிக் குன்றை
யருக்கனி லணைந்த வையன்
வீங்கின னுலகை யெல்லாம்
விழுங்கின னென்ன வீரன்
பூங்கழ றொழுது வாழ்த்தி
விசும்பிடைக் கடிது போனான்.

*'நீங்குவென் விரைவின்' என்னும் நினைவினன் மருங்கு நின்றது ஆங்கு ஒரு குடுமிக் குன்றை அருக்கனில் அணைந்த ஐயன், வீங்கினன் உலகை எல்லாம்; விழுங்கினன் என்ன, வீரன் பூங்கழல் தொழுது வாழ்த்தி விசும்பிடைக் கடிது போனான்.*

'விரைவின் நீங்குவென்' என்னும் நினைவினன், ஆங்கு மருங்கு நின்றது ஒரு குடுமிக் குன்றை அருக்கனில் அணைந்த ஐயன், உலகை எல்லாம் விழுங்கினன் என்ன வீங்கினன் ; வீரன் பூங்கழல் தொழுது வாழ்த்தி விசும்பிடைக் கடிது போனான் என முடிக்க. ஆங்கு – அவ்விலங்கையில். மருங்கு நின்றது- அருகில் இருந்தது. குடுமி – உச்சி. அருக்கனில் – கதிரவன்போல. உலகை எல்லாம் விழுங்கினன் – திருமால். வீங்கினன் – பேருருவம் கொண்டான். வீரன் - இராமன். விசும்பு - வானம். கடிது- விரைந்து. (1)

## வழியிடை மைந்நாகமலையிடம் உற்றதுணர்த்திய அனுமன் மகேந்திர வரையிற் குதித்தல்

**1248.** மைநாக மென்ன நின்ற
குன்றையு மரபி னெய்திக்
கைநாக மனையோ னுற்ற
துணர்த்தினன் கணத்தின் காலைப்

பைநாக நிகர்க்கும் வீரர்
தன்னெடும் வரவு பார்க்கும்
கொய்நாக நறுந்தேன் சிந்துங்
குன்றிடைக் குதியுங் கொண்டான்.

மைநாகம் என்ன நின்ற
குன்றையும் மரபின் எய்திக்
கை நாகம் அனையோன், உற்றது
உணர்த்தினன்; கணத்தின் காலைப்
பை நாகம் நிகர்க்கும் வீரர்
தன் நெடும் வரவு பார்க்கும்
கொய் நாகம் நறும் தேன் சிந்தும்
குன்றிடைக் குதியும் கொண்டான்.

கை நாகம் அனையோன், மைந்நாகம் என்ன நின்ற குன்றையும் மரபின் எய்தி உற்றது உணர்த்தினன்; கணத்தின் காலை, பை நாகம் நிகர்க்கும் வீரர், தன் நெடு வரவு பார்க்கும் கொய் நாகம் நறும் தேன் சிந்தும் குன்றிடைக் குதியும் கொண்டான். கை நாகம் அனையோன் – துதிக்கையையுடைய யானைபோன்ற அனுமன். மைநாகம் – ஒருமலை ; அனுமனிடம் அன்புடையது. மரபு – முன்பு வாக்களித்தவண்ணம். உற்றது – இலங்கையில் நிகழ்ந்தது. கணத்தின் காலை - கணம் என்னும் சிறிய கால வரையறைப் பொழுதுக்குள். பை நாகம் – படத்தையுடைய பாம்பு. நெடு வரவு – ஆவலுடன் எதிர்பார்க்கும் வரவு. கொய்-(மலர்)பறித்தற்கு உரிய. நாகம் – சுரபுன்னை மரம். குதியும் கொண்டான் - குதித்தான். (2)

### வானரவீரர் அனுமன் வரக்கண்டு மகிழ்தல்

**1249.** போய்வருங் கரும முற்றிற்
றென்பதோர் பொம்மல் பொங்க
வாய்வெரீஇ நின்ற வென்றி
வானர வீரர் மன்னோ
பாய்வரு நீளத் தாங்க
ணிருந்தனர் பறவைப் பார்ப்புத்
தாய்வரக் கண்ட தன்ன
வுவகையிற் றளிர்த்தா ரம்மா.

போய் வரும் கருமம் முற்றிற்று என்பது ஓர் பொம்மல் பொங்க,
வாய் வெரீஇ நின்ற வென்றி வானர வீரர், மன் ஓ
பாய்வரு நீளத்து ஆங்கண் இருந்தனர்; பறவைப் பார்ப்பு
தாய் வரக் கண்டது அன்ன உவகையின், தளிர்த்தார் அம்மா.

வாய்வெரீஇ நின்ற வென்றி வானர வீரர், 'போய்வரும் கருமம் முற்றிற்று' என்பது ஓர் பொம்மல் பொங்க, பாய்வரும் நீளத்து ஆங்கண் இருந்தனர்; பறவைப் பார்ப்பு தாய்வரக் கண்டதன்ன உவகையில் தளிர்த்தார். வாய்வெரீஇ - வாய் குழறி. பொம்மல் - மகிழ்ச்சி. பாய்வரு - அனுமன் பாய்ந்து வருகிற. நீளத்து ஆங்கண் - நீண்ட வழியில். பார்ப்பு - குஞ்சு. தளிர்த்தார் - மகிழ்ச்சியால் செழித்தார். (3)

## அனுமன் வரவால் வானரவீரர்பால் நிகழ்ந்த செயல்கள்

**1250.** அழுதனர் சிலவர் முன்னின்
றார்த்தனர் சிலவ ரண்மித்
தொழுதனர் சிலவ ராடித்
துள்ளினர் சிலவ ரள்ளி
முழுதுற விழுங்கு வார்போன்
மொய்த்தனர் சிலவர் முற்றும்
தழுவினர் சிலவர் கொண்டு
சுமந்தனர் சிலவர் தாங்கி.

அழுதனர் சில்வர், முன் நின்று ஆர்த்தனர் சிலவர், அண்மித்
தொழுதனர் சிலவர், ஆடித் துள்ளினர் சிலவர், அள்ளி
முழுது உற விழுங்குவார் போல் மொய்த்தனர் சிலவர், முற்றும்
தழுவினர் சிலவர், கொண்டு சுமந்தனர் சிலவர், தாங்கி.

(அனுமனைக் கண்டவுடன் அங்கிருந்த வானரர்களில்) சிலர் (மகிழ்ச்சியால்) அழுதார்கள்; சிலர் (அவன்) எதிரில் நின்று ஆரவாரித்தார்கள்; சிலர் நெருங்கி வந்து வணங்கினர்கள்; சிலர் கூத்தாடிக் குதித்தார்கள்; சிலர் அள்ளி விழுங்குவார் போலச் சூழ்ந்துகொண்டார்கள்; சிலர் (உடல்) முற்றும் தழுவிக் கொண்டார்கள்; சிலர், தூக்கிக்கொண்டு சுமந்தார்கள். இங்கு மேற்கொண்ட செயலை நிறைவேற்றி மீளும் நண்பரை, நண்பர்கள் வரவேற்கும் முறை இயற்கையை யொட்டியே கூறப்பட்டுள்ளது. (4)

### வானரர் அனுமனை உபசரித்தல்

**1251.** தேனொடு கிழங்குங் காயு
நறியன வரிதிற் றேடி
மேன்முறை வைத்தோ மண்ண
னுகர்ந்தனை மெலிவு தீர்தி
மானவாண் முகமே யெங்கட்
குரைத்தது மாற்ற மென்று
தானுகர் சாக மெல்லா
முற்றமுறை சிலவர் தந்தார்.

*தேனொடு கிழங்கும் காயும் நறியன, அரிதின் தேடி*
*மேல்முறை வைத்தோம்; அண்ணல்! நுகர்ந்தனை, மெலிவு தீர்தி;*
*மான வாள் முகமே எங்கட்கு உரைத்தது, மாற்றம்; என்று,*
*தான் நுகர் சாகம் எல்லாம் முறைமுறை சிலவர் தந்தார்.*

சிலவர், "அண்ணல்! மானம் வாள் முகமே மாற்றம் எங்கட்கு உரைத்தது; தேனொடு, கிழங்கும், காயும், நறியன அரிதின் தேடி மேல் முறை வைத்தோம்; நுகர்ந்தனை, மெலிவு தீர்தி" என்று தான் நுகர் சாகம் எல்லாம் முறை முறை தந்தார். மானம் – பெருமை. வாள் - ஒளி. மாற்றம்- (பிராட்டியைக் கண்ட) செய்தி. நறியன – நல்லன; மணமிக்கன. மேல் - முன்னமே. முறை - ஒழுங்காக. நுகர்ந்தனை - உண்டு. மெலிவு தீர்தி – இளைப்பாறுவாயாக. தான் நுகர் - அனுமன் விரும்பிப் புசிக்கும். சாகம் – இலையுணவு. (5)

### அனுமனுடலில் உள்ள புண்களைக்கண்டு வானரர் வருந்துதல்

**1252.** தாள்களின் மார்பிற் றோளிற்
றலைகளிற் றடக்கை தம்மில்
வாள்களில் வேலில் வாளி
மழைகளின் வகிர்ந்த புண்கள்
நாள்கண்மே லுலகிற் சென்ற
வெண்ணன நம்பி தன்னை
ஊழ்கொள நோக்கி நோக்கி
யுயிருக வுளைந்து யிர்த்தார்.

தாள்களில் மார்பில் தோளில் தலைகளில் தடக்கை தம்மில்
வாள்களில் வேலில் வாளிமழைகளின் வகிர்ந்த புண்கள்,
நாள்கள்மேல் உலகில் சென்ற எண்ணன, நம்பி தன்னை
ஊழ் கொள நோக்கி நோக்கி, உயிர் உக உளைந்து உயிர்த்தார்.

(வானரவீரர்கள்) அனுமனை உற்றுப் பார்த்து, கால்களிலும், மார்பிலும், தோளிலும் தலையில் பல விடங்களிலும், பெரிய கைகளிலும், வாள்களாலும், வேல்களாலும், மழையாகப் பொழிந்த அம்புகளாலும் பிளவு செய்யப்பட்ட, உலகத்தில் சென்ற நாள்களை எண்ணினாலும் எண்ணலாகும் இவைகளை எண்ண வியலாது என்று சொல்லக்கூடிய அளவுக்குமிறிய புண்களைப் பார்த்து உயிர் வெளியிற் செல்லும்படி வருந்திப் பெருமூச்சுவிட்டார்கள். எண்ணன - எண்ணிக்கையை யுடையன. ஊழ்கொள - முறையாக. உளைந்து - வருந்தி- உயிர்த்தார் - பெருமூச்சு விட்டார். (6)

### அனுமன் அங்கதன் முதலியோரை வணங்கி, அவரிடம் பிராட்டி கூறிய ஆசியையும் தெரிவித்தல்

**1253.** வாலிகா தலனை முந்தி
வணங்கின னெண்கின் மன்னைக்
காலுற வணங்கிப் பின்னைக்
கடன்முறை கடவோர்க் கெல்லாம்
ஏலுற வியற்றி யாங்க
ணிருந்தவ னெதிர்ந்தோர்க் கெல்லாம்
ஞாலநா யகன்றன் றேவி
சொல்லின னன்மை யென்றான்.

வாலி காதலனை முந்தி வணங்கினன்; எண்கின் மன்னைக்
கால் உற வணங்கிப் பின்னைக் கடன் முறை கடவோர்க்கு எல்லாம்
ஏலுற இயற்றி, ஆங்கண் இருந்தவன், எதிர்ந்தோர்க்கு எல்லாம்,
ஞால நாயகன் தன் தேவி, சொல்லினள் நன்மை என்றான்.

முந்தி, வாலி காதலனை வணங்கினன்; எண்கின் மன்னைக் காலுற வணங்கிக் கடவோர்க்கு எல்லாம் கடன்முறை ஏலுற இயற்றி, பின்னை ஆங்கண் இருந்தவன், எதிர்ந்தோர்க்கு எல்லாம் "ஞாலநாயகன் தன் தேவி நன்மை சொல்லினள்" என்றான். முந்தி - முதலில். வாலி காதலன் - அங்கதன். எண்கு - கரடி. எண்கின் மன் - சாம்பவான். கடவோர் - வணக்கம் செய்வதற்கு உரியோர். கடன் முறை - முறைப்படி செய்யத்

தருவன. ஏலுற - ஏற்றபடி. ஆங்கண் - அந்த இடத்தில். எதிர்ந்தோர் - கண்முன்பட்டவர்கள். ஞாலநாயகன் – இராமபிரான். நன்மை – ஆசிமொழி. (7)

### சென்றதுமுதல் திரும்பியதுவரை நிகழ்ந்தவற்றைச் சொல்லும்படி அனுமனிடம் வானரவீரர் வேண்டல்

**1254.** என்றலுங் கரங்கள் கூப்பி
யெழுந்தன ரிறைஞ்சித் தாழ்ந்து
நின்றன ருவகை பொங்க
விம்மலர் நிமிர்ந்த நெஞ்சர்
சென்றது முதலா வந்த
திறுதியாச் செப்பற் பாலை
வன்றிற லுரவோ யென்னச்
சொல்லுவான் மருத்து மைந்தன்.

என்றலும் கரங்கள் கூப்பி எழுந்தனர்; இறைஞ்சித் தாழ்ந்து
நின்றனர், உவகை பொங்க விம்மலர் நிமிர்ந்த நெஞ்சர்,
'சென்றது முதலா வந்தது இறுதியாச் செப்பற்பாலை
வன் திறல் உரவோய்!' என்னச் சொல்லுவான் மருத்து மைந்தன்.

(பிராட்டியார் ஆசிமொழி கூறினர்) என்று சொல்லியவுடன் கைகளை உச்சிமேல் கூப்பி எழுந்தார்கள்; தாழ்ந்து வணங்கி நின்றார்கள்; மகிழ்ச்சி பொங்கிப் பெருமிதமுடையவர்களாய் (வீரத்தால்) நிமிர்ந்த நெஞ்சுடன் "வலிமையும், திறமையும், உறுதியும் உடையவனே! நீ சென்றது முதல் வந்தது வரையில் (நிகழ்ந்தவைகளைச்) சொல்லுவாயாக" என்று கேட்கக் காற்றின் மகன் (அனுமான் பின்வருமாறு) சொல்லுவான். (8)

### அனுமன், பிராட்டியின் தவமும் அவள்பக்கல் அடையாளம் பெற்றமையும் கூறித் தன் வென்றி கூறாது விடுத்தல்

**1255.** ஆண்டகை தேவி யுள்ளத்
தருந்தவ மமையச் சொல்லிப்
பூண்டபே ரடையா ளங்கைக்
கொண்டதும் புகன்று போரில்

நீண்டவா ளரக்க ரோடு
நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் ருன்றன்
வென்றியை யுரைப்ப வெள்கி.

ஆண் தகை தேவி உள்ளத்து அரும் தவம் அமையச் சொல்லிப்
பூண்ட பேர் அடையாளம் கைக்கொண்டதும் புகன்று, போரில்
நீண்ட வாள் அரக்கரோடு நிகழ்ந்ததும், நெருப்புச் சிந்தி
மீண்டதும், விளம்பான்; தான் தன்வென்றியை உரைப்ப வெள்கி.

ஆண்மைக் குணங்கள் மிக்க இராமபிரானுடையதேவியாரது உள்ளத்திலுள்ள அரிய தவமாகிய கற்பொழுக்கத்தைச் செவ்வையாகச் சொல்லி, (பிராட்டியார்) அணிந்திருந்த (சூளாமணியாகிய) சிறந்த அடையாளத்தைக் கையில் பெற்றுவந்ததையும் சொல்லி, தன்னுடைய வெற்றியைத் தான் உரைப்பதற்கு நாணமுற்றவனாய் நீண்ட வாட்படைகளை யுடைய அரக்கரோடு நிகழ்ந்ததையும், (இலங்கையில்) தியை வைத்துவிட்டு மீண்டதையும் சொல்லாமல் விட்டுவிட்டான். (9)

**அனுமன் கூறுதவற்றையும் குறிப்பால் உணர்ந்த வானர வீரர் மேற்செய்ய வேண்டியதை அனுமனிடம் வினவுதல்**

**1256.** பொருதமை புண்ணே சொல்ல
வென்றமை போந்த தன்மை
உரைசெய வூர்தீ யிட்ட
தோங்கிரும் புகையே யோதக்
கருதலர் பெருமை தேவி
மீண்டிலாச் செயலே காட்டத்
தெரிதர வுணர்ந்தார் பின்ன
ரென்னினிச் செய்து மென்ருர்.

பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த தன்மை
உரை செய, ஊர் தீ இட்டது ஓங்கு இரும் புகையே ஓத,
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்ட,
தெரிதர உணர்ந்தார்; பின்னர் என் இனிச் செய்தும் என்ருர்.

(அனுமன் இலங்கையில் அரக்கரோடு) போர்செய்தமை (அவன் மேலுள்ள) புண்களே சொல்லவும், (முடிவில்) வெற்றி கொண்டமை

(அனுமன் திரும்பி) வந்த செயலே உரைக்கவும், ஊரில் தீ வைத்த செய்தி ஓங்கி எழுந்த புகையே ஓதவும், பகைவர்களது ஆற்றலைப் பிராட்டியார் மீண்டுவராச் செயலே காட்டவும் விளக்கமாக உணர்ந்த வானர வீரர்கள் ‘இனி என்ன செய்யவேண்டும்’’ என்று கேட்டார்கள். (10)

### அனுமன் விடையும் வானரர் புறப்படுதலும்

**1257.** யாவது மினிவே றெண்ண
வேண்டுவ திறையு மில்லை
சேவகன் றேவி தன்னைக்
கண்டது விரைவிற் செப்பி
ஆவதவ் வண்ண லுள்ளத்
தருந்துய ராற்ற லேயாம்
போவது புலமை யென்னுப்
பொருக்கென வெழுந்து போனுர்.

யாவதும் இனி வேறு எண்ண வேண்டுவது, இறையும் இல்லை;
சேவகன் தேவி தன்னைக் கண்டது விரைவின் செப்பி,
ஆவது அவ் அண்ணல் உள்ளத்து அரும் துயர் ஆற்றலே ஆம்;
போவது புலமை என்னுப் பொருக்கென எழுந்து போனுர்.

(அனுமன்) ‘‘இனி, யாவதும் வேறு எண்ண வேண்டுவது இறையும் இல்லை; சேவகன் தேவி தன்னைக் கண்டமை விரைவில் செப்பி, அவ் அண்ணல் உள்ளத்து அரும் துயர் ஆற்றலேயாம்; போவது புலமை’’ என்னுப் பொருக்கென எழுந்துபோனுர். இறையும் – சிறிதும். புலமை— அறிவுடைய செயல். பொருக்கென – விரைவாக. (11)

### வானரவீரர் மதுவனம் அடைதல்

**1258.** போயினர் களிப்பி னேடும்
புங்கவன் சிலையி னின்றும்
ஏயின பகழி யென்ன
வெழுந்துவிண் படர்ந்து தாவிக்
காய்கதிர்க் கடவுள் வானத்
துச்சிசென் றிறக்குங் காலத்
தாயன வீர ரும்போய்
மதுவன மதிலி றுத்தார்.

போயினர், களிப்பினேடும் புங்கவன் சிலையின் நின்றும்
ஏயின பகழி என்ன, எழுந்து விண்படர்ந்து தாவிக்
காய் கதிர்க் கடவுள் வானத்து உச்சி சென்று இறுக்கும் காலத்து
ஆயின வீரரும், போய் மதுவனம் அதில் இறுத்தார்.

ஆயன விரரும், களிப்பினேடும், புங்கவன் சிலையினின்றும் ஏயின பகழி என்ன, எழுந்து விண் படர்ந்து தாவிப் போயினர்; காய் கதிர்க் கடவுள், வானத்து உச்சி சென்று இறுக்கும் காலத்து, மதுவனம் அதில் போய் இறுத்தார். ஆயன - களைத்த; மெலிந்த. புங்கவன்......பகழி - தூயோனுகிய இராமபிரான் வில்லிலிருந்து விடப்பெற்ற அம்பு. இது விரரது விரைந்த செலவுக்கு உவமை. காய் கதிர்க் கடவுள் - சுடுகின்ற கதிர்களையுடைய தெய்வம்; ஞாயிறு. இறுத்தல் - தங்குதல். *(12)*

### வானரர் உணவுவேண்ட அனுமன் முதலியோர் அங்கதனை யடைதல்

**1259.** ஏதநா ளிறந்த சால
வென்பதோர் வருத்த நெஞ்சத்
தாதலா லுணவு தேய்ந்து
வருந்தின மளிய மெம்மைச்
சாதறிர்த் தளித்த வீர
தந்தரு ளுணவு மென்னப்
போதுநாம் வாலி சேய்பா
லென்றுட னெழுந்து போனார்.

'ஏத நாள் இறந்த சால, என்பது ஓர் வருத்தம் நெஞ்சத்து, ஆதலால், உணவு தேய்ந்து வருந்தினம், அளியம் எம்மைச் சாதல் நிர்த்து அளித்த விர! தந்தருள், உணவும்' என்னப் 'போதும் நாம் வாலி சேய்பால்' என்று உடன் எழுந்து போனார்.

'எம்மைச் சாதல் நிர்த்த அளித்தவிர! நாள் சால இறந்த ஏதம் என்பது ஓர் வருத்தம் நெஞ்சத்து, ஆதலால் உணவு தேய்ந்து வருந்தினம்; அளியம்; உணவும் தந்தருள் என்ன 'நாம் வாலிசேய்பால் போதும்' என்று (கூறியவுடன்) எழுந்து போனார் என இயைக்க. பிராட்டியைக் காணுவிடின் வானரவிரர் எல்லாம் உயிர் துறக்கவேண்டியவர்களே யாவார்

களாகலின், பிராட்டியைக் கண்டுவந்த அநுமனைத் தாங்கள் சாதலைத் தடுத்த வீரன் எனக் கூறினர். நாள் சால இறந்த ஏதம் - சுக்கிரீவனால் தவணை வைக்கப்பட்ட நாள் மிகவும் கடந்து போயிற்று என்பதனால் உண்டாகிய குற்றம். தேய்ந்து - குறைந்து. அளியம் - உன்னால் கருணை செய்யத் தக்கவர்களாகிய யாம். வாலிசேய் - அங்கதன். (13)

### வானரத்தலைவர், அங்கதன்பால் வானரப்படைக்கு மதுவளிக்குமாறு வேண்டல்

**1260.** அங்கதன் றன்னை யண்மி
யனுமனு மிருகை கூப்பிக்
கொங்குதங் கலங்கன் மார்ப
நின்னுடைக் குரக்குச் சேனை
வெங்கத மொழிந்து சால
வருந்தின வேடை யோடி
இங்கிதற் களித்தல் வேண்டு
மிருலுமிழ் பிரச மென்றான்.

*அங்கதன் தன்னை அண்மி,*
*அனுமனும் இருகை கூப்பிக்*
*'கொங்கு தங்கு அலங்கல் மார்ப!*
*நின்னுடைக் குரக்குச் சேனை,*
*வெம் கதம் ஒழிந்து சால*
*வருந்தின, வேடை ஓடி,*
*இங்கு இதற்கு அளித்தல் வேண்டும்*
*இருல் உமிழ் பிரசம்' என்றான்.*

அனுமனும், அங்கதனிடம் அருகில் சென்று, இரு கைகளையும் கூப்பி, "நறுமணமிக்க மாலையை அணிந்த மார்பனே! உன்னுடைய குரங்குப் படை, நீர் வேட்கை மிகுந்து விரைந்த ஓட்டம் ஒய்ந்து மிகவும் துயருற்றது. இப்பொழுது இந்தப் படைக்கு, கூட்டிலிருந்து வழிகின்ற தேனைக் கொடுத்தருளவேண்டும் என்றான்; என்பது பொருள். அண்மி - அருகில் சென்று. கொங்கு - மணம். அலங்கல் - மாலை. வெம் - சுறுசுறுப்பான. கதம் - ஓட்டம். வேடை - நீர்வேட்கை. இருல் - தேன்கூடு. பிரசம் - தேன். (14)

### அங்கதன் இசைந்தமையால் வானரர் மதுவுண்டு மகிழ்தல் 1261, 1262

**1261.** நன்றென வவனு நேர்ந்தா
னரலையு நடுங்க வார்த்துச்
சென்றுறு பிரசந் தூங்குஞ்
செழுவன மதனி னூடே
ஒன்றின்மு னொன்று பாயு
மொடிக்குமென் பிரச மெல்லாம்
தின்றுதின் றுவகை கூருந்
தேனுக ரளியின் மொய்த்தே.

*நன்று என அவனும் நேர்ந்தான்;*
*நரலையும் நடுங்க ஆர்த்துச்*
*சென்று, உறு பிரசம் தூங்கும்*
*செழு வனம் அதனின் ஊடே*
*ஒன்றின் முன் ஒன்று பாயும்,*
*ஒடிக்கும் மென் பிரசம் எல்லாம்*
*தின்று தின்று உவகை கூரும்,*
*தேன் நுகர் அளியின் மொய்த்து ஏ.*

அவனும் (அங்கதனும்) ‘நன்று’ என நேர்ந்தான்; (உடனே குரங்குப்படை) கடலும் நடுங்கும்படி ஆரவாரம்செய்து, மிக்க தேனிருல் தொங்கியசையும் செழிப்பான சோலையினுள்ளேபோய் ஒரு குரங்குக்கு முன் ஒரு குரங்கு தாவும், (கிளைகளை) ஒடிக்கும், தேனைக் குடிக்கின்ற வண்டுகள்போல் ஒன்றுகூடி நெருங்கி, இனிமையான தேன் முழுவதையும் குடித்துக் குடித்துக் களிப்புமிகும் என்பது பொருள். தின்று – குடித்து. நரலை – ஒலிக்கும் கடல். *(15)*

**1262.** ஒருவர்வாய்க் கொள்ளுந் தேனை
யொருவருண் டெளிதிற் போவார்
ஒருவர்கைக் கொள்ளுந் தேனை
யொருவர்கொண் டோடிப் போவார்
ஒருவரோ டொருவ ரொன்றத்
தழுவுவர் விழுவ ரோடி
ஒருவர்மே லொருவ ரேறி
யோகையென் றுவகை கூர்வார்.

ஒருவர் வாய்க்கொள்ளும் தேனை ஒருவர் உண்டு எளிதில் போவார்;
ஒருவர் கைக் கொள்ளும் தேனை ஒருவர் கொண்டு ஓடிப் போவார்;
ஒருவரோடு ஒருவர் ஒன்றத் தழுவுவர், விழுவர், ஓடி
ஒருவர் மேல் ஒருவர் ஏறி, 'ஓகை' என்று உவகைகூர்வார்.

ஒரு குரங்கு வாயில் உட்கொள்ளப்போகும் தேனை ஒரு குரங்கு எளிதில் பறித்து உண்ணும்; ஒரு குரங்கு கையில் வைத்திருக்கும் தேனை ஒரு குரங்கு பறித்துக்கொண்டு ஓடும்; ஒரு குரங்கை மற்றொரு குரங்கு இறுகப் பிடித்துத் தழுவும்; தழுவிய வண்ணமே ஓடி விழும்; ஒன்றின் மேல் ஒன்று ஏறிக்கொண்டு ஓகை என்று சொல்லிக்கொண்டு மகிழ்ச்சி கூரும். ஓகை - உவகை; களிப்பில் ஆரவாரம் செய்யும் ஒலி. *(16)*

## மதுவனங் காவலர் வானரவீரரை அச்சுறுத்தி வெருட்ட முயலுதல்

**1263.** இன்னன நிகழுங் காலை
யெரிவிழித் தெழுந்து சீறி
அங்நெடுஞ் சோலை காக்கும்
வானர ரவரை நோக்கி
மன்னெடுங் கதிரோன் மைந்த
னாணையை மறுத்து நீவிர்
என்னினைந் தென்ன செய்தீர்
நும்முயிர்க் கிறுதி யென்ன.

இன்னன நிகழும் காலை, எரிவிழித்து, எழுந்து சீறி,
அம் நெடும் சோலை காக்கும் வானரர், அவரை, நோக்கி,
'மன் நெடும் கதிரோன் மைந்தன் ஆணையை மறுத்து, நீவிர்
என் நினைந்து என்ன செய்தீர்? நும் உயிர்க்கு இறுதி' என்ன.

இன்னன நிகழும் காலை, அம்நெடும் சோலை காக்கும் வானரர், எரி விழித்து எழுந்து சீறி, அவரை நோக்கி, "நீவிர் மன் நெடும் கதிரோன் மைந்தன் ஆணையை மறுத்து, என் நினைந்து என்ன செய்தீர்? நும் உயிர்க்கு இறுதி" என்ன; என இயைக்க. இன்னன – இத்தகைய செயல்கள். எரி விழித்து – நெருப்புப்போல் விழித்து. சீறி - சினங் கொண்டு. மன் நெடும் கதிர் – நிலைத்த நீண்ட கதிர். கதிரோன் மைந்தன் – சுக்கிரீவன். நும் உயிர்க்கு இறுதி - நீவிர் செய்யும் செயல் உமக்கு உயிர்க்கு இறுதியாக முடியும். *(17)*

### காவலர் மதுவனம் அழிந்தமை ததிமுகற்கியம்புதல் 1264, 1265

**1264.** முனியுமா லெம்மை யெங்கோ
னென்றவர் மொழிந்து போந்து
கனியுமா மதுவ னத்தைக்
கட்டழித் திட்ட தின்று
நனிதரு கவியின் றானை
நண்ணலார் செய்கை நாண
இனியெமாற் செயலின் றென்னத்
ததிமுகற் கியம்பி னாரே.

'முனியும் ஆல் எம்மை எம் கோன்'
என்று அவர், மொழிந்து போந்து,
'கனியும் மா மது வனத்தைக்
கட்டு அழித்திட்டது; இன்று
நனி தரு கவியின் தானை,
நண்ணலார் செய்கை நாண;
இனி எமால் செயல் இன்று;' என்னத்
ததிமுகற்கு இயம்பினார் ஏ.

அவர், "எம் கோன், எம்மை முனியும்" என்று(ம்) மொழிந்து போந்து "இன்று நனிதரு கவியின்தானை, கனியும் மா மதுவனத்தை, நண்ணலார்செய்கை நாண, கட்டழித்திட்டது; இனி, எம்மால் செயல் இன்று" என்று, ததிமுகற்கு இயம்பினார் என இயைக்க. முனியும் - வெகுண்டு ஒறுக்கும். கட்டழித்தல் - காவலழித்தல். நனிதரு – மிகுதியான. கவியின்தானை - குரங்குப் படை. நண்ணலார் செய்கை நாண – பகைவர்செயலும் நாணும்படி; பகைவர் போரில் செய்யும் அழிவும் இந்த அழிவைக் கண்டு நாணத்தக்க பேரழிவு என்றபடி. ததிமுகன் – அந்த தேன்முதிர்சோலையைக் காவல் செய்யும் குரங்குக் கூட்டத்தின் தலைவன். *(18)*

**1265.** கேட்டவன் யாவ ரேயம்
மதுவனங் கேடு சூழ்ந்தார்
காட்டிரென் றெழுந்தா னன்னார்
வாலிசேய் முதல கற்றோர்

ஈட்டம்வந் திறுத்த தாக
வங்கத னேவ றன்னால்
மாட்டின கவியின் றானே
மதுவள ருலவை யீட்டம்.

*கேட்டவன் 'யாவர் ஏ அம் மதுவனம் கேடு சூழ்ந்தார் ? காட்டிர்' என்று எழுந்தான்; அன்னார், 'வாலிசேய் முதல கற்றோர் ஈட்டம் வந்து இறுத்தது ஆக, அங்கதன் ஏவல் தன்னால், மாட்டின கவியின் தானே; மதுவளர் உலவை ஈட்டம்.'*

கேட்டவன், "அம் மதுவனம் கேடுசூழ்ந்தார் யாவரே? காட்டிர்" என்று எழுந்தான்; அன்னார் "வாலிசேய் முதல, கற்றோர் ஈட்டம் வந்து இறுத்தது ஆக, கவியின்தானே, அங்கதன் ஏவல் தன்னால், மதுவளர் உலவை ஈட்டம் மாட்டின".

கேட்டவன்-கேட்ட ததிமுகன். அன்னார் - காவல் குரங்குகள். கற்றோர் ஈட்டம்-அனுமன் முதலியோரைக் குறித்ததாகவோ இகழ்ச்சியாகக் கூறியதாகவோ கொள்ளலாம். கற்றவராயினும் கட்டுப்பாட்டுக் கடங்காதவர் என்று கொள்ளினும் ஆம். இறுத்தது - தங்கியது. ஏவல் - கட்டளை. உலவை - மரச்செறிவு; பசுந்தழை நிறைந்த கிளை. ஈட்டம் - கூட்டம். மாட்டின - ஒடித்தன. (19)

### காவலர் சொற்கேட்ட ததிமுகன் மதுவனத்துள் புக, வானரர் அங்கதனிடம் சரண்புகுதல் 1266, 1267

**1266.** உரங்கிளர் மதுகை யான்ற
ளணையா லுறுதி கொண்டே
குரங்கினந் தம்மை யெல்லாம்
விலக்கினங் கொடுமை கூறிக்
கரங்களா லெற்ற நொந்தேங்
காவலோ யென்ன லோடும்
தரங்கிளர் தாதை பட்ட
தறிந்திலன் றனயன் போலும்,

*'உரம் கிளர் மதுகையான் தன் ஆணையால், உறுதி கொண்டே, குரங்கினம் தம்மையெல்லாம் விலக்கினம்; கொடுமை கூறிக் கரங்களால் எற்ற நொந்தேம்; காவலோய்! என்னலோடும் தரம் கிளர் தாதை பட்டது அறிந்திலன் தனயன் போலும்.'*

"காவலோய்! உரம் கிளர் மதுகையான் தன் ஆணையால், உறுதி கொண்டு, குரங்கு இனம் தம்மையெல்லாம் விலக்கினம்; கொடுமைகூறி, கரங்களால் எற்ற நொந்தேம்" என்னலோடும், "தனயன், தரம் கிளர் தாதை பட்டது அறிந்திலன்போலும்."

உரம் கிளர் மதுகையான் – வலிமை மிகுந்த ஆற்றலுடையவன்; சுக்கிரீவன். கொடுமை – கொடிய சொற்கள். கரங்கள் – கைகள். எற்றல் – அடித்தல். தனயன் – மகன் (அங்கதன்). தரம் கிளர் தாதை - வலிமை மிக்க தகப்பன் (வாலி). (20)

**1267.** எனவுரைத் தனலிற் பொங்கி
யெழுந்திரைத் திரண்டு கோடி
கனைகழற் கவியின் சேனை
கல்லெனக் கலந்து புல்லப்
புனைமதுச் சோலை புக்கான்
மதுநுகர் புனிதச் சேனை
அனகனை வாழ்த்தி யோடி
யங்கத னடியில் வீழ்ந்த.

என உரைத்து, அனலின் பொங்கி,
எழுந்து இரைத்து, இரண்டு கோடி
கனை கழல் கவியின் சேனை,
கல் எனக் கலந்து புல்ல,
புனை மதுச்சோலை புக்கான்,
மதுநுகர் புனிதச் சேனை,
அனகனை வாழ்த்தி, ஓடி
அங்கதன் அடியில் வீழ்ந்த.

என உரைத்து, (ததிமுகன்) அனலில் பொங்கி, எழுந்து, இரைத்து, இரண்டு கோடி கனை கழல் கவியின் சேனை, கல் எனக் கலந்து புல்ல, புனை மதுச்சோலை புக்கான். மதுநுகர் புனிதச் சேனை, அனகனை வாழ்த்தி, ஓடி, அங்கதன் அடியின் விழ்ந்த: என இயைத்துப் பொருள் காண்க.

அனலில் பொங்கி - எரிபோல் சீறி. நுகர் – உண்ணும். புனித – தூய்மையான; பிராட்டியைத் தேடும் நற்செயலில் ஈடுபட்டமையின் தூய்மையாயின. அனகன் - குற்றமற்றவன் (இராமன்). (21)

### ததிமுகன் அங்கதன்பாற் சினந்து கூறுதல்

**1268.** இந்திரன் வாலிக் கீந்த
வின்சுவை மதுவின் கானம்
அந்தரத் தவர்க்கு நோக்கற்
கரியவென் னாணை தன்னைச்
சிந்தினை கதிரோன் மைந்தன்
றிறலினை யறிதி யன்றே
மந்தர மனைய தோளா
யிற்றதுன் வாழ்க்கை யின்றே.

*இந்திரன் வாலிக்கு ஈந்த இன்சுவை மதுவின் கானம், அந்தரத்தவர்க்கும் நோக்கற்கு அரிய என் ஆணை தன்னைச் சிந்தினை; கதிரோன் மைந்தன் திறலினை அறிதி அன்றே? மந்தரம் அனைய தோளாய்! இற்றது உன் வாழ்க்கை இன்றே.*

### ததிமுகனும் அங்கதனும் பொருதல்

**1269.** மதுவனந் தன்னை யின்னே
மாட்டுவித் தனைநீ யென்னக்
கதுமென வாலி சேய்மே
லெறிந்தனன் கருங்கற் பாறை
அதுதனைப் புறங்கை யாலே
யகற்றியங் கதனுஞ் சீறித்
ததிமுகன் றன்னைப் பற்றிக்
குத்தினன் றடக்கை தன்னால்.

*‘மதுவனம் தன்னை இன்னே மாட்டுவித்தனை நீ’ என்னக் கதும் என வாலிசேய் மேல் எறிந்தனன் கரும் கல் பாறை அதுதனைப் புறங்கையாலே அகற்றி அங்கதனும் சீறித் ததிமுகன் தன்னைப் பற்றிக் குத்தினன் தடக்கை தன்னால்.*

*1268, 1269 ஆகிய இரண்டு செய்யுளும் ஒரு தொடர்.*

“மந்தரம் அனைய தோளாய்! இந்திரன் வாலிக்கு ஈந்த இன்சுவை மதுவின் கானம், (இதனை) அந்தரத்தவர்க்கு நோக்கற்கு அரிய (காவலை யுடைய) என் ஆணை தன்னைச் சிந்தினை; மதுவனம் தன்னை இன்னே மாட்டுவித்தனை; நீ கதிரோன் மைந்தன் திறலினை அறிதியன்றே? உன்

வாழ்க்கை இற்றது" என்று (ததிமுகன்) வாலிசேய்மேல் கருங்கற்பாறை கதும் என எறிந்தனன்; அங்கதனும், அதுதனைப் புறங்கையாலே அகற்றி, சிறி, தடக்கை தன்னால் ததிமுகன் தன்னைப் பற்றிக் குத்தினன் என இயைத்துப் பொருள்காண்க. மந்தரம் - ஒருமலை. கானம் - காடு. அந்தரத்தவர் - வானவழியிலே போக்குவரவு உடையவர்கள். சிந்தினை - கெடுத்தாய். கதும் என - விரைவாக. சிறி - சீற்றம் கொண்டு.

(22, 23)

இதன் பின் 10, 16, 27, 35, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் கீழ்க்காணும் இரு பாடல்கள் காணப்படுகின்றன.

1269 (a) குத்தின னென்ன லோடுங் குலைந்திடு மெய்ய னாகி
மற்றொரு குன்றந் தன்னை வாங்கினன் மதுவ னத்தைச்
செற்றனன் மேலே யேவிச் சிரித்தனன் றதிமு கன்றான்
இற்றனன் வாலி சேயென் றிமையவ ரியம்புங் காலை.

1269 (b) ஏற்றொரு கையாற் குன்றை யிருந்துக ளாக்கி மைந்தன்
மாற்றொரு கையால் மார்பி லடித்தலு மாண்டா ரென்ன
கூற்றின்வா யுற்றா னென்ன வும்பர்கால் குலையப் பானு
மேற்றிசை யுற்றா னென்ன விளங்கினன் மேரு வொப்பான்.

**அங்கதன் ததிமுகனைத் தாக்கித் துரத்தி, அவனுடன் வந்தாரையும் தண்டிக்கும்படி, தன்னுடன் வந்தார்க்குச் சொல்லுதல்**

**1270.** வாய்வழி குருதி சோர
மணிக்கையான் மலங்க மோதிப்
போய்மொழி கதிரோன் மைந்தற்
கென்றவன் றன்னைப் போக்கித்
தீயெழும் வெகுளி பொங்க
மற்றவன் சேனை தன்னைக்
காய்கனல் பொழியுங் கையாற்
குத்துதிர் கட்டி யென்றான்.

வாய் வழி குருதி சோர
மணிக்கையால் மலங்க மோதிப்
'போய் மொழி கதிரோன் மைந்தற்கு'
என்று அவன் தன்னைப் போக்கித்

தீ எழும் வெகுளி பொங்க
மற்று அவன் சேனை தன்னைக்
காய் கனல் பொழியும் கையால்
குத்துதிர் கட்டி என்றான்.

(அங்கதன், ததிமுகனை) மணிக்கையால், வாய்வழி குருதிசோர, மலங்கமோதி, "கதிரோன்மைந்தற்குப் போய் மொழி" என்று அவன் (ததிமுகன்) தன்னைப்போக்கி, எழும் வெகுளி தீ பொங்க (படையை நோக்கி) "மற்று, அவன் சேனை தன்னைக் கட்டி, காய் கனல் பொழியும் கையால் குத்துதிர்" என்றான். குருதி - செந்நீர்; இரத்தம். வெகுளி - சினம். காய் கனல் - சுடுகின்ற நெருப்பு. (24)

அங்கதன் படைவீரர் ததிமுகன் படைவீரரை வருத்த அங்கதன் அவரையும் வெருட்டுதல்

**1271.** பிடித்தனர் கொடிக டன்னாற்
பிணித்தன பின்னு முன்னும்
இடித்தன ரசனி யஞ்ச
வெறுழ்வலிக் கரங்க ளோச்சித்
துடித்தன ருடல்கள் சோர்ந்தார்
சொல்லும்போய் நீரு மென்னப்
படித்தனன் வாலி மைந்தன்
பயத்துட னவரும் போனார்.

பிடித்தனர்; கொடிகள் தன்னால்
பிணித்தன; பின்னும் முன்னும்
இடித்தனர், அசனி அஞ்ச
எறுழ்வலிக் கரங்கள் ஓச்சி;
துடித்தனர் உடல்கள் சோர்ந்தார்,
'சொல்லும் போய் நீரும்' என்னப்
படித்தனன் வாலி மைந்தன்.
பயத்துடன் அவரும் போனார்.

(தங்கள் தலைவனாகிய ததிமுகன் இவ்வாறு இழிவுபட்டதைக் கண்ட அவன் படைக் குரங்குகள் ஓடின; அப்பொழுது, அந்தச் சோலையில் பரவியிருந்த கொடிகளில் சிக்குண்டபடியால்) கொடிகளே தானாகவே முன்னும் பின்னும் பிணித்தன; (அங்கதன் படைக் குரங்குகள்) அவர்களைப் பிடித்தனர்; மிக்க வலிபுள்ள தம் கைகளை ஓங்கி இடியும் அஞ்சும்படி

இடித்தார்கள்; (காவற்குரங்குகளுடைய) உடல்கள் துடித்தன; தளர்ந் தார். அங்கதன் "நீங்களும் போய்ச் சொல்லுங்கள்" என்றான். (25)

### வானரவீரர் மதுவனத்தில் வருத்தம் தீர்ந்திருத்தல்

**1272.** அலைபுனல் குடையு மாபோன்
மதுக்குடைந் தாடித் தந்தம்
தலைவர்கட் கினிய தேனும்
கனிகளும் பிறவுந் தந்தே
உலைவுறு வருத்தந் தீர்ந்திட்
டுபவனத் திருந்தா ரிப்பால்
சிலைவளைத் துலவுந் தேரோன்
றெறும்வெயிற் றணிவு பார்த்தே.

*அலை புனல் குடையுமா போல்*
*மதுக் குடைந்து ஆடி, தம் தம்*
*தலைவர்கட்கு இனிய தேனும்*
*கனிகளும் பிறவும் தந்து, ஏ*
*உலைவுறு வருத்தம் தீர்ந்திட்டு,*
*உபவனத்து இருந்தார்; இப்பால்*
*சிலை வளைத்து உலவும் தேரோன்*
*தெறும் வெயில் தணிவு பார்த்து ஏ.*

(அங்கதன் குரங்குப் படையிலுள்ளவர்) அலைகின்ற நீரில் முழுகி விளை யாடுவதுபோல், தேன் பெருக்கில் முழுகி விளையாடியும் தங்கள் தங்கள் தலைவர்களுக்கு இனிய தேனும், கனிகளும், (கிழங்கு முதலிய) பிறவும் கொண்டுவந்து கொடுத்தும் இளைப்பினால் ஏற்பட்ட வருத்தம் தீரும்படி, (மேரு) மலையை வலமாகவரும் தேரையுடைய கதிரவனது மிகுந்த வெயில் தணியும் காலத்தைப் பார்த்துக்கொண்டு இளமரக்காவில் தங்கியிருந் தார்கள் என்பது பொருள். (26)

### கவிக்கூற்று
### நாடச்சென்றவர் மீண்டது நவின்றோம் நாடவிட்டவர் செய்தி நவில்வோம் எனல்

**1273.** முத்தலை யெஃகி னற்கு
முடிப்பருங் கரும முற்றி
வித்தகத் தூதன் மீண்ட
திறுதியா விளைந்த தன்மை

அத்தலை யறிந்த தெல்லா
　　மறைந்தன மாழி யான்மாட்
டித்தலை நிகழ்ந்த தெல்லா
　　மியம்புவா னெடுத்துக் கொண்டாம்.

முத்தலை எஃகி னற்கும்
　　முடிப்பரும் கருமம் முற்றி,
வித்தகத் தூதன் மீண்டது
　　இறுதியா விளைந்த தன்மை,
அத்தலை அறிந்தது எல்லாம்
　　அறைந்தனம்; ஆழியான் மாட்டு
இத்தலை நிகழ்ந்தது எல்லாம்
　　இயம்புவான் எடுத்துக் கொண்டாம்.

மூன்றுதலையையுடைய சூலத்தைத் தாங்கியவனுக்கும் முடிக்கமுடியாத செயலை முடித்து, சதுரப்பாடுடைய தூதன் மீண்டது இறுதியாக அங்கு நிகழ்ந்தவையெல்லாம் அறிந்தபடி கூறினோம். ஆழியானாகிய இராமன் பால் இங்கு நிகழ்ந்தவைகளை இனிச் சொல்லத்தொடங்குகிறோம். முத்தலை எஃகினன் – சூலப்படைகொண்டவன். வித்தகம் - சதுரப்பாடு. ஆழியான் – திருவாணையாழியான். மாற்றார் ஊரை எரித்தமை இறைவனுக்கும் அனுமனுக்கும் பொதுவெனினும் மாற்றார் வைத்த தீயையே மாற்றாருக்காக்கியது அனுமன் அருஞ்செயலென்க. (27)

## சுக்கிரீவன் பிராட்டியை நாடிவருமாறு வானரரை யேவிவிட்டு இராமபிரானைத் தேற்றிக்கொண்டிருத்தல்

**1274.** சேற்றிள மரைமலர்த் திருவைத் தேர்கெனக்
காற்றின்மா மகன்முதற் கவியின் சேனையை
நாற்றிசை மருங்கினு மேவி நாயகற்
றேற்றின னிருந்தனன் கவியின் செம்மலே.

'சேற்று இள மரை மலர்த் திருவைத் தேர்க' எனக்
காற்றின் மா மகன் முதல் கவியின் சேனையை.
நால் திசை மருங்கினும் ஏவி, நாயகன்
தேற்றினன் இருந்தனன்; கவியின் செம்மல் ஏ.

கவியின் செம்மல் (சுக்கிரீவன்); காற்றின்மாமகன் (அனுமன்) முதல் கவியின்சேனையை, 'சேற்று இளந்தாமரைமலர்த்திருவை (பிராட்டியை)

தேர்க எனு நாற்றிசைமருங்கினும் ஏவி, நாயகன் (இராமனை) தேற்றினன் இருந்தனன் என இயைக்க. தேற்றினன் இருந்தனன் – தேற்றிக்கொண்டு இருந்தனன். (28)

### சுக்கிரீவன் தேற்ற இராமபிரான் தேறுதல்

**1275.** கார்வரை யிருந்துள கதிரின் காதலன்
சீரிய சொற்களாற் றெருட்டச் செங்கணுன்
ஆருயி ராயிர முடைய னுமெனச்
சோர்தொறு முயிர்த்துயிர்த் துணரத் தோன்றுவான்.

*கார்வரை இருந்துள கதிரின் காதலன்,*
*சீரிய சொற்களால் தெருட்ட, செம் கணுன்,*
*ஆருயிர் ஆயிரம் உடையன்;, ஆம் என,*
*சோர்தோறும், உயிர்த்து உயிர்த்து உணரத் தோன்றுவான்.*

*கதிரவனுடைய மகனுகிய சுக்கிரீவன், மேகம் சூழ்ந்துள்ள மலையில் நன்மை தரும் சொற்களால் தேறுதல் கூறச் சிவந்த கண்களையுடையவன் (இராமன்) ஆயிரம் உயிர்கள் உடையவன்போல் தளரும்போதெல்லாம் உயிர்போவதுபோல் பெருமூச்சுவிடுவதும், தேறுதலைக்கேட்டு உணர்வு பெறுவதுமாகத் தோன்றினுன்.* (29)

### அனுமன்பால் வைத்த நம்பிக்கையால் இராமபிரான் உயிர்தாங்கி யிருத்தல்

**1276.** தண்டலி னெடுந்திசை மூன்றுந் தாயினர்
கண்டிலர் மடந்தையை யென்னுங் கட்டுரை
உண்டுயி ரகத்தென வொறுக்க வும்முளன்
திண்டிற லனுமனை நினையுஞ் சிந்தையான்.

*தண்டல் இல் நெடும் திசை மூன்றும் தாயினர்,*
*'கண்டிலர் மடந்தையை' என்னும் கட்டுரை*
*'உண்டு உயிர் அகத்து' என ஒறுக்கவும் உளன்;*
*தின் திறல் அனுமனை நினையும் சிந்தையான்.*

*தடையொன்றுமில்லாமல், மூன்று திசைகளிலும் தாவிச் சென்று மீண்டுவந்தவர்கள், பிராட்டியாரைக் கண்டிலர் என்னும் செய்தி (உயிரைப் போக்குவது போல்) துன்பம் செய்தாலும் திண்ணிய ஆண்மைவாய்ந்த அனுமனை நினைப்பதால், தன் அகத்தில் உயிர் இருக்கின்றது என்று*

சொல்லும்படி இருக்கின்றான் என்பதுபொருள். அனுமன்பால் வைத்துள்ள நம்பிக்கையால் உயிர் தாங்கி நிலவுகின்றான் இராமன் என்க. (30)

## துயருற்ற இராமபிரான் சுக்கிரீவனொடு சொல்லுதல் 1277—1281

**1277.** ஆரிய னருந்துயர்க் கடலு ளாழ்பவன்
சீரிய தன்றுநஞ் செய்கை தீர்வரும்
மூரிவெம் பழியொடு முடிந்த தாமெனச்
சூரியன் புதல்வனை நோக்கிச் சொல்லினான்.

*ஆரியன், அருந்துயர்க் கடலுள் ஆழ்பவன்,*
*'சீரியது அன்று நம் செய்கை ; தீர்வு அரும்*
*மூரி வெம் பழியொடு முடிந்தது ஆம்' எனச்*
*சூரியன் புதல்வனை நோக்கிச் சொல்லினான்.*

ஆரியன், அருந்துயர்க்கடலுள் ஆழ்பவன் (ஆகிச்) சூரியன் புதல்வனை நோக்கி, 'நம்செய்கை சீரியது அன்று ; தீர்வு அரும் மூரி வெம் பழியொடு முடிந்ததாம்' எனச் சொல்லினான்: என இயைக்க. ஆரியன்-பெரியோன்; இராமன். சூரியன் புதல்வன் - சூரியன்மகன்; சுக்கிரீவன். நம்செய்கை என்றது, பிராட்டியை விரைந்து தேடிக் காணாது சோர்ந்திருத்தலை. தீர்வு அரும் மூரி வெம்பழியொடு முடிந்ததாம் என - ஒழியாத பெரிய கொடிய பழிச்சொல்லோடு முடிந்ததாகும் என்று; இங்கே பழி என்றது, தன் மனையாளை ஒரு தீயோன் கவர்ந்து செல்ல, இராமன் அவளை மீட்கும் ஆற்றல் இலனாயினான் என உலகத்தார் கூறுவதனை ; அன்றி, நாம் விரைந்து மீளாமையால் சீதை இனி உய்தியில்லை என்று உயிர்விட நேரின் அதனால் உளதாகும் பாவத்தை எனினும் ஆம். (31)

**1278.** குறித்தநா ளிறந்தன குன்றத் தென்றிசை
வெறிக்கருங் குழலியை நாடன் மேயினார்
மறித்திவண் வந்திலர் மாண்டு ளார்கொலோ
பிறித்தவர்க் குற்றுள தென்னை பெற்றியோய்.

*"குறித்த நாள் இறந்தன குன்றத் தென் திசை*
*வெறிக் கருங் குழலியை நாடல் மேயினார்,*
*மறித்து இவண் வந்திலர் ; மாண்டுளார் கொலோ ?*
*பிறித்து அவர்க்கு உற்றுளது என்னை ? பெற்றியோய் !'*

பெற்றியோய்! வெறிக் கருங்குழலியைத் தென்றிசை நாடல் மேயினர், குறித்தநாள் இறந்தன (ஆகிக்) குன்ற(வும்), இவண் மறித்து வந்திலர்; அவர்க்கு உற்றுளது பிறிது என்னை? மாண்டுளாரோ? என இயையும். கொல் அசைநிலை. பெற்றியோய் - நற்பண்புடையவனே; இது சுக்கிரீவனை இராமபிரான் தன்முகமாக்கிக் கொள்ளும் விளிக்கூற்று. வெறிக் கருங்குழலியை – நறுமணமுடைய கரிய கூந்தலையுடைய சீதையை. நாடல் மேயினர் - தேடுதலை மேற்கொண்டு சென்ற அனுமன் முதலிய வானர வீரர். குறித்தநாள் - திரும்புதற்கு அறுதியிட்டநாள்கள். இறந்தன குன்ற கடந்து தேயவும். இவண் மறித்து வந்திலர் – இங்கே திரும்பிவரவில்லை அவர்க்கு-(தேடச்சென்ற) அவ்வானரவீரர்க்கு. பிறிது உற்றுளது என்னை - வேறு என்ன நேர்ந்தது? மாண்டுளாரோ – இறந்து பட்டார்களோ? பிறிது என்பது எதுகைநோக்கிப் பிறித்து என நின்றது, செய்யுள்விகாரம். (32)

1279. மாண்டன ளவளிவண் மாண்ட வார்த்தையை
மீண்டவர்க் குரைத்தலின் விளித னன்றெனப்
பூண்டதோர் துயர்கொடு பொன்றி னர்கொலோ
தேண்டின ரின்னமுந் திரிகின் றார்கொலோ.

'மாண்டனள் அவள்; 'இவள் மாண்ட வார்த்தையை,
மீண்டு, அவர்க்கு உரைத்தலின், விளிதல் நன்று'; எனப்
பூண்டது ஓர் துயர்கொடு பொன்றினர்கொல்? ஓ
தேண்டினர் இன்னமும் திரிகின்றார்கொல்? ஓ'.

முன்பாட்டில்,தேடச்சென்ற வானரவீரர் இறந்துபட்டார்களோ என்று இராமபிரான் ஐயமுற்றானென்றவர், இப்பாடலால் அவ்வாறு ஐயுறுதற்குக் காரணமும் கூறுகின்றார். 'அவள் மாண்டனள்' என்றது இராமபிரான் கூற்று. அவள் மாண்டனளாக என்க. அவள் என்றது சீதாபிராட்டியை. 'இவள் மாண்டவார்த்தையை மீண்டு அவர்க்கு உரைத்தலின் விளிதல் நன்று' என்பது, தெற்கே நாடச்சென்ற வானரவீரர் உட்கோளாகக் கொண்டு கூறியது. இங்கே இவள் என்பதும் சீதாபிராட்டியைச் சுட்டி நின்றது. அவர்க்கு-இராமபிரான் முதலிய அங்கே உள்ளார்க்கு. விளிதல் பொன்றுதல் என்பன சாதல் என்னும் ஒருபொருளன. தேண்டினர் - தேடினவராய். இன்னமும் தேண்டினர் திரிகின்றாரோ என்க. (33)

1280. கண்டன ரரக்கரைக் கறுவு கைம்மிக
மண்டமர் தொடங்கினர் வஞ்சர் மாயையால்
விண்டல மதனின்மே யினர்கொல் வேறிலாத்
தண்டலி னெடுஞ்சிறைத் தளைப்பட் டார்கொலோ.

'கண்டனர் அரக்கரைக் கறுவு கை மிக,
மண்டு அமர் தொடங்கினர், வஞ்சர் மாயையால்
விண் தலம் அதனில் மேவினர்கொல்? வேறு இலாத்
தண்டல் இல் நெடுஞ்சிறைத் தளைப்பட்டார் கொல்' ஓ.

(அன்றியும் அவர்,) அரக்கரைக் கண்டனர், அமர் தொடங்கினர், விண்டலமேயினர்கொல் என்க. கண்டனர் - கண்டு; தொடங்கினர் - தொடங்கி; முற்றெச்சம். கறுவு - சினம். கைமிக - எல்லைகடந்து மிக. மண்டு அமர் - நெருங்கியபோர். வஞ்சர் மாயையால் - வஞ்சகராகிய அவ்வரக்கருடைய மாயச்செயல்களால். மேயினர்கொல் - மேவினர்களோ? வேறிலாச்சிறை, தண்டலில் சிறை, நெடுஞ்சிறை என இயையும். வேறு இலாத் தண்டல் இல் நெடுஞ்சிறைத் தளைப்பட்டார் கொலோ - (ஒத்தது) பிறிதொன்று இல்லாததும் (விதிக்கப்பட்ட தண்டனை) தவறாது நிகழும் இடமும் ஆகிய பெரிய சிறையின்கண் விலங்கிட்டு வைக்கப்பட்டார்களோ? வேறு - பிறிது. தண்டல் - தவறுகை; 'தண்டலில் தவஞ் செய்வோர்' (மாரீசன்வதை - 162) என்றார் முன்னும். (34)

**1281.** கூறின நாளவ ரிருக்கை கூடலம்
ஏறலஞ் சுதுமென வின்ப துன்பங்கள்
ஆறின ரருந்தவ மயர்கின் றார்கொலோ
வேறவர்க் குற்றதென் விளம்பு வாயென்றான்.

"கூறின நாள் அவர் இருக்கை கூடலம்,
ஏறல் அஞ்சுதும்:' என 'இன்ப துன்பங்கள்
ஆறினர், அருந்தவம் அயர்கின்றார்கொல் ஓ?
வேறு அவர்க்கு உற்றது என்? விளம்புவாய்" என்றான்.

கூறினநாள் - (பிராட்டியைத் தேடி மீண்டுவருதற்கு எல்லையிட்டுச்) சொல்லிய நாளில். அவர் இருக்கை - (இராமபிரான் முதலான) அவர்களுடைய இருப்பிடத்தை. கூடலம்-அடைந்தோமில்லை. ஏறல் அஞ்சுதும் - (காலம் கழிந்தபின்) அவரிடம் சேர்தலை அஞ்சுவோம். 'கூறினநாள்...... ......ஏறல் அஞ்சுதும்' என்பது வானரர்நினைவு கூறியபடி. இன்ப துன்பங்கள் ஆறினர் - இன்பவுணர்ச்சியும் துன்பவுணர்ச்சியும் நீங்கியவர்களாய். அயர்தல் - செய்தல். மாண்டுளார்கொலோ? (1278), பொன்றினார்கொலோ? திரிகின்றார்கொலோ? (1279), விண்டலமதனின் மேயினர்கோல்? நெடுஞ்சிறைத் தளைப்பட்டார்கொல்? (1280), தவம் அயர்கின்றார்கொலோ? அவர்க்கு உற்றது என்? விளம்புவாய் என்றான் (1281) என ஒரு தொடராக்குக. (35)

### சுக்கிரீவன்பால் ததிமுகன் வருதல்

**1282.** என்றுரைத் திடருழந் திருக்கு மேல்வையில்
வன்றிறற் றதிமுகன் வான ரேசன்முன்
தன்றலைப் பொழிதரு குருதி தன்னெடும்
குன்றெனப் பணிந்தன னிருகை கூப்பியே.

*என்று உரைத்து, இடர் உழந்து இருக்கும் எல்வையில்*
*வன் திறல் ததிமுகன் வானரேசன்முன்*
*தன் தலைப் பொழிதரு குருதிதன்னெடும்*
*குன்று எனப் பணிந்தனன்; இருகை கூப்பியே.*

*தென்திசையிலே சீதாபிராட்டியைத் தேடிச் சென்ற வானரவீரர் செய்தி ஒன்றும் தெரியாமையால், இராமபிரான் சுக்கிரீவனிடம் வருந்தி உரையாடிக்கொண்டிருந்தபொழுது, மதுவனக்காவலனான ததிமுகன், தலையிலிருந்து இரத்தம் பெருக வந்து இரண்டு கைகளையும் கூப்பி மலை போலே சுக்கிரீவனை வணங்கினன் என்றவாறு. (36)*

*[1282 முதல் 1299 முடியவுள்ள செய்யுட்கள் பல சுவடிகளில் இல்லை.]*

### ததிமுகன் மதுவனம் அழிந்தமைகூறச் சுக்கிரீவன் அழித்தவர் ஆர்? எனல்

**1283.** எழுந்துநின் றையகே ளின்று நாளையோ
டழிந்தது மதுவன மடைய வென்றலும்
வழிந்திடு குருதியின் வதன நோக்கியே
மொழிந்திடங் கியாரது முடித்துளோ ரென.

*எழுந்து நின்று 'ஐய! கேள், இன்று நாளையோடு*
*அழிந்தது மதுவனம் அடைய' என்றலும்,*
*வழிந்திடு குருதியின் வதனம் நோக்கியே,*
*'மொழிந்திடு அங்கு யார் அது முடித்துளோர்?' என.*

*ஐய! என்பது, ததிமுகன் சுக்கிரீவனைத் தன்முகமாக்கிக்கொள்ளும் விளிக்கூற்று. அடைய – முழுதும். குருதி வழிந்திடு வதனம் நோக்கி என்க. குருதியின் எனபதனுள் இன் அல்வழிச் சாரியை. 'அங்கு அது முடித்துளோர்யார்? மொழிந்திடு' என்பது, ததிமுகனை நோக்கிச் சுக்கிரீவன் கூறியது. அங்கு – மதுவனத்தில். அது முடித்துளோர் – அழித்தற் றொழிலை முற்றுவித்தோர். (37)*

## ததிமுகன் மதுவனமழித்தாரைக் கூறித் தான் தகைந்தவாறும் தாக்குண்டவாறும் அறிவித்தல் 1284—1286

**1284.** நீலனுங் குமுதனு நெடிய குன்றமே
போலுயர் சாம்பனும் புணரி போர்த்தென
மேலெழு சேனையும் விரைவின் வந்துருச்
சால்புடை மதுவனந் தனைய ழிப்பவே.

*'நீலனும் குமுதனும் நெடிய குன்றமே*
*போல் உயர் சாம்பனும் புணரி போர்த்தென*
*மேல் எழு சேனையும் விரைவின் வந்து உருச்*
*சால்பு உடை மதுவனம் தனை அழிப்பவே.'*

*இச்செய்யுள் மதுவனம் அழித்தார் இவரிவர் என்கின்றது. சாம்பன்—சாம்பவான். புணரி-கடல். சால்பு உடை(ய)-நிறைவுடைய. அழிப்ப-அழிப்பாராயினர். (38)*

**1285.** தகைந்தவச் சேனையைத் தள்ளி நின்னையும்
இகழ்ந்துரைத் தியைந்தனன் வாலி சேய்மனக்
குகந்தன புகன்றவவ் வுரைபொ ருமையே
புகைந்தொரு பாறையின் புணர்ப்பு நீக்கியே.

*'தகைந்த அச் சேனையைத் தள்ளி, நின்னையும்*
*இகழ்ந் துரைத்து, இயைந்தனன் வாலி சேய்; மனக்கு*
*உகந்தன புகன்ற அவ் வுரை பொருமையே,*
*புகைந்து, ஒரு பாறையின் புணர்ப்பு நீக்கி, எ.'*

*வாலி சேய், தகைந்த அச்சேனையைத் தள்ளி, நின்னையும் இகழ்ந்துரைத்து (உவவனம் அழித்தற்கு) இயைந்தனன் என்க. தகைந்த-(மதுவனம்) அழியாதவாறு தடுத்த. அச்சேனை என்றது, மதுவனம் காத்தற்கு அங்கு வைக்கப்பட்டிருந்த படையை. வாலிசேய் மனக்கு உகந்தன புகன்ற அவ்வுரை பொருமையால் புகைந்து-வாலியின் மகனான அங்கதன் அவன் மனம் விரும்பியவாறு பேசிய அப்பேச்சினைப் பொறுக்க முடியாமையால் சினங்கொண்டு. ஒரு பாறையின் புணர்ப்பு நீக்கி-ஒரு பாறையை அது ஒன்றியிருந்த நிலையினின்றும் பெயர்த்து. நீக்கி என்பது பின்வரும் பாட்டில் 'எறிதர' என்பதனுடன் இயையும். (39)*

1286. இமைத்தன்முன் வாலிசே
யெழில்கொள் யாக்கையைச்
சமைத்தியென் றெறிதரப்
புறங்கை யாற்றகைந்
தமைத்தரு கனலென
வழன்றெற் பற்றியே
குமைத்துயிர் பதைப்பநீ
கூறு போயென்றான்.

'இமைத்தல்முன் "வாலிசேய் எழில்கொள் யாக்கையைச் சமைத்தி" என்று எறிதரப் புறங்கையால் தகைந்து, அமைத் தரு கனல் என அழன்று, எற்பற்றியே குமைத்து, உயிர் பதைப்ப "நீ கூறு போய்" என்றான்.'

யாக்கை - உடல். சமைத்தல் - அழித்தல். எறிதர - எறிய. (புகைந்து, ஒரு பாறையின் புணர்ப்பு நீக்கி,) 'வாலி சேய் எழில்கொள் யாக்கையை இமைத்தல் முன் சமைத்தி' என்று (யான்) எறிதர, (அங்கதன் அப் பாறையைப்) புறங்கையால் தகைந்து, அமைத்தரு கனலென அழன்று, எற்பற்றி, உயிர் பதைப்பக் குமைத்து, 'நீ போய்க் கூறு' என்றான் என முற்றுவிக்க. தகைந்து - தடுத்து. அமை தரு கனல்-மூங்கில் தந்த நெருப்பு. எதுகை நோக்கி அமைத்தரு என ஒற்றுமிக்குநின்றது. அழன்று - சினந்து. எற்பற்றி - என்னைப் பிடித்து. குமைத்து - காலால் மிதித்து உழக்கி. (40)

இதன்பின் 12 - என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது.

1286 (a) இன்றுநா னிட்டபா டியம்ப முற்றுமோ
என்றுட னடுக்கமோ டிசைக்கு மேல்வையில்
அன்றவ னுரைத்தல்கேட் டருக்கன் மைந்தனும்
ஒன்றிய சிந்தையி லுணர்ந்திட் டானரோ.

## ததிமுகன் சொல்லிய செய்தி உவகைதருவதென்று சுக்கிரீவன் இராமபிரானிடம் சொல்லுதல்—1287-88

1287. ஏம்பலோ டெழுந்துநின் றிரவி கான்முளை
பாம்பணை யமலனை வணங்கிப் பைந்தொடி
மேம்படு கற்பின ளென்னு மெய்ம்மையைத்
தாம்புகன் றிட்டதிச் சலமென் றேதினன்.

ஏம்பலோடு எழுந்து நின்று, இரவி கான்முளை,
பாம்பு அணை அமலனை வணங்கி, 'பைந்தொடி
மேம்படு கற்பினள், என்னும் மெய்ம்மையைத்
தாம் புகன்றிட்டது, இச்சலம்'; என்று ஓதினான்.

இரவி கான்முளை, ஏம்பலோடு எழுந்து நின்று, அமலனை வணங்கி, 'இச்சலம், பைந்தொடி மேம்படுகற்பினள் என்னும் மெய்ம்மையைப் புகன்றிட்டது' என்று ஓதினான் என முடிக்க. இரவி கான்முளை - சூரியன் மகனான சுக்கிரீவன். ஏம்பல் - களிப்பு. பாம்பணை அமலனை வணங்கி - பாம்பைப் பாயலாகவுடைய குற்றமற்ற திருமாலின் அமிசமாய் அவதரித்த இராமபிரானை வணங்கி. இச்சலம் - இந்தச் சினம்; என்றது, ததிமுகன் இரத்தம் பெருகத் தாக்குண்ணுதற்குக் காரணமான சினம் என்றவாறு. தாம் அசைநிலை. புகன்றிட்டது - தெரிவித்தது. (41)

**1288.** பண்டரு கிளவியா டன்னைப் பாங்குறக்
கண்டன ரன்னதோர் களிப்பி னலவர்
வண்டுறை மதுவன மழித்து மாந்திய
தண்டநா யகவினி யவலந் தீர்கென.

'பண் தரு கிளவியாள் தன்னைப் பாங்கு உறக்
கண்டனர்; அன்னது ஓர் களிப்பினால், அவர்
வண்டு உறை மதுவனம் அழித்து மாந்தியது,
அண்ட நாயக! இனி அவலம் தீர்க' என.

(சுக்கிரீவன், மேலும்) 'அண்டநாயக! அவர், பண்தருகிளவியாளைப் பாங்கு உறக் கண்டனர்; மதுவனம் அழித்து மாந்தியது அன்னதோர் களிப்பினால். இனி அவலம் தீர்க' என; என்று இயைக்க. அண்ட நாயக - உலகநாயகனே! அவர் - (நாடச்சென்ற அனுமன் முதலிய) அவர்கள். பண்தரு கிளவியாளை - பண்ணைத் தோற்றுவிக்கும் இனிய சொற்களைப் பேசுபவளான சீதாபிராட்டியை; தன் சாரியை. பாங்குறக் கண்டனர் - நன்னிலையிலே (கற்புடனே) இருக்கக் கண்டார்கள். அவர்கள் மதுவைக் குடித்து வனத்தை அழித்தது, பிராட்டியைக் கண்ட அத்தகைய சிறந்த மகிழ்ச்சியால் என்க. மாந்துதல் - குடித்தல். அவலம் - துன்பம். தீர்க - நீங்குக. என - என்று சொல்ல. (42)

### இராமபிரான் வந்தவர் யாதுசொல்வரோ என்று வருந்தியிருத்தல்

**1289.** வந்தனர் தென்றிசை வாவி னுரெனப்
புந்திநொந் தென்னைகொல் புகலற் பாலரென்
றெந்தையு மிருந்தன னிரவி கான்முளை
நொந்தவத் ததிமுகன் றன்னை நோக்கியே.

'வந்தனர் தென் றிசை வாவினுர்' எனப்
புந்தி நொந்து, "என்னை கொல் புகலற்பாலர்?" என்று
எந்தையும் இருந்தனன்; இரவி கான்முளை
நொந்த அத் ததிமுகன் தன்னை நோக்கி, ஏ.

இதுவும் இதன் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். 'தென் திசை வாவினுர் வந்தனர்' என, எந்தையும் 'என்னைகொல் புகலற்பாலர்?' என்று புந்திநொந்து இருந்தனன் என்க. வாவுதல் – செல்லுதல். எந்தை யென்றது, இராமபிரானை. இதனுள் 'நோக்கி' என்பது, அடுத்த பாடலுள் 'அவண் இறுத்தவர் யார்?' இயம்புவாய் என என்பதனுள் 'என' என்பதனோடு இயையும். (43)

### மதுவனத்தில் தங்கியவர் யார்யார்? என்ற சுக்கிரீவனுக்குத் ததிமுகன் கூறுதல்

**1290.** யாரவ ணிறுத்தவ ரியம்பு வாயென
மாருதி வாலிசேய் மயிந்தன் சாம்பவன்
சோர்வறு பதினெழு வோர்க டுன்னினுர்
ஆர்கலி நாணவந் தார்க்குஞ் சேனையார்.

'யார் அவண் இறுத்தவர்? இயம்புவாய்' என,
'மாருதி, வாலி சேய், மயிந்தன், சாம்பவன்,
சோர்வு அறு பதினெழுவோர்கள் துன்னினுர்;
ஆர்கலி நாண வந்து ஆர்க்கும் சேனையார்.'

(சுக்கிரீவன்,) 'அவண் இறுத்தவர் யார்? இயம்புவாய்' என, (ததிமுகன்), 'மாருதி, வாலிசேய், மயிந்தன், சாம்பவன் (முதலிய) பதினெழுவோர்கள், ஆர்கலி நாண ஆர்க்கும் சேனையார் (ஆகி) வந்து துன்னினுர்' என்ருன் என்க. அவண் – அங்கே, மதுவனத்தில். இறுத்தவர் - தங்கியவர். ஆர்கலி – கடல். ஆர்க்கும் – ஆரவாரிக்கின்ற. துன்னுதல் – சேர்தல். (44)

சுக்கிரீவன் ததிமுகனுக்கு உறுதி கூறுதல்—1291-93

**1291.** என்றவ னுரைத்தபோ திரவி காதலன்
வன்றிறற் றதிமுகன் வதன நோக்கியே
ஒன்றுனக் குணர்த்துவ துளது வாலிசேய்
புன்றொழிற் செய்கைசேர் புணர்ப்ப னல்லனால்.

*என்று, அவன் உரைத்தபோது, இரவி காதலன்,*
*வன் திறல் ததிமுகன் வதனம் நோக்கியே,*
*'ஒன்று உனக்கு உணர்த்துவது உளது; வாலி சேய்,*
*புன் தொழில் செய்கை சேர் புணர்ப்பன் அல்லன் ஆல்.'*

இது முதல் மூன்று பாடல்களும் ஒரு தொடர்.

அவன், அவண் இறுத்தவர் இவர் இவர் என்று உரைத்தபோது, இரவி கான்முளை, ததிமுகன் வதனம் நோக்கி, 'உனக்கு உணர்த்துவது ஒன்று உளது; வாலிசேய் புன்தொழிற் செய்கைசேர் புணர்ப்பன் அல்லன் என்க. அவன் என்றது ததிமுகனை. புன் தொழிற்செய்கை சேர்புணர்ப்பன் அல்லன் – புல்லிய (- திய) தொழிலைப் புரியும் சூழ்ச்சி யுடைய னல்லன். ஆல் அசை. (45)

**1292.** கொற்றவன் பணிதலைக் கொண்டு தெண்டிரை
சுற்றிய திசையெலாந் துருவித் தோகையைப்
பற்றிய பகைஞரைக் கடிந்து பாங்கர்வந்
துற்றன ரவரையா முரைப்ப தென்னையோ.

*'கொற்றவன் பணி தலைக் கொண்டு, தெண்டிரை*
*சுற்றிய திசை எலாம் துருவித் தோகையைப்*
*பற்றிய பகைஞரைக் கடிந்து, பாங்கர் வந்து*
*உற்றனர்; அவரை யாம் உரைப்பது என்னை?' ஓ.*

அவர், கொற்றவன் பணி தலைக்கொண்டு தெண்டிரை சுற்றிய திசை யெலாம் தோகையைத் துருவித் தோகையைப் பற்றிய பகைஞரைக் கடிந்து பாங்கர் வந்துற்றனர்; அவரை யாம் உரைப்பது என்னை? என்க.

கொற்றவன் - வெற்றியுடையான், இராமபிரான். பணி – கட்டளை. தெண்டிரை – கடல். தோகை – இங்கு மயில்போல் பவளான சீதாபிராட்டி. தோகையென்பது மீண்டும் கூட்டப்பட்டது. கடிந்து – அழித்து. பாங்கர் - பக்கம்; நட்பினர் என்னும் பொருளும் தொனிக்க நின்றது. (46)

27

**1293.** அன்றியும் வாலிசே யரச தாதலின்
பின்றுத றீதரோ பிணங்குஞ் சிந்தையாய்
ஒன்றுநீ யுணரலை யுறுதி வேண்டுமேல்
சென்றவன் றனைச்சரண் சேர்தி யீண்டென.

'அன்றியும், வாலி சேய் அரசு அது ; ஆதலின்
பின்றுதல் தீது அரோ ; பிணங்கும் சிந்தையாய் !
ஒன்றும் நீ உணரலை, உறுதி வேண்டுமேல்,
சென்று அவன்தனைச் சரண் சேர்தி ஈண்டு' என.

அன்றியும், பிணங்குஞ் சிந்தையோய் ! நீ உறுதி ஒன்றும் உணரலை; உறுதி வேண்டுமேல் ஈண்டு சென்று அவனைச் சரண் சேர்தி. அது வாலி சேய் அரசு ; ஆதலில், பின்றுதல் தீது' என ; என இயையும்.

அன்றியும் - மேலே கூறியவையன்றியும். பிணங்கும் சிந்தையோய் - மாறுபட்ட மனமுடையாய். உறுதி - நன்மை. ஈண்டு - இப்பொழுதே. அவனைச் சரண்சேர்தி - அவ் வங்கதனிடம் சரண் புகுவாயாகுக. அது - அம் மதுவனம். வாலிசேய் அரசு - அங்கதன் ஆட்சியில் அடங்கியது. பின்றுதல் - தாழ்த்தல். (47)

## ததிமுகன் மதுவனத்துக்கு மீளுதல்

**1294.** வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
உணங்கிய சிந்தைய னொடுங்கு மேனியன்
கணங்களோ டேகிபக் கான நண்ணினன்
மணங்கிளர் தாரினன் மறித்தும் வந்தரோ.

வணங்கிய சென்னியன், மறைத்த வாயினன்,
உணங்கிய சிந்தையன், ஒடுங்கும் மேனியன்,
கணங்களோடு ஏகி அக் கானம் நண்ணினன்,
மணம் கிளர் தாரினன், மறித்தும் வந்து அரோ.

மணம் கிளர் தாரினன், சென்னியன், வாயினன், சிந்தையன், மேனியன், (ஆகிக்) கணங்களோடு ஏகி,அக்கானம் மறித்து வந்து நண்ணினன்; என இயைக்க. கிளர்தல் - மிகுதல். தாரினன் என்றது ததிமுகனை. சென்னி - தலை. உணங்கிய - உலர்ந்த. கணங்களோடு - தன் காவற் சுற்றத்துடன். அக்கானம் - அம் மதுவனத்தை. மறித்து - மீண்டு. (48)

### ததிமுகனைக்கண்ட அங்கதன் சினத்தலும் ததிமுகன் வணங்குதலும்

1295. கண்டனன் வாலிசேய் கறுவு கைம்மிக
விண்டவ னம்மெதிர் மீண்டு ளானெனின்
உண்டிடு குதுமுயி ரென்ன வுன்னினான்
தொண்டெனத் ததிமுகன் றொழுது தோன்றினான்.

கண்டனன் வாலி சேய், கறுவு கை மிக,
'விண்டவன், நம் எதிர் மீண்டுளான் எனின்,
உண்டிடுகுதும் உயிர்' என்ன உன்னினான்;
'தொண்டு' எனத் ததிமுகன், தொழுது தோன்றினான்.

வாலிசேய், (ததிமுகன் வரவு) கண்டனன், கறுவு கைமிக, 'விண்டவன் நம் எதிர் மீண்டுளான்' எனின், 'உயிர் உண்டிடுகுதும்' என்ன உன்னினான்; ததிமுகன் 'தொண்டு' எனத்தொழுது தோன்றினான் என இயையும். கண்டனன்-கண்டு; முற்றெச்சம். கறுவு கை மிக-சினம் எல்லை கடந்து எழுதலால்; கறுவு கைம்மிகுதலால் உயிர் உண்டிடுகுதும் என உன்னினான் என்க. விண்டவன்-(நம் தாக்குதலை ஆற்றுமாட்டாது) உலைந் தோடிய ததிமுகன். விண்டவன் மீண்டுளான் எனின் என்றது, நம் தாக்குதலை ஆற்றமாட்டாது ஓடியவன் திரும்பிவாரான்; ஒருகால் வேறு துணையுடன் வந்தான் என்னினும் என்றவாறு. தொண்டு என - அடிமையென்று கூறிக்கொண்டு. *(49)*

### அங்கதனும் ததிமுகனும் சினந்தணிந்து அளவளாவுதல்

1296. போழ்ந்தன யான்செய்த குறைபொ றுக்கென
வீழ்ந்தன னடிமிசை வீழ வாலிசேய்
தாழ்ந்துகை பற்றிமெய் தழீஇக்கொண் டும்மையான்
சூழ்ந்ததும் பொறுக்கென முதன்மை சொல்லினான்.

'போழ்ந்து அன யான் செய்த குறை பொறுக்க' என
வீழ்ந்தனன் அடிமிசை; வீழ, வாலிசேய்,
தாழ்ந்து, கை பற்றி, மெய்தழீஇக் கொண்டு, 'உம்மை யான்
சூழ்ந்ததும் பொறுக்க' என முதன்மை சொல்லினான்.

(ததிமுகன்) 'யான் செய்த குறை பொறுக்க' என (அங்கதனுடைய) அடிமிசை விழ்ந்தனன்; விழ, வாலிசேய், தாழ்ந்து கைபற்றி மெய் தழீஇக்

கொண்டு, 'யான் உம்மைச் சூழ்ந்ததும் பொறுக்க' என முதன்மை சொல்லினன் என்க. யான் செய்த குறை, போழ்ந்த(ன்)ன குறைஎனா இயையும். போழ்ந்தன்ன குறை - உடலைப் பிளந்தாற் போன்ற குற்றம். தழீஇ – தழுவி. யான் உம்மைச் சூழ்ந்ததும் – யான் உமக்குச் செய்த குற்றத்தையும். சூழ்தல் - பண்ணுதல், செய்தல். 'பாவை சூழ்ந்தும்' (பட்டினப். 102) என்பதனுள் சூழ்தல் பண்ணுதல் என்னும் பொருளிற் பயின்றமை காண்க. (50)

### வானரர் முன்னே அனுமனை இராமனிடம் அனுப்புதல்

**1297.** யாமுதற் குறித்தநா ளிறத்த லெண்ணியே
ஏமுறத் துயர்துடைத் தளித்த வேற்றம்போற்
றாமரைக் கண்ணவன் றுயரந் தள்ளநீர்
போமெனத் தொழுதுமுன் னனுமன் போயினான்.

'யாம் முதல் குறித்த நாள் இறத்தல் எண்ணியே,
ஏம் உற, துயர் துடைத்து அளித்த ஏற்றம் போல்,
தாமரைக் கண்ணவன் துயரம் தள்ள, நீர்
போம்' எனத் தொழுது, முன் அனுமன் போயினான்.

முதற் குறித்த நாள் இறத்தல் எண்ணி யாம் ஏம் உற என்க. முதற் குறித்த நாள் - முன்னே (நாடவிட்டபொழுது) சுக்கிரீவமகாராசர் நாங்கள் மீண்டு வருதற்கு அறுதியிட்டுச் சொல்லிய நாள். இறத்தல் – கடத்தல். யாம் ஏம் உற – நாங்கள் வருத்தம் உற. ஏம் உற – வருந்த. 'ஏமுறு கிளவி' (தொல். பொருள். 146) என்பது காண்க. தாமரைக் கண்ணவன் – தாமரை மலர் போலும் கண்களையுடையான்; இராமபிரான். 'யாம் முதற் குறித்த நாள்............நீர்போம்' என்பது அனுமனை நோக்கி அங்கதன் முதலியோர் கூறியது. அனுமன் தொழுது முன்போயினான் என்க. (51)

### ஏனை வானரர் சுக்கிரீவனிடம் சேர்தல்

**1298.** வன்றிறற் குரிசிலு முனிவு மாறினன்
வென்றிகொள் கதிருந்தன் வெம்மை யாறினன்
என்றுகொண் டியாவரு மெழுந்து போதலே
நன்றென வேகினர் நவைக்க ணீங்கினர்.

'வன்றிறல் குரிசிலும் முனிவு மாறினன்,
வென்றி கொள் கதிரும், தன் வெம்மை ஆறினன்'
என்று கொண்டு, யாவரும் 'எழுந்து போதலே
நன்று 'என, ஏகினர்; நவைக்கண் நீங்கினர்.

நவைக்கண் நீங்கினர், 'குரிசிலும் முனிவு மாறினன்; கதிரும் வெம்மை ஆறினன்' என்று கொண்டு, 'போதலே நன்று' என ஏகினர்: என இயையும். நவைக்கண் நீங்கினர் - குற்றத்தின் நீங்கிய அங்கதன் முதலிய வானர விரர். குரிசில் என்றது சுக்கிரீவனை. சுக்கிரீவன் முனிவு மாறுதல் - நாடி மீண்டுவரக் குறித்த நாளெல்லை கடந்தமையாலும், மது வனம் அழித்தமையாலும் எழத்தக்க சினம் இலதாதல். கதிர் - சூரியன். என்றுகொண்டு - என்று எண்ணி. (52)

இராமபிரான் சுக்கிரீவனை வினவுதல்

1299. இப்புறத் திராமனு மிரவி சேயினை
ஒப்புற நோக்கிவந் துற்ற தானையர்
தப்பறக் கண்டன மென்ப ரோதகா
தப்புறத் தென்பரோ வறைதி யாலென்றான்.

இப்புறத்து இராமனும், இரவி சேயினை
ஒப்புற நோக்கி, 'வந்து உற்ற தானையர்,
தப்பு அறக் கண்டனம் என்பரோ? தகாது
அப்புறத்து என்பரோ? அறைதி' ஆல் என்றான்.

இப்புறத்து - இப்பால். ஒப்புறநோக்கி – ஏற்பப் பார்த்து. வந்துற்ற தானையர் – வந்து சேர்ந்த வானரப் படை விரரான அனுமன் முதலியோர். தகாது – காண்டற்கேற்றபடியின்றி. அப்புறத்து - வேறுலகத்து. இராமன் இரவிசேயினை நோக்கி, என்பரோ என்பரோ அறைதி என்றான் என்க. ஆல் – அசை. (53)

அனுமன்வர இராமபிரான் அவனை நோக்குதல்

1300. என்புழி யனுமனு மிரவி யென்பவன்
தென்புலத் துளனெனத் தெரிவ தாயினன்
பொன்பொழி தடக்கையப் பொருவில் வீரனும்
அன்புறு சிந்தைய னமைய நோக்கினன்.

என்புழி அனுமனும், இரவி என்பவன்
தென் புலத்து உளன் எனத் தெரிவது ஆயினன்;
பொன் பொழி தடக்கை அப் பொரு இல் வீரனும்
அன்பு உறு சிந்தையன்; அமைய நோக்கினன்.

என்புழி - என்று சொல்லும்பொழுது. இரவி - சூரியன். தென் புலத்து - தென்றிசையில். அனுமனுடலினின்று எழும் ஒளியால் அவன் ஒளிக்கடவுளாகிய சூரியன்போலத் தெரிந்தான் என்றவாறு. பொரு - ஒப்பு. வீரன் என்றது இராமபிரானை. (54)

### அனுமன் பிராட்டியின் தூயநிலையைக் குறிப்பால் உணர்த்துதல்

**1301.** எய்தின னனுமனு மெய்தி யேந்தறன்
மொய்கழ றொழுகிலன் முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகந் தழீஇநெடி திறைஞ்சி வாழ்த்தினான்.

எய்தினன் அனுமனும்; எய்தி, ஏந்தல் தன்
மொய் கழல் தொழுகிலன், முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன், கையினன்,
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி, வாழ்த்தினான்.

அனுமனும் எய்தினன் என மாறிக் கூட்டுக. ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன், இராமபிரான். மொய்கழல் - வலிய திருவடிகளை. 'திண் கழல்' (திவ். திருவாய்மொழி. 1, 2, 10) என்றார் பெரியாரும். முளரி நீங்கிய தையல் என்றது சீதாபிராட்டியை. முளரி - தாமரை. சீதாபிராட்டி திருமகளின் அமிசமாய் அவதரித்தமையால் முளரி நீங்கிய தையல் என்றார். அனுமனும் எய்தி, தையலை நோக்கிய தலையன், கையினன், நெடிது இறைஞ்சி வாழ்த்தினன் என முடிக்க. (55)

### அனுமன் செயலால் பிராட்டியின் தூயநிலை முதலியவற்றை இராமபிரான் அறிதல்

**1302.** திண்டிற லவன்செய றெரிய நோக்கினான்
வண்டிய லோதியும் வலியண் மற்றிவன்
கண்டது முண்டவள் கற்பு நன்றெனக்
கொண்டனன் குறிப்பினு லுணருங் கொள்கையான்.

திண் திறலவன் செயல், தெரிய நோக்கினன்;
வண்டு இயல் ஓதியும் வலியள்; மற்று இவன்,
கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்று; எனக்
கொண்டனன், குறிப்பினல் உணரும் கொள்கையான்.

திண் திறலவன் செயல் - பெருவலியுடையனன அனுமன் செயலே. வண்டு இயல் ஓதி என்றது சீதாபிராட்டியை. இவன் என்று சுட்டியது அனுமனே. அவள் என்றது பிராட்டியை. குறிப்பினல் உணரும் கொள்கையான் என்றது இராமபிரானே. குறிப்பறிதலிற் சிறந்தோர் கோசல தேசத்தார் என்னும் வழக்கும் இங்கு நோக்கத்தகும். குறிப்பினல் உணரும் கொள்கையான், திறலவன் செயல் நோக்கினன்; ஓதியும் வலியள், அவள் கற்பும் நன்று எனக் கொண்டனன் என்க. நோக்கினன் - நோக்கினவனாகி. (56)

### அனுமன் செயலால் இராமபிரான் உற்ற உவகை நிலை

**1303.** ஆங்கவன் செய்கையை யளவை யாமென
ஓங்கிய வுணர்வினல் விளைந்த துன்னினன்
வீங்கின தோள்புனன் மலர்க்கண் விம்மின
நீங்கின தருந்துயர் காத னீண்டதே.

ஆங்கு அவன் செய்கையை, அளவை ஆம் என
ஓங்கிய உணர்வினல் விளைந்தது உன்னினன்;
வீங்கின தோள்; புனல் மலர்க்கண் விம்மின;
நீங்கினது அருந்துயர்; காதல் நீண்டதே.

(குறிப்பினல் உணரும் கொள்கையான்), ஆங்கு அவன் செய்கையை அளவை ஆம் என, ஓங்கிய உணர்வினல் விளைந்தது உன்னினன் (ஆக), தோள்கள் வீங்கின; மலர்க்கண் புனல்விம்மின; துயர் நீங்கியது; காதல் நீண்டது, என இயைக்க. அவன் என்றது அனுமனே. அளவை - அளவுகருவி. தோள் பூரித்தல் முதலியவை, பிராட்டி தூய நிலையில் உளள் என்று அறிந்தமையால் எழுந்த மகிழ்ச்சியால் விளைந்தவை. (57)

### அனுமன் தான் பிராட்டியைக் கண்டமை இராமபிரானிடம் கூறுதல்

**1304.** கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களாற்
றெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்

அண்டநா யகவினித் தவிர்தி யையமும்
பண்டுள துயருமென் றனுமன் பன்னுவான்.

'கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்
தெண்டிரை அலை கடல் இலங்கைத் தென் நகர்,
அண்ட நாயக! இனித் தவிர்தி ஐயமும்
பண்டு உள துயரும்' என்று அனுமன் பன்னுவான்.

அனுமன், அண்டநாயக! கண்டனென், கற்பினுக்கு அணியைக் கண்டனென், இலங்கைத் தென்னகர்க் கண்டனென், இனி ஐயமும் துயரும் தவிர்தி என்று பன்னுவான்: என்க. நாடச் சென்றவன் கண்டானோ காணனோ என ஐயுற்று நிற்கும் பெருமான்முன் அவ் ஐயுறவு நீரக் 'கண்டனென்' என்றான். சீதாபிராட்டியைத் தேடிக் காணச் சென்றவன் கூற்றாதலின், கண்டேன் எனவே காணப்பட்டவள் பிராட்டி யென்பது கூறுதே அமையும். கண்ட இடம் தெரிய, இலங்கைத் தென்னகர்க் கண்டனென் என்றான். ஆப்தர் சொல்ல அறிதலும் காண்டலோடொக்குமாதலின் அவ்வாறு அறிந்ததன்றென்று தெளிய, கண்டனன் என்றான். பிராட்டிபால் அமைந்த கற்பினுக்கு அணியாம் தன்மைகளை, என் கண்களால் ஆரக் கண்டதேயன்றி, நின்னைப் பிரிந்து அரக்கர் வன்சிறையில் இருந்த நிலையில், எல்லை கடந்தெழுந்த துயரத்தால் நீர்பொழிய நின்ற அவள் கண்களாலும்* கண்டேன் என்பதும் புலப்பட, என் கண்களால் என்னாது, கண்களால் எனப் பொதுப்படக் கூறினான். கண்டேன் எனவே அமையுமாயினும் கண்களால் என்றதனால் நியன நோக்கியறியாத கண் என்பது பெறப்பட்டது. இக்கருத்து, 'காசில் கண்ணினைசான்றெனக் கண்டனன்' (428) என முன்னே (காட்சிப் படலத்தில்) ஆசிரியர் கூறுதலாலும் வலியுறும். அன்றியும், "மாணநோற் றீண்டிவள் இருந்தவாறெலாம் – காண நோற்றிலனவன் கமலக்கண்களால்" (402) என்று நினைந்தவனாதலின், பிராட்டியைக் கண்டமையால் தனக்கும் தன் கண்களுக்கும் உண்டாகிய சிறப்பும் புலப்படக் கண்களாற் கண்டனென் என்றான் எனினும் அமையும்.

அனுமன், தான் பிராட்டியைக் கண்டமையும், அவள் கற்பின் சீர்மையும், கண்ட இடமும் கூறும் இச் செய்யுள், நவிலுந்தோறும் நவிலுந்தோறும் நயம்பல நல்கி மகிழ்விப்பது. இதனுள் அமைந்த பொருள்களனைத்தும் விரிப்பிற் பல்கும். (58)

---

* பிராட்டிபால் அமைந்த கற்பின் சீர்மை யனைத்தும் அவள் கண்களே காட்டத் திருவடி கண்டமை கம்பர்க்கும் கருத்தென்பது, இக்காண்டத்து 333, 335, 336, 337, 338, 393, 428, 444, 486, 526, 556, 559, 1309, 1314, 1316, 1321, 1324 ஆம் பாடல்களாலும் புலனாகும்.

## அனுமன் பிராட்டி பெருந்தகவினைத் தான் கண்டவாறு விரித்துரைத்தல் 1305—1325

1305. உன்பெருந் தேவி யென்னு
★ முரிமைக்கு முன்னைப் பெற்ற
மன்பெரு மருகி யென்னும்
வாய்மைக்கு மிதிலை மன்னன்
தன்பெருந் தனயை யென்னுந்
தகைமைக்குந் தலைமை சான்றாள்
என்பெருந் தெய்வ மையா
வின்னமுங் கேட்டி யென்பான்.

*"உன் பெருந்தேவி என்னும்*
*உரிமைக்கும், உன்னைப் பெற்ற*
*மன் பெரு மருகி என்னும்*
*வாய்மைக்கும், மிதிலை மன்னன்*
*தன் பெருந் தனயை என்னும்*
*தகைமைக்கும், தலைமை சான்றாள்;*
*என் பெருந்தெய்வம்; ஐயா!*
*இன்னமும் கேட்டி? என்பான்.*

ஐயா! உரிமைக்கும் வாய்மைக்கும் தகைமைக்கும் தலைமை சான்றாள் என் பெருந்தெய்வம்; இன்னமும் கேட்டி என்பான் எ - று.

தேவி, மருகி, தனயை என்ற மூன்றுமே நன்மகள் ஒருத்தி வமிச வழியில் அடையக்கூடிய முறைப்பெயர்கள். அவற்றுள் பெருந்தேவி, பெருமருகி, பெருந்தனயை என்ற பேறுகள் சிறப்புடையனவாம். இம் மூன்று பெரும் பேறுகளையும் பிராட்டி முன்பு பெற்றவளே. அஃதாவது— கோசல ராஜ்யத்தின் உரிமையுடைய தேவரீர்க்கு மனைவி முறையில் 'கோப்பெருந்தேவி' எனப்பட்ட சிறப்பும், உலகமுழுதாண்ட தசரத சக்கரவர்த்திக்குப் பெருமருகி என்ற சிறப்பும், மிதிலை மன்னனான ஜனக ராசனுக்குப் பெருந்தனயை என்ற சிறப்பும் ஆகும். ஆக மூவகை முறைகளாலும் உண்டான இயற்கைத் தலைமைகள் பிராட்டிக்கு உண்டாயினும், அத் தலைமைகளினும் மேம்பட்ட தலைமைகளும் உண்டு: என்கின்றான் மாருதி. அவையாவன:—நாயகனே அவதாரமூர்த்தி; மாமனோ, 'தன் மெய்யை நிற்பதாக்கி இறந்தானாகிய' தசரத சக்கரவர்த்தி; தந்தையோ உலகிற்சிறந்த பரம ஞானியான சனகராசன். இந்த உரிமை மெய்ம்மை தகைமைகளில் உத்தமோத்தமர்களான இவர்களின் சம்பந்தம் பெற்றவள் பிராட்டி என்பான் '*தலைமை*' உடையாள் என்றும், அத்தகையவள் இப்

போது தன் பெருங்கற்பினால் அடைந்துள்ள நிலைமை உலகில் எவருமே அடைதற்கரியது என்பான் 'தலைமை சான்றாள்' என்றும், இவற்றால் எனக்குத் தொழுகுலம் ஆயினள் என்பான் என் பெருந்தெய்வம் என்றும் கூறினன் மாருதி என்க.

> " கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது
> பொற்புடைத் தெய்வம் யாங் கண்டிலமால்"
>
> (சிலப். 15, 143-4)

என்று கண்ணகியைக் கவுந்தியடிகள் சிறப்பித்தவாறே பிராட்டியது கற்பின் பெருமைபற்றிப் பெருந்தெய்வம் என்றான் எனினும் ஆம். இவ்வாறு 'தலைமைசான்றாள்' என்பதற்குரிய சிறப்புக்களை இனி வருங் கவிகளில் விளக்குகின்றார். (59)

**1306.** பொன்னல தில்லைப் பொன்னை
யொப்பெனப் பொறையி னின்றாள்
தன்னல தில்லைத் தன்னை
யொப்பெனத் தனக்கு வந்த
நின்னல தில்லை நின்னை
யொப்பென நினக்கு நேர்ந்தாள்
என்னல தில்லை யென்னை
யொப்பென வெனக்கு மீந்தாள்.

பொன் அலது இல்லை பொன்னை
ஒப்பு, எனப் பொறையில் நின்றாள்
தன்னலது இல்லை, தன்னை
ஒப்பு, எனத் தனக்கு வந்த
நின்னலது இல்லை நின்னை
ஒப்பு, என நினக்கு நேர்ந்தாள்;
என்னலது இல்லை என்னை
ஒப்பு என எனக்கும் ஈந்தாள்.

தன்னை ஒப்பு தன்னலது இல்லை எனப் பொறையின் நின்றாள், நின்னை ஒப்பு நின்னலது இல்லை என நினக்கு நேர்ந்தாள், என்னை ஒப்பு என் அலது இல்லை என எனக்கும் ஈந்தாள் எ - று.

'தன்னை ஒப்பு தன்னையல்லது இல்லை' என்ற தொடர்க்கு உவமையாக வருவது, 'பொன்னை ஒப்பு பொன்னலது இல்லை' என்ற தொடர். பொன்னை ஒத்த பொருள் பொன்னேதான் என்பதுபோலத் தன்னை

ஒத்தவள் தானே என்று சொல்லும்படி என்பது முன்னிரண்டடிகளின் பொருள். பொன்னுக்கு, தீயிலிட்டுப் புடமிடுந்தோறும் தன் ஒளி சிறத்தலும், அவ் வொளிச் சிறப்பால் உலகிற்குச் சிரிய அணிகலமாதலும் இயல்பு; பிராட்டிக்கு, பிறர் வருத்த வருத்தத் தூயளாகிச் சிறந்து காட்டலும், அச் சிறப்பால் உலகம் தலைமேல் வைத்துக் கொண்டாடுதலும் இயல்பு; இவையே பொதுத் தன்மைகள் என உணர்க. இப் பொன்னின் உவமையை—

"பொன்னைத் தியிடைப் பெய்வதப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது மனக்கொள றகுதி" (123)

என மீட்சிப்படலத்து வரும் திருவாக்கானும் உணரத்தகும். இனி, பலகால் தீயிலிட்டுக் காய்ச்சி அடிக்குமிடத்தும் பொறுமையினின்று தன்னொளி மிகுத்து அணியாகக் காட்டுவது பொன்னின் இயல்பாதலால், 'பொன்னை யொப்பெனப் பொறையின் நின்றுள்' என்றனன் அனுமன்.

"இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்"

என்று பின்வரும் அவன் கூற்றாலும் இஃது உணரப்படும். ஆக, தன்னைச் சிறைப்படுத்து ஒறுத்தவிடத்தும் பொறுத்து நின்ற கற்புடையாட்டி எம்பிராட்டி என்பதாயிற்று.

இனி, பெருமுனிவரான விசுவாமித்திரர் இடைநின்று கூட்டத் தன் பெரும் பேருகக் கிடைத்தவன் இராமபிரானாதலின், 'தனக்கு வந்த' என்றும், அவளே போல மிதிலையில் அதிட்ட வசத்தால் காண நேர்ந்து, தன் பாக்கியமாக அமைந்த செல்வியாதலின் 'நினக்கு நேர்ந்தாள்' என்றும் கூறப்பட்டன.

'வாத மாமகன் மற்கடம் விலங்கு' என்று இகழாமல் உகந்தேற்றுக் கொண்டும், தன் வாலிவிட்ட தீயைக் குளிரச்செய்தும், அதனால் இலங்கையைத் தான் அழித்தற்கு அருள் புரிந்தும் போந்தவள் பிராட்டியே யாதலால், 'என்னலதில்லை என்னை யொப்பு என எனக்கும் ஈந்தாள்' என்று முடிவில் கூறினன் மாருதி என்க. (60)

**1307.** உன்குல முன்ன தாக்கி
யுயர்புகழ்க் கொருத்தி யாய
தன்குலந் தன்ன தாக்கித்
தன்னையித் தனிமை செய்தான்

வன்குலங் கூற்றுக் கீந்து
வானவர் குலத்தை வாழ்வித்
தென்குல மெனக்குத் தந்தா
ளென்னினிச் செய்வ தெம்மோய்.

உன் குலம் உன்னது ஆக்கி,
உயர் புகழ்க்கு ஒருத்தி ஆய
தன் குலம் தன்னது ஆக்கி,
தன்னை இத் தனிமை செய்தான்
வன் குலம் கூற்றுக்கு ஈந்து,
வானவர் குலத்தை வாழ்வித்து,
என் குலம் எனக்குத் தந்தாள்;
என் இனிச் செய்வது எம்மோய்!

(அப் பிராட்டி) உன் குலம் உன்னதாக்கி, தன் குலம் தன்னதாக்கி வன்குலம் கூற்றுக்கு ஈந்து வானவர் குலத்தை வாழ்வித்து என் குலம் எனக்குத் தருவாள் (ஆயினள்). எம்மோய் செய்வது இனி என்? எ - று.

ஒரு குலம் பெருமை பெறுவதற்கு, அதனிற் பிறந்த பெண்பாலாரே முக்கிய காரணம் என்பர்; ஆயினும் பிராட்டி உதித்த பின்பு புக்ககுலம் பிறந்த குலம், வானவர் குலம், என் குலம் எல்லாவற்றையும் மேன்மை யுறச் செய்ததோடு, குலத் தலைமைகளையும் அவ்வவர்க்கே அளிக்கலாயினள் என்பது இப் பாடலின் கருத்து. இராவண குலம் அழிந்து வானவர் குலம் வாழ்வது, இராவண சங்காரத்தின் பின்பேயாயினும், இலங்கையுள் தான் புகுந்து அரக்கரியல்புகளை அறிந்ததற்கும் அவர்களிற் பெரும் பகுதியை அழித்ததற்கும் காரணபூதையாயிருந்தவள் பிராட்டியே என்பதை நன்கறிந்தவன் மாருதியாதலின், 'தன்னை இத்தனிமை செய்தான் வன்குலம் கூற்றுக்கீந்து வானவர் குலத்தை வாழ்வித்து' என்று கூறினன். இப் பெருவாழ்வினால் அவதார காரியம் முற்றுப்பெறுதலோடு "ராம குலம் ஜானகி குலம் அனுமன் குலம்" என்று குலத் தலைமைகளும் அவரவர்கட்கே உரியவாயின என்கின்றான் அவன். 'உன்னது ஆக்கி' 'தன்னதாக்கி' என்ற சொல்நோக்கால் புக்ககுலமும் பிறந்தகுலமும் ஆக்கம் பெற்றதும், 'என்குலம் எனக்குத் தந்தாள்' என்றதனால் புதிய தான பெருமையொன்றைத் தனக்கு அளித்ததும் பெறப்படும். ஆக்கினாள் தந்தாள் என இறந்த காலத்தாற் கூறியது, விரைவும் உறுதியும் பற்றி என்க.

தன்னை இத்தனிமை செய்தான் – தன்னைப் பிரித்துச் சிறையிட்டவன். கூற்றுக்கு ஈந்து – கொன்றழித்து எ - று. மோய் - தாய்; மாய் என்று இக் காலத்து வடநாட்டார் வழங்குஞ் சொல் ஒப்பிடத்தகும். (61)

**1308.** விற்பெருந் தடந்தோள் வீர
வீங்குநீ ரிலங்கை வெற்பின்
நற்பெருந் தவத்த ளாய
நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்ப தொன்று
மிரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றுங்
களிநடம் புரியக் கண்டேன்.

*வில் பெரும் தடம் தோள் வீர!*
*வீங்கு நீர் இலங்கை வெற்பில்,*
*நல் பெரும் தவத்தள் ஆய*
*நங்கையைக் கண்டேன் அல்லேன்;*
*இல் பிறப்பு என்பது ஒன்றும்,*
*இரும் பொறை என்பது ஒன்றும்,*
*கற்பு எனும் பெயரது ஒன்றும்*
*களி நடம் புரியக் கண்டேன்.*

வீர! இலங்கையில் நங்கையைக் கண்டேன் அல்லேன், இற்பிறப்பு, இரும்பொறை, கற்பு (மூன்றும்) களிநடம் புரியக் கண்டேன் என்க.

தான் சிறப்பிக்கப் புகுந்த நங்கையை, தவத்தள், பெருந்தவத்தள், நற்பெருந்தவத்தள் என்று அடைமொழிகளாற் சிறப்பிக்கின்ருன் அனுமன். தவம் என்பது ஈண்டு, தன்னைத்தான் கொண்டொழுகும் நெறி. இஃது 'ஒருமை மகளிர்' இல்லில் இருந்தே பெரும்பாலும் செய்து ஒழுகுவது. பெருந்தவமாவது கணவனது வாழ்விலும் தாழ்விலும் உடனிருந்து கற்புநெறி வழுவாது நோற்பது; நற்பெருந் தவமாவது – பிறர் தன்னைப் பிரித்த நிலையிலும் துன்புறுத்திய நிலையிலும், தன் குடிமை பொறை கற்புகட்குக் குறைவு நேராது ஒழுகுவது. இம் மூன்றும் நிலையே பிராட்டி இப்போது மேற்கொண்டுளாள் என்பது இப் பாடற் கருத்து. சாம்பவன் கூறியபடி 'நினைவாலும் மாதர் நலம் பேணுது வளர்ந்தவன்' மாருதியாதலின், பிராட்டியைத் தான் கண்டதையும் பேசியதையும் மறந்தவன் போல, இலங்கையில் தான் கண்டனவெல்லாம், நற்பெருந் தவத்தின் மூன்று அமிசங்களான இற்பிறப்பும் இரும்பொறையும் கற்புமாகிய குணங்களே என்றும், அவை மூன்றுங் கூடிக் களிநடம் புரிந்து கொண்டிருந்ததனையே தான் பார்க்கலாயிற்று என்றும், அதனுல் தேவரீர் தேடச்சொன்ன நங்கையை நான் பார்க்கக்கூடவில்லை என்றும் சாதுரியமாகக் கூறலாயினன் மாருதி என்க.

" உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு" (திருக்குறள். 261)

என்பதனல், தவமும் ஒரு வகையில் பண்பியாகவே கூறப்படுதல் ஈண்டு அறியத்தகும். இலங்கை வெற்பில் என்றது, பகைவர் மலையில் தவம் புரிபவள் பிராட்டி என்பதைக் குறிப்பிக்கும். (62)

**1309.** கண்ணினு முளைநீ தையல்
கருத்தினு முளைநீ வாயின்
எண்ணினு முளைநீ கொங்கை
யிணைக்குவை தன்னி னேவா
தண்ணல்வெங் காம னெயத
வலரம்பு தொளைத்த வாருப்
புண்ணினு முளைநீ நின்னைப்
பிரிநதமை பொருந்திற் ருமோ.

கண்ணினும் உளை நீ; தையல்
கருத்தினும் உளை நீ; வாயின்
எண்ணினும் உளை நீ; கொங்கை
இணைக்குவை தன்னின் ஓவாது
அண்ணல் வெம் காமன் எய்த
அலர் அம்பு தொளைத்த ஆருப்
புண்ணிலும் உளை நீ; நின்னைப்
பிரிந்தமை பொருந்திற்று ஆமோ!

(பிராட்டியின்) கண்ணினும் கருத்தினும் எண்ணினும், கொங்கை தன்னில் அலரம்பு தொளைத்த புண்ணினும் நீ உளனு யுள்ளபொழுது உன்னைப் பிரிந்தவள் என்பது பொருந்திற்று ஆமோ என்க.

வாயின் எண்ணினும் (உளை) என்றது, பிராட்டியின் திருவதரத்தில் இராமநாம உச்சாரணமே எந்நேரமும் பயின்று வருதல் பற்றி என்க. ஓவாது-இடைவிடாமல். அலரம்பு-புஷ்பபாணம். விரகதாபத்தால் வருத்த முறுதலின், அலரம்பு தொளைத்த ஆருப் புண்ணினும் என்ருர். (63)

**1310.** வேலையு ளிலங்கை யென்னும்
விரிநக ரொருசார் விண்டோய்
காலையு மாலை தானு
மில்லதோர் கனகக் கற்பச்

சோலையங் கதனி லும்பி
புல்லினுற் றொடுத்த தூய
சாலையி னிருந்தா ளைய
தவஞ்செய்த தவமாந் தையல்.

வேலையுள் இலங்கை என்னும்
விரி நகர் ஒரு சார், விண் தோய்
காலையும் மாலை தானும்
இல்லது, ஓர் கனகக் கற்பச்
சோலை அங்கு அதனில்,
உம்பி புல்லினுல் தொடுத்த தூய
சாலையின் இருந்தாள்; ஐய!
தவம் செய்த தவம் ஆம் தையல்.

ஐய! தவம் செய்த தவமாம் தையல் இலங்கை நகர் ஒருசார் சோலை யங்கதனில் புல்லினுல் தொடுத்த சாலையின் இருந்தாள் என்க.

தவம் செய்த தவமாம் தையல் – பாதிவிருத்தியம் என்ற தவம், தான் செய்த தவத்தின் பயனுக வந்தவள் எ – று. விண்தோய் சோலை – ஆகா யத்தை அளாவிய அசோகவனம். காலையும் மாலைதானும் இல்லதோர் சோலை – காலை என்பதும் மாலை என்பதும் அறியப்படுதல் இல்லாத ஒப் பற்ற சோலை; கனகக் கற்பச் சோலை – பொன்மயமான கற்பக தருவுடைய சோலை. காலை மாலைகள் அறியப்படாமை, மரச்செறிவாலேனும் பொன் மயமான கற்பக தருக்களின் ஒளியாலேனும் அமைந்ததாம். கற்பகதரு – பொன்னுல் அமைந்த செயற்கை மரமாகவேனும், இந்திரலோகத்திலிருந்து இராவணன் கொணர்ந்து நட்டதாகவேனும் கொள்ளத்தகும். உம்பி புல்லினுல் தொடுத்த தூய சாலையின் – இளவலான இலக்குமணரால் பஞ்சவடி என்னும் சோலையுள் அமைக்கப்பட்ட தூய பர்ணசாலையில். இச் சாலையைப் பெயர்த்து அதனுடனே பிராட்டியை இராவணன் எடுத்துச் சென்ருன் என்பது, ஆரணிய காண்டத்தினும், அடுத்த கவியினும் குறிக்கப்படுதல் காண்க. (64)

**1311.** மண்ணொடுங் கொண்டு போனுன்
வானுயர் கற்பி னுடன்
புண்ணிய மேனி தீண்ட
வஞ்சுவா னுலகம் பூத்த

கண்ணகன் கமலத் தண்ணல்
கருத்திலாட் டொடுதல் கண்ணின்
எண்ணருங் கூருய் மாய்தி
யென்றதோர் மொழியுண் டென்பார்.

மண்ணெடும் கொண்டுபோனன்,
வான் உயர் கற்பினள் தன்
புண்ணிய மேனி தீண்ட
அஞ்சுவான்; உலகம் பூத்த
கண் அகன் கமலத்து அண்ணல்,
'கருத்திலாள் தொடுதல் கண்ணின்,
எண் அரும் கூறு ஆய் மாய்தி'
என்றது ஓர் மொழி உண்டு என்பார்.

கமலத்தண்ணல், 'கருத்திலாள் தொடுதல்கண்ணின் கூருய் மாய்தி' என்றதோர் மொழியுண்டு என்பார். (அதனல்) கற்பினள் மேனி தீண்ட அஞ்சுவான் மண்ணெடும் கொண்டுபோனன் என்க.

கண்ணகன் கமலத்து உலகம் பூத்த என இயையும். இடமகன்ற (திருமாலின்) உந்திக்கமலத்துத் தோன்றி உலகங்களைப் படைத்த பிரமதேவன் என்பது பொருள். தேவும் எப்பொருளும் படைக்கப் பூவின் நான்முகன் தோன்றியவனதலின் இவ்வாறு கூறப்பட்டான். கருத்திலாள் தொடுதல் கண்ணின் – விருப்பமில்லாத பெண்ணை வலியத் தொடுதல் கருதுவையானல்; எண்ணருங்கூருய் மாய்தி – பற்பல கூறுகளாகி நீ மாய்வாய்; என்றதோர் மொழியுண்டு என்பார் – என்று சாபமிட்டதோர் வரலாறு உள்ளது என்பார்கள். பிரமனை வழிபடவேண்டி அவன்பாற் சென்றுகொண்டிருந்த புஞ்சிகத்தலை என்ற தேவமாதினை ஆகாய நெறியிற் கண்ணுற்ற இராவணன், அவளைக் காதலித்து வலியிற் கற்பழிக்க, அங்கிலையோடு அவள் பிரமனிருக்கையைச் சார்ந்து நின்ருள் என்பதும், அதனை யுணர்ந்த பிரமன் கடுஞ்சினங் கொண்டு, இராவணனை நோக்கி, 'இனி நீ அயல் மாதரை வலியிற் கற்பழிப்பாயாயின் அப்பொழுதே உன் தலை நூறு நூருகப் பிளந்து அழிக' என்று சாபமிட்டனன் என்பதும் வரலாறு. (65)

**1312.** தீண்டில னென்னும் வாய்மை
திசைமுகன் செய்த முட்டை
கீண்டில தனந்த னுச்சி
கிழிந்தில தெழுந்து வேலை

மீண்டில சுடர்கள் யாவும்
விழுந்தில வேதஞ் செய்கை
மாண்டில தென்னுந் தன்மை
வாய்மையா னுணர்தி மன்னே.

திண்டிலன் என்னும் வாய்மை,
திசைமுகன் செய்த முட்டை
கீண்டிலது, அனந்தன் உச்சி
கிழிந்திலது, எழுந்து வேலை
மீண்டில, சுடர்கள் யாவும்
விழுந்தில, வேதம் செய்கை
மாண்டிலது, என்னும் தன்மை
வாய்மையான் உணர்தி, மன்னே!

திண்டிலன் என்னும் வாய்மை, கீண்டிலது, கிழிந்திலது, மீண்டில, விழுந்தில, மாண்டிலது என்னுந் தன்மை வாய்மையான் உணர்தி என்க. திசைமுகன் செய்த முட்டை கீண்டிலது - பிரமன் படைத்த அண்டகோளம் பிளவாமையும், அனந்தன் உச்சி கிழிந்திலது – ஆதிசேடனது தலை கிழியாமையும்,வேலை எழுந்து மீண்டில – கடல்கள் பொங்கி மீளாமையும், சுடர்கள் யாவும் விழுந்தில – சந்திர சூரிய நட்சத்திரங்கள் எல்லாம் கீழே விழாமையும், வேதம் செய்கை மாண்டிலது - வேதம் தம்செய்கை மாளாமையும்; ஆகிய இத்தன்மைகள் உறுதியாக நிகழ்ந்துவருதலால், இராவணன் திண்டிலன் என்னும் வாய்மையை நீ அறிந்தருள்க (என்முன் மாருதி). முதலடியில் உள்ள வாய்மை உண்மை என்ற பொருளிலும், நான்காமடியி லுள்ள வாய்மை வாய்ந்துள்ளமை என்ற பொருளிலும் வந்தன. வாய்மை – நிலைத்துநிற்றல்; மை, தொழிற்பெயர் விகுதி. வேதம் தன் செய்கையை விட்டு அழிந்திலது என்றது, யாகாதி கருமங்கள் வேதநெறிப்பட நிகழ்த லாம். (66)

**1313.** சோகத்தா ளாய நங்கை
கற்பினாற் றொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப் புற்றார் மற்றைப்
பாகத்தா ளிப்போ தீசன்
மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தா ளல்லண் மாய
னுயிர மௌலி மேலாள்.

சோகத்தாள் ஆய நங்கை
கற்பினல், தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவிமாரும்,
வான் சிறப்பு உற்ருர்; மற்றைப்
பாகத்தாள் இப்போது ஈசன்
மகுடத்தாள்; பதுமத்தாளும்
ஆகத்தாள் அல்லள், மாயன்
ஆயிரம் மௌலி மேலாள்.

பிராட்டி சிறையிருந்து வருந்திய சோகத்தால்தான் அவளது கற்பு நிலை பெருஞ்சிறப்புற்றது என்பார், சோகத்தாளாய நங்கை கற்பினல் என்ருர். அக்கற்பின் பழுதற்ற நிலைமையால் பெருந்தேவர்களின் மகளிரும் பெருமை பெருகித் தத்தம் கணவர்களால் போற்றப்படுவாராயினர் என்பது இப்பாடற் கருத்து.

மாகத்தார் தேவிமாரும் – இந்திராணி சரசுவதி போலும், விண்ணவர் மனைவிமார்களும்; வான் சிறப்பு உற்ருர் - இவர்கள் யாரும் தொழுதற்கு உரியவரேயாயினும், தத்தம் கணவர்களால் போற்றப்படும் பெருஞ் சிறப்பை அடைந்தார் எ - று. ஈசன் பாகத்தவளான உமாதேவி இப்போது அவன் மகுடத்தில் இருப்பவளானுள் என்றது, உச்சிமேல் வைத்துக் கொண்டாடப்படுபவளானுள் எ – று. பதுமத்தாள் – திருமகள். அவள் இப்போது திருமாலின் திருமேனியில் இல்லாது, அப்பெருமானது ஆயிரங்கிரீடத்தின் மேலிடத்து உள்ளவளானுள் எ - று. வெறுந்தலை யொன்றில் ஏற்றிக் கொள்வது குறையென்று தன் ஆயிரந்தலைகளிலும் உள்ள திருமுடிகள் மேல் வைத்துக் கொள்வதே தகுதி என்று கருதிப் போற்றினன்: என்பது கருத்து. திருமாற்கு முடியாயிரம் என்று வேதமும் கூறும். (67)

**1314.** இலங்கையை முழுது நாடி
யிராவண னிருக்கை யெய்திப்
பொலங்குழை யவரை யெல்லாம்
பொதுவுற நோக்கிப் போந்தேன்
அலங்குதண் சோலை புக்கே
னவ்வழி யணங்கன் ஞளைக்
கலங்குவெண் டிரையிற் ருய
கண்ணினீர்க் கடலிற் கண்டேன்.

இலங்கையை முழுதும் நாடி,
இராவணன் இருக்கை எய்திப்
பொலம் குழையவரை எல்லாம்
பொது உற நோக்கிப் போந்தேன்,
அலங்கு தண் சோலை புக்கேன்;
அவ்வழி அணங்கு அன்னாளைக்
கலங்கு வெண் திரையிற்று ஆய
கண்ணின் நீர்க் கடலில் கண்டேன்.

பொலங்குழை - பொற்குண்டலம். பொதுவுற (எனது விரைவுற்ற செலவில்) பொதுவாகவே. அலங்குதண் சோலை - காற்றால் அசைகின்ற குளிர்ந்த அசோகவனம். அணங்கன்னாளை - எம் குலத்துக்குத் தெய்வம் போன்றவளை. கலங்கு வெண்திரையிற்று ஆய கடல் - கலக்கமுற்ற வெண்மையான அலைகளையுடைய கடல் எ - று. கடல்போல, சோகநீர் பெருகுதலின் கண்ணினீர்க் கடல் என்றார். (68)

**1315.** அரக்கிய ரளவற்றார்கள்
அலகையின் குழுவு மஞ்ச
நெருக்கினர் காப்ப நின்பால்
நேயமே அச்ச நீக்க
இரக்கமென் றொன்று தானே
யேந்திழை வடிவ மெய்தித்
தருக்குயர் சிறையுற் றன்ன
தகையளத் தமிய ளம்மா.

அரக்கியர் அளவு அற்றார்கள்,
அலகையின் குழுவும் அஞ்ச
நெருக்கினர் காப்ப, நின்பால்
நேயமே அச்சம் நீக்க,
இரக்கம் என்று ஒன்று தானே
ஏந்திழை வடிவம் எய்தித்
தருக்கு உயர் சிறை உற்றன்ன
தகையள்; அத் தமியள் அம்மா!

அத்தமியள், அரக்கியர் நெருக்கினர் காப்ப, நின்பால் நேயமே அச்சம் நீக்க, இரக்கம் ஏந்திழை வடிவம் எய்தி, சிறையுற்றன்ன தகையள் என்க.

அலகையின் குழுவும் அஞ்ச அரக்கியர் நெருக்கினர் காப்ப - பேய்க் கணங்களும் நடுங்கும்படி, அரக்கியர் பிராட்டியை நெருக்கியவராய்க் காவல் புரிய. பேய்க் கணங்களும் அஞ்சும்படி என்றது, 'பெண்ணென்ருல் பேயும் இரங்கும்' என்ற பழமொழிப்படி அவற்றுக்கும் பெண்பாலாரிடம் இரக்க முண்டாகும்; ஆனல் அத்தன்மையும் இல்லாதவர் என்று அரக்கியரின் கொடுமை கூறியவாறு. நின்பால் நேயம் அச்சத்தை நீக்கினமையால் அரக்கியர் கொடுமைகட்குச் சினங்கொள்ளாமல் அவரிடம் இரக்கமே காட்டலாயினள் பிராட்டி என்பார் 'இரக்கமென்றுென்று தானே ஏந்திழை வடிவமெய்தி...சிறையுற்றன்ன' என்ருர். தருக்கு உயர் சிறை உற்றன்ன - கொடுமைமிக்க சிறைக் காவலில் அகப்பட்டிருந்தாற் போன்ற. (69)

**1316.** மாண்பிறந் தமைந்த கற்பின்
வாணுத னின்பால் வைத்த
சேண்பிறந் தமைந்த காதல்
கண்களிற் றெவிட்டித் தீராக்
காண்பிறந் தமையா னீயே
கண்ணகன் ஞாலந் தன்னுள்
ஆண்பிறந் தமைந்த செல்வ
முண்டனை யாதி யன்றே.

மாண்பு இறந்து அமைந்த கற்பின்
வாள் நுதல், நின்பால் வைத்த
சேண் பிறந்து அமைந்த காதல்
கண்களில் தெவிட்டி, தீராக்
காண் பிறந்தமையால், நீயே
கண் அகன் ஞாலம் தன்னுள்
ஆண் பிறந்து அமைந்த செல்வம்
உண்டனை யாதி; அன்றே.

கற்பின் வாணுதல் நின்பால் வைத்த காதல், கண்களின் காண்டல் பிறந்தமையால் ஞாலந்தன்னுள் ஆண்பிறந்தமைந்த செல்வம் உண்டனை ஆதி எ - று.

மாண்பு இறந்து அமைந்த கற்பின் வாணுதல் - மாட்சிமைக் குணங்கள் மிக்கமைந்த கற்பினளான ஒளிரும் நெற்றியுடைய பிராட்டி. சேண் பிறந்து அமைந்த காதல் - பெருமைபெற்றமைந்த அன்பை; கண்களின் தெவிட்டித்தீரா காண் பிறந்தமையால் - கண்களால் தெவிட்டிவிடாமல்

கண்டு மகிழ்தற்கு நீ அவதரித்துள்ளதனுல்; கண் அகல் ஞாலம் தன்னுள்– இடமகன்ற இந்நிலவுலகில்; ஆண் பிறந்து அமைந்த செல்வம் – ஆண்மகனுகப் பிறத்தலால் உண்டான பாக்கியத்தை. உண்டனை ஆதி - அனுபவித்தவன் ஆகின்ருய் எ – று. எத்தகைய துன்பத்தையும் அச்சத்தையும் பொருட்படுத்தாத பேரன்புடையாள் பிராட்டி என்பார், 'நின்பால் வைத்த சேண் பிறந்து அமைந்த காதல்' என்றும், அதனுல் அவள் பாதிவிருத்தியம் ஒப்புயர்வற்றுள்ள தென்பார் 'மாண்பிறந்தமைந்த கற்பின் வாணுதல்' என்றும், அதனைக் காணும் பேறு உனக்கே அமைந்துளது என்பார் 'காண் பிறந்தமையால் ஆண் பிறந்து அமைந்த செல்வமுண்டனை யாதி' என்றும் கூறினர். காண் - காண்கை; முதனிலைத் தொழிற்பெயர். காண என வினையெச்சமாக்கினுமாம். உண்டனை - அனுபவித்தனை. [இக்கவி, பல பிரதிகளில் காணப்படவில்லை]. (70)

**1317.** அயிர்ப்பிலர் காண்பார் முன்னு
மறிந்தில ரெனினு மைய
எயிற்புனை யிலங்கை மூதூ
ரிந்திரன் யாக்கைக் கேற்ற
மயிற்புரை யியலி னரு
மைந்தரு நாளு மாங்கே
உயிர்ப்பொடு முயிரி னேடு
மூசனின் ருடு வாரும்.

அயிர்ப்பு இலர் காண்பார், முன்னும்
அறிந்திலர் எனினும், ஐய!
எயில் புனை இலங்கை மூதூர்
இந்திரன் யாக்கைக்கு ஏற்ற
மயில் புரை இயலினரும்,
மைந்தரும், நாளும் ஆங்கே
உயிர்ப்பொடும் உயிரினேடும்
ஊசல் நின்று ஆடுவாரும்.

ஐய! மயிற்புரை இயலினரும் மைந்தரும் ஊசல் நின்ருடுவாரும், இலங்கை மூதூர் முன்னும் அறிந்தில ரெனினும் அயிர்ப்பிலர் காண்பார் எ – று.

இந்திரன் யாக்கைக்கு ஏற்ற மயில் புரை இயலினரும் - இந்திரனது மயிலின் இயல்போன்ற யாக்கைக்கு ஏற்ப அமைந்த மயிலின் சாயல் கொண்ட தேவமாதரும்; என்றது, இந்திரனுடைய போகஸ்திரிகளை;

அவர்கள் மயிலின் சாயல்போன்ற அழகின ராயிருந்தமை, கௌதமரின் சாபத்தால் இந்திரன் பெற்றிருந்த மயிலின்சாயற்கு ஏற்றதாயிருந்தது என்பது கருத்து. பெருமூச்சுடனும் குற்றுயிருடனும் ஊசலாடுவார்போல, ஏவல் புரிந்து உழலும் இத்தேவமாதரும் தேவர்களும் முன்பு பிராட்டியை அறியாதவர்களாயிருந்தும் அவளது நிலைமையை இப்போது ஐயமின்றிக் கண்டு வருந்துவாராயினர் எ - று. (71)

[இப்பாடலும் பிரதிகள் பலவற்றில் இல்லை.]

**1318.** தையலை வணங்கற் கொத்த
விடைபெறுந் தன்மை நோக்கி
ஐயநா னிருந்த காலை
யலங்கல்வே லிலங்கை வேந்தன்
எய்தின னிரந்து கூறி
யிறைஞ்சின னிருந்து நங்கை
வெய்துரை சொல்லச் சீறிக்
கோறன்மேற் கொண்டு விட்டான்.

தையலை வணங்கற்கு ஒத்த
இடைபெறும் தன்மை நோக்கி,
ஐய! நான் இருந்த காலை,
அலங்கல் வேல் இலங்கை வேந்தன்,
எய்தினன், இரந்து கூறி,
இறைஞ்சினன்; இருந்து நங்கை
வெய்துரை சொல்லச் சீறிக்
கோறல் மேல்கொண்டு விட்டான்.

இடை பெறுந்தன்மை – சமயத்தைப் பெறும் நிலை. அலங்கல் வேல் – மாலையணிந்த வேற்படை தாங்கிய. நங்கை இருந்து வெய்து உரை சொல்ல - பிராட்டி நில்லாது இருந்துகொண்டே கடுமையான மொழிகளைக் கூற- சீறி - அவ்வார்த்தைகளைப் பொருது பெருஞ்சினங்கொண்டவனாய்- கோறல் – அவளைக் கொல்லுதலை. முன் தான், 'கண்ணினீர்க் கடலிற் கண்டேன்' என்று அனுமானித்தது, பிரத்யட்சப் பிரமாணத்தாலும் தெளியப்பட்டதை இப்பாட்டால் மாருதி தெரிவிக்கின்றான். (72)

1319. ஆயிடை அணங்கின் கற்பு
மையநின் னருளுஞ் செய்ய
தூயநல் லறனு மென்றிங்
கினையன தொடர்ந்து காப்பப்
போயின னரக்கி மாரைச்
சொல்லுமின் பொதுவி னென்றுங்
கேயின னவரெ லாமென்
மந்திரத் துறங்கி யிற்றார்.

ஆயிடை, அணங்கின் கற்பும்,
ஐய! நின் அருளும், செய்ய
தூய நல் அறனும், என்று இங்கு
இனையன, தொடர்ந்து காப்பப்
போயினன், அரக்கிமாரைச்
சொல்லுமின் பொதுவின் என்றுங்கு
ஏயினன், அவர் எலாம் என்
மந்திரத்து உறங்கி இற்றார்.

ஆயிடை, கற்பும் நின் அருளும் அறனும் காப்ப, 'பொதுவின் சொல்லுமின்' என்று ஏயினன் போயினன்; அவரெலாம் என் மந்திரத்து உறங்கி இற்றார் எ - று.

செய்ய தூய நல் அறன் – செவ்வையும் தூய்மையும் நன்மையும் உடைய தருமதேவதை. பொதுவின் சொல்லுமின் - நன்மை விளைத்தலும் திமை பயத்தலுமான வார்த்தைகளைப் பொதுப்படக் கூறுங்கள். என்றுங்கு, ஆங்கு அசைநிலை. ஏயினன் – கட்டளையிட்டனன். அவர்கள் விழிப்பாயுள்ள நிலையில், தான் பிராட்டியைக் கண்டு பேச இயலாமையால், தன் மந்திரவாற்றலால் அவர்களை உறங்கச் செய்ய, அவர்களும் உணர்வு கெட்டவரானர் என்க. (73)

1320. அன்னதோர் பொழுதி னங்கை
யாருயிர் துறப்ப தாக
உன்னினள் கொடியொன் றேந்திக்
கொம்பொடு முறைப்பச் சுற்றித்

தன்மணிக் கழுத்திற் சார்த்து
மளவையிற் றடுத்து நாயேன்
பொன்னடி வணங்கி நின்று
நின்பெயர் புகன்ற போழ்தில்.

அன்னது ஓர் பொழுதில், நங்கை,
ஆருயிர் துறப்பதாக
உன்னினள், கொடி ஒன்று ஏந்திக்
கொம்பொடும் உறைப்பச் சுற்றி,
தன்மணிக் கழுத்தில் சார்த்தும்
அளவையில், தடுத்து நாயேன்,
பொன்னடி வணங்கி நின்று,
நின்பெயர் புகன்ற போழ்தில்.

உன்னினள் – நினைத்தவளாய். கொம்பொடு – மரத்தைச் சார்ந்த கொம்போன்றனோடு. உறைப்பச் சுற்றி – உறுதியாகக் கட்டி. ஏனைய வெளிப்படை. (74)

**1321.** வஞ்சனை யரக்கர் செய்கை
யிதுவென மனக்கொண் டேயும்
அஞ்சன வண்ணத் தான்றன்
பெயருரைத் தளியை யென்பால்
துஞ்சுறு பொழுதிற் றந்தாய்
துறக்கலென் றுவந்து சொன்னாள்
மஞ்சென வண்ணக் கொங்கை
வழிகின்ற மழைக்க ணீராள்.

“வஞ்சனை அரக்கர் செய்கை
இது” என, மனக்கொண் டேயும்,
‘அஞ்சன வண்ணத்தான் தன்
பெயர் உரைத்து, அளியை என்பால்,
துஞ்சுறு பொழுதில் தந்தாய்,
துறக்கல்’ என்று உவந்து சொன்னாள்
மஞ்சு என, வண்ணக் கொங்கை
வழிகின்ற மழைக்கண் நீராள்.

மஞ்சு என வண்ணக் கொங்கை வழிகின்ற மழைக் கண்ணீராள் - (மலைமேற் பெய்யும்) மழைபோல் அழகிய தனங்களின்மேற் பெய்தோடும் குளிர்ந்த கண்களின் நீரையுடையவளான பிராட்டி. இது வஞ்சனை அரக்கர் செய்கை என மனக்கொண்டேயும் - (நான் இவ்வாறு நின் திருநாமம்) கூறியதை வஞ்சனையுடைய அரக்கரின் மாயைச் செய்கையாம் என்று கருதிச் சந்தேகித்தும்; என்பால் அளியை - (என்னை நோக்கி) என் பக்கல் அருளுடையவன் நீ. துஞ்சுறு பொழுதில், அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்து, துறக்கல் தந்தாய் - (யான்) இறக்குந் தறுவாயில் மைபோற் கரிய மேனியுடைய இராமபிரானது திருநாமத்தைச் சொல்லி (மரணம்) ஒழிதலைச் செய்தாய். உவந்து சொன்னாள் - திருவுள முவந்தவளாய்ச் சொன்னாள். எ - று. துறக்கல் - மரணம் ஒழிதல்: (75)

### ஆழிபெற்ற பிராட்டிநிலை 1322—1325

**1322.** அறிவுறத் தெரியச் சொன்ன
பேரடை யாளம் யாவும்
செறிவுற நோக்கி நாயேன்
சிந்தையிற் றிருக்க மின்மை
முறிவற வெண்ணி வண்ண
மோதிரங் காட்டக் கண்டாள்
இறுதியி னுயிர்தந் தீயு
மருந்தொத்த தனைய தெந்தாய்.

*அறிவு உறத் தெரியச் சொன்ன*
*பேர் அடையாளம் யாவும்*
*செறிவு உற நோக்கி, நாயேன்*
*சிந்தையில் திருக்கம் இன்மை*
*முறிவு அற எண்ணி, வண்ண*
*மோதிரம் காட்டக் கண்டாள்;*
*இறுதியில் உயிர் தந்து ஈயும்*
*மருந்து ஒத்தது, அனையது; எந்தாய்!*

சொன்ன அடையாளம் யாவும் நோக்கி, சிந்தையில் திருக்கமின்மை எண்ணி மோதிரம் காட்டக் கண்டாள், அனையது, இறுதியில் உயிர் தந்து ஈயும் மருந்து ஒத்தது எ-று.

அறிவுறத் தெரியச் சொன்ன - பிராட்டி அறியும்படி தெளிவாகச் சொன்ன. செறிவுற நோக்கி - பொருந்தப்பார்த்து. நாயேன் சிந்தையில்

திருக்கம் இன்மை முறிவு அற எண்ணி-அடியேன் மனத்திலே மாறுபாடில்லாமையைக் கேடின்றி யோசித்து; வண்ண மோதிரம்-அழகிய (நினது) ஆழியை. இறுதியில்-மரணகாலத்தில். மருந்து-அமுதம். எந்தாய்-எந்தையே! (என் சுவாமி!). (76)

**1323.** ஒருகணத் திரண்டு கண்டே
னொளிமணி யாழி யான்ற
திருமுலைத் தடத்து வைத்தாள்
வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகமென் பதனின் வந்த
வெங்கொழுந் தீயி னுல்வெந்
துருகிய துடனே யாறி
வலித்தது குளிர்ப்புள் ளூற.

ஒரு கணத்து இரண்டு கண்டேன்;
ஒளி மணி ஆழி, ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தாள்;
வைத்தலும், செல்வ! நின்பால்
விரகம் என்பதனின் வந்த
வெம் கொழும் தீயினுல், வெந்து
உருகியது; உடனே ஆறி
வலித்தது; குளிர்ப்பு உள் ஊற.

செல்வ! ஒரு கணத்து இரண்டு கண்டேன், மணியாழி திருமுலைத் தடத்து வைத்தாள், விரகமென்னும் தீயினுல் வெந்து உருகியது. உடனே, குளிர்ப்பு உள் ஊற ஆறி வலித்தது என்க.

ஒருகணத்து இரண்டு கண்டேன்-ஒரு கணப்பொழுதிலே ஒன்றற்கொன்று மாறுபாடான இரண்டு வியக்கத்தக்க நிகழ்ச்சிகளை நான் பார்க்கலானேன். விரகம்-பிரிவால் நிகழ்ந்த காமவேதனை; இது, வெந்து உருகிய தற்குக் காரணம். குளிர்ப்பு உள் ஊற-குளிர்ச்சி மனத்துள் ஊறியதால்; இக்குளிர்ச்சி, இறுகியதற்குக் காரணம். (77)

**1324.** வாங்கிய வாழி தன்னை
வஞ்சரூர் வந்த தாமென்
றுங்குயர் மழைக்க ணீரா
லாயிரங் கலச மாட்டி

ஏங்கின ளிருந்த தல்லா
லியம்பல ளெய்த்த மேனி
வீங்கினள் வியந்த தல்லா
லிமைத்தில ளுயிர்ப்பு விண்டாள்.

வாங்கிய ஆழி தன்னை,
'வஞ்சர் ஊர் வந்ததாம்' என்று,
ஆங்கு உயர் மழைக் கண் நீரால்,
ஆயிரம் கலசம் ஆட்டி,
ஏங்கினள், இருந்தது அல்லால்,
இயம்பலள்; எய்த்த மேனி
வீங்கினள்; வியந்தது அல்லால்,
இமைத்திலள்; உயிர்ப்பு விண்டாள.

(என் கையினின்று) வாங்கிய அம்மணியாழியை வஞ்சகரான அரக்கரூர் வந்து தூய்மையிழந்ததென்று அப்பொழுதே உயர்ந்த மழை போன்ற கண்களின் நீர்கொண்டு திருமஞ்சனம் செய்வித்து என்பது முன்னிரண்டடிகளின் பொருள்.

(திருமஞ்சனஞ் செய்தபின்) ஏங்கினள் இருந்ததல்லால் இயம்பலள்—ஏங்கியவளாய் வாளா இருந்தது அல்லாமல் வேறு ஒன்றும் கூறியவளில்லை. எய்த்தமேனி விங்கினள் வியந்ததல்லால் இமைத்திலள்—இளைத்திருந்த திருமேனி பூரித்து வியப்புற்றதல்லாமல் நோக்கிய கண்களை மூடினளில்லை. உயிர்ப்பு விண்டாள்—மூச்சற்றாள்—எ—று.

ஏங்கினளாய் இருந்தது, இம்மணியாழியோடு தன்னை அணைக்கும் திருக்கைகளைக் காணப்பெற்றிலனே என்ற எண்ணத்தாலும், இயம்பாமை, அதனை வெளியிடக் கூடாமையாலும் நேர்ந்தன. எய்த்தமேனி வீங்கினமையும் இமையாமையும், 'இறக்கின்றாள் தொழுதாள்' எனத் தன் மாமியர்க்குச் செய்தி சொல்லிவிடுத்தவளுக்குத் திருவாழியைக் கொணர்ந்து சமர்ப்பித்தது, உவப்பும் வியப்பும் விளைத்தமையால் நேர்ந்தன என்று கொள்க. (78)

1325. அன்னவர்க் கடிய னேனிற்
பிரிந்தபி னடுத்த வெல்லாம்
சொன்முறை யறியச் சொல்லித்
தோகைநீ யிருந்த சூழல்

இன்னதென் றறிகி லாமே
யித்தனை தாழ்த்த தென்றேன்
மன்னநின் வருத்தப் பாடு
முணர்த்தினே னுயிர்ப்பு வந்தாள்.

அன்னவர்க்கு, அடியனேன்,
நிற் பிரிந்தபின் அடுத்த எல்லாம்,
சொல்முறை அறியச் சொல்லி,
'தோகை! நீ இருந்த சூழல்
இன்னது என்று அறிகிலாமே,
இத்தனை தாழ்த்தது' என்றேன்;
மன்ன, நின் வருத்தப் பாடும்
உணர்த்தினேன்; உயிர்ப்பு வந்தாள்.

மன்ன! அடியனேன், நிற்பிரிந்தபின் அடுத்த எல்லாம் அன்னவர்க்கு அறியச் சொல்லி, 'தோகை! நீ இருந்த சூழல் இன்னதென்று அறிகிலாமே இத்தனை தாழ்த்தது' என்றேன்; நின் வருத்தப்பாடும் உணர்த்தினேன்; உயிர்ப்பு வந்தாள் என்க.

அன்னவர்க்கு-பிராட்டியார்க்கு. சொல்முறை - யான் சொல்லவேண்டிய முறைப்படி. தோகை-மயில்போன்ற தேவி! அண்மைவிளி. சூழல்-இருப்பிடம். இத்தனை-இவ்வளவு காலமாக. வருத்தப்பாடு-துன்புற்ற நிலைமைகள். இதுவரை உயிர்ப்பு விண்ட அளவிலே இருந்த பிராட்டி, இப்போதுதான் தன் பிராணன் வரப்பெற்றுள் என்பார் 'உயிர்ப்பு வந்தாள்' என்றுர். (79)

### அனுமன் இராமபிரான்பக்கல் பிராட்டியின் சூளுறவினைக் கூறுதல்

**1326.** இங்குள தன்மை யெல்லா
மியைபுளி யியையக் கேட்டாள்
அங்குள தன்மை யெல்லா
மடியனுக் கறியச் சொன்னுள்
திங்களொன் றிருப்பெ னின்னே
திருவுளந் தீர்ந்த பின்னை
மங்குவெ னுயிரோ டென்றுன்
மலரடி சென்னி வைத்தாள்.

இங்கு உள தன்மை எல்லாம்
இயைபு உளி இயையக் கேட்டாள்;
அங்கு உள தன்மை எல்லாம்
அடியனுக்கு அறியச் சொன்னாள் ;
'திங்கள் ஒன்று இருப்பென், இன்னே
திரு உளம் தீர்ந்த பின்னை ;
மங்குவென் உயிரொடு' என்று, உன்
மலர் அடி சென்னி வைத்தாள்.

இன்னே-இவ்விடத்தே; 'இன்னே வாருங்கள்' (திருக்கோவை 55) என்புழிப்போல. திருவுளம் தீர்ந்த பின்னை - (எம்பிரானுக்கு) மனமில்லையாயின். மங்குவென்-உயிரொடுங்கி இறப்பேன் எ-று. மலரடி சென்னிவைத்தாள்-உன் திருவடித்தாமரைகளைத் தலையில் வைப்பவளாயினள் (திக்கு நோக்கித் தண்டன் சமர்ப்பித்தாள் என்றபடி). (80)

## அனுமன் இராமபிரானிடம் சூடாமணி வழங்குதல்

**1327.** வைத்தபின் றுகிலின் வைத்த
மாமணிக் கரசை வாங்கிக்
கைத்தலத் தினிதி னீந்தா
டாமரைக் கண்க ளார
வித்தக காண்டி யென்று
கொடுத்தனன் வேத நன்னூல்
உய்த்துள கால மெல்லாம்
புகழொடு மொக்க நிற்பான்.

வைத்தபின், துகிலின் வைத்த
மா மணிக்கு அரசை வாங்கி,
கைத் தலத்து இனிதின் ஈந்தாள் ;
'தாமரைக் கண்கள் ஆர
வித்தக! காண்டி' என்று,
கொடுத்தனன்; வேத நல் நூல்,
உய்த்து உள காலம் எல்லாம்,
புகழொடும் ஒக்க நிற்பான்.

வைத்தபின்-அவ்வாறு மலரடி சென்னி வைத்தபின்பு. மாமணிக்கு அரசை வாங்கி-உத்தம ரத்தினங்களுள் தலைமை பெற்ற சூளாமணியை (தன் துகில் முடிப்பினின்று) அவிழ்த்தெடுத்து, கைத்தலத்து இனிதின்

ஈந்தாள் - என் கையகத்தில் இன்முகத்தோடு கொடுத்தனள்; வித்தக-எல்லாம் அறிந்தமூர்த்தியே! தாமரைக் கண்கள் ஆரக் காண்டி - செந்தாமரை மலர் போன்ற தேவரீர் திருக்கண்கள் மகிழும்படி பார்த்தருள்க (என்று கொடுத்தனன் என்க). வேதநன்னூல்உய்த்துள காலம் எல்லாம் புகழொடும் ஒக்க நிற்பான்-வேத சாஸ்திரங்கள் வழங்குவதான கால தத்துவம் உள்ள அளவும் புகழோடு கூடியிருக்கும் அனுமன் எ-று. *(81)*

## சூடாமணியைப் பெற்ற இராமனது நிலை 1328—1329

**1328.** பைபயப் பயந்த காமம்
பரிணமித் துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி யுள்ள
மெலிவுறு நிலையை விட்டான்
ஐயனுக் கங்கி முன்ன
ரங்கையாற் பற்று நங்கை
கையென லாயிற் றன்றே
கைபுக்க மணியின் காட்சி.

*பை பயப் பயந்த காமம்*
*பரிணமித்து உயர்ந்து பொங்கி,*
*மெய் உற வெதும்பி, உள்ளம்*
*மெலிவு உறு நிலையை விட்டான்;*
*ஐயனுக்கு, அங்கி முன்னர்*
*அங்கையால் பற்றும் நங்கை*
*கை யெனல் ஆயிற்று அன்றே;*
*கை புக்க மணியின் காட்சி.*

(அச்சூளாமணி பெற்றவுடன்) பைபய-மெல்ல மெல்ல; உட்பயந்த காமம்-மனத்திலுண்டான காமமானது, பரிணமித்து-தோன்றி வளர்ந்து, உயர்ந்து பொங்கி-மேன்மேல் எழுதலால்; மெய்உற வெதும்பி உள்ளம் மெலிவுறும்நிலையை விட்டான்-உடல் மிகவும் கொதித்து மனம் தளர்ச்சி அடையும் தன்மையை விட்டான் என்பது முன்னிரண்டடிகளின் பொருள்.

அவ்வாறு திருக்கையை அடைந்த சூளாமணியின் தோற்றம், இராமபிரானுக்குத் திருமணக் காலத்தில் பற்றப்பட்ட பிராட்டியின் திருக்கை

என்னும்படி ஆயிற்று என்பது பின்னிரண்டடிக்குப் பொருள். சூளாமணி பெற்றதும் இராமபிரான் சோகம் நீங்கிப் பிராட்டியை விரைவிற் பெறுவோம் என்ற நம்பிக்கை மாருதியால் உண்டாயிற்று என்றபடி.

பையப்பைய என்பது பைபய எனத் திரிந்தது. பரிணமித்து-வேறு பாட்டுடன் தோன்றி. அங்கை-அகங்கை. (82)

**1329.** பொடித்தன வுரோமம் போர்த்து
பொழிந்தன கண்ணீர் பொங்கித்
துடித்தன மார்பும் தோளுந்
தோன்றின வியர்வின் றுள்ளி
மடித்தது மணிவா யாவி
வருவது போவ தாகித்
தடித்தது மேனி யென்னே
யாருளர் தன்மை தேர்வார்.

பொடித்தன உரோமம், போர்த்து
பொழிந்தன கண்ணீர், பொங்கித்
துடித்தன மார்பும் தோளும்,
தோன்றின வியர்வின் துள்ளி,
மடித்தது மணிவாய், ஆவி,
வருவது போவது ஆகித்
தடித்தது மேனி, என்னே
யார் உளர், தன்மை தேர்வார்.

சூளாமணி கைபுக்கதாயினும் பிராட்டியை நேரே அடையப் பெருமையால் இராமபிரானுக்கு உண்டான மெய்ப்பாடுகளை இனிக் கூறுகின்றார்.

பொடித்தன-சிலிர்த்தன. மார்பும் தோளும் மகிழ்ச்சியாற் பொங்குதலும், பிரிவால் துடித்தலும் அடைந்தன என்பார் 'மார்புந்தோளும் பொங்கித் துடித்தன' என்றார். துள்ளி - நீர்த்துளிகள். மணிவாய் மடித்தது என்றது, பிரியாத பிராட்டியைப் பிரிவித்தவன் மேல் அமைந்த சிற்றம் பற்றியது. ஆவி வருவதும் போவதுமாகியதால் திருமேனி பெருக்கம் உற்றது-எ-று. உடற்பயிற்சியில், தேகம் விரிந்து வலியுறுதற்கு, வருவதும் போவதுமாகிய உயிர்ப்பின் நிலையே காரணம் என்பர். (83)

## அங்கதன் முதலியோர் வந்து சேர்தல்

**1330.** ஆயிடைக் கவிக ளோடு
மங்கதன் முதலி ளுயோர்
மேயினர் வணங்கிப் புக்கார்
வீரனைக் கவியின் வேந்தைப்
போயின கரும முற்றிப்
புகுந்ததோர் பொம்ம றன்ஞற்
சேயிரு மதிய மென்னத்
திகழ்தரு முகத்த ராஞர்.

ஆயிடைக் கவிகளோடும்
அங்கதன் முதலின் ஆயோர்
மேயினர், வணங்கிப் புக்கார்,
வீரனைக், கவியின் வேந்தை;
போயின கருமம் முற்றிப்
புகுந்தது ஓர் பொம்மல் தன்ஞல்,
சேய் இரு மதியம் என்னத்
திகழ்தரு முகத்தர் ஆஞர்.

ஆயிடை, கவிகளோடும் அங்கதன் முதலின் ஆயோர், மேயினர்; வீரனைக் கவியின் வேந்தை வணங்கிப் புக்கார்; கரும முற்றிப் புகுந்ததோர் பொம்மல் தன்ஞல் திகழ்தரு முகத்தர் ஆஞர். எ-று.

முதலின் இன் சாரியை. மேயினர் - வந்தவராய். கவியின் வேந்தை - சுக்கிரீவனை. போயின கருமம் முற்றி - பிராட்டியைத் தேடுங் காரியம் பூர்த்திபெற்று. பொம்மல் - மகிழ்ச்சி. சேய் இரு மதியம் - மேலிடமாக உயர்ந்த பூரண சந்திரன். *(84)*

## மேற் செய்யத்தகுவன குறித்து இராமபிரான் விரைவுகொள்ளுதல்

**1331.** ஆண்டையி னருக்கன் மைந்த
னையகே ளரிவை நம்பால்
காண்டலுக் கெளிய ளாஞ
ளென்றலுங் காலங் தாழ

ஈண்டினு மிருத்தி போலா
மென்றன னென்ற லோடும்
தூண்டிரண் டனைய தோளான்
பொருக்கென வெழுந்து சொன்னான்.

*ஆண்டையின் அருக்கன் மைந்தன்,*
*ஐய! கேள், அரிவை நம்பால்*
*காண்டலுக்கு எளியள் ஆனாள்*
*என்றலும், காலம் தாழ*
*ஈண்டு இனும் இருத்தி போலாம்*
*என்றனன்; என்ற லோடும்*
*தூண் திரண்டு அனைய தோளான்,*
*பொருக்கென எழுந்து சொன்னான்.*

*ஆண்டையின்–அவ்விடத்தில். அருக்கன் மைந்தன் – சூரியன் புத்திரனான சுக்கிரீவன். அரிவை - பிராட்டி. காலம் தாழ ஈண்டு இருத்தி போலாம் என்றது, இராமபிரான் கூற்று. இவ்வாறு கூறியது, கிட்கிந்தையில் அவன் காலந்தாழ்த்ததைத் திருவுளம்பற்றி. தூண் திரண்டனைய தோளான் - தூண்கள் திரண்டிருப்பது போன்ற தோள்களை உடையவன் (சுக்கிரீவன்). பொருக்கென, விரைவுக் குறிப்பு. (85)*

**சுக்கிரீவன் கட்டளைப்படி வானர சேனை புறப்படுதல்**

**1332.** எழுகவெம் படைக ளென்றா
னேயெனு மளவி னெங்கும்
முழுமுர செற்றிக் கொற்ற
வள்ளுவன் முடுக்க முந்திப்
பொழிதிரை யன்ன வேலை
புடைபரந் தென்னப் பொங்கி
வழுவலில் வெள்ளத் தானை
தென்றிசை வளர்ந்த தன்றே.

*எழுக எம் படைகள் என்றான்;*
*ஏ எனும் அளவின், எங்கும்*
*முழு முரசு எற்றி, கொற்ற*
*வள்ளுவன் முடுக்க, முந்திப்*

பொழி திரை அன்ன வேலே
புடை பரந்து என்னப் பொங்கி
வழுவல் இல் வெள்ளத் தானே
தென் திசை வளர்ந்தது அன்றே.

எம் படைகள் 'ஏ' எனும் அளவில் எழுவனவாக என்றான்; வள்ளுவன், எங்கும் முரசு எற்றி முடுக்க, வெள்ளத்தானை தென்திசை வளர்ந்தது எ-று.

எழுக என்றான் – எழுவனவாக என்றான் சுக்கிரீவன். வள்ளுவன் - முரசறைந்து அரசராணை சாற்றுவோன். கொற்ற வள்ளுவன் என்றது, தம் வெற்றி கூறி முழக்குவோன் எ-று. வழுவல் இல் - அரசாணையி னின்றும் வழுவுதல் இல்லாத. விசிப்பொழியும் அலைகளையுடைய அந்தக் கடல், பக்கங்களில் பரவியது போல என்பது மூன்றும் அடியின் பொருள். பொங்கி – மேலே கிளர்ந்து. பொங்கி வளர்ந்தது என்க. (86)

## வழி வகுத்துச் செல்லுமாறு இராமன் நீலனைப் பணித்தல்

**1333.** நீலனை நெடிது நோக்கி
நேமியோன் பணிப்பா னந்தம்
பால்வருஞ் சேனை தன்னைப்
பகைஞர்வந் தடரா வண்ணம்
சால்புற முன்னர்ச் சென்று
சரிநெறி துருவிப் போதி
மால்தரு களிறு போலும்
படைஞர்பின் மருங்கு சூழ.

நீலனை நெடிது நோக்கி
நேமியோன் பணிப்பான், நம் தம்
பால் வரும் சேனை தன்னைப்
பகைஞர் வந்து அடரா வண்ணம்,
சால்பு உற முன்னர்ச் சென்று
சரி நெறி துருவிப் போதி;
மால் தரு களிறு போலும்
படைஞர் பின் மருங்கு சூழ.

நேமியோன் – சக்கரப் படையுடைய திருமாலின் அமிசமான இராம பிரான். பணிப்பான் – ஆஞ்ஞையிட்டருளுகிறான். பால்வரும் நம் சேனை தன்னைப் பகைஞர் வந்து அடராவண்ணம் – நம் பக்கத்தில் வருகின்ற

படைகளைப் பகைவர் வந்து தாக்காதபடி. மால்தரு களிறு போலும் படைஞர் பின் மருங்கு சூழ - மதமயக்கம்கொண்ட யானைபோலும் காலாள் வீரர்கள் படையின் பின்னும் பக்கத்தும் சூழ்ந்து செல்ல. சால்பு உற முன்னர்ச் சென்று - தக்கபடிமுற்படச் சென்று. சரி நெறி - நேர்மையான வழியை. துருவிப் போதி – ஆராய்ந்து கொண்டு போவாயாக (என்று பணிப்பான் எனமுடியும்).

காட்டுவழியாதலின் பகைஞர் ஒளி மறைவாக இருப்பதுடன் வழி மாறுபட்டும் மரஞ்செடிகள் செறிந்து, தெரிய இடமின்றியும் இருத்தல் கூடுமாதலால் சேனைகட்கு இடையூறுகள் நேராமற் காக்க வேண்டி இவ் விவரங்களெல்லாம் கவனிக்கத்தக்க படைத்தலைவனை நீலனை நோக்கிக் கூறுவானாயினன் இராமபிரான் என்க. [இக்கவி பல பிரதிகளில் இல்லை] (87)

### அனுமன் தோள்மேல் இராமபிரான் ஏறியமர்தல்

1334. என்றுரைத் தெழுந்த வேலை
மாருதி யிருகை கூப்பிப்
புன்றொழிற் குரங்கெ னுதென்
றோளிடைப் புகுதி யென்னுத்
தன்றலை படியிற் றாழ்ந்தா
னண்ணலும் சரணம் வைத்தான்
வன்றிறல் வாலி சேயு
மிளவலை வணங்கிச் சொன்னுன்.

என்று உரைத்து எழுந்த வேலை,
மாருதி இருகை கூப்பிப்
'புன் தொழில் குரங்கு எனுது என்
தோளிடைப் புகுதி' என்னுத்
தன் தலை படியில் தாழ்ந்தான்;
அண்ணலும் சரணம் வைத்தான்;
வன் திறல் வாலி சேயும்
இளவலை வணங்கிச் சொன்னுன்,

எழுந்த வேலை இராமபிரான் புறப்பட்டபொழுது. புகுதி – ஏறியருள்க. தன்தலை படியில் தாழ்ந்தான் – நிலத்தில் தன் தலை படிய வணங்கினன். அண்ணலும் சரணம் வைத்தான் – இராமபிரானும் திருவடிகளை வைத்து ஏறினன். வாலிசேய் – அங்கதன். இளவல்-இளைய பெருமாள். (88)

[இக்கவியும் பல பிரதிகளில் இல்லை]

### அங்கதன் தோளில் இலக்குவன் ஏறச் சேனை புறப்படுதல்

**1335.** நீயினி யென்றன் றோண்மே
லேறுதி நிமல வென்ன
வாய்புதைத் திறைஞ்சி நின்ற
வாலிகா தலனை நோக்கி
நாயகற் கிளைய கோவு
நன்றென வவன்றன் றோண்மேற்
பாய்தலுந் தகைப்பி ருனை
படர்நெறி படர்ந்த தன்றே.

*'நீ இனி என்றன் தோள் மேல்*
*ஏறுதி நிமல' என்ன*
*வாய் புதைத்து இறைஞ்சி நின்ற*
*வாலி காதலனை நோக்கி,*
*நாயகற்கு இளைய கோவும்*
*நன்று' என அவன் தன் தோள்மேல்*
*பாய்தலும், தகைப்பு இல் தானை,*
*படர்நெறி படர்ந்தது அன்றே.*

*நிமல !—குற்றமற்ற பிரபுவே! பாய்தல் – எழும்பி ஏறுதல். தகைப்பு இல் - சோர்வு இல்லாத. படர் நெறி – நீலன் செப்பனிட்டுக் காட்டிய வழியே. [இக்கவியும் பல பிரதிகளில் இல்லை] (89)*

### வானோர் மலர்மழை பொழிதல்

**1336.** கருடனில் விடையிற் றோன்று
மிருவருங் கடுப்பக் காலின்
அருடரு குமரன் றோண்மே
லங்கத னலங்கற் றோண்மேல்
பொருடரும் வீரர் போகப்
பொங்கொளி விசும்பிற் றங்கும்
தெருடரும் புலவர் வாழ்த்திச்
சிந்தினர் தெய்வப் பொற்பூ.

*கருடனில் விடையில் தோன்றும்*
*இருவரும் கடுப்பக் காலின்*
*அருள்தரு குமரன் தோள் மேல்,*
*அங்கதன் அலங்கல் தோள் மேல்,*

பொருள் தரும் வீரர் போக,
பொங்கு ஒளி விசும்பில் தங்கும்
தெருள் தரும் புலவர், வாழ்த்திச்
சிந்தினர் தெய்வப் பொன் பூ.

கருடனில் விடையில் தோன்றும் இருவரும் கடுப்ப - கருடாருடனை திருமாலும், இடபாருடனை சிவபிரானும் போல. காலின் அருள் தரும் குமரன் – வாயுதேவன் அருளால் அளித்த புதல்வன். அனுமனுக்குக் கருடனை உவமை கூறியதனால் அவனுக்குச் செந்நிறமும், அங்கதனுக்கு விடையுவமை கூறப்பட்டதனால் அவனுக்கு வெண்மை நிறமும் உரியன என்பது பெறப்படும். குமரன் தோள் மேல், அங்கதன் தோண் மேல், வீரர் போத - அனுமன் தோளில் இராமபிரானும், அங்கதன் தோளில் இளைய பெருமாளும் முறையே ஏறிச் செல்ல என்க. அலங்கல் – மாலை. பொருள் தரும் வீரர் – மெய்ப்பொருளான வீட்டினை அளிக்கவல்ல இராமலக்குமணர். தெருள் தரு புலவர் - அறிவின் தெளிவுடைய தேவர்கள். தெய்வப் பொற்பூ – கற்பக மலர்: ‘கற்பகத்தின் தெய்வத் திரு மலர்’ என்றார் சான்றோர் (திருவள்ளுவ மாலை). (90)

மலைவழியே வானரசேனை செல்லுதல்

1337. வையக மதனின் மாக்கண்
மயங்குவர் வயவெஞ் சேனை
எய்திடி னென்ப துன்னி
யிராகவ னினிதி னேவப்
பெய்கனி கிழங்கு தேனென்
றினையன பெறுதற் கொத்த
செய்யமால் வரையே யாருச்
சென்றன தகைப்பில் சேனை.

வையகம் அதனில் மாக்கள்
மயங்குவர்; வய வெம் சேனை
எய்திடின், என்பது உன்னி,
இராகவன் இனிதின் ஏவ,
பெய் கனி கிழங்கு தேன் என்று
இனையன பெறுதற்கு ஒத்த
செய்ய மால் வரையே ஆருச்
சென்றன; தகைப்பு இல் சேனை.

சேனை எய்திடின் வையகமாக்கள் மயங்குவர், என்பது இராகவன் உன்னி ஏவ, மலையே ஆருச் சென்றது சேனை என்க. வயம் – வெற்றி. பெய்கனி – பழுத்துச் சொரிகின்ற பழம். கனி கிழங்கு தேன் முதலியன, வானரங்கட்கு உணவுப் பண்டங்கள். அதனால் அவை பெறுதற்கு ஏற்ற அழகிய பெருமலைகளையே மார்க்கமாகக் கொண்டு சென்றன படைகள் என்பது பின் இரண்டிகட்குப் பொருள். (91)

### அனுமன் இலங்கையிற்கண்ட சிறப்புக்களைச் சொல்லக் கேட்டு வானரசேனை எளிதல் வழிகடத்தல்.

1338. வீரரும் விரைவிற் போனர்
விலங்கன்மே லிலங்கை வெய்யோர்
சோர்விலாக் காவற் பாடும்
பெருமையு மரணுங் கொற்றக்
கார்நிறத் தரக்க ரென்போர்
முதலிய கணிப்பி லாத
வார்கழ லனுமன் சொல்ல
வழிநெடி தெளிதிற் போனர்.

வீரரும் விரைவில் போனர்;
விலங்கல் மேல் இலங்கை வெய்யோர்
சோர்வு இலாக் காவற்பாடும்,
பெருமையும், அரணும், கொற்றக்
கார் நிறத்து அரக்கர் என்போர்
முதலிய கணிப்பு இலாத
வார் கழல் அனுமன் சொல்ல,
வழி நெடிது எளிதில் போனர்.

இலங்கை வெய்யோர் அரக்கர் என்போர் காவற்பாடும் பெருமையும் அரணும் முதலிய கணிப்பிலாத அனுமன் சொல்ல நெடிது வழி எளிதில் விரைவில் வீரரும் போனர் எ – று. விலங்கல்மேல் இலங்கை – திரிகூடமலையின் மேலதான இலங்கையில் (வாழும்); வெய்யோரான அரக்கரென்போர் காவற்பாடும் பெருமையும் அரணும் முதலிய கணிப்பிலாத என இயைக்க. கணிப்பிலாத - அளவற்ற செய்திகளை. நெடிதுவழி – நெடுந்தூரமுள்ள வழியை. (92)

## அனைவரும் தென்றிசைக் கடலைக் காணுதல்

**1339.** அந்நெறி நெடிது செல்ல
வரிக்குலத் தரச ேனாடு
நன்னெறிக் குமரர் போக
நயந்துடன் புணர்ந்த சேனை
இன்னெடும் பழுவக் குன்றிற்
பகலெலா மிறுத்த பின்னர்ப்
பன்னிரு பகலிற் சென்று
தென்றிசைப் பரவை கண்டார்.

*அந் நெறி நெடிது செல்ல,*
*அரிக் குலத்து அரசனோடும்*
*நல் நெறிக் குமரர் போக,*
*நயந்து உடன் புணர்ந்த சேனை,*
*இன்னெடும் பழுவக் குன்றில்*
*பகல் எலாம் இறுத்த பின்னர்ப்*
*பன்னிரு பகலில் சென்று*
*தென் திசைப் பரவை கண்டார்.*

*அந்நெறி நெடிது செல்ல – அந்தவழி நீண்டு செல்லுதலால். சென்ற வழி நீண்டுகொண்டிருந்தமையால்; அதனைக் கடத்தற்குப் பன்னிரு பகல் சென்றது என்பது கருத்து. குமரர் அரிக்குலத்தரசனான சுக்கிரீவனோடு போக; நயந்து உடன் புணர்ந்த சேனை - விரும்பி உடன் வந்த படைகள். இன் நெடும் பழுவக்குன்றில் - இனிய நீண்ட சோலைகளையுடைய மலைவழிகளில்; பகல் எலாம் இறுத்த பின்னர் – பகற்கால முழுதும் தங்கிப் பின்பு; பன்னிரு பகலிற் சென்று – பன்னிரண்டு நாள்களிற் சென்று; தென் திசைப் பரவை கண்டார் – தென்பாலுள்ள கடலைக் கண்டனர் எ – று.*

*இரண்டாமடியிற் பகல் - சிறு பொழுதான பகற்காலமெனவும், நான்காமடியிற் பகல் – நாள் எனவும் கொள்ள அமையும். சென்ற வழி நீண்டு இருந்தமையாலும், சேனை உணவுண்டு இளைப்பாறவேண்டியிருந்தமையாலும், 'அந்நெறி நெடிது செல்ல' என்றும், 'பகலெலாம் இறுத்த பின்னர்ப் பன்னிரு பகலிற் சென்று' என்றும் கூறினர். குமரர் கண்டார் என இயையும். பழுவம் – சோலை.* *(93)*

திருவடி தொழுத படலம் முற்றிற்று.

# திருவடி தொழுத படலம்

இந்தப் படலம், அனுமன், இலங்கையிலிருந்து மீண்டு வந்து இராமபிரானுடைய திருவடிகளைத் தொழுது நிகழ்ந்தனவற்றைக் கூறும் படலம் எனப் பொருள்படும். திருவடி என்பதை அனுமன் எனக் கொண்டு, அவன் இராமனைத் தொழுத படலம் எனவும் கூறுவர். திருவடி என்னும்சொல், வைணவ மரபில் அனுமனைக் குறிக்கும் எனக் கூறுவர். இப்படலத்துக்கு 'மீட்சிப் படலம்' என்று ஒரு பெயரும் வழங்கப்பெறுகிறது. அதற்கு அனுமன் இலங்கையிலிருந்து மீண்ட செய்தியைக் கூறும் படலம் என்பது பொருளாகும். அண்மையில் வெளிவந்துள்ள ஆழ்வார் திருநகரிப் பெரியன் பதிப்பைத் தவிர மற்ற அச்சுப் புத்தகங்களில் எல்லாம் இப்படலத்தில் 93 செய்யுட்கள் காணப்பெறுகின்றன. பல சுவடிகளிலும் இவ்வாறே காணப்பெறுகிறது. சில சுவடிகளில் 63 செய்யுட்களே காணப்பெறுகின்றன. காணப்பெறாத செய்யுட்கள் எவை எவை என்பது பாட வேறுபாட்டுள் காணலாம். இப்படலத்தின் சுருக்கம் பின் வருமாறு:—

அனுமன், 'இனி விரைவில் இலங்கையை விட்டு நீங்க வேண்டும்' என்னும் கருத்துடன் அருகிலிருந்த ஒரு குன்றின்மேல் ஏறிப் பேருருவத்துடன் வான்வழியாகப் புறப்பட்டான். வழியில் மைநாக மலையிடம் நிகழ்ந்தவற்றைக் கூறிவிட்டுத் தன் வரவை ஆவலுடன் பார்த்திருக்கும் குரங்குப் படை நிற்கும் இடத்தை அடைந்தான். சென்ற செயல் வென்றி பெற்றது என்னும் உவகையால் அங்கு நின்ற குரங்குப்படை ஆரவாரத்துடன் வரவேற்று, அழுதும், தொழுதும், பருகுவார்போல் நோக்கியும் பலவகையான உணவுப்பொருள்களை முன் வைத்தும் தங்கள் அன்பைக் காட்டினார்கள். அனுமனது உடல் முழுதும் காணப்பெற்ற புண்களைக் கண்டு வருந்தினார்கள். அனுமன் அங்கதனை முதலில் வணங்கிக் கரடிவேந்தையும் தாழ்ந்து வணங்கி, முறையாகச் செய்ய வேண்டியவைகளைச் செய்து, "அனைவருக்கும் அன்னை ஆசி வழங்கினாள்" எனத் தெரிவித்தான். கேட்டவர்கள், எழுந்து கைகூப்பி வணங்கினார்கள். அனுமன் தன் வீரச்செயல்களை விளம்பாமல் அன்னையைக் கண்டதையும் அடையாளம் கொண்டதையுமே கூறினானெனினும், காணப்பெற்ற குறிகளால் நிகழ்ந்தனவெல்லாம் குரங்குப்படை தெரிந்து கொண்டது. இந்த நற்செய்தியை இராமனுக்குத் தெரிவிக்க வேண்டுவதே முதன்மையான கடமையென்று எல்லோரும் புறப்பட்டார்கள். நெடுநாள் உளக்கலக்கத்தால் உணவு குறைந்துவந்தமையால் களைப்புற்றிருந்த குரங்குகள், அங்கதனுடைய இசைவுபெற்றுத் தேன்வளர் சோலையுட் புகுந்து, மனங்கொண்டபடி தேனை உண்டு, களியாட்டங்

கொண்டன. குரங்குப் படையால் சோலை அழிவதைப் பார்த்த காவற் குரங்குகள், தங்கள் தலைவனாகிய ததிமுகனிடம் சென்று முறையிட்டன; ததிமுகனும் அங்கதனை இகழ்ந்து பேசி, ஒரு கருங்கற்பாறையை அவன் மேல் எறிய, அங்கதன் அதைப் புறங்கையால் தடுத்து விலக்கித் ததிமுகனை வாய்வழி குருதிவர நையப் புடைத்துத் துரத்திவிட்டான். ததிமுகனும், சுக்கிரீவனிடம் சென்று முறையிடலும், சுக்கிரீவன், 'அங்கதனிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக்கொள்க' என்று ததிமுகனைத் திருப்பியனுப்பிவிட்டான். இந்த நிலையில் இராமபிரான், மற்றத் திசைக்குச் சென்றவர்கள் எல்லாம் பிராட்டியைக் காணாது திரும்பிவிட்டார்களென்றாலும், அனுமன் கண்டுவரக்கூடும் என்ற நம்பிக்கையால் உயிர்தாங்கி அவன் வரவை எதிர்பார்த்திருந்தான்; குறித்த எல்லை கடந்தமையால் சென்றவர் நிலை என்னவாயிற்றோ? என்றும் ஐயுற்றுப் பெருமூச்செறிந்துகொண்டிருந்தான். சுக்கிரீவன் அருகிலிருந்து தேறுதல் சொல்லிக்கொண்டிருந்தான். தென்றிசை சென்ற குரங்குகள் தேன்வளர் சோலையில் களியாட்டயர்ந்தன என்பதைக் கேட்ட சுக்கிரீவனுக்குச் சென்ற செயல் பழுதாயிருப்பின் இக் களியாட்டம் நிகழ்ந்திராது என்ற துணிவு ஏற்பட்டு இராமனிடம் தெரிவித்தான். இந்த நிலையில் அனுமனும் பிராட்டியிருக்கும் தென்திசையை நோக்கிக் கைகூப்பித் தொழுதவண்ணம் இராமனை அணுகினன்; இராமனும் தேற்றமடைந்தான். அனுமனும் தான் பிராட்டியாரைக் கண்டதைத் தெளிவாகவும் இனிமையாகவும் எடுத்துரைத்தான். பிராட்டியாரின் நற்குடிப்பிறப்பு, பொறுமை, கற்பு முதலிய சிறப்பையும், இடைவிடாது தன்னையே நினைந்துருகும் நிலையையும், இலக்குவன் கட்டிய புற்குடிலில் பல அரக்கியர் காவல் சூழக் கண்ணீர்வடித்துநிற்கும் உருவத்தையும், இராவணன் மீச்செலவும், பிராட்டியின் அறவுரையும், முடிவில் பிராட்டி உயிர்க்கிறுதிநாடியமையும், அனுமன் கூறிய இராமன் திருநாமத்தால் உயிர் நிலைத்தமையும், திருவாழி பெற்று அங்கமெலாம் வைத்து அழுதும் களித்தும் புலம்பியமையும், தன் நிலைமையைக் கேட்டுச் சூடாமணியை அடையாளமாகக் கொடுத்தமையும் கேட்ட இராமன், சூடாமணியைப் பெற்று மனவெம்மை தீர்ந்தான். சுக்கிரீவன் ஆணையால் பெரும்படை திரண்டன; இலங்கையை நோக்கிப் புறப்பட்டார்கள். அனுமனும் அங்கதனும் வேண்ட முறையே இராமனும் இலக்குவனும் அவர்களை ஊர்தியாகக்கொண்டு புறப்பட்டார்கள்.

இந்தப் படலத்தின் செய்திகள், வான்மீகத்துள் 56-வது சருக்கம் 10-வது சுலோகத்திலிருந்து 68-வது சருக்கம் முடியப் பேசப்பெற்றுள்ளன. வான்மீக ஆராய்ச்சியாளர் இந்தப் பகுதியில் சில சருக்கங்களையும் சுலோகங்களையும் இடைச்செருகலாக இருக்கக் கூடுமோ என ஐயுறுகின்றனர். இந்தச் சருக்கங்களும் செப்ப வேண்டிய பொருளை விரிவுபடுத்தியும் கூறியதைக் கூறியும் இடர்ப்படுகின்றன.

56-வது சருக்கம் முழுவதும் (முதல் 9 சுலோகங்கள் நீங்க) அனுமன் மலையில் ஏறியவுடன் மலை அழுந்தியதைச் சலிப்புத் தோன்ற விரிக்கிறது. 57வது சருக்கம், அனுமன் வான்வழியில் வந்ததையும், வட கரையை அடைந்து அங்கதன் முதலியோரைக் கண்டதையும், வானர வீரர்கள் கொண்ட மகிழ்ச்சியையும் கூறுகின்றது. 58வது 59வது சருக்கங்கள், இலங்கையில் நடந்தவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் சொல்லியும், பிராட்டியாரது நிலையைக் கூறியும் களைப்படையச் செய்கின்றன. 60வது சருக்கம், அங்கதனும், ஜாம்பவானும் ஒருவரோடொருவர் கலந்து மேற்செய்ய வேண்டியவைகளை முடிக்க எண்ணி, முதலில் இலங்கைக்குச் சென்று பிராட்டியாரை மீட்டுக்கொண்டே இராமனிடம் செல்லவேண்டும் என்று முடிவு செய்வதாகவும், பின்னர் ஜாம்பவானுடைய எண்ணப்படி, இராமன் திருவுளம் தெரிந்தே மேற்கொண்டவைகளைச் செய்யவேண்டும் என்று முடிவு செய்ததாகவும் கூறுகின்றது. 61வது சருக்கம் மதுவனம் அழித்த செய்தியைக் குரங்குகளுடைய எல்லாவகைக் குறும்புகளையும் விரிவாக விளக்கிக் கூறுகின்றது. 62வது சருக்கம் மதுவனக் காவலர்களைக் குரங்குப் படை துன்புறுத்தியதையும், 63வது சருக்கம் மதுவனம் அழிந்த செய்தியைத் ததிமுகன், சுக்கிரீவனிடம் சென்று முறையிடுவதையும், சுக்கிரீவன் அந்த முறையீட்டாலேயே, அனுமன் முதலியோர் பிராட்டியைக் கண்டு திரும்பியுள்ளார் என்பதை அறிந்து கூறியதையும், 64வது சருக்கம், மதுவனத்திலிருந்த அங்கதன் படைகள் விரைந்து சுக்கிரீவன் இருக்கும் இடம் செல்வதையும், அனுமன், பிராட்டியைக் கற்பினுக்கணியைக் கண்டதைச் சுருக்கமாகக் கூறியதையும் பேசுகின்றன. 65வது சருக்கம் முதல், 68வது சருக்கம் வரையில், பிராட்டியார் இலங்கையிலுள்ள நிலையும், அவர் சொல்லிய செய்தியும், சூடாமணியைப் பெற்ற இராமனுடைய நிலையும் காகாசுரனுடைய நிச்செயலையும் அவன் பட்டதையும் பிராட்டி நினைந்து கூறியதும், பிராட்டியாரை அனுமன் நன்மொழிகளால் தேற்றி விரைவில் பிராட்டியாருடன் அயோத்தியில் இராமபிரான் திருமுடி சூடுவதைப் பிராட்டியார் காண்பார் எனக் கூறியதும் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.

வான்மீகத்தில், பல செய்திகள், கூறியது கூறலாக வருவனவற்றையெல்லாம், கம்பர் கூருது, வரலாற்றின் தொடர்ச்சிக்கு இன்றியமையாதனவற்றையே சுருங்கச் சொல்லி, பிராட்டியாரது உள்ளத்தின் உயர்வையும், உறுதியையும், விளக்குவனவான பகுதிகளையே விரித்துக்கூறி, கற்பார் உள்ளத்தைக் கனிவிக்கின்ருர். வான்மீகத்துள், அனுமன் தன் வீரச்செயல்களை விரிவாகத் தானே கூறுவனவாக அமைந்த பகுதிகள் கம்பரிடம் காணப்படவில்லை. அனுமன் தன் புகழைத் தானே உரைக்க நாணியவனுய், ஒன்றும் கூருதிருந்தான் என்றும், குரங்குப்படைகள், தாமே அவனுடைய வீரச்செயல்களை உய்த்துணர்ந்தன என்றும்,

கம்பர் (செய்யுள் 9, 10) சுவை பெறக் கூறியிருப்பது, 'தன்புகழ் கேட்டான்போல் தலைசாய்ந்த மரமெல்லாம்' என்னும் சங்கநூற் பண்பை நினைவூட்டுகின்றது. இந்நூலைப் பயில்வோர், நாவெல்லாம் தித்திக்க, நாளெல்லாம் பாடி, உளமெல்லாம் உயரும் பகுதியாகிய 'கண்டனென் கற்பினுக்கணியை' என்னும், 58வது செய்யுள் முதல், 'யாருளார் தன்மை தேர்வார்' என முடியும் 83 வது செய்யுள் வரையிலுள்ள பகுதி, ஒவ்வொருவரும் ஆழ்ந்து சிந்தித்துப் பயிலவேண்டிய தலைமைப் பகுதிகளுள் ஒன்றாகும். தலைமையாகும் எனக் கூறினும் பொருத்தமே. இப்பகுதியில், சொல்லின் செல்வன், பிராட்டியாரைக் குறிக்கும் சொற்களும் சொற்றொடர்களுமாய 'கற்பினுக்கணி' (58). 'என் பெருந் தெய்வம்' (59), 'இற்பிறப்பு', 'இரும்பொறை', 'கற்பு' (62), 'தவம் செய்த தவமாம் தையல்' (64), 'வானுயர் கற்பினுள்' (65), 'இரக்கம் என்று ஒன்றுதானே ஏந்திழை வடிவம் எய்தித் தருக்கிய சிறையுற்றன்ன தகையள்' (69), 'மாண்பிறந்தமைந்த கற்பின் வாணுதல்' (70) என்பன, சிந்தித்து மகிழ்தற்குரியன. திருவாழியைப் பெற்ற பிராட்டியாருடைய நிலையையும், செயலையும், கூறுவனவாகிய 'ஒரு கணத் திரண்டு கண்டேன்' (77), 'வாங்கிய வாழி' (78) எனத் தொடங்கும் இரு செய்யுட்களும் ஒப்பற்றன; சூளாமணியைப் பெற்ற இராமபிரானது நிலையையும் செயலையும் கூறுவனவாகிய 'பைபயப் பயந்த (82), 'பொடித்தன வுரோமம்' (83) எனத் தொடங்கும் இரண்டு செய்யுட்களோடும் ஆராய்ந்து இன்புறத்தக்கன. பிராட்டியார் இருந்த இடத்தைத் தெளிவாகவும் சுருக்கமாகவும், உள்ளத்தில் உருவம் தோன்றுமாறும் கூறுகின்ற 'வேலையுள் இலங்கை யென்னும் விரிநகர்' (64) என்னுஞ் செய்யுள், பேரெல்லையை முதலில் கூறி, படிப்படியாக ஒளிபெறும் வண்ணம், சிற்றெல்லையையும், குறிப்பிடும் பொருளையும் காட்டும் விரைவும், விளக்கமும், போற்றத்தக்கன,

இப்படலத்தில் பேசப்படும் மதுவனம் அழித்த வரலாற்றுப் பகுதிச் செய்யுட்கள், இடைச்செருகல் என்று, ஒரு சாரார் கருதுகின்றனர். அப்பகுதி, பல ஏட்டுச்சுவடிகளில் காணப்பெறவுமில்லை; ஆனால், பல ஏட்டுச் சுவடிகளிலும், அச்சுப் புத்தகங்களிலும் காணப்பெறுகின்றது. வான்மீகத்துள், நான்கு சருக்கங்களில், நூறுக்கு மேலான சுலோகங்களில், இவ்வரலாறு பேசப்படுகிறது. இப்பகுதியில்லாத வான்மீகச் சுவடிகளும் இருக்கின்றன என்று, சில அறிஞர்கள் கூறுகின்றார்கள். என்றாலும், தமிழ்நாட்டில் காணப்பெறும் பழமையான சுவடிகளில் எல்லாம், இவ்வரலாறு காணப்பெறுகிறது. திருவாய்மொழி மூன்றாம்பத்து ஐந்தாம் திருவாய்மொழி "மொய்ம்மாம் பூம்பொழில்" முகவுரையில், இவ்வரலாறு, திருவாய்மொழியின் பேருரைகாரர்களாகிய வைணவப் பேராசிரியர்களால் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது. வரலாறு எவ்வாறாயினும், கம்பர் இதைக் கூறவில்லை என்பதற்கு அப்பகுதிச் செய்யுட்கள்,

பொருத்தமும் நடைச் சிறப்பும் இல்லாமலிருக்கின்றன என்றும் கூறுகின்றார்கள்; இது உண்மையே. பெருங்காப்பியங்களில் கவிஞனது செய்யுள் நடை, ஏற்றமும் இழிவும் கலந்து செல்வது இயற்கையேயாக லின், போதிய சான்று இன்றி, இச்செய்யுட்களைக் 'கம்பன் செய்யுட்கள் அல்ல' எனக் கடிதலொண்ணாது என்பர் மற்றொரு சாரார். தக்கவாறு ஆராய்ந்தே ஒரு முடிவுக்கு வரவேண்டுமாகையால் இங்கு ஒன்றும் அறுதியிட்டுக் கூற இயலவில்லை. இப்பகுதியில் குரங்குகளின் செயல் களில் இயற்கையானவையே யெனினும், அருவருக்கத் தக்கனவான செயல்களும் வான்மீகத்தில் காணப்பெறுவதுபோல் தமிழில் காணப்பெற வில்லை. பிராட்டியார் தாம் ஒரு திங்கள்வரையில்தான் உயிர் தாங்கி யிருக்க முடியும் என்ற செய்தியை, "திங்கள் ஒன்று இருப்பன் இன்னே, திருவுளம் தீர்ந்த பின்னை, மங்குவன் உயிரோடு' என்று உன் மலரடி சென்னி வைத்தாள்" எனக் கூறும் பண்பும், மேலே சிறப்பாக எடுத் துக்காட்டிய பிராட்டியாரது நிலையைக் கூறும் கனிந்த அழகும் கம்ப ருக்கே உரிய சிறப்பாவனவாம்.

சுந்தரகாண்டம் முற்றுப் பெற்றது.

## ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும் அச்சுப்பிரதிகளும், அவற்றின் குறியீடுகளும்.

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1. | சென்னை அரசாங்கக் கையெழுத்துப் புத்தக சாலை | 514 | |
| 2. | ,, | D. 516 | |
| 3. | ,, | R. 2667 | |
| 4. | தஞ்சை சரஸ்வதி மால் | 367–8 | |
| 5. | ,, | 369 | |
| 6. | ,, | 370 | |
| 7. | ,, | 371 | முதல் நான்கு படலம் வரை. |
| 8. | ,, | 382 | கிங்கரர் வதை 53-ஆம் பாடல் முதல் உள்ளது. |
| 9. | ,, | 384 | |
| 10. | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 11. | ,, | 28 | |
| 12. | ,, | 30 | |
| 13. | ,, | 33 | |
| 14. | ,, | 37 | |
| 15. | ,, | 38 | உருக்காட்டு படலம் வரை. |
| 16. | ,, | 40 | |
| 17. | ,, | 41 | |
| 18. | ,, | 42 | |
| 19. | ,, | 43 | |
| 20. | ,, | 471 | |
| 21. | ,, | 472 | |
| 22. | ,, | 540 | |
| 23. | ,, | 672 | |
| 24. | ,, | 677 | |
| 25. | அடையாறு உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் | 3 | |
| 26. | ,, | 8 | |
| 27. | ,, | 36 (H) | |
| 28. | ,, | 483 | |
| 29. | ,, | 484 (I) | சுந்தர. வந்தனைப் படலம் 78 வரை. |
| 30. | ,, | 495 (J) | |
| 31. | ,, | 505 (K) | சுந்தர. ஊர்தேடு. 117 முடிய. |
| 32. | ,, | 536 (L) | |

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 33 | அடையாறு உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் | 978 | |
| 34 | ,, | 980 | |
| 35 | ,, | 981 (E) | |
| 36 | ,, | 991 | |
| 37 | ,, | 992 | |
| 38 | ,, | 993 | சுந்தர. பொழிலிறுத்த படலம் முடிய. |
| 39 | ,, | 994 (Q) | சுந்தர. உருக்காட்டு படலம் 56 முடிய. |
| 40 | ,, | A | கடிதப் பிரதி |
| 41 | ,, | B | ,, |
| 42 | ,, | R | ,, சுந்தர. ஊர்தேடு. 27 முடிய. |
| 43 | ,, | (d) | இராஜகோபால பிள்ளை பதிப்பு |
| 44 | திரு. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி | (5) | வீராசாமி நாயுடு பதிப்பு, 1884 |
| 45 | ,, | (8) | ஜீவரக்ஷாமிர்தம் பதிப்பு 1886 |
| 46 | ... | (e) | கோவிந்தப் பிள்ளை உரை 1898 |
| 47 | திரு. சா கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி | (11) | நிரஞ்சன விலாசப் பதிப்பு, 1900 |
| 48 | ,, | (16) | ஷை 1924 |
| 49 | ... | T | அ. சுந்தரநாதம் பிள்ளை பதிப்பு, 1911 |
| 50 | ... | b | பி. நா. சிதம்பர முதலியார் பதிப்பு, 1926 |
| 5 | ... | a | பூமகள் விலாசப் பதிப்பு, 1928 |
| 52 | ... | C | வெ. ப. சுப்பிரமணிய முதலியார் பதிப்பு, |
| 53 | ... | U | வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர் பதிப்பு, 1951 |
| 54 | ... | S | ஆழ்வார் திருநகரிப் பெரியன் பதிப்பு, 1951 |
| 55 | அடையாறு உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் | | மஹாமஹோபாத்யாய உ. வே. சாமிநாதையரவர்கள் குறிப்பு |

